# பகவான் புத்தர்

தர்மானந்த கோஸம்பி
மராட்டியில் எழுதிய நூலின்
தமிழாக்கம்:
கா.ஸ்ரீ.ஸ்ரீ.



விடியல் பதிப்பகம்
கோவை- 641 015.

| | |
|---|---|
| நூல் பெயர் | பகவான் புத்தர் |
| நூல் வகை | வாழ்க்கை வரலாறு |
| ஆசிரியர் | தர்மானந்த கோஸம்பி |
| நூல் உரிமை | ஆசிரியருக்கு |
| முதற்பதிப்பு | சாகித்திய அக்டாமி 1957 |
| இரண்டாம் பதிப்பு | டிசம்பர் 2000 |
| பக்கங்கள் | 326 |
| வெளியீடு | விடியல் பதிப்பகம்<br>11, பெரியார்நகர்<br>மசக்காளிப்பாளையம் வடக்கு<br>கோவை - 641 015.<br>தொலைபேசி எண் : 0422 - 576772 |
| ஒளியச்சுக்கோவை | விடியல்<br>கோவை - 641 015 |
| அச்சாக்கம் | மணி ஆப்செட்<br>சென்னை -5 |
| அட்டை அச்சாக்கம் | பிரிண்ட் ஸ்பெஷாலிடீஸ் |
| விலை | ரூ. 120/- |

# பக்தப் புலவர் தர்மானந்த கோஸம்பி

இந்த நூலின் மூல ஆசிரியரான ஸ்ரீ தர்மானந்த கோஸம்பி, பாலி மொழியிலும் இலக்கியத்திலும் பெரும் புலவராக இருந்தவர். பௌத்த சமயத்தைப் பற்றிய மூல இலக்கியம் அனைத்தையும் ஆழ்ந்து பயின்று, அவர் உலகப் புகழ்பெற்ற அறிஞரானார். ஆயினும், அவருடைய முயற்சி அவ்வளவும், வெறும்புலமை பெறுவதற்காக அமையவில்லை. அவர் புத்தர் பெருமானின் ஒப்பற்ற பக்தராக விளங்கியவர் ஆதலால் அவர் பெற்றதும், செய்ததும், இலக்கியத்தொண்டின் வாயிலாகக் கொடுத்ததும் ஆகிய எல்லாம், பெரும்பாலான மக்களின் நன்மைக்காகவே, பெரும்பான்மையோரின் இன்பத்துக்காகவே பயன்படுவனவாம்.

அவர் எழுதிய புத்தர் பெருமானின் இந்தச் சரித்திரம், பலவகை நோக்கத்தினால் மூலநூலாக விளங்குகிறது. நாம் இதைப் படித்து, புத்தர்பிரானைப் பற்றிய உண்மையானவையும், ஆதாரமுள்ளவையும், மேற்கோளாதற்குரியனவுமான செய்திகளை அறிகின்றோம்.

இக்காலத்தில் புத்தர் பெருமானைப்பற்றி நாம் படித்து அறியக்கூடிய நூல்கள், ஏறக்குறைய ஆங்கில ஆசிரியர்கள் எழுதிய சரித்திரங் களிலிருந்து திரட்டிய சாரமாகவே இருக்கின்றன. ஸர் எட்வின் ஆர்னால்டு, 'ஆசிய ஜோதி' (லைட் அவ் ஏஷியா) என்ற காவியத்தை வரைந்து, அதன் வாயிலாகப் புத்தர்பிரானின் புராணக் கதையை உலகுக்கு அறிமுகப்படுத்தினார். அது மிகவும் சுவையுள்ளதாக இருந்ததனால், கீழை நாடுகளிலும் மேலை நாடுகளிலும் படித்த மக்களிடையே பெரும் செல்வாக்கைப் பெற்றது. 'ஆசிய ஜோதி'யில் தந்த புத்தர்பிரானின் ஓவியத்துக்காக, உலகம் முழுவதும் எட்வின் ஆர்னால்டுக்கு நெடுங்காலம் கடமைப்பட்டிருக்கும். ஆனால் அது காவியமயமான ஓர் ஓவியந்தான். பால் கரேஸ் என்பவரும் இவ்வாறே சுவையுள்ள ஒரு சித்திரத்தை ஆங்கில உரை நடையில் அமைத்துத் தந்தார். இவர்களுக்குப் பின்பு பல புலவர்கள் பெரிதும் ஆராய்ந்து புத்த சரித்திரத்தை எழுதியிருக்கிறார்கள். பாரதநாட்டினர் ஒருவர் பாலி மொழியிலுள்ள மூல பௌத்த நூலான 'திரி பிடக'த்தையும் வேறு ஆதார நூல்களையும் முழு ஆராய்ச்சி நோக்குடன் கடைந்தெடுத்து, அவற்றைச் சான்றாகக் கொண்டு முதல்முதலில் வழங்கிய சரித்திர நூல், தர்மானந்த கோஸம்பி எழுதிய இந்த நூலே எனலாம். பழமையான இந்தப் பண்டத்தில் அறிவினால் கொள்ளக்கூடிய பகுதியை மட்டுமே அவர் எடுத்துக்கொண்டார். புராண சம்பந்தமான அற்புதங்கள், நடக்க இயலாத நிகழ்ச்சிகள் ஆகியவற்றை

யெல்லாம் அவர் விட்டுவிட்டார்; தாம் எழுதிய அவ்வளவுக்கும் அவர் அங்கங்கே மூலச்சான்றுகளும் காண்பித்திருக்கிறார். இங்ஙனமே பௌத்த இலக்கியத்திலும் ஜைன இலக்கியத்திலும் அவர்கள் காலத்துச் சமூக நிலை, சமயநிலை, அரசியல்நிலை ஆகியவைபற்றிக் கிடைக்கக் கூடிய செய்திகள் அனைத்தையும் திரட்டிப் பயன்படுத்தி, இந்த நூலாசிரியர் புத்தர் காலத்து நிலைமையைப் பற்றிக் புதிய அறிவொளியை வீசியிருக்கிறார்.

புத்தர்பெருமானிடம் ஒப்பற்ற ஈடுபாடு கொண்டவராயினும், தர்மானந்தர் தமது தனிச் சிறப்பான உண்மைப் பற்றினால், அச்சமற்று, தமக்குச் சரி என்று தோன்றியதையே இதில் எழுதியிருக்கிறார். பெரும்பாலான மக்களின் நலனுக்காகவே எழுத விரும்பியதனால், அவர் இந்தச் சரித்திரத்தையும், தம்முடைய மற்ற நூல்களையும், பொது மக்கள் புரிந்து கொள்ளக் கூடிய தெளிவான நடையில் எழுதினார்.

பாலி மொழியில் அவர் மிகவும் வல்லவராக இருந்தார்; தாய்மொழி போலவே தெளிவாக அந்த மொழியில் எழுதுவார். பௌத்த நூல்களுக்கு அவர் வகுத்த பாலி உரைகளில், தமது புலமையை எளிய விஷயங்களைக் கடுமையாக்குவதிலும், கடுமையானவற்றைப் பின்னும் கடுமையானவையாக்குவதிலும் பயன்படுத்தவில்லை.

பாரதநாட்டினர் புத்தர் பெருமானை மறந்துவிட்டதையும், நன்மை பயக்கும் அவருடைய சமயத்தைப்பற்றிப் புலவர்களின் சிந்தனைகூட மாறுபட்டிருப்பதையும் கண்ட தர்மானந்தர், தாம் பயின்ற அனைத்தையும் சாரமாகத் திரட்டி, மக்களுக்கு விளங்கும் எளிய நடையில் மராட்டி மொழியில் தந்திருக்கிறார். மகாத்மா காந்தியடிகளின் குஜராத் வித்தியாபீடம், அதைக் குஜராத்தியில் மொழி பெயர்த்து வெளியிட்டது.

தர்மானந்த கோஸம்பி, 1876-ஆம் ஆண்டில் கோவாவில் ஒரு சிற்றூரில் பிறந்தார். கோவாவில் அரசாங்கத்தார் சார்பில் கல்விப் பயிற்சிக்கு அறவே ஏற்பாடு இல்லாததனால் அவர் சொந்தமாகச் சிறிது மராட்டியும் சம்ஸ்கிருதமும் கற்றுக்கொண்டார். மிகுதியான நேரத்தை அவர் தமது தென்னந்தோப்புக்குத் தண்ணீர் பாய்ச்சுவதில் கழித்தார். இதனிடையில் அவர், ‘பாலபோதம்’ என்ற குழந்தைகளுக்கான மராட்டியப் பத்திரிகையில் புத்தர் பெருமானின் சரிதத்தைப் படித்தார். அது அவர் மனத்தில் ஆழ்ந்து பதிந்தது; மற்ற வேலைகள் யாவற்றையும் விட்டு, பௌத்த தரும அறிவைப் பெற உறுதி கொண்டார். அவர் தமது சுய சரிதத்தில், “எத்தனை இடுக்கண்கள் வரினும், எத்தனை துன்பங்களைத் தாங்க நேரினும், புத்தர்பிரானின் அறவுரைகளை நான் அறிந்து கொண்டால் போதும்; என் வாழ்க்கை பயனுறும் - என்று கருதினேன்” என வரைகிறார்.

குடும்பத்தில் நேர்ந்த விபத்துக்களினால் அவருக்கு இல்வாழ்வில்

வெறுப்பு உண்டாயிற்று. இருபத்திரண்டாவது பிராயத்தில் அவர் இல்லத்தைத் துறந்தார். பம்பாயில் பிரார்த்தனா சமாஜத்தின் அலுவலகத்தில் இருந்து சிறிதளவு பயின்றார். புனாவுக்குச் சென்று, பெரும்புலவரான டாக்டர் பண்டார்கரைச் சந்தித்தார். குவாலியருக்கும் காசிக்கும் போய், சம்ஸ்கிருதத்தை ஆழ்ந்து பயின்றார். இதற்குப் பிறகு, அவர் தமது தலைமையான நோக்கத்தை உன்னி, பௌத்த தருமத்தை அறிவதற்காக, புத்தர்பிரானின் தாயகமான நேபாளத்துக்கு முதலில் சென்றார். அங்கிருந்து புத்தகயைக்கு வந்தார். 'பௌத்த சாத்திரங்களை-திரிபிடக நூல்களை- இலங்கையில்தான் பயில இயலும்' என்று அவர் அங்கே தெரிந்துகொண்டார்.

இளைஞர் தர்மானந்தர் எவ்வகை உதவியுமின்றிப் பல துன்பங்களைத் தாங்கிக் கொண்டு இலங்கை போய்ச் சேர்ந்தார். அங்கு அவர் தீட்சை பெற்று, மகாஸ்தவிரரான ஸுமங்கலாசாரியரிடம் இருந்து, பாலி நூல்களை ஆழ்ந்து பயின்றார். பிறகு பர்மாவுக்குச் சென்று அங்கே தியான வழியைப் பயின்று இந்தியாவுக்குத் திரும்பினார். அறத்தை அறியும் ஆவல் தூண்ட, அவர் தாய்நாட்டிலும் பிற நாடுகளிலும் நீண்ட யாத்திரை செய்த வரலாற்றைப் படித்தால் மெய் சிலிர்க்கும்.

சநாதன தருமத்துக்கும் பௌத்த தருமத்துக்கும் ஒரு பெரிய வேறுபாடு உண்டு: சநாதன தருமத்தில் பிரமசரியம், இல்லறம், வானப்பிரத்தம், சந்நியாசம் என்ற வரிசை முறையாக உள்ளது. ஓர் ஆசிரமத்திலிருந்து முன்னேறி வேறு ஆசிரமத்திற்குச் செல்ல இயலும்; ஆனால் பின்னால் திரும்பி வர அநுமதி இல்லை. ஆதலினால்தான் குரு கூடுமானவரைக்கும் யாருக்குமே சந்நியாச தீட்சையை எளிதில் கொடுப்பதில்லை.

பௌத்த தருமத்தின் நோக்கம் வேறு. மகனுக்குத் தக்க பிராயம் வந்ததுமே, மிகச் சிறந்த பிக்கு தருமத்தின் தீட்சையை அவனுக்கு அளிப்பது தமது கடமை என்று அங்கே பெற்றோர் கருதுவர். பின்னால் இந்த உயர்பொருள் தனக்கு ஏற்றதன்று என்று மகன் உணர்ந்தால் அவன் தன் விருப்பப்படி கீழே இறங்கலாம். பிட்சு விரதத்தை ஏற்ற பிறகு ஒருவன் இல்லறத்தில் புக விரும்பினால், குருவின் இசைவு பெற்று அப்படிச் செய்ய முடியும் என்பது பௌத்த தரும வழக்கம். தர்மானந்தரும் அங்ஙனமே செய்தார்.

இந்தியாவுக்குத் திரும்பியதும், தர்மானந்தர் பௌத்த தருமத்தைப் பற்றிய அறிவைத் தம் மக்களிடையே பரப்புவதற்காக, கல்கத்தாப் பல்கலைக் கழகத்தில் இடம் பெற்றார். அங்கே சிறிது தொண்டாற்றிய பின், அவர் மகாராஷ்டிரம் சென்று, பரோடா அரசரான ஸ்ரீ ஸயாஜி ராவ் காயக்வாட் அவர்களைச் சந்தித்தார். தர்மானந்த கோஸம்பி சோற்றுக் கவலையின்றிச் சுதந்திரமாகச் செயலாற்றுவதற்கு வேண்டிய ஏற்பாட்டை மன்னர் செய்துவிட்டார். தர்மானந்தர் புனாவுக்கு வந்ததுமே டாக்டர்

பாண்டார்கரின் உதவியைக் கொண்டு, பம்பாய்ப் பல்கலைக் கழகத்தில் பாலி மொழியைப் பயில இடம் கொடுக்கச் செய்தார்.

இதனிடையில் அமெரிக்காவில் ஹார்வர்டு யூனிவர் சிடியைச் சார்ந்த டாக்டர் ஜேம்ஸ் வுட்ஸ் இந்தியாவுக்கு வந்திருந்தார். தகுந்த பாலிப் புலவரைக் கொண்டு 'விஸுத்தி மக்கம்' என்ற கடுமையான நூலை ஹார்வர்டில் பதிப்பிக்க வேண்டும் என்பது அவருடைய பெருவிருப்பம். புரொபசர் வுட்ஸ் வற்புறுத்தியதனால் தர்மானந்தர் அமெரிக்காவுக்குச் சென்றார். அங்கே பல தொல்லைகள் நேர்ந்ததனால் அவர் வேலையை விட்டு, தமது மதிப்பைக் காப்பாற்றிக்கொண்டு தாய்நாடு வந்த சேர்ந்தார். பாரத நாட்டுக்கு வந்து அவர் பர்க்யுஸன் கல்லூரியில் பாலி கற்றுக்கொடுக்கும் தொண்டினை ஏற்றார்; நல்ல நல்ல மாணவர்களைப் பாலி இலக்கியத்தில் நிபுணர்களாக்கினார். ஆறு ஆண்டுகளுக்குப் பின்பு அவர் மீண்டும் அமெரிக்காவுக்குப் போய், 'விஸுத்தி மக்கம்' என்ற நூலின் பதிப்பை நிறைவேற்றினார்.

இந்தியாவில் கல்கத்தா, பரோடா, அகமதாபாத், புனா, காசி முதலிய இடங்களில் இருந்து, அவர் பல மாணாக்கர்களைப் பயிற்றுவித்தார். இன்று அவர்கள், பாலி இலக்கியத்தில் தேர்ச்சி பெற்றவர்கள் என்ற பெரும் புகழை எய்தியிருக்கிறார்கள். மகாத்மா காந்தியடிகளின் குஜராத் வித்தியாபீடத்திலிருந்து அழைப்பு வந்ததும், தர்மானந்தர் அங்கே சென்று பல நூல்களை எழுதினார். பண்டிதர் ஸுகலால், முனி ஜினவிஜயர், ஸ்ரீ பேசர்தாஸ், ரஸிகலால் பரீக் ஆகிய ஜைனப் புலவர்களுடன் ஒத்துழைத்து, ஜைன பௌத்த இலக்கியங்களை ஒப்பிட்டுப் பயிலுவதற்குப் பேருதவி செய்தார்.

1929-ஆம் ஆண்டில், பாலிப் புலவரான ருஷியப் பேராசிரியர் செர்பெட்ஸ்கியின் அழைப்பை ஏற்று, தர்மானந்தர் ருஷியாவுக்குப் போய் வந்தார்.

தர்மானந்தர் அமெரிக்காவில் இருந்தபோது, பஞ்சாப் புரட்சித் தலைவரான லாலா ஹரதயாலுடன் அவருக்கு மிகுந்த பழக்கம் ஏற்பட்டது. அவர் சிந்தனை கம்யூனிசத்தை நோக்கித் திரும்பியது. ருஷியாவில் கம்யூனிசம் நடைமுறையில் எப்படி இருக்கிறது என்பதை அவர் நேரில் கண்டார். தத்துவப் பற்றுள்ள தமது பார்வையினால், கம்யூனிசத்திலுள்ள குணங்களையும் குற்றங்களையும் அவர் கண்டு கொண்டார்.

பெரும்பாலான மக்களின் நன்மைக்காகவும் பெரும்பான்மையோரின் இன்பத்துக்காகவும் அவதரித்த புத்தர் பெருமானுக்கு ஆட்பட்டவர், சுயராஜ்ய இயக்கத்தில் கலக்காமலிருப்பது சாத்தியமன்று. 1930-இல் தர்மானந்தர் ருஷியாவிலிருந்து திரும்பி வந்தபோது, இந்தியாவில் சுதந்திர இயக்கம் வீறுடன் நடந்துவந்தது. அதில் அவர் முழு

உற்சாகத்துடன் பங்கு கொண்டார். அவர் உப்புச் சத்தியாக்கிரகத்தில் ஈடுபட்டுத் தொண்டர்களைப் பயிற்றும் பொறுப்பை ஏற்று, சிறையநுபவத்தையும் பெற்றார். இதற்குப் பின்பு அவர் நான்காவது தடவையாக அமெரிக்காவுக்குச் சென்றார். அவர் அங்கிருந்து திரும்பியதும்' காசியில் தங்கி 'இந்தியப் பண்பாடும் அஹிம்சையும்' என்ற நூலை.எழுதினார். சமய சிந்தனைகளின் பயனாகவும் சமயவாதங்களின் பயனாகவும், பாரதநாட்டின் சரித்திரத்தைப் பற்றியும் பண்பாட்டைப் பற்றியும் தாம் கண்ட முடிவுகளின் சாரத்தை அவர் இந்த நூலில் அச்சமின்றித் தெளிவாக விளக்கியிருக்கிறார். எனவே அவருடைய முடிவுகள் போதுமான அளவு விவாதத்துக்கு இடமாக இருப்பது இயல்புதானே?

இதற்குப் பின்பு அவர் பம்பாய்க்குச் சென்று, தொழிலாளர்களின் நடுவே ஓர் ஆசிரமத்தை நிறுவி வாழ்ந்தார். அவருடைய அந்த 'பகுஜன விஹாரம்', இன்றும் பல வெளிநாட்டுப் பௌத்தத் துறவிகளுக்குப் புகலளிக்கிறது.

பம்பாயில் இருந்த வேலையை விட்டு, தர்மானந்தர் ஸாரநாத்தில் போய்த் தங்கினார். அங்கே ஜகதீச காசியபர் முதலிய சிறந்த பாலிப் புலவர்களுக்கு வேண்டிய உதவிகளைச் செய்தார்.

ஜைன சமயத்தின் இருபத்துமூன்றாவது தீர்த்தங்கரரான பார்சுவநாதருடைய "சாதுர்யாம தருமம்" தர்மானந்தரின் உள்ளத்தைக் கவர்ந்தது. அதில் அவர் ஆன்மிகப் பொதுவுடைமையைக் கண்டார். பார்சுவநாதருடைய சாதுர்யாம தருமத்தைப்பற்றி இந்த நோக்குடன் அவர் ஒரு சிறுநூலும் எழுதியிருக்கிறார். இந்த நூல், அவர் இறந்த பிறகு, 'தர்மானந்த நினைவு டிரஸ்ட்'டின் வெளியீடாக வந்தது.

பார்சுவநாதருடைய அறவுரை அவருடைய உள்ளத்தில் ஆழ்ந்து பதிந்ததனால் அவரும், 'உடல் நலிந்து தானாக விழும்வரைக்கும் மனிதன் சாவை எதிர்பார்த்திருப்பது அவனுக்கு அழகன்று. உடல் பயன்படும் வரையில்தான் அதை இயக்க வேண்டும். உடலினால் சிறந்த தொண்டுக்கு இடமில்லாத நிலையில், மனிதன் ஊனைவிடுத்து, தானாகவே இந்த உடலை- இந்தத் தோலை- எறிந்துவிட வேண்டும்' என்று கருதலானார்.

பார்சுவநாதருடைய இந்த வாழ்க்கை நோக்கு, கோஸம்பிக்கு மிகவும் பிடித்தது. அவர் உடலை விடுவதற்குப் பிராயோபவேசம் தொடங்கினார். காந்தியடிகளுக்கு இந்தச் செய்தி எட்டியதும், அவர் கோஸம்பியைத் தடுத்தார். தர்மானந்தர் மகாத்மாவின் ஆணையைத் தலையால் ஏற்று உபவாசத்தை விடுத்தார்; ஆயினும், மனிதனுக்கு இயல்பான வாழும் விருப்பத்தை அவர் முன்னமே அடக்கிவென்றார். அந்த விருப்பம் மீண்டும் தலையெடுக்கவில்லை. அவர் சில நாள் காசியில் இருந்தார்;

பின்பு பம்பாயில் இருந்தார்; இறுதியில் காந்தியடிகளின் சேவாகிராம ஆசிரமத்தில் தங்குவதை உவந்தார். அங்கேயே 4, ஜூன், 1947-இல் அவருடைய உடல் நலிந்து உதிர்ந்தது.

அவர் காலமான செய்தியைக் கேட்ட காந்தியடிகள், டில்லியில் தமது பிரார்த்தனைக் கூட்டத்தில், "தான் செய்த வேலையைத் தமுக்கடித்துக் கொண்டு திரிகிறவனையும், அரசியலில் எகிறிக் குதிப்பவனையும் வானத்தில் உயர்த்திப் போற்றுகிறவர்களாக நாம் ஆகிவிட்டோம். ஆனால் வாய்திறவாது செயலாற்றுபவர்களை நாம் கவனிப்பதில்லை. கோஸம்பி அவர்கள் இத்தகைய வாய்திறவாத செயலாளர்" என்று கூறினார்.

தர்மானந்தரின் நினைவாக ஒரு திட்டம் வகுக்கக் காந்தியடிகள் உத்திரவிட்டார். பௌத்த சமயத்தையும் இலக்கியத்தையும் ஊற்றத்துடன் பயிலுவதற்காகச் சில மாணவர்களை இலங்கைக்கு அனுப்புவும், தர்மானந்தரின் நூல்கள் அனைத்தையும் எளிதில் வெளியிடவும் அவர் ஏற்பாடு செய்தார்.

சநாதன தர்மமாயினும் சரி, ஜைன சமயமாயினும் சரி, பௌத்த சமயமாயினும் சரி; எந்த மதத்திலும் தர்மானந்தருக்கு விடாப்பிடியான பற்று இருந்ததில்லை. பிறந்ததிலிருந்தே பிராம்மண தர்மத்தில் வளர்ந்தவராதலால், அந்தத் தருமத்தைச் சார்ந்த பழக்க வழக்கங்களைப் பற்றியும், அந்தணர்களின் சமூக நோக்கத்தைப்பற்றியும் அவருக்குச் சிறிது கசப்பு ஏற்பட்டிருந்தது என்று அவருடைய நண்பர்கள் கூறுவர். எது எப்படியாயினும், அவர் தம் நூல்களின் வாயிலாகவும், அறிவுரைகளின் வாயிலாகவும், சிறப்பாகத் தம்முடைய மாணவர் குழுவின் வாயிலாகவும் புத்தர் பெருமானுடைய வாழ்க்கை, பண்பு, உபதேசங்கள் ஆகியவை பற்றிய உண்மையான அறிவைப் பரப்பத் திறமையாக முயன்றார். புத்தர் பிரானின் உபதேசத்தை இன்றையக் கம்யூனிசத்தின் வாயிலாக எவ்வாறு பயன்படுத்த முடியும் என்பதையும் அவர் காண்பித்தார்.

மகாத்மாவினிடம் தர்மானந்தர் எல்லையற்ற அன்பும் நம்பிக்கையும் கொண்டவராயினும், காந்தியடிகள் சொல்வது தமக்கு உடன்பாடு இல்லாத காலையில் அவருடைய குற்றத்தை ஆராய்ச்சி முறையில் எடுத்துக் கூற அவர் என்றும் தயங்கியதில்லை.

பார்சுவநாதருடைய சாதுர்யாம தருமத்திலிருந்துதான் பௌத்தம், ஜைனம் என்ற இரு கிளைகள் தோன்றியுள்ளன என்பது தர்மானந்தரின் முடிவு. பௌத்த ஜைனச் சிந்தனைப் போக்குகளுக்கு அடிப்படையாக உள்ள வாழ்க்கைத் தத்துவத்தை ஒப்புக்கொண்டால்தான் கம்யூனிசமும் சோஷலிசமும் பயன்பட்டு, மனித இனத்துக்கு நன்மை செய்யும் சாதனை இன்றைய மனிதனுக்குக் கைகூடும் என்பதும் அவருடைய கருத்தாகும்.

இதனால்தான் மகாத்மாவின் சிந்தனைகள் தர்மானந்தரின் உள்ளத்தில்

ஆழ்ந்து பதிந்தன. காந்தியடிகள் கூறும் செயலில் தமது வாழ்வை ஈடுபடுத்துவதே உண்மையான பேறு என்ற நம்பிக்கை அவருக்கு உண்டாயிற்று.

அவர் கோவாவில் பிறந்தவர்; ஆதலால் தம் இறுதி நாட்களில், "இன்று உடல் நன்றாக இருக்குமானால் கோவாவின் விடுதலைப் போரில் கட்டாயம் ஏதாவது பங்கு கொண்டிருப்பேன்" என்று சொல்லிவந்தார். உடல் நலிவுற்ற நிலையிலும் அவர், நோவாகாலியில் மகாத்மா செயலாற்றியதைக் கண்டு மிகவும் வருத்தத்தோடு, "நானும் இப்படியே கோவாவுக்குச் சென்று என் தாய்நாட்டின் விடுதலைக்காகப் போராடி என் உடலை எறிய முடிந்தால் எவ்வளவு நன்றாக இருக்கும்!" என்று கூறினார்.

தர்மானந்தரின் புத்த பக்திக்கு உண்மைத் தூண்டுதலாக அமைந்தது அவரது புலமையன்று; நல்லொழுக்கமும் நன்னடத்தையுமே அவரது பக்திக்குத் தூண்டுகோலாக அமைந்தன. அவர் எல்லா வகையிலும் கடுமையான நிலைகளிலும், மிகவும் மாறுபாடான நிலைமைகளிலும் இருந்து, பல இடங்களில் சுற்றினார்; ஆயினும் துளியும் மாசற்றவராகவும், களைந்த அரிசியைப்போலத் தூயவராகவும் விளங்கினார். சீலத்தில் இவ்வளவு உறுதியான பற்றுக் கொண்டவராக இருந்ததனால், சாந்திதேவாசாரியரின் 'போதிசாரியவதாரம்' அவருக்கு மிகவும் பிடித்தது. அதை மராட்டியிலும் குஜராத்தியிலும் மொழி பெயர்த்தார். தமது நெஞ்சுக்கு நன்மணமூட்டவே சாந்திதேவாசாரியர் அந்த நூலை இயற்றினார். அதில் எங்கும் சீலத்தின் மணம் வீசுகிறது. ஆதலால் தர்மானந்தர் அதில் மோகித்துப் போனார்.

அவருடைய அச்சமற்ற சீலத்தை எடுத்துக் காட்டும் அழகிய நிகழ்ச்சியொன்று நினைவுறத்தக்கது. ஒருமுறை தர்மானந்தர் பரோடாவில் சம்ராட் அசோகனைப்பற்றிப் பேச ஏற்பாடு ஆகியிருந்தது. பரோடா மன்னரான ஸ்ரீ ஸயாஜிராவ் அவர்களே அவைக்குத் தலைமை தாங்குவதாக இருந்தார். பேசுவதற்கு முன்பு, தர்மானந்தருக்கு ஒரு செய்தி தெரிய வந்தது சமாதானத்தை சார்ந்த ஒரு பகுதியில் மக்கள், கள்ளுக்கடைகளை மூடிவிட வேண்டுமென்று மன்னரிடம் கோரினார்கள். அதற்கு அவர், அந்தக் கடைகளிலிருந்து அரசாங்கத்துக்குக் கிடைக்கும் வருமானத்தை வேறு வகையில் நிறைவேற்றுவதாக இருந்தால் கடைகளை மூடிவிடுவதாகக் கூறினார். இந்தச் செய்தியை அறிந்த தர்மானந்தர் தமது பேச்சினிடையே, "அசோகன் தனது இராச்சியத்தில் மதுவிலக்குச் செய்திருந்தான். மதுவிலக்கினால் நேரும் வருமானக் குறைவை வேறுவகையில் ஈடுசெய்தால்தான் மதுவிலக்கு செய்வேன் என்று அவன் சொல்லவில்லை" என்று பகர்ந்தார். அவர் பேச்சு முடிந்ததும் மன்னர், "தர்மானந்தரே, இன்று நீங்கள் எமக்கு நல்ல பாடம் கற்பித்தீர்கள்" என்று மட்டும் சொல்லிப் போய்விட்டார்.

மன்னர் சினந்து கொண்டிருக்கிறார், தர்மானந்தருக்குக் கிடைத்து

வந்த உதவியை நிறுத்திவிடுவார் என்றே அனைவரும் நினைத்தார்கள். ஆனால் பயன் வேறாக இருந்தது. குறிப்பிட்ட பகுதியிலுள்ள கள்ளுக்கடைகளையெல்லாம் மூடிவிட்டதாக மறுநாளே அறிக்கை வெளிவந்தது

## கோஸம்பி அவர்களின் இலக்கியம்

பௌத்தர்கள் தமது தீட்சையின் தொடக்கத்தில் 'சரணத் திரய'த்தை ஒலிப்பர். அதைக் கொண்டு தர்மானந்தர் முதல்முதலில் புத்தர், தருமம், சங்கம் என்ற மூன்றையும் பற்றிச் சில பிரசங்கங்கள் செய்தார்; அவற்றைச் சிறு நூலாக முதலில் வெளியிட்டார்.

இதற்கு பின்பு, பாலி மரபைப் பின்பற்றி அவர் புத்தர் பிரானின் முற்பிறப்புக் கதைகள் சிலவற்றையும், கோதம புத்தருடைய விரிவான சரித்திரத்தையும், அவருடைய அறவுரைகளின் சாரத்தையும், ஒன்றாகத் திரட்டி, 'புத்த லீலாசார சங்கிரகம்' என்ற மிகுந்த சுவையுள்ள, எளிய நூலைத் தந்தார். இந்த நூல் வீட்டுக்கு வீடு பரவி, பௌத்த தருமத்தைப் பற்றிய ஊக்கத்தையும் போதுமான அறிவையும் மக்களுக்கு ஊட்டியது.

புத்தர் பெருமான் தம்மைப் பின்பற்றிய ஆயிரக்கணக்கான பிட்சுக்களின் கட்டுப்பாட்டுக்கும், அவர்களின் வாழ்வைச் சாதனையினால் தூயதாக்குவதற்கும் சில நியமங்களை ஏற்படுத்தினார்; அவை 'விநயபிடக'த்தில் வருகின்றன. அதன் சாரத்தைத் தெரிவிக்குமாறு நான் தர்மானந்தரை வேண்டியதன் பயனாக, 'பௌத்த சங்க வரலாறு' என்ற நூலை அவர் அளித்தார்.

பாலி இலக்கியத்தில், 'தம்மபதம்', 'ஸுத்தநிபாதம்' ஆகிய இரண்டு நூல்களில் புத்தர்பிரானின் உபதேசங்கள் அழகிய முறையில் வந்துள்ளன. ஆதலால் இவை இரண்டையும் தர்மானந்தர் மொழிபெயர்த்தார். தவிர, நாள்தோறும் படிப்பதற்கு ஏற்றபடி பாலி 'லகுபாடம்' ஒன்றையும் இயற்றினார். மகாயான சம்பிரதாயத்துப் பெரியோர்களில் சாந்திதேவாசாரியர் மிகச் சிறந்தவர். அவருடைய நூல்களுள் 'போதிசரியாவதாரம்' மிக உயர்ந்ததாக மதிக்கப் பெறுகிறது. அதனையும் தர்மானந்தர் மொழி பெயர்த்துள்ளார்.

பௌத்த சாதனையை அறிவிக்கும் மகத்தான நூல் 'விஸுத்தி மக்கம்' என்பது. இதை ஆராயத்தான் தர்மானந்தரை நான்கு தடவைகள் அமெரிக்காவுக்கு அழைத்தார்கள். இந்த நூலுக்கு அவர் பாலி மொழியில் 'தீபிகா' என்ற உரை வரைந்திருக்கிறார். இதன் சாரத்தை மராட்டியிலும் குஜராத்தியிலும் 'சமாதி மார்க்கம்' என்ற நூலாக அளித்திருக்கிறார்.

பௌத்த இலக்கியத்தில் ஜாதகக் கதைகள் மிகவும் சுவையுள்ளவை. அவற்றில் புத்தருடைய முற்பிறப்புக்களைப் பற்றிய செய்திகள் வருகின்றன. இவற்றைத் தொகுத்து, குஜராத்தியில் மொழிபெயர்த்த

பதிப்பு முன்னமே வெளிவந்தது.

புத்தர் இல்லத்தைத் துறந்தது பற்றிக் காவியமயமான கருத்து உலகில் வழங்குகிறது; பிணி மூப்புச் சாக்காடு ஆகியவற்றைக் கண்டு வியர்ந்த அரச குமாரரான சித்தார்த்தர் இல்லத்தைத் துறந்து மறைவாக ஓடிவிட்டார் என்னும் அந்தக் கருத்து, வெறும் கற்பனைக் கதையாகும். புத்தர் பிரான் இல்லத்தை ஏன் துறந்தார் என்பதுபற்றிய தமது ஆராய்ச்சியையும் அதற்கு உரிய சான்றுகளையும் மக்களுக்கு விளக்குவதற்காக, தர்மானந்தர் ஒரு சிறு நாடகம் எழுதினார். 'போதிசத்துவர்' என்ற அந்த நாடகம் மராட்டி மொழியில் வெளிவந்துள்ளது. 'அபிதம்ம'த்துக்கும் அவர் 'நவநீதம்' என்ற உரையை வகுத்தார்; அதைப்பற்றிக் குஜராத்தியிலும் எழுதுவித்தார்.

குஜராத் வித்தியாபீடத்தில் இருந்து அவர் பிறருக்குக் கல்வி பயிற்றுவித்ததுடன், தாமும் ஜைன சமயத்தையும் இலக்கியத்தையும் பயின்றார் அமெரிக்காவில் தந்திலாள ஹரதயாளுடன் பழகியதனால் அவர் முன்னமே பொது உடமை நூல்களைப் பயின்றிருந்தார். இந்தப் பயிற்சிகள் அனைத்தின் பயனாகவும் அவர் இரண்டு நூல்களை எழுதினார்-1, இந்தியப் பண்பாடும் அஹிம்சையும், 2. பார்சுவநாதரின் சாதுர்யாம தருமம்.

அவர் தமது சுய சரிதத்தை, 'நிவேதனம்', 'விளக்கம்', என்ற இரண்டு நூல்களாக வரைந்தார். 'நிவேதனம், மராட்டியிலும் குஜராத்தியிலும் வெளிவந்துள்ளது; 'விளக்கம்' வெளியாகவில்லை.

**-காகாஸாஹப் காலேல்கர்**

# பொருளடக்கம்

## பக்தப் புலவர் தர்மானந்த கோஸம்பி

# குறிப்பு

மகாவீரப் பெருமானும், பழங்காலத்து ஜைனச் சிரமணரும், பிட்சையாகக் கிடைத்த புலாலை ஏற்று வந்தனர் என்று இந்நூலாசிரியர் பதினோராம் அத்தியாயத்தில் கூறியிருப்பதைப் பல ஜைனப் புலவர்கள் வன்மையாக மறுத்திருக்கிறார்கள். ஜைன சூத்திரத்துக்கு இவ்வாசிரியர் கூறும் உரை தவறானது என்பது அவர்கள் கொள்கை. அவர்கள் மருத்துவ நூல்களையும், அகராதிகளையும் சான்றாகக் கொண்டு, 'இந்த அத்தியாயத்தில் ஜைன சூத்திரத்து மேற்கோளில் வரும் கபோதம் என்ற சொல்லுக்குப் புறா என்பது பொருளன்று; புறாவண்ணமுள்ள வெள்ளைப் பூசனியை அது குறிக்கிறது' என்றும், 'குக்குடம் என்ற சொல் கோழி என்ற பொருளில்வராமல், எலுமிச்சம்பழத்தைக் குறிக்கிறது' என்றும், மாமிசம் என்ற சொல் பழத்தின் சதைப் பற்றையும், அஸ்தி என்பது எலும்பன்றி, பழத்திலுள்ள விதைகளையும் கொட்டைகளையும் குறிப்பதாகவும், மார்ஜாரம் என்பது பூனையன்றிக் குக்குடக் கனியைப் புசித்து அடக்க வேண்டிய ஒருவகை வாயுவைக் குறிப்பதாகவும் அவர்கள் கொள்கிறார்கள்.

இந்த விவாத விஷயத்தில் சாகித்திய அக்கடமி கூறக்கூடிய கருத்து ஏதுமில்லை; ஆனால் மூல ஆசிரியர் தந்த மேற்கோளுடன் மற்றவர் கூறும் உரையையும் வெளியிட வேண்டியது நியாயம் என்று அது கருதுகிறது. மூல மராட்டி நூலை வெளியிட்ட தர்மானந்த நினைவு நிதியினர் இந்தக் குறிப்பை வெளியிட இசைந்ததற்கு, சாகித்திய அக்கடமி தன் மகிழ்வைத் தெரிவிக்கிறது.

# தர்மானந்தரும் தமிழ் இலக்கியமும்

"பகவான் புத்தர்" என்ற இந்நூல் நம் எல்லோருக்கும் நன்கு அறிமுகமான வரலாற்று அறிஞர் டி.டி.கோசாம்பி அவர்களின் தந்தையாரும், புகழ்பெற்ற பாலிமொழி அறிஞருமான தர்மானந்தரால் மராட்டி மொழியில் எழுதப்பட்டு, தமிழ் மூல நூல் போன்று காண்டேகர் நூல்களை மொழி பெயர்த்த கா.ஸ்ரீ.ஸ்ரீ அவர்களால் தமிழாக்கம் செய்யப்பட்டதன் மறுஅச்சு ஆகும். இந்தியர் ஒருவரால் (இதற்கு முன் பல மேனாட்டவர்கள் மட்டும் தான் இதனைச் செய்தனர்) முதன் முதலில் பாலி மொழி நூல்களின் ஆதாரங்களைக் கொண்டு மராட்டி மொழியில் எழுதப்பட்ட புத்தரின் வரலாறு ஆகும்.

தமிழ் வாசகர்களாகிய நமக்கும் இந்த நூலுக்கும் என்ன தொடர்பு இருக்க முடியும்? இந்த நூலால் தமிழர்களாகிய நமக்கு என்ன பயன் என்று நீங்கள் சிந்திக்கக் கூடும். தமிழுக்கும் இதற்கும் உள்ள தொடர்பை விளக்க தமிழ் வரலாற்றில் மறக்கப்பட்ட அல்லது மறைக்கப்பட்ட சில பகுதிகளை நாம் காணமுயற்சிக்க வேண்டும். அதனைக் கண்டு கொண்டால் தமிழ் வரலாற்றை மறுவாசிப்புச் செய்ய இந்நூல் உதவும் என்பது என் எண்ணம். அடுத்து நான் குறிப்பிடும் செய்திகளைப் படிக்கும் உங்களுக்கும்அத்தகைய எண்ணம் ஏற்படும் என்பது ஒருதலை.

தமிழ் மொழியில் உள்ள ஐம்பெரும் காப்பியங்கள், ஐஞ்சிறு காப்பியங்கள் இலக்கண நூற்கள், பதினெண் கீழ்க்கணக்கில் பெரும்பாலானவை உள்பட அனைத்தும் சைன, பௌத்த சமயங்களான 'அவைதீக' மரபு சார்ந்ததாக உள்ளது வெள்ளிடைமலை. ஆனால் தமிழ் மொழியின் தோற்றம் பேசும் பிற்கால நூல்கள் 'அகத்தியர்' என்ற 'வைதீக' முனிவரிடமிருந்து தமிழ் பிறந்ததாகக் கூறுகின்றன. இன்று வரை இக்கருத்து தான் பெரும்பாலான தமிழர்களிடம் ஆழப்பதிந்துள்ளது. இருபதாம் நூற்றாண்டைச் சேர்ந்த அறிஞர் பெருமக்களில் 'அயோத்தாச பண்டிதர் ஒருவர் நீங்களாக மற்றவர்கள் அனைவரும் தமிழை "வைதீக" பாரம்பரியத்தில் வைத்துத் தான் தங்கள் ஆய்வுகளை நிகழ்த்தி உள்ளனர். இதன் விளைவாக தொல்காப்பியம், திருக்குறள் உள்பட பல தமிழ் நூல்களின் கருத்துக்கள், இந்த நூல்களின் மூலத் தன்மை, இந்த நூற்கள் தோன்றிய காலம் போன்றவை மனம் போனபடி திரித்துக் கூறப்பட்டுள்ளது. இன்று மட்டுமல்ல இந்தியாவில் 'அவைதீக மரபு' வீழ்த்தப்பட்ட சுமார் ஆயிரம் ஆண்டுகளுக்கு பிற்பட்ட தமிழ் உரையாசிரியர்களில் பலர் தங்கள் உரைகளில் "வைதீக" மரபையே

அடிப்படையாக கொண்டு தாங்கள் உரைவரைந்த 'அவைதீக' மரபு நூற்ளுக்கும் விளக்கம் அளித்தனர். இதன் விளைவாக வைதீக மரபுக்கு எதிரான ஜைன பௌத்த மரபு சார்ந்த தமிழ் நூல்கள் அழிக்கப்பட்டும், மறக்கப்பட்டும் போயின.

இந்த நோக்கின் இன்னொரு அழிவாக சீனத்திலும், ஜப்பானிலும், சிங்களத்திலும் இன்றும் போற்றி வணங்கப்படுகின்ற தமிழர்களாகிய 'போதிதர்மர்' 'புத்தமித்திரர்' 'மகாகாசியபர்' போன்ற பௌத்த ஞானிகளும், உலகின் புகழ் பெற்ற பௌத்த ஆய்வு அறிஞர் டாக்டர் செர்பாட்ஸ்கியால் 'இந்தியாவின் காண்ட்' என்று புகழ்ப்பெற்ற 'தர்மகீர்த்தி' (கி.பி.600) போன்ற இந்திய தத்துவ வரலாற்றில் புகழ்பூத்த தமிழகத்தைச் சேர்ந்த அறிஞர்களையும் இன்றைய தமிழ்ச் சமூகம் நினைத்துப் பார்க்க கூட இயலாமல் மறக்கும் அவலம் ஏற்பட்டுள்ளது.

புத்தருடைய சரித்திர ஆராட்சிக்கு அடிப்படை ஆதாரமாக பாலி மூல நூல்களுடன், கி.பி.4ஆம் நூற்றாண்டு வாக்கில் வாழ்ந்த தமிழகத்தைச் சேர்ந்த அறிஞர் புத்த கோசரின் நூல்களையும் எடுத்தாளுகின்ற ஆசிரியர், பாலி தவிர மற்ற இந்திய மொழிகளில் இதற்கான நூற்கள் இல்லை என எழுதுகின்றார். உண்மையில் நம்முடைய 'மணிமேகலை' காப்பியம் ஏறத்தாழ அதே காலகட்டத்தைச் சார்ந்த படைப்பு ஆகும். அதுமட்டுமல்லாது இந்தியாவில் மொழிகளிலேயே இன்றும் கிடைக்கின்ற ஒரே நூல், 'மணிமேகலை' தான். மற்றொரு சிறந்த நூலான 'குண்டலகேசி' அழிக்கப்பட்டுவிட்டது. தர்மானந்த கோசாம்பி குறிப்பிடும் பல செய்திகள் மணிமேகலையில் காணப்படுகின்றது. உதாரணமாக புத்தரைக் குறிப்பிடும் பல பெயர்கள், பாலி நூல்களில் உள்ளது போன்று மணிமேகலையிலும் உள்ளது. ஆனால் இத்தகைய நூற்களை உலகின், இந்தியாவின் மற்ற ஆய்வாளர்கள் காணும் வகையில் தமிழர்களாகிய நம்முடைய முயற்சிகள் அமையவில்லை. என்பது வருந்தத்தக்கது.

அடுத்து டாக்டர் அம்பேத்கர் அவர்கள் தன்னுடைய 'மகாபாரதம்' பற்றிய ஆய்வொன்றில் மகாபாரதத்தில் 'இஸ்லாமியர்' பற்றிய குறிப்புவருகின்றது என்ற ஆதாரத்தை எடுத்துக்காட்டி கி.பி.ஏழாம் நூற்றாண்டுக்குப் பின்னர் தான் நாம் இன்று காணும் மகாபாரதம் தொகுக்கப்பட்டது என்று குறிப்பிடுவது போன்று 'ஆரணியங்களும் உபநிசத்துக்களும்' புத்தர் காலத்திற்குப் பின்னர் (பக் 92) தான் தொகுக்கப் பெற்றன என்றும், வேதங்கள் எழுதப்பட்ட மொழியை 'சந்தஸ்' என்ற சொல்லாலும் 'பாஷாயம்' என்ற சொல்லால் தமது காலத்து மொழியையும் பாணினி குறிப்பிடுகின்றார் என்றும், மனுநீதி பற்றி குறிப்பிடும் கருத்துக்களும் சங்ககாலம், மற்றும் பழைய தமிழ் நூல்களின் காலத்தையும், களப்பிரர் காலம் பற்றிய புனைவுகளையும் மறுபரிசீலனை

செய்ய நம்மைத் தூண்டுகின்றது. ஆனால் இவற்றை நாம் செய்வதற்கு நமக்கு பாலிமொழி பயிற்சியும் அறிவும் அடிப்படைத் தேவையாக உள்ளது. எதிர் காலத்தில் வரும் ஆய்வாளர்கள் பாலி மொழியைப் பயின்று தமிழகத்தின் உண்மையான வரலாற்றை விளக்க முனைவதற்கு உந்துதல் அளிப்பதாக 'பகவான் புத்தர்' உள்ளது.

தஞ்சாவூர்.
25-12-2000

நிறப்பிரிகை
பொ. வேல்சாமி

# முன்னுரை

பாலி இலக்கியத்தில் திபிடகம் (திரிபிடகம்) என்ற நூல் தொகுதி முக்கியமானது. ஸுத்தபிடகம், விநயபிடகம், அபிதம்மபிடகம் என அது மூவகைப்படும். ஸுத்தபிடகத்தில், புத்தரும் அவருடைய முதன்மையான சீடர்களும் ஆற்றிய அறிவுரைகள் சிறப்பாகத் தொகுக்கப் பெற்றுள்ளன. விநயபிடகத்தில், பிட்சுக்கள் எவ்வாறு நடந்துகொள்ள வேண்டும் என்பதுபற்றிப் புத்தர்பிரான் வகுத்த நியமங்களும், அவற்றை வகுத்ததற்கு உரிய காரணங்களும், அவ்வப்பொழுது அந்த நியமங்களில் செய்துள்ள மாறுதல்களும், அவ்விதிகளுக்கு உரைகளும் தொகுக்கப் பெற்றுள்ளன. அபிதம்மபிடகத்தில் ஏழு பிரகரணங்கள் இருக்கின்றன. புத்தர் உபதேசித்த பல விஷயங்களைப் பற்றிய ஆராய்ச்சி இந்தப் பிடகத்தில் செய்யப்பட்டுள்ளது.

ஸுத்தபிடகம் ஐந்து பெரும் பகுதிகள் கொண்டது. அவையாவன- தீகநிகாயம், மஜ்ஜிமநிகாயம், ஸம்யுத்த நிகாயம், அங்குத்தரநிகாயம், குத்தகநிகாயம். தீகநிகாயத்தில் முப்பத்துநான்கு பெரிய ஸுத்தங்கள் உள்ளன. தீகம் என்றால் பெரிய(ஸுத்தம்) என்று பொருள். பெரிய ஸுத்தங்களைத் தொகுத்தமையால் இதற்குத் தீகநிகாயம் என்று பெயர்.

மஜ்ஜிமநிகாயத்தில் நடுத்தர அளவுள்ள ஸுத்தங்கள் உள்ளன. ஆதலால் இதற்கு மஜ்ஜிம (மத்தியம) நிகாயம் என்ற பெயர் அமைந்தது. ஸம்யுத்தநிகாயத்தில் காதைகள் கலந்த ஸுத்தங்களும் மற்றப் பகுதிகளில் முதற்பகுதியில் பலவேறு விஷயங்களைப் பற்றிய சிறியவையும் பெரியவையுமான ஸுத்தங்களும் வருகின்றன. ஆதலால் இதற்கு ஸம்யுத்த நிகாயம் அதாவது கவலையான நிகாயம் என்ற பெயர் அமைந்தது. அங்குத்தரம் என்றால் ஒவ்வோர் அங்கமாக் வளர்ந்து செல்லும் பகுதி. இதில் ஏககநிபாதம் முதல் ஏகாதஸக நிபாதம்வரையில் பதினொரு நிபாதங்கள் தொகுக்கப் பெற்றுள்ளன. ஏககநிபாதம் என்றால், ஒரே பொருளைப்பற்றிப் புத்தர் உபதேசித்த ஸுத்தங்கள் அடங்கிய தொகுதி. இப்படியே துகநிபாதம், திகநிபாதம் முதலியவை பற்றியும் அறிக.

குத்தகநிகாயம் என்பது சிறு பிரகரணங்களின் தொகுதி. அதில் பதினைந்து பிரகரணங்கள் உள்ளன. அவையாவன- குத்தகபாடம், தம்மபதம், உதானம், இதிவுத்தகம், ஸுத்த நிபாதம், விமானவத்து, பேதவத்து, தேரகாதை, தேரிகாதை, ஜாதகம், நித்தேஸம், படிஸம்பிதாமக்கம், அபதானம், புத்தவம்ஸம், சரியாபிடகம். இவ்வாறு

ஸுத்தபிடகம் விரிந்துள்ளது.

விநயபிடகம் ஐந்து பகுதிகள் கொண்டது. அவை யாவன- பாராஜிகா, பாசித்தியாதி, மகாவக்கம், சுல்ல வக்கம், பரிவாரபாடம்.

மூன்றாவதான அபிதம்மபிடகத்தில் ஏழு பிரகரணங்கள் உள்ளன. அவையாவன- தம்மஸங்கணி, விபங்கம், தாது கதை, புக்கலபஞ்ஞத்தி, கதாவத்து, யமகம், பட்டானம் என்பவை.

புத்தகோஷர் வாழ்ந்த காலத்தில் அதாவது சுமார் கி.பி. நான்காம் நூற்றாண்டில், இந்த நூல்தொகுதிகள் அனைத்திலுமிருந்த வாக்கியங் களையோ பகுதிகளையோ பாலி என்று வழங்கி வந்தார்கள். புத்தகோஷர் தம் நூல்களில் திரிபிடக மேற்கொள்களைக் குறிக்கும்போது, 'அயமேத்த பாலி' (இவ்விடத்தில் பாலி கூறுவதாவது) என்றும், 'பாலியம் உத்தம்' (பாலியில் கூறியிருப்பதாவது) என்றும் எழுதுகிறார். பாணினி, 'சந்தஸி' என்னும் சொல்லால் வேதங்களையும், 'பாஷாயாம்' என்ற சொல்லால் தமது காலத்தில் வழங்கிய சமஸ்கிருத மொழியையும் குறிப்பிடுவது போல, புத்தகோஷாசாரியர் 'பாலியம்' என்ற சொல்லால் திரிபிடக வாக்கியங்களையும், 'அட்டகதாயம்' என்ற சொல்லால் அக்காலத்தில் சிங்கள மொழியில் வழங்கிய 'அட்ட கதை'களின் வாக்கியங்களையும் குறிப்பிடுகிறார்.

அட்டகதை என்றால் அர்த்தத்தோடு கூடிய கதை. திரிபிடக வாக்கியங்களுக்குப் பொருள் கூறி, தேவையான இடத்தில் ஏதாவது ஒரு கதையை மொழியும் முறை சிங்களத் தீவில் இருந்தது. நாளடைவில் இந்த அட்ட கதைகளை எழுதி வைத்துக்கொள்ளும் பழக்கம் வந்தது. ஆனால் அதில், சொன்னதையே திருப்பிச் சொல்லும் பகுதிகள் ஏராளமாக இருந்தன. மேலும், சிங்களத்தீவுக்கு வெளியிலுள்ள மக்களுக்கு அவை பெரும்பாலும் பயன்படுவனவாக இல்லை. எனவே புத்தகோஷாசாரியர் அவற்றுள் முக்கியமான அட்டகதைகளைச் சுருக்கித் திரிபிடக மொழியில் அவற்றுக்கு உருக்கொடுத்தார். அது மிகவும் நன்றாக அமைந்து விட்டதனால் திரிபிடகத்தைப் போலவே அதையும் மதிக்கலாயினர். 'பாலிம் வியதமக்கஹுூம்' அதாவது, அந்த அட்டகதைகளையும் பாலி என்றே வழங்கலாயினர். உண்மையில் இந்த மொழியின் பெயர் 'பாலி'யன்று மாகதி என்பது இதன் மூலப் பெயர்: ஆனால் இவ்வாறு இதற்குப் புதுப் பெயர் கிடைத்துவிட்டது.

ராஜகிருகத்தில் கூடிய முதல் மாநாட்டில் மேற்கூறிய திரிபிடகப் பகுதிகள் வரையறுத்துத் தீர்மானிக்கப்பட்டன என்று புத்தகோஷாசாரியர் கூறுகிறார். புத்தர் பெருமான் பரிநிர்வாண மடைந்ததும் பிட்சுக்கள் துயரத்தில் மூழ்கினார்கள். அப்பொழுது சுபத்திரன் என்ற முதிய பிட்சு, "நம்முடைய சாத்தா பரிநிர்வாணம் எய்தியது நல்லதுதான். நீங்கள் இன்னது செய்யவேண்டும், இன்னது செய்யலாகாது என்று அவர்

எப்போதும் நம்மைக் கட்டுப்படுத்தி வந்தார். இப்பொழுது நம் விருப்பப்படி நடந்துகொள்ள விடுதலை கிடைத்துவிட்டது" என்றான். இதைக் கேள்வியுற்ற மகா காசியபர், 'தருமத்தையும் விநயத்தையும் தொகுக்காவிட்டால் சுபத்திரனைப் போன்ற பிட்சுக்கள் தான்தோன்றித்தனமாக நடந்துகொள்ள இடம் உண்டாகும்; ஆதலால் உடனே பிட்சு சங்கத்தைப் பேரவையாகத் திரட்டித் தருமத்தையும் விநயத்தையும் தொகுத்து வைக்க வேண்டும்' என்று கருதினார். அதற்கேற்ப அவர் ராஜகிருகத்தில் அந்தச் சாதுர்மாசத்தில் ஐந்நூறு பிட்சுக்களைத் திரட்டினார். அந்த அவையில் முதலில் உபாலியைக் கேட்டு, விநயத்தைத் தொகுத்தார்கள். பிறகு ஆனந்தனைக் கேட்டு ஸுத்தம், அபிதம்மம் என்ற இரண்டு பிடகங்களைத் தொகுத்தார்கள். அபிதம்பிடகத்திலேயே குத்தகநிகாயமும் அடங்கியது என்று பலர் கருதினார்கள். ஆனால் வேறு சிலர், அதை ஸுத்தபிடகத்தில் சேர்க்க வேண்டும் என்றார்கள்.

ஸுமங்கலவிலாஸினியின் நிதானகதையில் வந்துள்ள செய்தியின் சாரம் இது. இதே செய்தி, ஸமந்தபாஸாதிகா என்னும் விநய அட்டகதையைச் சார்ந்த நிதானகதையிலும் உள்ளது; ஆனால் திரிபிடகத்தில் இதற்கு எங்கும் சான்று இல்லை. புத்தர்பிரானின் பரிநிர்வாணத்துக்குப் பின்பு ராஜகிருகத்தில் பிட்சு சங்கத்தின் முதல் மாநாடு கூடியிருக்கலாம்; ஆனால் அதில், இப்போது உள்ள பிடகத்தின் பகுதிகளோ, பிடகம் என்ற பெயரோ நடைமுறைக்கு வந்திருக்கும் என்று தோன்றவில்லை. அசோகனுடைய காலம் வரைக்கும் புத்தருடைய உபதேசங்களைத் தருமம், விநயம் என்று இரு பிரிவுகளாகப் பிரித்து வந்தனர். இவற்றுள் தருமம் ஒன்பது அங்கங்களைக் கொண்டது என்று கருதினார்கள். அவையாவன- ஸுத்தம், கேய்யம், வேய்யாகரணம், காதை, உதானம், இதிவுத்தகம், ஜாதகம், அப்புததம்மம், வேதல்லம் என்பவை. மஜ்ஜிமநிகாயத்திலுள்ள அலகத்தூபம ஸுத்தத்திலும், அங்குத்தரநிகாயத்தில் ஏழு இடங்களிலும், இந்த அங்கங்களைப் பற்றிய குறிப்பு வருகின்றது.

ஸுத்தம் என்ற பாலிச் சொல், ஸூக்தம் அல்லது ஸூத்திரம் என்னும் சம்ஸ்கிருதச் சொல்லைக் குறிக்க வந்திருக்கலாம். வேதங்களில் வரும் ஸூக்தங்களைப் போன்றவையே இந்தப் பாலி ஸூக்தங்கள் என்று பலர் கூறுவர். ஆனால் மகாயான சம்பிரதாயத்து நூல்களில் இவை ஸூத்திரங்கள் என வழங்குகின்றன; அந்தக் கருத்தே சரி என்று தோன்றுகிறது. இக்காலத்தில் சூத்திரங்கள் என்றுசொன்னால் பாணினி சூத்திரங்களும் அதே வகையைச் சார்ந்த மற்றச் சூத்திரங்களுமே நினைவுக்கு வரும். ஆனால் ஆசுவலாயன கிருஹ்யஸூத்திரம் முதலிய சூத்திரங்கள், இந்தக் குறுகிய சூத்திரங்களைவிடச் சற்று விரிவாக

உள்ளன. பாலி மொழியிலுள்ள சூத்திரங்களும் முதலில் இதே கருத்தைக் கருதித்தான் இயற்றப் பெற்றித்தல் வேண்டும். ஆசுவலாயனர் முதலியோர் இந்தச் சூத்திரங்களைப் பின்பற்றித் தம் சூத்திரங்களை அமைத்தார்களா, அல்லது பௌத்தர்கள் அவர்களுடைய சூத்திரங்களைப் பின்பற்றித் தங்கள் சூத்திரங்களை அமைத்தார்களா என்னும் வாதத்தில் நாம் இறங்க வேண்டியதில்லை. அசோகன் காலத்துக்கு முன்பு, புத்தரின் உபதேச வசனங்களை ஸுத்தம் என்று வழங்கினார்கள்; அவை மிகப் பெரியவையல்ல என்பது மட்டும் உண்மை.

காதையோடு சேர்ந்த சூத்திரங்களைக் கேய்யம் என்பர் என்று அலகத்த ஸுத்தத்து அட்டகதை கூறுகிறது. இதற்கு உதாரணமாக ஸம்யுத்த நிகாயத்தின் முதற்பகுதியைக் காட்டியுள்ளனர். ஆனால், காதைகள் யாவுமே கேய்யத்தில் அடங்குவன என்றால், காதை என்று தனிப் பகுதியொன்றை ஏன் பிரிக்க வேண்டும் என்பது தெரியவில்லை. கேய்யம் என்றால் இன்ன வகையான காதைகளே கொண்டது என்ற கருத்து நிலவியிருந்ததோ என்னவோ, தெரியவில்லை.

வேய்யாகரணம் என்றால் வியாக்கியானம். ஏதாவது ஒரு சூத்திரத்தை எடுத்துக்கொண்டு அதற்குச் சுருக்கமாகவோ விரிவாகவோ உரை கூறுவது வேய்யாகரணமாம். (எனவே, வியாகரணம் என்ற சமஸ்கிருதச் சொல்லோடு இதற்கு எவ்வகைத் தொடர்பும் இல்லை.)

தம்மபதம், தேரகாதை, தேரிகாதை என்னும் மூன்று நூல்கள் காதை என்ற பகுப்பைச் சார்ந்தவை என்கிறார் புத்த கோஷாசாரியர். ஆனால் தேரகாதையும் தேரிகாதையும், புத்தர் பரிநிர்வாணமடைந்து மூன்று நான்கு நூற்றாண்டுகள் கடந்த வரைக்கும் தோன்றவே இல்லை; தம்மபதமோ சின்னஞ்சிறு நூல். எனவே காதை என்றால் இந்த ஒரே நூல்தானா, அல்லது மற்றும் பல காதைகள் இந்தப் பகுப்பில் அடங்கியனவா என்பதைத் திட்டமாகச் சொல்ல முடியாது.

முன்பு கூறிய குத்தகநிகாயத்துப் பட்டியலில் உதானம் குறிக்கப் பெற்றிருப்பதைக் காணலாம். அதில் வரும் உதானங்களையும், ஸுத்தபிடகத்தில் வேறு இடங்களில் இது போலவே வந்துள்ள வாக்கியங்களையும் உதானம் என்று வழங்கியதாகப் புத்தகோஷாசாரியர் கூறுகிறார். ஆனால் இவற்றுள் எத்தனை உதானங்கள் அசோகனுடை காலத்தில் இருந்தன என்பதை வரையறுத்துச் சொல்ல முடியாது. பிற்காலத்தில் இவை வளர்ந்து கொண்டே வந்தன என்பதில் ஐயமில்லை.

இதிவுத்தகம் என்னும் பிரகரணத்தில் 112 வரலாறுகள் தொகுக்கப் பெற்றுள்ளன. இவற்றுள் சில, அசோகன் காலத்திலும் அவனுக்குப் பிறகு நூறு அல்லது நூற்றைம்பது ஆண்டுகள் வரையிலும் வழங்கிவந்தன. பிற்காலத்தில் இவற்றின் எண்ணிக்கை ஏறியது.

ஜாதகம் என்னும் கதைகள் மிகவும் பிரசித்தமானவை. அவற்றுள்

சில்வற்றைப் பற்றிய காட்சிகளை, ஸாஞ்சி, பர்ஹூத் என்னும் இடங்களிலுள்ள ஸ்தூபங்களின் மருங்கில் செதுக்கி வரைந்திருக் கிறார்கள். ஆதலால், அசோகனுடைய காலத்தில் பெரும்பாலான ஜாதகக் கதைகள் பௌத்த இலக்கியத்தில் புகுந்திருந்தன என்று ஊகித்து அறியலாம்.

அப்புததம்மம் என்றால் விந்தைச் செயல். புத்தர்பெருமானும் அவருடைய முதன்மையான சிராவகர்களும் செய்த விந்தைச் செயல்களைப் பற்றி வருணிக்கும் நூல் ஒன்று அந்தக் காலத்தில் இருந்திருக்கும் என்று தோற்றுகிறது. ஆனால் இப்போது இந்த விந்தைச் செயலைப்பற்றிய அடையாளம் ஏதும் இல்லை. அதில் இருந்த பகுதிகள் யாவும் இப்போதைய ஸுத்தபிடகத்தில் கலந்திருக்கக் கூடும். அற்புத தருமத்தைப்பற்றி விளக்குவது புத்தகோஷாசாரியருக்கே சிரமமாக இருந்தது. "பிட்சுக்களே, இந்த நான்கு ஆச்சரிய அற்புதத் தன்மைகள் ஆனந்தத்தில் உறைகின்றன; இவற்றுள் ஏதேனும் ஒரு வகையில் அற்புதத் தருமத்தில் தொடங்கி, ஆச்சரிய அற்புதத் தன்மைகள் அடங்கிய சூத்திரங்கள் யாவும் அப்புததம்மம் என்று அறிக" என்று அவர் கூறுகிறார். ஆனால் அவர் கூறும் அற்புதத் தருமங்களுக்கும் அப்புததம்மம் என்ற மூல நூலுக்கும் எவ்வகைத் தொடர்பும் இருப்பதாகத் தெரியவில்லை.

மகாவேதல்லம், சூளவேதல்லம் என்னும் இரண்டு சூத்திரங்கள் மஜ்ஜிமநிகாயத்தில் உள்ளன. இவற்றைக் கொண்டு வேதல்லம் என்பது யாது என்பதை ஊகித்து அறியலாம். இவற்றுள் முதல் ஸுத்தத்தில் மகாகோட்டிதன் ஸாரிபுத்தனைக் கேள்விகள் கேட்கிறான்; ஸாரிபுத்தன் அவற்றுக்கு ஏற்ற மறுமொழி தருகின்றான். மற்றொரு ஸுத்தத்திலும் இவ்வாறே தம்மதின்னா என்னும் பிட்சுணிக்கும் அவளுடைய பூர்வாசிரமக் கணவனாகிய விசாகனுக்கும் வினாவிடையாக உரையாடல் நிகழ்கிறது. இந்த இரண்டு ஸுத்தங்களும் புத்தர் மொழிந்தவையல்ல. ஆயினும், இத்தகைய உரையாடல்களை வேதல்லம் என்பர் என்று தெரிகிறது. சிரமணர்களுடனும், அந்தணர்களுடனும், மற்றவருடனும் புத்தர்பெருமான் நிகழ்த்திய உரையாடல்களைத் தனியே தொகுத்து, அதை வேதல்லம் என்று வழங்கியிருப்பர் என்று தோற்றுகிறது.

இந்த ஒன்பது அங்கங்கள் நடைமுறைக்கு வருமுன்பு, ஸுத்தம், கேய்யம் என்னும் இரண்டு அங்கங்களுக்குள்ளே மற்றவற்றையும் அடக்கி யிருந்தனர் என்பது, மகாஸுஞ்ஞதா ஸுத்தத்தில் வரும் கீழ்க்கண்ட செய்தியிலிருந்து தெரிகிறது.

புத்தர்பெருமான் ஆனந்தனிடம் மொழிகிறார்: "ஆனந்தா, ஸுத்தத்தையும், கேய்யத்தையும் வேய்யாகரணம் செய்ய (விளக்கியுரைப்பதற்காக), சிராவகன் சாத்தனோடு (ஆசிரியனோடு) திரிவது சரியன்று. ஏனெனில், நீங்கள் இந்த விஷயங்களை முன்னமே

கேட்டிருக்கிறீர்கள்; இவை உங்களுக்குப் பழக்கமானவையே."

எனவே, புத்தருடைய உபதேசங்கள் ஸுத்தமும் கேய்யமுமாகவே இருந்தன என்றும், சிராவகர்களே அவற்றுக்கு வேய்யாகரணம் அல்லது விளக்கம் கூறிக்கொண்டனர் என்றும் தெரிகிறது. நாளடைவில், இந்த மூன்றுடன் பின்னும் ஆறு அங்கங்கள் சேர்ந்தன. அவற்றுள் சில அங்கங்கள் சேர்ந்து இப்போதைச் சூத்திரங்களிற் பல, உருவாயின. எனவே, 'இவற்றுள் புத்தருடைய உண்மையான உபதேசங்கள் யாவை?' பின் புகுந்தவை யாவை என்பதைக் கண்டறிவது கடினம்; ஆயினும், அசோகனுடைய பாப்ரா அல்லது பாப்ரூ கல்வெட்டை ஆதாரமாகக் கொண்டு, பிடகத்தின் பழமையான பகுதிகள் யாவை என்பதை ஊகித்து அறிய முடிகிறது.

அசோகனுடைய பாப்ரூ கல்வெட்டில், புத்தரின் இந்த ஏழு உபதேசங்களைப் பிட்சுக்களும் பிட்சுணிகளும், உபாசகர்களும் உபாசகை களும் அடிக்கடி கேட்டுப் பாடம் செய்ய வேண்டும் என்ற குறிப்பு உள்ளது. இந்த உபதேசங்களாவன -1.விநயஸமுகஸே, 2.அலியவஸானி, 3.அநாகதபயானி, 4.முனிகாதை, 5.மோனேய ஸுத்தம், 6.உபதிஸ பஸினே, 7.பெருமான் பொய்ம்மையைப்பற்றி மொழிந்த லாகுலோவாதம் என்பவையாம்.

இந்த ஏழில் ராகுலோவாத ஸுத்தம் (61) மஜ்ஜிமநிகாயத்தில் வருவதை, ஓல்டன்பர்க், ஸேனார் என்னும் மேல்நாட்டுப் புலவர்கள் காண்பித்திருக்கிறார்கள். பேராசிரியர் ரிஸ் டேவிட்ஸ் என்பவர் மற்றவற்றைப் பற்றி அறிவிக்க முயன்றிருக்கிறார். ஆனால் ஸுத்த நிபாதத்திலுள்ள முனிஸுத் தத்தைத் தவிர்த்து, அவர் காட்டிய மற்ற ஸுத்தங்கள்யாவும் தவறானவை. 2, 3, 5, 6 என்னும் எண்ணில் வரும் நான்கு ஸுத்தங்கள் யாவை என்பதுபற்றி, 1912-ஆம் ஆண்டு பிப்ரவரி மாதத்தில் வெளிவந்த 'இந்தியன் ஆன்டிக்வேரி' என்னும் பத்திரிகையிதழில் நான் ஆராய்ந்து எழுதியிருக்கின்றேன். அதில் நான் காண்பித்த ஸுத்தங்கள் இப்போது எங்குமே ஒப்புக்கொள்ளப் படுகின்றன. முதல் ஸுத்தத்தைப்பற்றித்தான் அப்போது எனக்குச் செய்தி கிடைக்கவில்லை. விநயஸமுகஸே (விநயஸமுத்கர்ஷம்) என்பதற்கும் விநயக்கிரந்தத்துக்கும் ஏதாயினும் தொடர்பு இருக்கக்கூடும் என்று நான் கருதினேன்; ஆனால், அத்தகைய உபதேசம் எங்கும் காணவில்லை; ஆதலால், அந்தச் சூத்திரம் எது என்று என்னால் சொல்ல முடியவில்லை.

ஆனால், 'விநயம்' என்ற சொல்லுக்கு 'விநய நூல்' என்று பொருள் கொள்ளக் காரணமில்லை. 'அஹாம் கோகேஸி புரிஸதம்மம் ஸண்ஹேன பி விநேமி பருஸேன பி விநேமி' (அங்குத்தர, சதுக்க நிபாதம், ஸுத்தம் 111); 'தமேனம் ததாகதோ உத்தரிம் விநேதி' (மஜ்ஜிம, ஸுத்தம் 107); 'யன்னூநாஹம் ராஹுலம் உத்தரிம் ஆஸவானம்கயே விநேய்யம் தி'

(மஜ்ஜிம, ஸுத்தம் 147) முதலிய இடங்களில், 'வி' என்னும் உபசர்க்கத்தோடு கூடிய 'நீ' தாதுவுக்கு, 'கற்பித்தல்' என்னும் பொருள் அமைகிறது. அதிலிருந்துதான் பிற்காலத்தில் விநய நியமங்களை விநயபிடகம் என்று கூறலானார்கள். புத்தர் பிட்சுக்களைத் திரட்டத் தொடங்கிய காலத்தில் விநயக்கிரந்தம் அறவே இருந்ததில்லை. கற்பிக்கப்பட்ட விஷயங்கள் யாவும் ஸுத்த உருவில்தான் இருந்தன. புத்தர்பெருமான் முதல்முதலில் 'தம்ம சக்கப் பவத்தன ஸுத்த'த்தை உபதேசித்துப் பஞ்சவர்க்கத்துப் பிட்சுக்களைத் தம் சீடர்களாக்கிக் கொண்டார். ஆதலால், விநயம் என்ற சொல்லுக்குக் கற்பித்தல் என்பதே மூலப் பொருளாம். விநயத்தின் ஸமுத்கர்ஷம் என்றால், 'புத்தருடைய உயர்ந்த அறவுரை' என்று பொருள். 'ஸமுக் கம்ஸம்' என்ற சொல் பாலி இலக்கியத்தில் புத்தோபதேசத்தைக் குறிப்பாத வழங்குவதில்லை. எனினும், 'ஸாமுக்கம் ஸிகா தம்மதேஸனா' என்ற சொற்றொடர் பல இடங்களில் வந்துள்ளது. உதாரணமாக, தீகநிகாயத்தில் அம்பட்ட ஸுத்தத்தின் இறுதியில், "பௌஷ்கரஸாதி என்னும் அந்தணனுடைய உள்ளம் அந்த நிகழ்ச்சிக்கு ஏற்றதாகி, மென்மையுடையதாகி, ஆவரணங்களிலிருந்து விடுபட்டுக் கூர்மை பெற்றுத் தெளிந்திருப்பதைப் பெருமான் அறிந்த பொழுது, புத்தருடைய ஸாமுத்கர்ஷிகமான தர்மதேசனையை (மிக்குயர்ந்த அறவுரையை) அவர் வெளியிட்டார். அது யாது? துன்பம், துன்பத்தோற்றம், துன்பத் தடுப்பு, துன்பத் தடுப்பு வழி என்பதே அது" என்னும் இடத்தில், இந்தச் சொற்றொடர் வருகின்றது.

இந்த ஸுத்தத்தில் மட்டுமின்றி, மஜ்ஜிமநிகாயத்தில் உபாலி ஸுத்தம் போன்ற மற்ற ஸுத்தங்களிலும், விநயபிடகத்தில் பல இடங்களிலும் இதே வாக்கியம் வந்துள்ளது. இங்கே போக்கரஸாதியையும், அங்கே உபாலிமுதலியவர்களையும் விளித்துக் கூறியிருக்கிறது என்பது தவிர, வேறு வேற்றுமை இல்லை. எனவே, விநய ஸமுத்கர்ஷம் என்ற சொல்லுக்கு, விநயம்-உபதேசம், அதனுடைய ஸமுத்கர்ஷமாவது மிக்குயர்ந்த அறவுரை (ஸாமுத்கர்ஷிகமான தர்ம தேசனை) என்று பொருள். ஒரு காலத்தில் இந்த நான்கு ஆரிய சத்தியங்களைப் பற்றிய உபதேசத்தை விநய ஸமுக்கம்ஸம் என்று கூறி வந்தனர் என்பதில் ஐயமில்லை. 'தம்ம சக்கப் பவத்தன ஸுத்தம்' என்ற பெயர், அசோகனுக்குப் பின் நீண்ட காலம் கழித்து நடைமுறைக்கு வந்திருத்தல் வேண்டும். சக்கரவர்த்தியான அரசனுடைய கதைகளை மக்கள் விரும்பிக் கேட்கும் பழக்கம் வந்த காலத்தில், இந்தத் தடபுடலான பெயரைப் புத்தரின் இந்த உபதேசத்துக்கு இட்டார்கள்.

விநயஸமுகஸே என்பதுதான் தம்மசக்கப் பவத்தன ஸுத்தம் என்று ஒப்புக்கொண்ட பிறகு, பாப்ரூ கல்வெட்டில் குறித்துள்ள ஏழு உபதேசங்கள் பௌத்த இலக்கியத்தில் பின்வருமாறு கிடைக்கின்றன-

1. விநய ஸமுகஸே - தம்மசக்கப் பவத்தன ஸுத்தம்.

2. அலியவஸானி - அரியவம்ஸ ஸுத்தம் (அங்குத் தர, சதுக்க நிபாதம்)

3. அநாகத பயானி - அநாகத பயானி (அங்குத்தர, பஞ்சகநிபாதம்)

4. முனிகாதை - முனிஸுத்தம் (ஸுத்தநிபாதம்)

5. மோனேய ஸுத்தம் - நாலக ஸுத்தம் (ஸுத்தநிபாதம்)

6. உபதிஸபஸினே -ஸாரிபுத்த ஸுத்தம் (ஸுத்தநிபாதம்)

7. லாகுலோவாதம் - ராகுலோவாதம் (மஜ்ஜிம, ஸுத்தம் 61)

இந்த ஏழில், தம்மசக்கப் பவத்தனம் எங்கும் கிடைக்கிறது; ஆதலால் அது மிகுந்த பெருமை வாய்ந்தது என்று சொல்லத் தேவையில்லை. எனவே, அசோகன் அதற்கு முதலிடம் தந்திருக்கிறான். மற்ற ஆறில் மூன்று ஸுத்தங்கள், சின்னஞ் சிறு ஸுத்தநிபாதத்திலேயே வந்துவிடுகின்றன. இதிலிருந்து ஸுத்தநிபாதம் மிகப் பழமையானது என்பது தேற்றம். அதன் இறுதி இரண்டு வக்கங்களுக்கும், கக்கவிஸாண ஸுத்தத்துக்கும், 'நித்தேஸம்' என்ற விரிவான உரை இருக்கிறது. குத்தகநிகாயத்திலேயே இந்த உரையும் அடங்கியுள்ளது. எனவே, ஸுத்தநிபாதத்தின் இந்தப் பகுதிகள், நித்தேஸம் தோன்றியதற்கு இரண்டொரு நூற்றாண்டுகளுக்கு முன்பே நிலவின என்று தெரிகிறது. இதனால் ஸ்த்தநிபாதத்தின் பழமையை அறியலாம். அதில் எல்லா ஸுத்தங்களுமே மிகப் பழமையானவையல்ல; ஆயினும், அதிலுள்ள பெரும்பாலான ஸுத்தங்கள் மிகப் பழமையானவை என்பதில் ஐயமில்லை. இந்த நூலில் புத்தருடைய சரித்திரத்தைப் பற்றியோ உபதேசத்தைப் பற்றியோ ஆராயும் போது இத்தகைய பழமையான ஸுத்தங்களே சான்றாகக் கொள்ளப் பெற்றிருக்கினறன.

இனி, நாம் உண்மையான புத்த சரித்திரத்தை ஆராய்வோம். திரிபிடகத்தில் ஒரே இடத்தில் புத்த சரித்திரம் முழுவதும் இல்லை. அது ஜாதக அட்டகதையின் நிதானகதையில் இருக்கிறது. இந்த அட்டகதை புத்தகோஷருடைய காலத்தில் அதாவது கி.பி. ஐந்தாம் நூற்றாண்டில் எழுதியதாதல் வேண்டும். அதற்கு முந்தி இருந்த சிங்கள அட்டகதைகளிலிருந்து ஏராளமான செய்திகள் இந்த அட்டகதையில் வந்துள்ளன. இந்தப் புத்த சரித்திரம், முக்கியமாக லலிதவிஸ்தரத்தைச் சான்றாகக் கொண்டது. லலிதவிஸ்தரம் கி.பி.முதல் நூற்றாண்டிலோ அதற்குச் சில ஆண்டுகள் முன்போ தோன்றியதாதல் வேண்டும். அது மகாயானத்தைச் சார்ந்த நூல். அதிலிருந்துதான் ஜாதக அட்டகதைக்காரர் தமது புத்த சரித்திரக் கதையைப் படைத்திருக்கிறார். லலிதவிஸ்தரமும் தீகநிகாயத்திலுள்ள மகாபதான ஸுத்தத்தை ஆதாரமாகக் கொண்டு எழுந்தது. அந்த ஸுத்தத்தில் விபஸ்ஸி புத்தரின் சரித்திரம் விரிவாக வருகிறது; அந்தச் சரித்திரத்தைக் கொண்டு லலிதவிஸ்தர ஆசிரியர் தமது

புராணத்தை இயற்றினார். இவ்வாறு கோதம புத்தருடைய சரித்திரத்தில், முரணான பல செய்திகள் புகுந்தன.

மகாபதான ஸுத்தத்தில் சில பகுதிகளைத் தனியே எடுத்து அவற்றை அப்படியே ஸுத்தபிடகத்தில் கோதம புத்தரின் சரித்திரத்தோடு சேர்ந்து விட்டார்கள். உதாரணமாக, மூன்று மாளிகைகளைப் பற்றிய செய்தியைப் பாருங்கள். விபஸ்ஸி ராஜகுமாரன் வாழ்வதற்கு மூன்று அரண்மனைகள் இருந்தன; இந்தக் கதையைக் கொண்டு கோதம புத்தருக்கும் வாழ்வதற்கு மூன்று மாளிகைகள் இருத்தல் வேண்டும் என்று கற்பனை செய்து, தமக்கு மூன்று மாளிகைகள் உள்ளன என்றும், அவற்றில் தாம் மிகுந்த களிப்போடு வாழ்வதாகவும் கோதமரே கூறியதாக எழுதிவிட்டார்கள். இது பொருத்தமற்ற கதை என்பதை நான் நான்காம் அத்தியாயத்தில் விளக்கிக் காண்பித்திருக்கிறேன். ஆனால், அந்தக் கதை அங்குத்தர நிகாயத்தில் வந்திருப்பதனாலும், அதே நிகாயத்தில் அசோகனுடைய பாப்ரூ கல்வெட்டிலிருந்து இரண்டு ஸுத்தங்கள் வந்திருப்பதனாலும், ஒரு காலத்தில் இந்தக் கதை சரித்திர உண்மையுடையது என்று நான் கருதியிருந்தேன். ஆனால் நீண்ட ஆராய்ச்சியின் பயனாக, இந்த அங்குத்தர நிகாயத்தில் பல பகுதிகள் பின்னால் சேர்க்கப்பட்டன என்பது தெரிய வந்தது. மூன்று பொருள்களைப்பற்றிய விஷயங்கள் திகநிபாதத்தில் தொகுக்கப்பெற்றுள்ளன; ஆனால், பழமையையும் புதுமையையும் நோக்கத்தில் கொண்டு அது தொகுக்கப் பெற்றதாகத் தெரியவில்லை.[1]

இந்தக் கதைகளைக் கொண்டு புத்தர் சரித்திரத்தில் நம்பக்கூடிய செய்திகளை எவ்வாறு கண்டு பிடிக்க முடியும் என்பதை விளக்கும் நோக்கத்துடனேதான் நான் இந்த நூலை எழுதியிருக்கிறேன். பயன்படக்கூடிய சில செய்திகள் என் பார்வைக்கு வராமல் இருக்கலாம்; பெருமைக்கு உரியவையயல்லாத சில விஷயங்களுக்கு நான் பெருமை தந்திருக்கலாம்; ஆனால் என் ஆராய்ச்சி முறையில் ஏதும் தவறு இருப்பதாக எனக்குத் தோன்றவில்லை. இந்த முறையைக் கைக்கொள்வதனால் புத்தருடைய சரித்திரமும் அந்தக் காலத்துச் சரித்திரமும் நன்கு விளக்கம் பெறும் என்பது என் நம்பிக்கை. அந்த நோக்கத்துடனேயே இந்நூலை எழுதியிருக்கிறேன். இதிலிருந்து சில கட்டுரைகளைச் சில ஆண்டுகளுக்கு முன்பு, மூன்று மாதங்களுக்கு ஒரு முறை வெளிவரும் 'புராதத்துவம்' என்ற குஜராத்திப் பத்திரிகையிலும், 'விவிதஞான விஸ்தாரம்' என்ற மராட்டித் திங்களிதழிலும் வெளியிட்டிருந்தேன். ஆனால் அவற்றை அப்படியே இந்த நூலில்

1. மகாபதான ஸுத்தத்திலுள்ள விபஸ்ஸி புத்தரைப்பற்றிய கட்டுக் கதைகள் கோதம புத்தருடைய சரிதத்தின் பகுதிகளாக எவ்வாறு புகுந்தன, இவற்றுள் ஸுத்தபிடகத்தில் காணும் பகுதிகள் எவை என்பதைப்பற்றி இந்த நூலின் அநுபந்தம் 1-இல் விளக்கமாகக் கூறியிருக்கிறேன்.

எடுத்துக் கொள்ளவில்லை. அவற்றில் பல மாறுதல்கள் செய்திருக்கிறேன். அவற்றிலிருந்து பெரும்பாலான விஷயங்கள் இந்த நூலில் வந்திருக்கின்றன; ஆயினும் இந்தப் புத்தகம் தனி ஆராய்ச்சி என்று கூறுத்தடையில்லை.

இந்த நூலின் மராட்டி எழுத்துப் பிரதியை நவபாரதக் கிரந்த மாலையின் பதிப்பாசிரியர் படித்ததும், இந்த நூலில் நான் ஆராயாத சில விஷயங்களை என் கவனத்துக்குக் கொண்டு வந்தார். இவற்றைப்பற்றி இங்கே சிந்திப்பது நலமென்று எனக்குத் தோன்றுவதனால், சுருக்கமாக என் விளக்கங்களைத் தெரிவிக்கிறேன்.

1. புத்தர் பிறந்த நாளைப்பற்றிய பலவேறு கருத்துக்களைத் தந்து, தக்க ஆதாரங்களோடு அவற்றை இந்த நூலில் ஆராய்திருக்க வேண்டாமா? நம் நாட்டில் பழமையான அல்லது இடைக்காலத்து அரசியல் அறிஞர்கள், சமயத் தலைவர்கள், நூலாசிரியர்கள் முதலியவர்கள்ளப் பற்றிய சரித்திரத்தை எழுதுங்கால் முதலில் அவர்களுடைய காலத்தைத் தீர்மானிக்கவே ஆராய்ச்சியாளர் பல பக்கங்கள் எழுத வேண்டியிருக் கிறது. இந்த நூலில் அத்தகைய முயற்சி புலப்படவில்லையே?

இதைப்பற்றிய என் கருத்து வருமாறு- இடைக்காலத்துக் கவிகளோ நூலாசிரியர்களோ சக கர்த்தாக்கள் அல்லர்; அதாவது அவர்கள் பெயரால் ஆண்டுகள் வழங்கவில்லை. அவர்களின் பிறந்த நாளைப்பற்றி எவ்வளவுதான் வாத விவாதங்கள் நிகழ்ந்தாலும், திட்டமான ஒரு முடிவுக்கு வர முடியும் என்று தோன்றவில்லை. புத்தரின் விஷயம் அப்படியன்று. அவருடைய பரிநிர்வாணத்திலிருந்து இன்றுவரை அவருடைய சகாப்தம் வழங்கிவருகிறது. இடையில் மேல்நாட்டுப் புலவர்கள் வாத விவாதங்கள் செய்து, இந்தக் காலக் கணக்கில் 56 முதல் 65 ஆண்டுகள் வரைக்கும் வேறுபாடு இருப்பதாக நிரூபிக்க முயன்றார்கள்.ஆனால் இறுதியில் சிங்களத் தீவில் வழங்கிவரும் பரம்பரையே சரியென்று தேறியது. ஆயினும் புத்தருடைய பிறந்த நாள் ஏறக்குறையச் சிறிது மாறுபடுவதாகவே வைத்துக் கொண்டாலும், அதனால் அவருடைய சரித்திரத்தின் பெருமைக்கு எத்தகைய இழுக்கும் நேரப்போவதில்லை. முக்கியமான விஷயம் புத்தரின் பிறந்த நாள் அன்று; அவருக்கு முன்பு இருந்த நிலை யாது, அந்த நிலையிலிருந்து அவர் புதிய சமய நெறியை எவ்வாறு தோற்றுவித்தார் என்பதே நாம் முக்கியமாகக் கவனிக்க வேண்டிய விஷயம். அந்தக் கால நிலையை நன்கு விளக்கி ஆராய்ந்தால், இப்பொழுது புத்தரைப்பற்றி வழங்கும் தவறான கற்பனைக் கருத்துக்கள் அழிந்து, அந்தக் காலத்துச் சரித்திரத்தைச் செம்மையாக அறிய இயலும். ஆதலால், பிறந்த நாளைப்பற்றி அதிகப்பக்கங்களை எழுதாமல், புத்தருடைய சரித்திரத்தை விளக்கக் கூடிய விஷயங்களையே நான் மிகுதியாகக் கவனித்து எழுதியிருக்கிறேன்.

2. புத்தர் உபதேசித்த அஹிம்சையினால் பாரத நாட்டுச் சமூகம் ஆண்மையற்றதாயிற்று; அதனால்தான் பிற நாட்டினர் அதை வெல்ல முடிந்தது என்ற கருத்தைப் பலர் கூறியிருக்கிறார்கள். இந்த நூலில் இதற்கு ஏதாவது விடை தந்திருக்க வேண்டும்.

விடை - புத்தருடைய சரித்திரத்துக்கும் இந்தக் கருத்துக்கும் ஏதேனும் தொடர்பு இருப்பதாக எனக்குத் தோன்றவில்லை. கி.மு.543-ஆம் ஆண்டில் புத்தர் பரிநிர்வாணமெய்தினார். அதற்குப் பின் இரண்டு நூற்றாண்டுகள் கழித்துச் சந்திரகுப்தன் தனது சாம்ராஜ்யத்தை நிறுவினான். அவன் ஜைன சமயத்தைச் சார்ந்தவன் என்பர்; ஆனால் கிரேக்கர்களை இந்த நாட்டிலிருந்து வெளியேற்றுவதற்கு அவனுடைய அஹிம்சா தருமம் அவனுக்குத் தடையாக இல்லை. அவனுடைய பேரனான அசோகன் முற்றும் பௌத்தன் ஆனவன்; ஆயினும் அவன் ஒரு பெரிய சாம்ராஜ்யத்தை நடத்தினான்.

கி.பி.712-இல் முகம்மது இப்ன் காஸிம் சிந்து நாட்டைத் தாக்கியபோது, பௌத்த சமயம் மேற்கு இந்தியாவிலிருந்து மறைந்து, பிராம்மண தருமத்தின் வல்லமை ஓங்கியிருந்தது. அப்படியிருந்தும், சிறு பிராயத்தினனான இந்தக் கலிபாவின் சேனைத் தலைவன் சிந்து நாட்டை ஒரே நொடியில் அடிப்படுத்தி, அங்கிருந்த ஹிந்து அரசனைக் கொன்று, அவன் மகளைத் தன் கலிபாவுக்குக் காணிக்கையாக அனுப்பினான்.

முஸ்லிம்கள் சிந்து நாட்டையும் பஞ்சாபின் சில பகுதிகளையும் வசப்படுத்திய பின்பு நூறு ஆண்டுகள் கழித்துச் சங்கராசாரியர் தோன்றினார். அவருடைய வேதாந்தத்தின் லட்சியமெல்லாம், சூத்திரர்கள் வேதம் பயிலக் கூடாது என்பதேயாம்! சூத்திரன் ஒருவன் வேத வாக்கியங்களைக் கேட்டால் அவன் காதில் ஈயத்தையோ அரக்கையோ காய்ச்சி ஊற்ற வேண்டும்; வேத வாக்கியத்தை உச்சரித்தால் அவன் நாக்கை அறுக்க வேண்டும்; வேத மந்திரத்தை அவன் தரித்தால் அவனைக் கொன்றுவிட வேண்டும். -இது அவருடைய வேதாந்தம்! முஸ்லிம் வெற்றியாளர்களிடமிருந்தாவது நம்முடைய இந்தச்சநாதனிகள் ஏதாயினும் பாடம் கற்றுக்கொண்டார்களா? புத்தர்தாம் இவர்களுக்கு எதிரியாயிற்றே; அவரிடமிருந்து இவர்கள் கற்றுக் கொள்ளக் கூடியது என்ன இருந்தது?

இராசபுத்திரர்கள் கடுமையான சநாதனிகளாக இருந்தவர்கள். அவர்கள் அஹிம்சையில் துளியும் நம்பிக்கை வைக்கவில்லை. சமயம் வரும்போது அவர்கள் தங்களுக்குள் போரிட்டு மடிவர். ஹிம்சையில் பக்தி கொண்ட இந்த வீரர்களை மகமூத் கஜ்னி தன் குதிரைக் காலின் கீழே தூசு போல எப்படி அழித்துவிட்டான்? அவர்கள் புத்தருடைய அஹிம்சையைக் கடைப்பிடித்தார்கள் என்பதனாலா?

மராட்டியரின் பேஷ்வா ஆட்சி அந்தணர்களின் கையில்தான் இருந்தது.

கடைசி பாஜீராவ் வைதிகக் கருமங்களில் பற்றுள்ளவர் என்பது பிரசித்தம். பேஷ்வா ஆட்சியிலே ஹிம்சை தலை எல்லையை அடைந்தது. பிறருடன் போரிடுவது இருக்கட்டும்; வீட்டுக்குள்ளேயே சண்டை குறைவாக நடக்கவில்லை. ஒரு தடவை தௌலத்ராவ் சிந்தே புனா நகரைக் கொள்ளையிட்டான் என்றால், மறுதடவை யசவந்தரவ் ஹோல்கர் அதைச் சூறையாடினான். ஹிம்சையில் எல்லையற்ற பக்தி கொண்ட இத்தகையவர்களின் சாம்ராஜ்யம் பாரத நாடெங்கும் பரவியிருக்க வேண்டாமா? இவர்களை விட நூறு மடங்கு அஹிம்சர்களாக உள்ள ஆங்கிலேயரை இவர்கள் புகழ் அடைய வேண்டியதாயிற்று? ஒருவர்பின் ஒருவராக மராட்டியச் சர்தார்கள் ஆங்கிலேயருக்கு ஏன் அடிமையானார் கள்? அவர்கள் புத்தருடைய உபதேசங்களை ஒப்புக்கொண்டதனாலா?

ஜப்பான் நாடு கடந்த ஆயிரம் அல்லது பன்னீராயிரம் ஆண்டுகளாகப் பௌத்த சமயத்தைக் கடைப்பிடிக்கிறது. 1853-ஆம் ஆண்டில், கமோடோர் பேரி, ஜப்பானியரின் மீது பீரங்கிகளைக் குறி வைத்தபோது அவர்கள் விழிப்படைந்து எப்படி ஒற்றுமை பெற்றார்கள்? பௌத்த சமயம் அவர்களை ஏன் ஆண்மையற்றவர்களாக்கவில்லை?

இந்த வினாக்களுக்கு விடைகளைப் புகழ்பெற்ற ஆராய்ச்சி அறிஞர்கள் கட்டாயம் அளிக்க வேண்டும். 'நீ செய்த குற்றத்தைப் பிறர்மீது சுமத்தி, ஏன் அறிஞன் என்று கூறித் திரிகிறாய்?' என்று கவிஞர் மோரோபந்த் கூறிய மணிமொழி இத்தகைய புகழ்வாய்ந்த அறிஞர்களை நோக்கியே எழுந்ததாகும். இவர்களும் இவர்களுடைய முன்னோர்களும் இழைத்த தீமைகளைப் புத்தர்மீது சுமத்தி, இவர்கள் தங்கள் அறிவைப் பறையறைந்து கொண்டு இருக்கிறார்கள்.

3. புத்தர் சம்போதிஞானம் எய்திய பிறகு உள்ள அவருடைய சரித்திரத்தைக் கால வரையறையுடன் ஏன் எழுதவில்லை?

விடை - இப்போது கிடைத்துள்ள பழைய இலக்கியத்தை ஆதாரமாகக் கொண்டு அத்தகைய காலவரையறை செய்ய முடியாது. புத்தருடைய உபதேசங்களைக் காலக்கிரமப்படி வகுக்க இயலாது. இப்பொழுது கிடைக்கும் உபதேசங்களிலும் ஏராளமான இடைச்செருகல்கள் உள்ளன. அவற்றிலிருந்து உண்மைச் செய்தியைக் கண்டுபிடிப்பது மிகவும் சிரமமானது. அந்த முயற்சியைத்தான் நான் இந்த நூலில் செய்திருக்கிறேன். ஆனால் காலக்கிரமப்படி புத்தருடைய சரித்திரத்தை வரிசைப்படுத்த இயலவில்லை.

4. 'வைதிகப் பண்பாடு' ஆரியர்கள் பரதகண்டத்துக்கு வந்தபின்பு ஏற்பட்டது; அதற்கு முன்பு தாசர்களின் அதாவது அந்தணர்களின் பண்பாடு நிலவியது என்பதற்குச் சான்றுகள் யாவை?

விடை - 'இந்தியப் பண்பாடும் அஹிம்சையும்' என்ற நூலின் முதல் அத்தியாயத்தில் நான் இதை ஆராய்ந்திருக்கிறேன். இந்த நூலுடன்

அதையும் படித்தால் பல செய்திகள் நன்கு விளங்கும். நான் சொல்வதை எல்லாரும் ஒப்புக்கொள்ளத்தான் வேண்டும் என்ற பிடிவாதம் எனக்கு அறவே இல்லை. தாசர்கள், ஆரியர்கள் ஆகியவர்களின் பண்பாட்டுக்கும் புத்தருடைய சரித்திரத்துக்கும் தொடர்பு மிகக் குறைவு. இந்த இரண்டு பண்பாடுகளின் மோதலினால் உண்டான வைதிகப் பண்பாடு புத்தர் காலத்தில் நிலைத்து நிலவியிருந்தது என்பதைக் காண்பிக்கவே இந்த நூலின் முதல் அத்தியாயத்தை எழுதியிருக்கிறேன்.

5. உபநிடதங்களும் கீதையும் புத்தருக்குப் பின்பு இயற்றப்பெற்றன என்பதற்குச் சான்றுகள் யாவை?

விடை- இதைப்பற்றிய விரிவான ஆராய்ச்சியையும் 'இந்தியப் பண்பாடும் அஹிம்சையும்' என்ற நூலில் (பக். 48 - 50; 170 - 172) நான் செய்திருப்பதனால், இந்த நூலில் அதை மீண்டும் கூறவில்லை. உபநிடதங்கள் மட்டுமின்றி ஆரணியகங்களும் புத்தருக்குப் பின்பே இயற்றப்பெற்றன என்பதை நான் வலிமைவாய்ந்த சான்றுகளுடன் காண்பித்திருக்கிறேன். சதபதப் பிராம்மணத்திலும் பிருகதாரணியக உபநிடத்திலும் வந்துள்ள வம்சாவளியிலிருந்து, புத்தருக்குப் பிறகு 35 தலைமுறைகள் வரையில் அவர்களுடைய பரம்பரை நிலவியதாகத் தெரிகிறது. ஹேமசந்திர ராய்சௌதுரி, ஒவ்வொரு தலைமுறையும் முப்பது ஆண்டுகள் கொண்டது என்கிறார். ஆயினும் குறைந்த பட்சம் இருபத்தைந்து ஆண்டுகளே வைத்துக் கொண்டாலும், புத்தருக்குப் பிறகு 875 ஆண்டுகள் வரையில் இந்தப் பரம்பரை நிலவி வந்தது எனலாம். அதாவது சமுத்திரகுப்தன் காலம் வரையில் இந்தப் பரம்பரை இருந்தது; அப்பொழுது பிராம்மணங்களும் உபநிடதங்களும் நிலைத்தன. இதற்கு முன்பே அவற்றில் அங்கங்கே தக்க இடங்களில் மாறுபாடுகள் தோன்றியிரா என்று கூற இயலாது. பாலி இலக்கியமும் இத்தகையது தான். புத்தகோஷருக்குச் சுமார் இருநூறு ஆண்டுகளுக்கு முன்பு பாலி இலக்கியம் நிலைத்தது; புத்த கோஷர் அட்டகதை (உரை) எழுதிய பின்பு அவற்றின்மீது முடிவான முத்திரை பதிந்தது. உபநிடத உரைகளைச் சங்கராசாரியர் ஒன்பதாவது நூற்றாண்டில் எழுதினார். அதற்கு முன்பு கௌடபாதரின் மாண்டூக்ய காரிகை இருந்தது. அதில் எங்கும் புத்தரைப்பற்றிய துதியைக் காணலாம். அவ்வளவேன், அக்பருடைய ஆட்சியில் எழுதப் பெற்ற அல்லோப நிடதங்கூட உபநிடதங்களில் இடம் பெற்றுவிட்டது!

உபநிடதங்கள் ஆன்மவாதத்தையும் தவத்தையும் சிரமண சம்பிரதாயத்தினரிடமிருந்து ஏற்றுக்கொண்டன என்பதில் ஐயமுறக் காரணமில்லை. ஏனெனில் இவை இரண்டுக்கும் வேள்விப் பண்பாட்டுடன் எவ்வகைத் தொடர்பும் இல்லை. இக்காலத்தில் ஆரிய சமாஜமும் பிரம்ம சமாஜமும் பைபிளிலுள்ள ஏகேசுவர வாதத்தை

(ஒருவனே இறைவன் என்ற கொள்கையை) வேதங்களின் மீதும் உபநிடதங்களின் மீதும் சுமத்தப் பார்ப்பதுபோல, ஆன்மவாதத்தையும் தவத்தையும் வேதங்களின்மீது சுமத்த உபநிடதங்கள் முயலுவதாகத் தெரிகிறது. ஆனால் அவை சிரமணர்களின் அஹிம்சையை ஒப்புக் கொள்ளவில்லை. ஆதலால் அவை வைதிகமாகத் துலங்கின. இந்த நிலையிலும், கர்மாண்டத்தைப் பின்பற்றும் மீமாம்சகர்கள் இன்றும் உபநிடத்ங்களை வைதிகம் என்று கூறத் தயாரில்லை!

பாலி இலக்கியத்தையோ அதன் ஆங்கில மொழி பெயர்ப்புகளையோ பயிலக் கூடியவர்களுக்கு, பௌத்த காலத்துச் சரித்திரத்தை ஆராய்வதற்கு இந்த நூல் பயன்படும் என்று நான் நம்புகிறேன். ஆனால் இதற்குப் போதுமான வசதி இல்லாதவர்கள் கீழ்க்கண்ட ஐந்து நூல்களையாவது கட்டாயம் படிக்க வேண்டும்-

1. புத்தரும் தருமமும் சங்கமும், 2. புத்தலீலா சார சங்கிரகம், 3. பௌத்த சங்க வரலாறு, 4. சமாதி மார்க்கம், 5. இந்தியப் பண்பாடும் அஹிம்சையும்.

மக்களிடம் புகழ்ச்சி பெறுவதற்காக நான் இந்த நூலை எழுதவில்லை; உண்மையை ஆராயும் நோக்கம் ஒன்றைக் கொண்டே இதை எழுதியிருக்கிறேன். மக்கள் இதை எந்த அளவுக்கு விரும்பி ஏற்பார்கள் என்பது ஐயத்துக்கு இடமானது. ஆயினும் இதைப் பிரசுகர்த்தர்கள் வெளியிட்டிருக்கிறார்கள்; இதற்காக நான் அவர்களுக்குப் பெரிதும் கடமைப்பட்டிருக்கிறேன்.

-தர்மானந்த கோஸம்பி

# 1. ஆரியரின் வெற்றி

## உஷையைப் பற்றிய பாடல்கள்

லோகமான்ய திலகர், 'வேதங்களில் வடதுருவ வீடு' என்ற நூல் ஒன்று இயற்றினார். அவர் அந்நூலில், ரிக் வேதத்தில் உள்ள உஷா சூக்தங்களைச் சான்றாகக் கொண்டு, ஆரியர்கள் வடதுருவத்தின் மருங்கே வாழ்ந்தார்கள் என்று நிரூபிக்க முயன்றுள்ளார். உஷா சூக்தம் என்பது, வைகறைப் பெண்ணான உஷையை வாழ்த்திப்பாடும் பகுதி. அதில், "உஷை இன்றும் நாளையும் ஒரே மாதிரியாக இருக்கின்றாள். நெடுநாள்வரை அவள் வருணனுடைய இல்லத்துக்குச் செல்கிறாள்" என்ற பாடல்[1] வருகின்றது. இதுவும் இது போன்ற பிற பாடல்களும் வடதுருவத்து வைகறையையே குறிக்கின்றன என்பது திலகருடைய கொள்கை.[2] நெடுநாள் வரை உஷை வருணனுடைய இல்லத்துக்குச் செல்கிறாள்' என்பதற்கு, 'வடதுருவத்தில் ஆறு மாதம்வரை இருளாக உள்ளது' என்று அவர் விளக்கம் கூறியுள்ளார்.

ஆனால் இதே சூக்தத்தின் பன்னிரண்டாவது பாடலைப் பார்ப்போம். "உஷை குதிரைகளும் பசுக்களும் நிரம்ப உடையவள்; அனைவருடைய வழிபாட்டுக்கும் உரியவள்" என்று அந்தப் பாடல் கூறுகின்றது. ஆயினும் வடதுருவப் பக்கத்தில் இப்போது குதிரைகளும் பசுக்களும் இல்லவே இல்லை; ஆயிரக்கணக்கான ஆண்டுகளுக்கு முன்பு அவை அங்கே இருந்தன என்று கொள்வதற்கு எவ்வகைச் சான்றும் கிடைக்கவில்லை. இந்த ஒரு பாடலில் மட்டுமின்றி, உஷாதேவியை வாழ்த்தும் வேறு பாடல்களிலும், "அவள் குதிரைகளும் பசுக்களும் கொடுப்பவள், பசுக்களை ஈன்றவள்" என்ற வருணனை வருகின்றது. ஆதலால் இந்தப் பாடல்களும் வாழ்த்துகளும் வடதுருவத்தின் மருங்கே இயற்றப் பட்டவையல்ல என்பது திண்ணம்.

## இச்தரின் கதை

அப்படியானால், "நெடுநாள்வரை உஷை பாதாளத்துக்குச் செல்கிறாள்" என்பதற்குப் பொருள் என்ன? அது நமக்கு எளிதில் விளங்க வேண்டுமென்றால், பாபிலோனிய மக்களிடையே இச்தர்

1. ரிக்வேதம், 1-123-8.

2. The Arctic Home in the Vedas, பக்கம் 103.

தேவியைப்பற்றி நெடுங்காலமாக வழங்கும் கட்டுக் கதைகளை நினைவிலே கொள்ள வேண்டும். 'தம்முஜ்' அல்லது 'தமுத்ஸி' (தமூனஸ் என்பது வேதத்தில் வரும் சொல்) என்ற தேவனிடம் இச்தருக்கு ஆசை விழுகிறது. ஆனால், அவன் திடீரென்று இறந்து போகிறான். அவனை உயிர்ப்பிக்க அமுதம் கொண்டுவரும் பொருட்டு, இச்தர் பாதாளத்துக்குப் போகிறாள். அங்கே அரசியாக இருக்கும், 'அல்லது' என்பவள், இச்தரின் தமக்கை. ஆயினும், அவள் இச்தரைக் கொடுமையாக இம்சிக்கிறாள்; மெல்ல மெல்ல இச்தரின் நகைகள் யாவற்றையும் களைந்து நோயாளியாக்கி அவளைச் சிறைப்படுத்துகிறாள். நான்கு மாதமோ ஆறுமாதமோ இப்படித் துயரமும் சிறைவாசமும் அநுபவித்த பிறகு, அல்லதுவினிடமிருந்து இச்தருக்கு அமுதம் கிடைக்கிறது; அவள் மீண்டும் மண்ணுலகிற்கு வருகிறாள்.

இச்தரைப்பற்றி இன்னும் பல கட்டுக் கதைகள் இருக்கின்றன; ஆயினும், இந்தக் கதைதான் எல்லாவற்றுள்ளும் முக்கியமானது. பாபிலோனிய இலக்கியம் முழுதிலும் இந்தக் கதையைத் தழுவிய வருணனைகள் வருகின்றன.[1] ரிக்வேதத்திலுள்ள உஷா சூக்தப் பாடல் களுக்கும் இந்தக் கட்டுக் கதைக்கும் தொடர்பு உண்டு என்பதில் ஐயம் இல்லை.

உஷை என்பவள் இந்த இச்தர் தேவியே என்பதை மேலும் பார்ப்போம். இச்தர் பாதாளத்திலிருந்து மேலே வரும் பருவத்தில் விழாக் கொண்டாடுவது பாபிலோனியர்களின் வழக்கம். செந்நிற எருதுகள் பூட்டிய தேரில் அவளை ஊர்வலமாகக் கொண்டு வருவார்கள். குதிரைகள் புழக்கத்துக்கு வந்தபிறகு அவளுடைய தேரை அவை இழுக்கலாயின. "இந்த உஷையின் தேரில் செந்நிற எருதுகளைப் பூட்டியிருக்கிறார்கள்",[2] என்றும், "செந்நிறக் குதிரைகள் பூட்டிய தேரில் உஷாதேவி வந்தாள்"[3] என்றும் ரிக்வேதம் கூறுகின்றது.

## போரில் குதிரைகள்

பாபிலோனியாவில் எருதுகளுக்குப் பின்பு குதிரைகள் புழக்கத்துக்கு வந்தன. கிறிஸ்து பிறப்பதற்கு இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்புவரை அந்த நாட்டில் குதிரையைப் பயன்படுத்துவது பற்றி அடியோடு ஒன்றுமே தெரியாமல் இருந்தது. அந்நாட்டு மக்கள் எருதுகளையாவது கழுதைகளையாவது வண்டியில் பூட்டுவார்கள். குதிரைகளைக் 'காட்டுக் கழுதைகள்' என்று அவர்கள் கூறி வந்தார்கள். பாபிலோனியாவின் வடபாலுள்ள மலைப் பிரதேசத்தில் வாழும் கேசி

1. Lewis Spence எழுதிய Myths and Legends of Babylonia and Assyria (1926), பக்கம் 125-131. 2. ரிக்வேதம், 5-80-3. 3. ரிக்வேதம், 6-65-2.

என்ற மக்கள், முதல்முதலில் சரக்குகளை ஏற்றிச் செல்வதற்குக் குதிரைகளைப் பயன்படுத்துவாராயினர். இந்தக் 'காட்டுக் கழுதை'களுக்குக் கடிவாளமிட்டு அவற்றின்மேல் சவாரி செய்துகொண்டு அவர்கள் அறுவடைக் காலத்தில் பாபிலோனியாவுக்கு வருவார்கள்; அங்குள்ள குடியானவர்களுக்கு உதவி செய்து ஊதியமாகக் கிடைத்த தானியத்தைக் குதிரைமீது ஏற்றிக்கொண்டு போவார்கள். கேசி மக்களுக்குப் போர்க்கலை என்பது அறவே தெரியாது. அந்தக் கலையை அவர்கள் பாபிலோனிய மக்களிடமிருந்து கற்றார்கள். மேலும் அவர்களே முதல்முதலாகப் போரில் குதிரைகளைப் பயன் படுத்தினார்கள்.[1]

கேசிகளின் அரசனான கந்தச் என்பவன், தன் குதிரைப் படையின் வலிமையைக் கொண்டு, கி.மு.1760-ஆம் ஆண்டில் பாபிலோனியாவில் ஒரு பேரரசை நிறுவினான். அவனுக்குப் பிறகு அவன் வழித்தோன்றல்கள் அரசாண்டார்கள்.[2] இங்கே நாம் கவனிக்க வேண்டியது என்னவென்றால், கி.மு.1800-ஆம் ஆண்டுக்கு முன்பு போரில் குதிரைகளைப் பயன் படுத்தியதற்கு எங்கும் ஆதாரம் கிடையாது; வேதத்திலோ எங்கே பார்த்தாலும் குதிரையின் பெருமையை வருணித்திருப்பது மட்டும் அல்லாமல், கேசிகளுக்கும் குதிரைகளுக்கும் இருந்த நெருங்கிய தொடர்பும் புலப்படுகின்றது. இதிலிருந்து ஆரியர்கள் சப்தசிந்துவின் மீது படையெடுத்த நிகழ்ச்சி கி.மு.1700-ஆம் ஆண்டுக்கு முன்பாக இருந்திருக்க முடியாது என்பது தெளிவாகிறது.

## தாசர்

ஆரியர்கள் வருமுன்பு சப்தசிந்துப் பிரதேசத்தில் (சிந்து, பஞ்சாப் மாகாணங்களில்), தாசர்களின் அரசு நிலவியது. இப்போது 'தாசன்' என்ற சொல்லுக்கு, 'அடிமை' என்ற பொருள் ஏற்பட்டுள்ளது. ஆனால், வேதத்தில் தாஸ், தாச் என்ற இரண்டு வினைப் பகுதிகளையும் 'கொடுத்தல்' என்ற பொருளில் வழங்கியிருக்கிறார்கள்; அண்மையில் வெளிவந்த அகராதிகளிலும் இப்பொருளைத்தான் தந்திருக்கின்றார்கள். எனவே, 'தாஸன்' என்ற சொல்லுக்கு முதலில் உண்டான பொருள் கொடைவள்ளல், உயர்குடித் தோன்றல் (Noble) என்பதேயாகும். ஆவெஸ்தாவில் பர்வதீன் யஸ்த் என்ற பகுதியில், இந்தத் தாச நாட்டுப் பிதிரர்களின் வழிபாடு பற்றிய செய்தி வருகிறது. அங்கே அவர்களை, 'தாஹி' என்று குறித்துள்ளார்கள்.[3]

பழமையான பர்சிய மொழியில் சம்ஸ்கிருத 'ஸ'வை 'ஹ' என்று

1. L.W.King எழுதிய A History of Babylon (1915), பக் 125.

2. அதே நூல், பக். 214.

3. We worship the Fravashis of the holy men in the Dahountries.

உச்சரிப்பது வழக்கம். உதாரணமாக, ஸப்தஸிந்துவை ஹப்தஹிந்து என்று ஆவெஸ்தா சொல்லுகிறது. அதுபோலவே, தாஸி அல்லது தாஸ என்பது தாஹி என்று மாறியிருக்கிறது. இவ்வாறு ஆவெஸ்தாவிலிருந்து தாசர்களின் உயர்வை அறிகிறோம்.

## ஆரியர்

ஆரியன் என்ற சொல், 'ரு' என்ற வினைப்பகுதியிலிருந்து தோன்றியிருக்கிறது. வடமொழியில் வெவ்வேறு கணங்களில் வரும் 'ரு' என்ற தாதுவுக்கு பெரும்பாலும், 'நடத்தல்' என்பதே பொருள். அதாவது, ஆரியன் என்ற சொல்லுக்கு நாடோடி, ஊரூராகத் திரிபவன் என்பது பொருள். ஆரியர்கள் வீடுவாசல் அமைத்துக் கொண்டு வாழ விரும்பியதில்லை என்று தெரிகிறது. மொகலாயர்கள் கூடாரங்களில் வாழ்ந்து வந்தது போலவே ஆரியர்களும் கூடாரமடித்தோ பந்தல் அமைத்துக் கொண்டோ வாழ்ந்திருப்பார்கள் என்று தோன்றுகிறது. ஒரு விஷயத்தில் அவர்களுடைய இந்தப் பரம்பரைப் பழக்கம் இன்னும் நிலைத்திருக்கிறது. பாபிலோனியாவில் யாக யக்ஞங்கள் நிகழ்ந்த இடங்களைப் பார்த்தால் அவை பெரிய கோயில்களின் பிராகாரங்களாக இருப்பது தோன்றும். ஹரப்பாவிலும் மொஹஞ்சதரோவிலும் கண்டுபிடிக்கப் பெற்ற பழைய நகரங்களின் இடிபாடுகள் தாஹி மக்களின் கோயில்கள் இருந்த இடங்கள் என்றும், அவ்விடங்களில் வேள்வி நிகழ்ந்திருக்க வேண்டும் என்றும் ஆராய்ச்சி வல்லுநர்கள் கருதுகிறார்கள். கோயில்களில் வேள்வி நிகழ்த்தும் இந்த வழக்கத்தை ஆரியர்கள் பின்பு நிறுத்திவிட்டார்கள். பந்தலிலேதான் வேள்வி நிகழ்த்த வேண்டும் என்ற முறையை அவர்கள் ஏற்படுத்தினார்கள். ஆரியரின் குலமுறையில் வந்தவர்கள் கூடார வாழ்க்கையை விட்டு நாளடைவில் வீடு கட்டிக் கொண்டு வாழலானார்கள். ஆனால், வேள்விக்குப் பந்தல்தான் வேண்டும் என்ற கொள்கை இன்னமும் நிலைத்திருக்கிறது.

## தாசர்கள் தோற்றது ஏன்?

இப்படி நாடோடியாகத் திரிந்த ஆரியர்கள், முன்னேற்றமடைந்த தாச மக்களை எப்படித் தோல்வியுறச் செய்தார்கள்? இதற்கு விடையைச் சரித்திரம் - சிறப்பாக இந்தியாவின் சரித்திரம் - அடிக்கடி சொல்லி வந்திருக்கிறது. ஆரம்பத்திலே ஓர் அரசாட்சியின் கீழ் மக்கள் இன்பமும் செல்வமும் பெற்று வாழ்ந்தபோதிலும், கடைசியில் ஒரு சிறு வகுப்பின் கையில் ஆதிக்கம் சிக்கிக்கொள்கிறது. அந்த வகுப்பு மட்டும் கேளிக்கையில் ஆழ்ந்து, தனக்குள்ளே அதிகாரத்துக்காகப் போராடுகிறது. அதனால் மக்களின்மீது வரிச் சுமை ஏறுகிறது; அவர்கள் இந்த

ஆட்சியாளர்களை வெறுக்கிறார்கள். இத்தகைய நிலையில் பிற்போக்கான மக்களுக்குப் பொன்னான வாய்ப்புக் கிடைக்கிறது. அவர்கள் ஒன்றுபட்டு இந்தச் சாம்ராஜ்ய ஆட்சியை எதிர்த்துத் தகர்த்தெறிகிறார்கள். பதின்மூன்றாவது நூற்றாண்டின் தொடக்கத்தில், காட்டுமிராண்டிகளான மொகலாயர்களை ஒன்று திரட்டி, செங்கிஸ்கான் எத்தனையோ சாம்ராஜ்யங்களை மண்ணோடு மண்ணாக உருட்டிவிடவில்லையா? எனவே ஆரியர்கள், தங்களுக்குள் போரிட்டுக் கொண்டிருந்த தாசர்களை எளிதில் வெற்றி கொண்டதில் வியப்பு ஒன்றும் இல்லை.

## நகரங்களை அழித்த இந்திரன்

தாசர்கள் சின்னஞ்சிறு நகரங்களில் வாழ்ந்து வந்தார்கள். இந்த நகரங்கள் தம்முள் ஒன்றையொன்று பகைத்து வந்தன என்று தெரிகிறது. எப்படி என்றால், தாசர்களைச் சார்ந்த திவோதாசன் என்பவன் இந்திரனோடு சேர்ந்துகொண்ட வரலாறு, ரிக்வேதத்தில் பல இடங்களில் குறிக்கப்படுகிறது. தாசர்களின் தலைவன் விருத்திரன் என்ற அந்தணன். அவனுடைய உறவினனே த்வஷ்டா. அவன் இந்திரனுக்கு ஒருவகைப் படையை (வச்சிராயுதத்தை) ஆக்கிக் கொடுத்தான். அதன் உதவியினால் இந்திரன் தாசர்களின் நகரங்களை அழித்ததோடு நில்லாமல், இறுதியில் விருத்திரனையும் கொன்றான். புரந்தரன் அதாவது நகரங்களை அழிப்பவன் என்ற சிறப்புப் பெயரை இந்திரனுக்கு ரிக்வேதம் பல இடங்களில் வழங்குகிறது.[1]

## இந்திரனுடைய தலைமுறை

தாசர்களுக்கும் இந்திரனுக்கும் எத்தகைய தொடர்பு இருந்தது என்பதைப் பார்த்தோம். இனி இந்திரன் என்ற சொல் எப்படி வழக்காற்றில் வந்தது என்பதைக் கவனிப்போம். இன், த்ர என்னும் இரண்டு சொற்களும் சேர்ந்து 'இந்திரன்' என்ற தொடர்மொழி ஆயிற்று. இன் என்றால் போர்வீரன். உதாரணமாக, 'ஸேனை' என்ற சொல்லைப் பாருங்கள். 'இன்' அதாவது போர் வீரனோடு, 'ஸ'-கூடியிருப்பது சேனையாம். 'த்ர' என்ற சொல், சிகரம் அல்லது தலைமை என்ற பொருளில், பாபிலோனிய மொழியில் வழங்குகிறது. எனவே இந்திரன் என்றால், சேனைக்கு முதன்மையானவன் அல்லது படைத் தலைவன் என்று பொருள்படும். நாளடைவில் இந்தச் சொல் அரசனைக் குறிப்பதாயிற்று. தேவேந்திரன், நாகேந்திரன், நரேந்திரன்

1. இந்திரனுக்கு தாசர்களுக்கும் இருந்த தொடர்பை விரிவாக அறிய, இந்தியப் பண்பாடும் அஹிம்சையும்', பக். 17-19 பார்க்க

முதலியவற்றை இதற்கு உதாரணமாகக் கொள்ளலாம். முதல்முதலாகத் தோன்றிய இந்திரனுடைய இயற்பெயர் சக்கிரன் என்பது. அவனுக்குப் பிறகு அவனுடைய வழித் தோன்றல்கள் வழிவழியாக நெடுங்காலம் வாழ்ந்தனர். நகுஷனை இந்திரனாக்கிய கதையைப் புராணங்களில் காண்கின்றோம். "நான் எழுவரைக் கொன்ற நகுஷன்"[1] என்ற குறிப்பு ரிக்வேதத்தில் கிடைக்கிறது. இந்தக் கதையில் ஏதோ உண்மை இருக்கத்தான் வேண்டும்.

## இந்திர வணக்கம்

பழமையான வேதகாலத்து ஆரியர்கள் பாபிலோனியாவின் மருங்கில் இருந்தவர்கள் என்பதை முன்பே ஆராய்ந்து கூறினோம். உலகாண்ட மன்னர்களை வேள்விக்கு அழைத்து வந்து அவர்களுக்குச் சோமரசம் கொடுக்கும் முறை பாபிலோனியாவில் இருந்தது. அந்தச் சமயத்தில் அவர்களைப் புகழ்ந்து துதி பாடுவதுண்டு. இந்திரனைப் போற்றிப் புகழும் பெரும்பாலான சூக்தங்கள் இத்தகையனவே. இந்திரனுடைய ஆட்சி என்ற முறை அழிந்த பின்னரும் இந்தத் தோத்திரப் பாடல்கள் அப்படியே இருந்தன. அவற்றுக்கு என்ன என்னவோ பொருள் சொல்வாராயினர். இந்திரன் வான நாட்டுத் தெய்வங்களின் அரசன். என்ற கற்பனை எழுந்தது; இந்தச் சூக்தங்களின் பொருள் பல இடங்களில் யாருக்கும் விளங்காமற் போயிற்று. அவற்றிலுள்ள வெறுஞ் சொற்களிலே மந்திர சக்தி இருப்பதாக மக்கள் நினைக்கலானார்கள். இந்திரன் வானாட்டு அரசனல்லன், இவ்வுலகத்து மனிதனே என்பதற்கு, மேலும் சில சான்றுகளைக் காண்போம்.

## இந்திரனுடைய இயல்பு

சப்தசிந்துவில் தன் ஆதிக்கத்தை நிலைநாட்டிய படைத்தலைவனான இந்திரன், மனிதனாக இருந்தான் என்பதற்கு, ரிக்வேதத்தில் போதுமான சான்றுகள் கிடைக்கின்றன. அவனுடைய இயல்பைப் பற்றிய செய்தியைக் கௌஷீதகி உபநிஷத்தில் காணலாம்; அது வருமாறு-

திவோதாசனுடைய மகன் பிரதர்த்தனன் போரிட்டுத் தன் வீரத்தை வெளிப்படுத்தி, இந்திரனுக்குப் பிரியமான அரண்மனைக்குள் சென்றான். இந்திரன் அவனிடம், "பிரதர்த்தனா, உனக்கு நான் ஒரு வரம் கொடுக்கிறேன்" என்றான். "மாந்தருக்கு நன்மை செய்யக்கூடிய வரத்தைக் கொடு" என்றான் பிரதர்த்தனன். "வேறு ஒருவர் பொருட்டு வரம் வழங்குதல் வழக்கமில்லை; நீ உன் சொந்த நலத்திற்கு வரம் கேள்" என்றான் இந்திரன். "என் சொந்த நலனுக்காக எனக்கு வரம் வேண்டாம்"

1. ரிக்வேதம், 10-49-8

என்று பிரதர்த்தனன் மறுத்தான். அப்பொழுது இந்திரன் அவனுக்கு உண்மையைச் சொன்னான். "என்னை நீ அறிந்துகொள். என்னை ஒருவன் அறிந்தால் அதனால் அவனுக்கு நன்மை உண்டாகும். துவஷ்டாவின் மகனை-திரிசீர்ஷனை- நான் கொன்றேன். அருர்மகர் என்ற துறவிகளை நான் நாய்களைக் கொண்டு தின்ன வைத்தேன். பல உடன்பாடுகளை மீறி, நான் தெய்வ உலகில் பிரகலாதனைப் பின்பற்றியவர்களையும், அந்தரிட்சத்தில் பௌலோமர்களையும், மண்ணுலகில் காலகாசி களையும் கொன்றேன். அப்பொழுது என் உடலில் ஓர் உரோமங்கூட அசையவில்லை. இத்தகைய என்னை ஒருவன் அறிந்துகொண்டால் அவன் தாயைக் கொல்வது, தந்தையைக் கொல்வது, திருடுவது, கருவைச் சிதைப்பது முதலிய பாவங்களைச் செய்திருந்தாலும் சரி, செய்துகொண்டு இருந்தாலும் சரி சிறிதும் தயக்கம் கொள்ளமாட்டான்; அவன் முகத்தின் ஒளியும் மாறாது" என்றான்.

தனது சாம்ராஜ்யத்தை நிலை நாட்டியபோது இந்திரன் மேற்சொன்ன அநீதிகளில் பலவற்றை இழைத்ததாக ரிக்வேதமே நேராகக் குறிப்பிடுகிறது. ஆனால், இந்திரன் மட்டும் என்ன, எவனுமே ஒரு சாம்ராஜ்யத்தை நிறுவ விரும்பினால் தமர், பிறர் என்ற பற்றும் ஈவிரக்கமும் வைத்துக்கொள்ள மாட்டான்; உடன்பாட்டை மீறவும் அஞ்ச மாட்டான். 'சிவாஜி மன்னன், சந்திர ராவ் மோரேயைக் கொன்றது நியாயமா, அநியாயமா?' என்பதைப் பற்றிய வாதம் பயனற்றது. நீதியையும் அநீதியையும் சிந்தித்துக் கொண்டு அமர்ந்திருந்தால், சிவாஜியால் ஒரு சாம்ராஜ்யத்தை நிறுவ முடிந்திராது. சாம்ராஜ்யத்தில் வாழ்கிறவர்களுங்கூட இப்படி அற்பமான பாவ புண்ணியங்களைப் பற்றிச் சிந்தித்துக் கொண்டு இருப்பதில்லை. அந்தச் சாம்ராஜ்யத்தை நிறுவியதனால் மொத்தத்தில் பொது மக்களுக்கு நன்மை ஏற்பட்டுள்ளதா இல்லையா என்பதை மட்டுமே அவர்கள் பார்க்கிறார்கள்.

## ஆரிய ஆதிக்கத்தின் நன்மைகள்

இப்படிச் சிந்தித்துப் பார்க்கும்போது இந்திர சாம்ராஜ்யத்தால், அதாவது ஆரியர்களின் சாம்ராஜ்யத்தினால் சப்தசிந்து மக்களுக்கு மிகப் பெரும் பயன் ஏற்பட்டிருக்க வேண்டும் என்று தெரிகிறது. சின்னஞ்சிறு நகரங்களுக்கிடையே அடிக்கடி நடந்துகொண்டிருந்த போர்கள் நின்றொழிந்தமையால் மக்களுக்கு ஒரு வகை இன்பமும் அமைதியும் கிடைத்தன. பேஷ்வாக்கள் வாழ்ந்திருந்த 'சனிவார் வாடா' மாளிகையில் அவர்களின் உறவினர்களே ஆங்கிலக் கொடியை ஏற்றியதாகவும், பேஷ்வாக்களின் ஆதிக்கம் ஒழிந்ததற்காக மற்ற ஹிந்துக்கள் - அதாவது அந்தணரல்லாதவர்கள் - பெருவிழாக் கொண்டாடியதாகவும் நாம்

மகாராஷ்டிரத்துச் சரித்திரத்தில் காண்கிறோம் அல்லவா? அதுபோலவே, விருத்திரன் அந்தணனாயினும் அவனைக் கொன்று, சப்த சிந்துவில் குமுறிய உள் நாட்டுக் கலகத்தைத் தீர்த்ததற்காக அந்நாட்டு மக்கள் இந்திரனைப் போற்றியது இயல்புதான். எனவே தாசர்களுக்கும் ஆரியர்களுக்கும் நடந்த போராட்டத்தினால் சில நன்மைகள் ஏற்பட்டன. அவற்றுள் முதலாவது, சப்தசிந்துவில் ஒரு வகையான அமைதி நிலவியது. இரண்டாவதாக, அரசியலில் அந்தணர்களின் ஆற்றல் அழிந்தது. இந்திரன் துவஷ்டாவின் மகனான விசுவரூபனுக்குப் புரோகிதப் பதவியை அளித்ததாகவும், பிறகு அவன் கலகம் செய்வான் என்ற பயத்தினால் அவனையும் தீர்த்துக் கட்டியதாகவும் ரிக்வேதமும் யஜுர்வேதமும் நேரடியாகக் குறிப்பிடுகின்றன.[1] ஆயினும் புரோகிதப் பதவி மட்டும் எவனாவது ஓர் அந்தணனிடத்திலேயே இருந்து வந்தது. அரசியலில் கலக்காமல் இருந்ததனால் அந்தண சமூகம் இலக்கியத்தை வளர்க்க முடிந்தது.

## வேத மொழி

தாசர்களுக்கும் ஆரியர்களுக்குமிடையே நிகழ்ந்த போராட்டத்தில் ஒரு புது மொழி தோன்றியது. இதுதான் வேத மொழி. முஸ்லிம்களுக்கும் ஹிந்துக்களுக்கும் நிகழ்ந்த போராட்டத்தினால் இந்தியாவில் உர்து என்ற புது மொழி தோன்றியதல்லவா? அது போன்றதுதான் இதுவும். ஆனால், வேத மொழியைப் போன்ற உயர்வு உர்துவுக்கு ஒருபோதும் கிடைக்கவில்லை; கிடைப்பது சாத்தியமும் அன்று. வேத மொழி சாட்சாத் தேவபாஷையே ஆகிவிட்டது.

இந்த வேதபாஷைக்குச் சரியான பொருள் தெரிந்து கொள்வதற்கு, பாபிலோனிய மொழிகளின் அறிவு மிகவும் அவசியமாகும். சில மூலச் சொற்களின் பொருள்கள் எப்படி மாறியுள்ளன என்பது, தாசன் ஆரியன் என்ற இரண்டு சொற்களிலிருந்தும் தெரிகிறது. தாசன் என்ற சொல்லுக்கு வள்ளல் என்பது மூலப் பொருள்கள்; அது இப்போது அடிமை என்று மாறிவிட்டது. ஆரியன் என்ற சொல்லுக்கு நாடோடியாகத் திரிகிறவன் என்பது தாதுப் பொருள்; அது இப்போது உயர்ந்தவன், வள்ளல், பெருங்குடி மகன் என்ற பொருளில் வழங்கி வருகின்றது.

---

1. ரிக்வேதம் 10-8-8, 9இலும், யஜுர்வேதமாகிய தைத்திரீய ஸம்ஹிதை, காண்டம் 2-5-1இலும் இந்தச் செய்திகள் வந்துள்ளன. "விசுவரூபன் என்பவன் துவஷ்டாவின் மகன். அவன் அசுரர்களுக்குச் சகோதரி மகனாகவும், தேவர்களுக்குப் புரோகிதனாகவும் இருந்தான். அவன் கிளர்ச்சி செய்வான் என்ற பயத்தினால், இந்திரன் அவன் தலையை வெட்டினான். அப்பொழுது மக்கள் இந்திரனைப் 'பிரம்மகத்தி செய்தவன்' என்று பழித்தார்கள்" என்கிறது தைத்திரீயஸம்ஹிதை. -இந்தியப் பண்பாடும் அஹிம்சையும், பக். 19-20.

## ஆரிய வெற்றியின் தீமைகள்

தாசர்களுக்கும் ஆரியர்களுக்கும் ஏற்பட்ட போராட்டத்தினால் ஒரு பெருந்தீமை விளைந்தது. வீடுகளும் நகரங்களும் அமைக்கும் தாசர்களின் கலை அழிந்து போயிற்று. சிந்து பஞ்சாப் மாகாணங்களில் அகழ்ந்தெடுக்கப்பெற்ற பழமையான வீடுகள், நகரங்கள் ஆகியவற்றின் பரம்பரைகள் இப்போது பாரத நாட்டில் இல்லாமலே மறைந்துபோயின. இரண்டாவதாக, காட்டில் உறைந்த துறவிகள் எவ்வாறு வாழ்ந்து வந்தார்கள் என்பதை அறிவதற்கும் வழியில்லை. இந்திரன் அவர்களை நாய்களுக்கு இரையாக்கியதாக ஒரு மேற்கோள் முன்னரே வந்திருக்கிறது. 'ஸாலாவ்ருகம்' என்பது மூலத்திலுள்ள சொல். இந்தச் சொல்லுக்கு, ஓநாய் என்றும் செந்நாய் என்றும் பொருள் கூறலாம். உரையாசிரியர் ஓநாய் என்றே பொருள் கொண்டிருக்கிறார். ஆனால், இந்திரனிடம் நிறைய வேட்டை நாய்கள் இருந்தன; ஆதலால் அந்த நாய்களையே அவன் துறவிகளின் மீது ஏவியதாகக் கூறுவதுதான் மிகப் பொருத்தமாகும். இந்தத் துறவிகளுக்குச் சமூகத்தில் நல்ல செல்வாக்கு இருந்திருக்க வேண்டும்; இல்லாவிட்டால் இந்திரன் இவர்களைக் கொல்லத் தேவையே இல்லை. ஆனால், இந்தத் துறவிகள் எந்த முறையில் வாழ்ந்தார்கள், மக்கள் இவர்களை ஏன் மதித்தார்கள் என்பவை போன்ற விஷயங்களை அறிய இன்று ஏதும் வழி இல்லாமலே போய்விட்டது.

## ஆரியப் பண்பாட்டை எதிர்த்த கண்ணன்

சப்தசிந்துப் பிரதேசத்தில் தன்னுடைய ஆதிக்கம் பூரணமாக நிலைத்த பின்பு, இந்திரன் மத்திய இந்தியாவின்மீது படையெடுத்ததில் வியப்பு ஒன்றும் இல்லை. ஆனால், அங்கே அவன் மிகப் பெரிய பகைவனை எதிர்க்க நேர்ந்தது. தேவகி மைந்தனான கண்ணன் வெறும் பசுக்களைக் காக்கும் அரசனாக இருந்தான். இந்திரனுடைய வேள்விப் பண் பாட்டையும் மேன்மையையும் ஏற்றுக்கொள்ள அவன் இசையவில்லை. ஆதலால் இந்திரன் அவனைத் தாக்கினான். கண்ணனிடம் குதிரைப்படை இல்லை; ஆயினும், அவன் போராடுவதற்கு மிகவும் வாய்ப்பான இடத்தைத் தேடிக்கொண்டதனால் இந்திரன் அவனை ஒன்றுமே செய்ய முடியவில்லை. பிருகஸ்பதியின் உதவியினால் இந்திரன் எப்படியோ தன் உயிரைக் காப்பாற்றிக் கொண்டு பின்னடைந்தான். இந்த முடிவுக்கு வருவதற்குரிய திறமான சான்றுகள் ரிக் வேதத்தில் *(8-96; 13-15)* காணும் சில ரிக்குகளிலிருந்தும், பாகவதம் முதலிய புராணங்களில் வரும்

கதைகளிலிருந்தும் கிடைக்கின்றன.[1]

கண்ணன் யாகயக்ஞப் பண்பாட்டை ஏற்றுக் கொள்ள ஆயத்தமாக இல்லை. அப்படியானால் அவன் எதை ஏற்றுக்கொண்டான்? அவனுக்கு ஆங்கிரச முனிவர் ஓர் எளிய வேள்வி முறையைக் கற்பித்தார். அந்த வேள்விக்குத் தட்சிணைகள் -தவம், தானம், நேர்மை, அஹிம்சை, வாய்மை என்பவை.[2] ஆரியர்களுக்கும் தாசர்களுக்கும் நிகழ்ந்த போராட்டத்தில், சப்தசிந்துப் பிரதேசத்தில் துறவிகளின் பண்பாடு அழிந்தது என்றோம் அல்லவா? அதன் சில பகுதிகள் கங்கை யமுனைப் பரப்பில் நிலைத்திருந்தன என்பது இதிலிருந்து தெரிகிறது. தவம் புரியும் அஹிம்சகர்களான முனிவர்களைக் கண்ணனைப் போன்ற அரசர்கள் இந்த வட்டாரத்தில் வழிபட்டு வந்தார்கள் என்பது இந்த மேற்கோளிலிருந்து தெளிவாகிறது.

## வைதிகப் பண்பாட்டின் வளர்ச்சி

ஆனால், அஹிம்சையை முதன்மையாகக் கொண்ட இந்தப் பண்பாடு அவ்வளவாக வளரவில்லை. அந்தணர்கள் அரசியலிலிருந்து விலகிய பின்பு, அவர்கள் இலக்கியத்திலும் மக்களுக்குப் பயன்படும் வேறு துறைகளிலும் மிகுதியாகக் கருத்தைச் செலுத்தினார்கள். இந்தியாவில் மிகப் பழமையான பல்கலைக் கழகம் தட்சசிலையில் இருந்தது. அங்கே அந்தணர்கள் வேதம் கற்பித்ததோடு நில்லாமல், வில்வித்தை, வைத்தியம் முதலிய கலைகளிலும் பயிற்சியளித்தார்கள். சப்தசிந்துவில் இந்திரனுடைய வழிவந்த பேரரசு அழிந்துவிட்ட போதிலும், அந்த வழியாகத் தோன்றிய இந்தப் புதிய பண்பாட்டின் ஆட்சி ஆரம்பமாயிற்று; இது மேன்மேலும் வளர்ந்து ஓங்கலாயிற்று.

## மத்திய இந்தியாவில் வைதிகப் பண்பாட்டின் வெற்றி

கண்ணன் இந்திரனை வென்று அறுநூறு எழுநூறு ஆண்டுகள் கடந்த பின்பு, பரீட்சித்தும் அவன் மகன் ஜனமேஜயனுமாகிய பாண்டவகுல மன்னர்கள் இருவரும், சப்தசிந்துவில் படிந்த ஆரியப் பண்பாட்டைக் கங்கை யமுனை வட்டாரத்தில் நிறுவினார்கள். பாண்டவர்கள் ஆரியப்

1. இந்திரன் பிருகஸ்பதியைத் துணையாகக் கொண்டு கண்ணனுடைய படைகளைத் தாக்கித் தோல்வியுறச் செய்ததாகவும், கருவுற்றிருந்த கண்ணனுடைய மனைவியரைக் கொன்றதாகவும் ரிக்வேதம் கூறுகின்றது. இதற்கு மாறாக, கண்ணன் கோவர்த்தன மலையைத் தூக்கி இந்திரனுடைய பெருமழையினின்றும் கோகுலத்தைக் காத்ததாகக் கூறுகிறது பாகவதம் (பத்தாவது ஸ்கந்தம்). -இந்தியப் பண்பாடும் அஹிம்சையும், பக்கம் 22-25.

2. சாந்தோக்கிய உபநிஷத்து, 3-17, 4 முதல் 6 வரை.

பண்பாட்டை விரும்பியவர்கள் என்பதற்கு, வைதிக இலக்கியத்தில் சான்று ஏதும் இல்லை. கண்ணனுடைய காலத்துக்கும் பாண்டவர் காலத்துக்குமிடையே குறைந்த பட்சம் அறுநூறு ஆண்டுகளாவது கடந்திருக்க வேண்டும். மகாபாரதத்தில் வரும் கண்ணனோடு தொடர்புடைய கதைகளை மேலெழுந்தவாரியாகப் படித்தாலுங்கூட அவை இடைச் செருகல்கள், அதாவது பின்னால் சேர்க்கப்பட்டவை என்பது தெரிந்துவிடுகிறது. எப்படியும் இந்திரனோடு போரிட்ட கண்ணனும் மகாபாரதக் கண்ணனும் ஒருவரல்லர் என்பதை ஒப்புக் கொண்டே ஆக வேண்டும். பாண்டவர்களின் வழித் தோன்றல்களான பரீட்சித்தும் ஜனமேஜயனும் ஆகிய இருவர் மட்டும் வைதிகப் பண்பாட்டுக்குப் பெரும் புகலளித்தார்கள் என்பது அதர்வ வேதத்திலிருந்து (காண்டம் 20, சூக்தம் 127) நன்கு புலனாகின்றது.[1]

சப்தசிந்துவில் துறவிகளின் பண்பாடு அறவே அழிந்துவிட்ட போதிலும், அது சிறப்பாக மத்திய இந்தியாவில் வாழ்ந்து வந்தது என்பது, மேலே கூறிய சாந்தோக்கிய உபநிஷத்தின் மேற் கோளிலிருந்தும், பாலி இலக்கியத்தில் ஸுத்தநிபாதத்தில் காணும் 'பிராஹ்மண தாம்மிக' ஸுத்தத்திலிருந்தும் தெரியவருகிறது.[2] சப்த சிந்துவில் இருந்த சதுர்வர்ண முறை மத்திய இந்தியாவிலும் நிலைத்திருந்தது. இரண்டுக்கும் வேற்றுமை இதுதான்- சப்தசிந்துவில் வாழ்ந்த அந்தணர்கள், ஆரிய

1. "எல்லோரிலும் உயர்ந்த மன்னர் பெருமானான பரீட்சித்தின் நற்புகழை உற்றுக்கேள். அவனுடைய நாட்டில், 'இந்தக் கௌரவ அரசன் அரியணையில் அமர்ந்ததிலிருந்து இருள் நீங்கிவிட்டது; மக்களின் வீடுகள் பாதுகாப்புடன் இருக்கின்றன' என்று கணவன் மனைவியிடம் கூறுகிறான். 'உங்களுக்குத் தயிர் வேண்டுமா, அல்லது வெண்ணெய் கொண்டு வரட்டுமா?' என்று மனைவி கணவனைக் கேட்கிறாள். அவனுடைய ராஜ்யத்தில் ஏராளமான தானியம் வீதியோரங்களில் கொட்டிக் கிடக்கிறது. இப்படி அவனது நாட்டில் மக்களின் இன்பம் வளர்கிறது" என்று அதர்வ வேதம் பரீட்சித்தைப் புகழ்கிறது.- இந்தியப் பண்பாடும் அஹிம்சையும், 37-38.

2. பிராஹ்மணதாம்மிக ஸுத்தித்தில் வரும் செய்தி இது - புத்த பகவான் ஒரு தடவை சிராவஸ்தியில் தங்கியபொழுது, கோசல நாட்டு முதிய அந்தணர்கள் சிலர் அவரிடம் சென்று, "இக்காலத்து அந்தணர்கள் பழங் காலத்துப் பிராம்மண தர்மங்களை பின்பற்றுகிறார்களா" என்று கேட்டார்கள். பின்பற்றுவதில்லை என்றார் பகவான். எனவே அவர்கள் "அந்த பழைய பிராம்மன தர்மங்களை எங்களுக்குக் கூற வேண்டும்" என்று அவரை வேண்டினர்.

அப்பொழுது பகவான் அருளியதாவது: "பழங்காலத்து ரிஷிகள் புலனடக்கம் வாய்ந்தவர்கள்; தவசிகள். கேளிக்கைப் பொருள்களை விடுத்து, அவர்கள் ஆன்ம சிந்தனை செய்துவந்தார்கள். அந்த அந்தணர்களிடம் பசுமாடுகளோ தன தானியங்களோ இருந்ததில்லை. வேதப் பயிற்சியே அவர்களுடைய தனமும் தானியமுமாக இருந்தது. பிரம்மம் என்னும் பெரும்பொருளை அவர்கள் காத்தார்கள். அவர்கள் ஒருத்தியையே மனைவியாகக் கொள்ளும் விரதம் பூண்டவர்கள். எந்தப் பெண்ணையும் அவர்கள் விலைக்கு வாங்குவதில்லை. மணந்தவளிடம் உண்மையன்பு கொண்டிருப்பார்கள்; குறித்த காலத்தில் மட்டுமே கூடுவார்கள்.

"ஆனால் அவர்களுடைய இயல்பு மாறியது. ராஜபோகத்திலும் சிங்காரப் பெண்களிடத்தும், உயர்ந்த குதிரைகள் பூட்டிய தேரிலும் மாடமாளிகைகளிலும், வேறு போகப் பொருள்களிலும் அந்தணர்களுக்கு ஆசை உண்டாயிற்று. அவர்கள் மந்திரங்களைப் பாடி வைத்துக் கொண்டு, ஒக்காக ராஜனை யாகம் செய்யச் சொன்னார்கள். அப்பொழுது அரசன் அசுவமேதம், நரமேதம்,

வெற்றியினால் உண்டான யாகயக்ஞ முறையை முற்றும் ஒப்புக் கொண்டார்கள்; மத்திய இந்தியாவிலோ அந்தணர்கள் அக்கினிபூஜை செய்து வந்த போதிலும் அந்தப் பூசையில் உயிர்களைப் பலியிடுவ தில்லை. அரிசி, வாற்கோதுமை முதலிய பண்டங்களைக் கொண்டே அவர்கள் அக்கினியை வழிபட்டு வந்தார்கள். ஆனால் பரீட்சித்தும் ஜனமேஜயனும் யாகயக்ஞங்களைத் தொடங்கிய பிறகு, இந்தப் பழமையான அஹிம்சை வடிவான அந்தணர் பண்பாடு பெரும்பாலும் ஒழிந்துவிட்டது; அதற்குப் பதிலாக ஹிம்சை வடிவான யாகயக்ஞங்களின் பழக்கம் விரைவாகப் பரவியது. சப்தசிந்துவுக்கு மாறாக, கங்கைக்கும் யமுனைக்கும் இடையிலுள்ள வட்டாரமே ஆரியாவர்த்தம் ஆகிவிட்டது!

## அஹிம்சை நிலைத்து நின்றது

அஹிம்சை வடிவான பழைய அக்கினிஹோத்திர முறை அதாவது தீ வழிபாடு பெரும்பாலும் மறைந்துவிட்டது என்றாலும், அது அறவே அழியவில்லை. அரசர்களின் பேரவையிலும் மேல் வகுப்பாரிடமும் தனக்கு இருந்த வல்லமையைத் துறந்து, அது அடவியிற் புகுந்து எஞ்சியிருந்தது. அதாவது அஹிம்சைப் பண்பாட்டில் ஒட்டிக்கொண்டு இருந்தவர்கள் காட்டிலுள்ள கிழங்கு வேர் பழங்களைப் புசித்துத் தங்கள் தவத்தை நிலைநிறுத்தி வந்தார்கள். ஜாதக அட்டகதையில் இத்தகையவர் களுடைய கதைகள் பல வந்திருக்கின்றன. புதிதாக நிறுவிய ஹிம்சை வடிவான வேள்வி முறையில் வெறுப்புக் கொண்ட அந்தணர்கள் பலரும், வேறு வர்ணத்தவர்களுங்கூடக் காட்டுக்குப் போய் ஆசிர்மம் கட்டிக்கொண்டு தவம் புரிந்துவந்தார்கள். ஆண்டிற்குச் சில நாள் இவர்கள் புளிப்பும் கரிப்புமான பண்டங்களை உண்பதற்காக மக்கள் வாழும் இடத்துக்கு வந்து தங்கி, பிறகு மீண்டும் தங்கள் ஆசிரமத்துக்குத் திரும்புவார்கள். சப்தசிந்துவில் இருந்த துறவிகளைப் போல அழியாமல், இந்த மத்திய பாரதவாசிகளான முனிவர்கள் காட்டைப் புகலிடமாகக்

---

வாஜபேயம் முதலிய யாகங்களைச் செய்தான்.

"பிறகு அந்தணர்கள் பேராசைக்கு வசமாகி ஒக்காக ராஜனைக் கோமேத யாகம் செய்யச் சொன்னார்கள். அந்த யாகத்தில் அரசன் எளிய பசுக்களின் கொம்புகளைப் பிடித்து அவற்றைக் கொன்றான். பசுக்களின்மேல் கத்தி வீழ்ந்ததுமே, தேவர் பிதிரர் இந்திரன் அசுரர் அரக்கர் முதலிய யாவரும், 'என்ன அதர்மம் இது!' என்று கூவினார்கள். ஆசை, பசி, மூப்பு என்ற மூன்று நோய்களே முன்பு இருந்தன. ஆனால் பசு வேள்வி தொடங்கியதிலிருந்து நோய்களின் எண்ணிக்கை தொண்ணூற்றெட்டு ஆகிவிட்டது.

"இம் மாதிரியான நிகழ்ச்சி நடக்கும் இடத்தில் மக்கள் வேள்வி செய்வோனைப் பழிப்பார்கள். இவ்வாறு தர்மம் மாறியதனால் வேளாளரும் வைசியரும் தனித்தனியே விலகினார்கள். க்ஷத்திரியரும் விலகினார்கள். மனைவி கணவனை அவமதிக்கலானாள். க்ஷத்திரியரும் அந்தணரும் முன்பு கோத்திரத்தைக் காத்துக் குலதர்மத்தின்படி ஒழுகிவந்தார்கள். ஆனால் பசு வதத்துக்குப் பிறகு, சமூகப் பழிக்குச் சிறிதும் அஞ்சாமல் அவர்கள் ஆசைக்கு வசமானார்கள்." -இந்தியப் பண்பாடும் அஹிம்சையும், பக். 39-40.

கொண்டு தவம் புரிந்து எப்படியோ பிழைத்து வந்தார்கள் என்பதுதான் நாம் அறிய வேண்டிய சாரம்.

## புதிய உதாரணம்

இதற்கு நவீன காலத்துச்சரித்திரத்திலிருந்து ஓர் உதாரணம் காட்டலாம். மேற்குச் சிங்களத் தீவைப்போர்த்துகீசியர் வசப்படுத்திக் கொண்டு, அங்கே இருந்த புத்தர் கோயில்களையும் பிட்சு விஹாரங்களையும் தரைமட்டமாக்கினார்கள்; எல்லாரையும் வலுக்கட்டாயமாக ரோமன் கத்தோலிக்க மதத்தில் தீட்சை பெறச் செய்தார்கள். அந்தச் சமயத்தில் சிங்கள அரசன் புத்தருடைய தந்ததாதுவை எடுத்துக்கொண்டு கண்டிக் காட்டுக்குள் ஓடினான். அங்கே மலையின் பாதுகாப்பில் தன் புதிய இராசதானியை அவன் நிறுவினான். மேற்குச் சிங்களத் தீவிலிருந்து போர்த்துகீசியருக்குத் தப்பிய பிட்சுக்கள் தம்மால் இயன்ற அளவு பௌத்த சமய நூல்களை எடுத்துக் கொண்டு போய் மலைப்பிரதேசத்தில் கண்டியரசனிடம் புகல் அடைந்து வாழ்ந்தார்கள். கோவாவிலும் ஓரளவு இதே நிகழ்ச்சிதான் நடந்தது. போர்த்துகீசியர் முதல் முதலில் ஸாஷ்டி, பார்தேச், திஸவாடா என்ற மூன்று பகுதிகளை வென்றார்கள்; சில ஆண்டுகளுக்குப் பின் அந்தப் பகுதிகளில் இருந்த கோயில்களைத் தரைமட்டமாக்கி, மக்களை வற்புறுத்தி ரோமன் கத்தோலிகராக மாற்றத் தங்கள் ஆதிக்கமனைத்தையும் பயன்படுத்தினார்கள். இந்தச் சமயத்தில் சில ஹிந்துக்கள் தங்கள் பெருஞ் செல்வமான நிலபுலங்களைத் துறந்து, தெய்வத்திருவுருவங்களைக் காத்து எடுத்து வந்து, அருகில் இருந்த ஸம்வதேகர் என்ற சம்ஸ்தான அதிபதியின் நாட்டில் புகலடைந்தார்கள். பழமையான ஸாஷ்டி வட்டாரத்தில் இருந்த ஹிந்து தெய்வங்கள் யாவும் இன்றும் இந்த ஸம்வதேகர் சம்ஸ்தானத்தில் இருக்கின்றன. பிற்காலத்தில் இந்தப் பிரதேசத்தையும் போர்த்துகீசியர் வென்று கைப்பற்றினார்கள். ஆனால் ஹிந்துக்களின் மத விஷயத்தில் அவர்கள் மீண்டும் தலையிடவில்லை. இதே நிலைமைதான் ஓரளவுக்கு, மத்திய இந்தியாவில் அஹிம்சைப் பண்பாட்டுக்கும் ஏற்பட்டது என்று சொல்லத் தடையில்லை.

## அஹிம்சையின் வல்லமை

உயிர்க் கொலை செய்து யாகயக்ஞங்கள் செய்யும் பழக்கத்தைப் பரீட்சித்தோ ஜனமேஜயனோ வற்புறுத்தி மக்களின்மீது சுமத்தவில்லை. ஆனால் அந்தப் பழக்கத்துக்கு அரசர்களின் ஆதரவு கிடைத்ததும் அந்தணர்கள் தாங்களாகவே முன்வந்து அதை ஏற்றுக் கொண்டார்கள்; அந்த முறையை விரும்பாதவர்கள் காட்டில் புகுந்து தவவொழுக்கத்தை மேற்கொண்டு தங்கள் பழைய பரம்பரையைக் காத்து வந்தார்கள்.

போர்த்துகீசியர்களினால் கிறிஸ்தவர்களாக மாறின பௌத்தர்களிடத்திலும் ஹிந்துக்களிடத்திலும் இன்றும் பௌத்தப் பண்பாடும் ஹிந்துப் பண்பாடும் தங்கள் திறமையைச் செலுத்தியுள்ளன. அதுபோலவே மத்திய இந்தியாவிலுள்ள பொது மக்களிடத்தில் பழமையான அஹிம்சைப் பண்பாட்டின் ஆதிக்கம் ஓரளவுக்கு நிலைத்திருக்கிறது. காட்டில் வாழும் முனிவர்கள் கிராமத்திற்கோ நகரத்திற்கோ வரும்பொழுது, மக்கள் மிக்க ஆர்வத்தோடு அவர்களை வழிபடுவார்கள். ஆனால் மிஞ்சிய நேரத்தில் யாகயக்ஞங்களும் பலி கொடுக்கும் பழக்கமும் நகரங்களில் நடைமுறையில் இருந்தன.

## வேள்விப் பண்பாட்டின் வளர்ச்சி

ரிஷிகளுக்கும் முனிவர்களுக்கும் நல்ல மதிப்பு இருந்தது என்பது உண்மை; ஆனால் அந்தப் பண்பாடு சிறிதும் வளரவில்லை. சப்தசிந்துப் பிரதேசத்தில் ஏற்பட்ட தட்சசிலை போன்ற பல்கலைக் கழகங்களே கல்வி நிலையங்களாக நிலைபெற்றன. பார்ப்பனப் பிள்ளைகள் வேதம் பயிலவும், அரசகுமாரர்கள் வில்வித்தையில் தேர்ச்சி பெறவும் தொலைவிலுள்ள சப்தசிந்துப் பிரதேசத்தைச் சார்ந்த தட்சசிலைக்குப் போவது வழக்கம் என்பது, ஜாதக அட்டகதையில் வரும் பல கதைகளிலிருந்து தெரிகின்றது.

சப்தசிந்துப் பிரதேசத்திலாவது மத்திய இந்தியாவிலாவது இந்திரனுடைய சாம்ராஜ்யத்தைப் போல ஒரு வலிய பேரரசு நிலவவில்லை. பரீட்சித்தின் அரசையோ, ஜனமேஜயனுடைய அரசையோ இந்திரனுடைய அரசோடு ஒப்பிட முடியாது. அவர்கள், பலி கொடுத்து யாகயக்ஞங்கள் செய்வதற்கு ஊக்கமூட்டினார்கள். அவர்களின் முயற்சியினால் கங்கைக்கும் யமுனைக்கும் இடைப்பட்ட பகுதி ஆரியாவர்த்தம் ஆயிற்று என்பதனோடு அவர்கள் பெருமை தீர்ந்துவிடுகிறது. அவர்களுடைய ஆட்சிக்குப் பிறகு சப்தசிந்துவும் மத்திய இந்தியாவும் பல சின்னஞ்சிறு துணுக்குகளாகியிருக்கும் என்று தோன்றுகிறது. ஆயினும் ஆரியர்களுக்கும் தாசர்களுக்கும் நிகழ்ந்த போராட்டத்திலிருந்து பிறந்ததாகிய பலி கொடுக்கும் வேள்விப் பண்பாடு மட்டும் உறுதி பெற்று ஓங்கிவந்தது. புத்தருடைய காலத்துக்கு முன்பு, இந்த ஹிம்சைமயமான வேள்விக் பண்பாடே பாரத நாட்டில் நிலவியிருந்தது.

# 2. அந்தக் காலத்து அரசியல் நிலை

## பதினாறு நாடுகள்

"(1)அங்கர், (2) மகதர், (3) காசியர், (4) கோசலர், (5) வஜ்ஜியர், (6)மல்லர், (7) சேதியர், (8) வம்ஸர், (9) குரு நாட்டினர், (10)பாஞ்சாலர், (11) மச்சர், (12) சூரசேனர், (13) அஸ்ஸகர், (14)அவந்தியர், (15) கந்தாரர், (16) கம்போஜர் என்னும் இந்தப் பதினாறு பெருநாட்டு அரசர்கள் முழு உரிமையோடு ஆட்சி செய்து வந்தனர்."

இந்த மேற்கோள் அங்குத்தரநிகாயத்தில் நான்கு இடங்களில் வருகின்றது. புத்தர் பிறப்பதற்கு முன்பு நாவலந்தீவில் (இந்தியாவில்) வேறு வேறான பதினாறு அரசுகள் இருந்தன என்று லலிதவிஸ்தரத்தின் மூன்றாவது அத்தியாயமும் குறிப்பிடுகின்றது. ஆனால் அவற்றுள் எட்டு ராஜ்யங்களைச் சேர்ந்த அரசகுலங்களைப் பற்றிய வருணனைகள் மட்டுமே கிடைக்கின்றன. இந்த நாடுகள்யாவுமே பன்மையில் குறிக்கப்பெறுகின்றன. எனவே, ஒரு காலத்தில் இந்த நாடுகள் மகாஜனங்களின் ஆட்சியில் இருந்தன என்று தெரிகிறது. இந்த நாட்டினர், மகாஜனங்களை ராஜாக்கள் என்றும், அவர்களின் தலைவனை மகாராஜா என்றும் சொல்வது வழக்கம். புத்தருடைய காலத்தில் இந்த மகாஜன ஆட்சிமுறை வலிமையிழந்து அழியும் நிலையில் இருந்தது; அதற்குப் பதிலாக ஏகாதிபத்திய அரசியல்முறை விரைவாக நடைமுறைக்கு வந்துகொண்டிருந்தது. இந்த அரசியல் மாறுதலுக்குக் காரணங்கள் யாவை என்பதை ஆராய்வதற்கு முன்பு, மேற்கூறிய பதினாறு நாடுகளைப்பற்றிக் கிடைக்கும் செய்திகளை இங்கே சுருக்கமாகத் தருகின்றேன்.

### 1.அங்கம்

அங்கர்களின் நாடு மகதத்துக்குக் கிழக்கே இருந்தது. இதன் வடக்குப் பகுதியை அங்குத்தராபம் என்பர். மகதநாட்டு அரசன் அங்க நாட்டை வென்றதனால், இங்கே இருந்த மக்கள் ஆட்சிமுறை அழிந்தது. பழைய மகாஜனங்களின் குலத்தவரோ, அரசர்களின் குலத்தவரோ இருந்தார்கள்; என்றாலும் அவர்களுக்குத் தனிமையான ஆதிக்கம் ஏதும் இல்லாமற் போயிற்று. நாளடைவில் இந்த நாடு மகதத்தோடு இணைந்து (உம்மைத் தொகையாக) 'அங்கமகதம்' என்றே வழங்கி வரலாயிற்று.

புத்த பகவான் இந்த நாட்டில் தருமோபதேசம் செய்ததாகவும், இந்த நாட்டின் முக்கிய நகரமாகிய சம்பா நகரத்தில் கக்கரா ராணி கட்டிய

குளத்தின் கரையில் அவர் தங்கியிருந்ததாகவும் திரிபிடகம் பல இடங்களில் கூறுகிறது. ஆனால் இந்தச் சம்பா நகரமும் பழமையான அரசன் எவனிடமும் இருக்கவில்லை. பிம்பிசார மன்னன் இதை ஸோணதண்டன் என்ற அந்தணனுக்கு நன்கொடையாக அளித்தான். இதன் வருமானத்தைக் கொண்டு ஸோணதண்ட அந்தணன் அவ்வப்போது பெருவேள்விகளைச் செய்து வந்தான்.[1]

## 2. மகதம்

புத்தர் காலத்து அரசுகளில் மகதமும் கோசலமும் மேன்மேலும் முன்னேற்றம் அடைந்தன. அவை ஏகாதிபத்திய ஆட்சி முறைக்கு முற்றும் உட்பட்டிருந்தன. மகத மன்னன் பிம்பிசாரனும், கோசல மன்னன் பஸேனதியும் (பிரசேனஜித்) தாராள மனப்பான்மை உடையவர்களாக இருந்ததனால் அவர்களின் ஏகாதிபத்திய ஆட்சி முறை மக்களுக்கு நன்மையாகவே இருந்தது. இவ்விரண்டு அரசர்களும் வேள்விக்கு ஆதரவு தந்தார்கள் என்பது உண்மை; ஆயினும் இவர்களின் ராஜ்யத்தில் தமது சமயத்தைப் பரப்பச் சிரமணர்களுக்கு (துறவிகளுக்கு) முழு உரிமை இருந்தது. இது மட்டுமன்றி, அவர்கள் தங்குவதற்கு ஏற்பாடு முதலிய வசதிகளும் செய்துகொடுத்து, பிம்பிசாரன் அவர்களை ஆதரித்தான். கோதமர் துறவறமேற்று ராஜகிருகத்துக்கு வந்தபோது பிம்பிசார மன்னன் பாண்டவ மலையின் அடிவாரத்தில் அவரைச் சந்தித்து, தன் சைனியத்தில் பெரிய பதவியை ஏற்றுக்கொள்ளும்படி அவரை வேண்டினான். ஆனால் அவர், தவம் செய்யப்போகும் தமது முடிவைத் தளர்த்தவில்லை. கயையருகில் உருவேலா என்ற இடத்துக்குச் சென்று அவர் தவம் இயற்றத் தொடங்கினார்; கடைசியில் தத்துவ ஞானத்தில் நடு வழியை (மத்தியம மார்க்கத்தை)க் கண்டுபிடித்தார். வாராணசியில் முதல் உபதேசம் செய்து, தம்முடைய ஐந்து சீடர்களுடன் புத்தர்பிரான் ராஜகிருகத்துக்கு எழுந்தருளியபோது, பிம்பிசார மன்னன் அவரும் அவருடைய பிட்சு சங்கமும் தங்குவதற்கு வேணுவனம் என்ற பூங்காவைக் கொடுத்தான். இந்தப் பூங்காவில் விஹாரம் ஏதும் இருந்ததாக எங்கும் சான்று கிடைக்கவில்லை. பிம்பிசாரன், புத்தரும் பிட்சு சங்கமும் இங்கே தடையின்றித் தங்க அநுமதி கொடுத்தான் என்று மட்டுமே இந்த வேணுவன தானத்துக்குப் பொருள் கொள்ள வேண்டும். ஆனால் இதிலிருந்து, பிட்சு சங்கத்தினிடம் அவனுக்கு இருந்த மதிப்புத் தெளிவாகப் புலப்படுகிறது.

புத்தருடைய பிட்சு சங்கத்துக்கு மட்டுமன்றி அந்தக் காலத்தில் நிலவிய சிரமணர்களின் பெரிய பெரிய சங்கங்களுக்கும் பிம்பிசாரன்

1. தீகநிகாயம், ஸோதணதண்டஸுத்தம் காண்க.

புகலளித்தான். ஒரே சமயத்தில் இந்தச் சிரமண சங்கங்கள் பலவும் ராஜகிருகத்துக்கு அக்கம் பக்கத்தில் தங்கி வாழ்ந்த செய்தி, தீகநிகாயத்தில் ஸாமஞ்ஞபல ஸுத்தத்திலும், மஜ்ஜிமநிகாயத்தில் (77-ஆவது) மகாஸகுலுதாயி ஸுத்தத்திலும் வருகிறது.

பிம்பிசாரனுடைய மகன் அஜாதசத்துரு ஒருநாள் தன் அமைச்சர்களோடு பூர்ணிமை இரவில் அரண்மனை மாடத்தில் அமர்ந்திருந்தான். எவராவது பெரிய சிரமணத் தலைவர் ஒருவரைச் சந்திக்க வேண்டும் என்ற விருப்பம் அப்போது அவனுக்கு எழுந்தது. அவனுடைய அமைச்சர்களில் ஒவ்வொருவனும் ஒவ்வொரு சிரமண சங்கத்தின் தலைவரைப் போற்றி, அவரிடத்திலே அரசனைச் செல்ல வேண்டினான். அரண்மனை வைத்தியனான ஜீவகன் மட்டும் பேசாமல் இருந்தான். அஜாதசத்துரு அவனை வினாவியபொழுது, அவன் புத்த பகவானைப் பாராட்டி அவரைக் காணும்படி அரசனுடைய மனத்தைத் திருப்பினான். இந்தச் சிரமண சங்கத் தலைவர்களுக்குள்ளே புத்தர் வயசில் சிறியவர்; அவருடைய சங்கம் அண்மையில்தான் நிலைபெற்றது; ஆயினும் அவரையே காண வேண்டுமென்று தீர்மானித்து, அஜாதசத்துரு தன் பரிவாரங்களோடு புத்தரைத் தரிசிக்க, ஜீவகனுடைய ஆம்ரவனத்துக்குப் போனான்.

அஜாதசத்துரு தன் தந்தையைச் சிறைப்படுத்திக் கொன்று அரியணையைக் கைப்பற்றியவன். ஆயினும் சிரமணர்களிடம் தந்தை வைத்திருந்த மதிப்பை அவன் குறைக்கவில்லை. பிம்பிசார மன்னன் இறந்த பிறகு புத்த பகவான் எப்பொழுதாவதுதான் ராஜகிருகத்துக்கு வருவார். அம்மாதிரி அவர் வந்தபொழுதே மேற்சொன்ன சம்பவம் நிகழ்ந்தது. அரியணையில் அமர்வதற்கு முன்பு அஜாதசத்துருவைத் தன் பக்கம் திருப்பிய தேவதத்தன், புத்தர்மீது நாலகிரி என்ற பைத்தியம் பிடித்த யானையை ஏவிவிடச் சதி செய்தான் என்பது போன்ற பல செய்திகள் வினயபிடகத்தில் விரிவாக வந்துள்ளன. அவற்றில் உண்மை எவ்வளவு என்று சொல்ல முடியாது. ஆனால், தேவதத்தனுக்கு அஜாதசத்துருவின் வலிய துணை இருந்தது என்பது மட்டும் நிச்சயம். அதனால்தான் புத்தர் ராஜகிருகத்திலிருந்து தொலைவில் இருந்திருக்க வேண்டும். ஆனால் அவர் ராஜகிருகத்துக்கு வந்தபோது அவரைக் கண்டு செல்ல அஜாதசத்துரு தயங்கவில்லை. அதே சமயத்தில் ராஜ கிருகத்துக்கு அக்கம்பக்கத்தில் பெரிய பெரிய சிரமன சங்கத் தலைவர்கள் அறுவர் வாழ்ந்து வந்தார்கள் என்னும் செய்தியைக் கவனிக்கும்போது, அஜாதசத்துரு தன் தந்தையினும் மிகுதியாகச் சிரமணர்களை மதித்துப் பாராட்டி வந்தான் என்பது தெளிவாகிறது. மேலும், அவனுடைய ஆட்சியில் மகத நாட்டில் வேள்விகள் அழிவுற்று, சிரமண சங்கங்கள் ஓங்கி வளர்ந்தன.

மகதர்களின் ராஜதானி ராஜகிருகம் என்பது. இந்த இடம் பிஹார் மாகாணத்தில் திலய்யா என்னும் ஸ்டேஷனிலிருந்து பதினாறு கல்தொலைவில் இருக்கிறது. நான்கு புறமும் மலைகள்; நடுவே இந்த நகரம் அமைந்திருக்கிறது. நகரத்துக்குள் செல்ல மலைக் கணவாய் வாயிலாக இரண்டே வழிகள் இருப்பதனால், எதிரிகளிடமிருந்து நகரைக் காப்பது எளிது என்ற நோக்கத்தோடு அமைத்திருப்பார்கள் என்று நோக்கத்தோடு அமைத்திருப்பார்கள் என்று தோன்றுகிறது. ஆனால், அஜாதசத்துருவின் வல்லமை மிகவும் வளர்ந்துவிட்டது. தன்னைக் காத்துக்கொள்ள அவன் இந்த மலைக் கொட்டிலில் வாழ வேண்டிய தேவை இல்லை. புத்தருடைய பரிநிர்வாணத்துக்கு முன்பு அவன் பாடலிபுத்திரத்தில் ஒரு புதிய நகரத்தை நிறுவினான். பிறகு அவன் அதையே தன் தலைநகராக மாற்றியிருந்திருக்க வேண்டும்.

அஜாதசத்துருவை வைதேகிபுத்திரன் என்றும் கூறுவர். இதிலிருந்து, அவனுடைய தாய் விதேக நாட்டினளாக இருந்திருப்பாள் என்று முதலில் தோன்றும். 'ஆசாராங்க சூத்திரம்' முதலிய சமண நூல்களிலும், அவன் தாய் வஜ்ஜியரசர்களில் ஒருவனுடைய மகள் என்ற செய்தி கிடைக்கிறது. ஆனால், கோசல சம்யுத்தத்தில் இரண்டாவது வர்க்கத்தில் நான்காவது சூத்தத்து அட்டகதையில் அவனைப் பஸேனதியின் மருமகன் என்று மொழிந்திருக்கிறார்கள். மேலும், "வைதேகி என்ற சொல், புலமை வாய்ந்த பெண் (பண்டிதை) என்ற பொருளைக் குறிக்கிறது; வைதேகி புத்திரன் என்றால் பண்டிதையின் மகன்" என்று உரை கண்டிருக்கிறார்கள். மகத நாட்டு அரச குலத்தை வைதேகி குலம் என்றே லலிதாவிஸ்தரம் கூறுகிறது. எனவே, இந்தக் குலம் தந்தை வழியாகப் புகழ் பெற்றதன்று என்று தெரிகிறது. பிறகு இவர்களில் எவனோ ஓர் அரசன் விதேக நாட்டு ராஜகன்னிகையை மணந்ததனால் இந்தப் பெயர் நடைமுறைக்கு வந்துவிட்டது; சில அரசகுமாரர்கள் தம்மை வைதேகி புத்திரர்கள் என்று கூறிக்கொள்ளலாயினர்.

அஜாதசத்துரு பிம்பிசாரனைக் கொன்ற செய்தியைக் கேட்டதும் அவந்தியரசன் சண்டப்பிரத்தியோதன் பெருஞ்சினம் கொண்டு அவன்மீது படையெடுக்க முயன்றான். அஜாதசத்துரு அவனுக்கு அஞ்சி, ராஜகிருகத்துக் கோட்டை மதிளைச் செப்பனிட்டான்.[1] பிறகு சண்டப் பிரத்தியோதன் படையெடுக்கும் எண்ணத்தை கைவிட்டு இருப்பான் என்று தோன்றுகிறது அயல் அரசனான சண்டபிரத்தியோதன் அஜாதசத்துருவின்மீது வெஞ்சினம் கொண்டபோதிலும், மகத நாட்டு மக்கள் தம் அரசன் கொலையுண்டதற்காகத் துளியும் கொதித்தெழ வில்லை. இதிலிருந்து, இந்த நாட்டில் ஏகாதிபத்திய ஆட்சி முறை எப்படி

1. மஜ்ஜிமநிகாயத்தில் கோபகமோக்கல்லான ஸுத்தத்து அட்ட கதை காண்க.

வேரூன்றிவிட்டது என்பது நன்றாகத் தெரிகிறது.

## 3.காசி

காஸி அல்லது காசி நாட்டின் தலைநகரம் வாராணசி. இந்த நாட்டு அரசர்களில் பெரும்பாலோரைப் பிரம்மதத்தன் என்ற பெயரால் அழைத்தார்கள் என்பது ஜாதக அட்டகதையிலிருந்து தெரிகிறது. அவர்களின் அரசியல் முறையைப்பற்றி அதிகமான செய்தி கிடைக்கவில்லை. ஆயினும் காசி அரசர்கள் (மகாஜனங்கள்) தாராள மனப்பான்மையுடையவர்களாக இருந்தார்கள். அவர்களின் நாட்டில் கலையும் கைத்தொழிலும் மேன்மையுற்று வளர்ந்தன. புத்தருடைய காலத்திலும் உயர்ந்த பொருள்களை, 'காஸிகம்' (காசியில் செய்தது) என்று சொல்லும் வழக்கம் இருந்தது. காஸிக வஸ்திரம், காஸிக சந்தனம் முதலிய சொற்கள் திரிபிடக இலக்கியத்தில் பல இடங்களில் பயின்று வருகின்றன. வாராணசி அரசனாகிய அசுவசேனனுடைய வாமா ராணிக்குப் பிறந்தவர், சமணர்களின் இருபத்து மூன்றாவது தீர்த்தங்கரரான பார்சுவநாதர். அவர் புத்தருடைய பிறப்புக்கு ஏறத்தாழ 243 ஆண்டுகளுக்கு முன்பே தமது உபதேசத்தைத் தொடங்கினார். எனவே, காசி மகாஜனங்கள் கலைகளிலும் கைத்தொழில்களிலும் மட்டுமல்லாமல் சமய அறிவிலும் முன்னணியில் நின்றார்கள் எனலாம். ஆனால் புத்தருடைய காலத்தில் இந்த நாட்டின் சுதந்திரம் அறவே அழிந்து, இது கோசல நாட்டுக்கு உட்பட்டது. 'அங்க மகதம்' என்ற தொடரைப் போலவே, 'காசி கோசலம்' என்ற தொடரும் வழக்கில் வந்துவிட்டது.

## 4. கோசலம்

கோசல நாட்டின் தலைநகர் சிராவஸ்தி. இது அசிரவதி (இப்போது ராப்தி) நதிக்கரையில் இருந்தது. பிரசேனஜித் (பஸேனதி) என்ற அரசன் இந்நாட்டை ஆண்டு வந்தான். அவன் வைதிக தருமத்தைப் பின் பற்றினான் என்றும், பெருவேள்விகள் பலவற்றைச் செய்தான் என்றும் கோசல ஸுத்தத்தில் ஒரு பகுதி கூறுகிறது. ஆயினும் அவனுடைய ராஜ்யத்தில் சிரமணர்களுக்கு மதிப்பு இருந்தது. அநாதபிண்டிகன்[1] என்ற புகழ்பெற்ற பெரு வணிகன் ஒருவன் புத்தருடைய பிட்சு சங்கத்துக்காகச் சிராவஸ்தியில் ஜேதவனம் என்ற விஹாரத்தைக் கட்டினான். விசாகை என்ற பிரசித்த உபாசகையும் பூர்வாராமம் என்ற பெரிய மாளிகையைப் பிட்சுக்களுக்குக் கட்டிக் கொடுத்தாள். இந்த இரண்டு இடங்களிலும்

1. இவனுடைய இயற்பெயர் சுதத்தன் என்பது, அநாதைகளுக்கு இவன் உணவு (பிண்டம்) அளித்து வந்தமையால் இவனை அநாதபிண்டிகன் என்பர்.

புத்தர்பெருமான் பிட்சு சங்கத்தோடு இடையிடையே இருந்துவந்தார். அவருடைய சாதுர்மாசங்கள்[1] பலவும் இங்கேயே நிகழ்ந்திருக்க வேண்டும். ஏனென்றால், புத்தர் மற்ற எல்லா இடங்களையும் விட மிகுதியாக உபதேசங்கள் செய்தது அநாதபிண்டிகனுடைய ஆராமத்தில் தான் என்று திரிபிடக இலக்கியம் குறிப்பிடுகிறது. பிரசேனஜித் வேள்விகளை ஆதரிப்பவனாயினும், நடுநடுவே அவன் புத்தரைத் தரிசிக்க அநாதபிண்டிகனுடைய ஆராமத்துக்குப் போவதுண்டு. அவனுக்குப் பல தடவை புத்தர் செய்த உபதேசங்களின் தொகுதி கோஸல ஸுத்தத்தில் காண்கிறது.[2]

லலிதவிஸ்தரத்தில் இந்த அரசகுலத்தின் வருணனையைக் காணலாம். அதிலிருந்து, இந்த அரசர்கள் மாதங்கள் என்னும் இழிகுலத்திலிருந்து பிறந்ததாகத் தெரிகிறது. தம்மபத அட்டகதையில் காணும் விடூடபன் (விதுர்த்தபன்) கதையிலிருந்தும் இந்தக் கொள்கை வலியுறுகிறது.

பிரசேனஜித் என்னும் அரசன் புத்தரிடம் மிகுந்த மதிப்பு வைத்திருந்தான். அவரது சாக்கிய குலத்திலிருந்து அரசகுமாரி எவளையாவது மணந்துகொள்ள அவன் விரும்பினான். ஆனால், சாக்கிய அரசர்கள் கோசல அரச குலத்தை இழிவாக எண்ணியமையால், தங்கள் பெண்ணைக் கோசல அரசனுக்குக் கொடுப்பது அவர்களுக்குப் பொருத்தமாகத் தோன்றவில்லை. ஆயினும் கோசல ராஜனுடைய ஆதிக்கத்துக்கு அவர்கள் கட்டுப்பட்டிருந்ததால், அவனுடைய கோரிக்கையை மறுக்கவும் முடியவில்லை. இறுதியில் இதற்கு அவர்கள் ஒரு வழி செய்தார்கள். மகாநாம சாக்கியன் தன் தாசி மகளான வாசபகத்தியா என்பவளைத் தன் சொந்த மகள் என்று சொல்லிக் கோசல அரசனுக்குக் கொடுத்துவிட வேண்டும் என்று தீர்மானித்தார்கள். கோசல அரசனுடைய அமைச்சர்களும் இந்தப் பெண்ணையே தேர்ந்தெடுத்தார் கள். மகாநாமன் அவளோடு உட்கார்ந்து உண்டதை அவர்கள் கண்டார்கள்; எனவே அவள் அவனுடைய மகள் தான் என்று அவர்கள் நம்பினார்கள். நிச்சியிட்டபடி நல்ல வேளையில் வாசபகத்தியாவுக்கும் கோசல ராஜனுக்கும் திருமணம் நிகழ்ந்தது. அரசன் அவளைப் பட்டமகிஷியாக்கினான். அவளுடைய மகன் விடூடபனுக்குப் பதினாறு வயசாயிற்று. அப்பொழுது அவன் தன் பாட்டனார் வீட்டுக்குச்

1. சாதுர்மாசம் என்பது, துறவிகள் மாரிக்காலத்தில் ஒரே இடத்தில் தங்கி அடக்கத்துடன் நோன்பு இருந்து, மக்களுக்கு நல்லுபதேசம் செய்து நிகழ்த்தும் அறிவு வேள்வியாம். (மெ-ர்.)

2. இந்த ஸம்யுத்தத்தின் முதல் ஸுத்திலேயே பஸேனதி (பிரசேனஜித்) புத்தரின் உபாசகனான கதை இருக்கிறது; ஆனால் ஒன்பதாவது ஸுத்தத்தில், அவனுடைய பெருவேள்விகளைப் பற்றிய வருணனை வருகிறது. எனவே இந்த அரசன் உண்மையான புத்தோபாசகன் ஆனான் என்று சொல்ல முடியாது.

(சாக்கியர்களிடம்) சென்றான். சாக்கியர்கள் தமது நகர இல்லத்தில் அவனை மிக்க மரியாதையோடு வரவேற்றார்கள். ஆனால் அவன் அங்கிருந்து சென்றதும், அவன் அமர்ந்த ஆசனத்தை அவரகள் தண்ணீரால் கழுவினார்கள். தான் தாசிமகன் என்ற செய்தி விடூடபன் காதில் விழுந்தது. தக்க பருவம் எய்தியதும் அவன் வலுக்கட்டாயமாகக் கோசல நாட்டைக் கைப்பற்றினான்; தன் கிழத் தந்தையான பிரசேனஜித்தைச் சிராவஸ்தியிலிருந்து விரட்டியடித்தான். பிரசேனஜித், தன் மருமகனான அஜாத சத்துருவைப் புகலடையும் எண்ணத்தோடு மாறு வேடத்தில் ராஜகிருகத்துக்குப் புறப்பட்டான். ஆனால் வழியில் அவன் மிகவும் தொல்லைப்பட்டு, ராஜகிருகத்துக்கு வெளியே ஒரு தரும சத்திரத்தில் காலமானான்.

தந்தை இறந்ததும் விடூடபன் சாக்கியர்களின்மீது படையெடுக்க எண்ணினான். போதிமாதவர் அவனுக்கு உபதேசம் செய்து இரண்டு தடவை அவனை இந்த எண்ணத்திலிருந்து தடுத்தார். ஆனால் மூன்றாவது தடவை மத்தியஸ்தம் செய்யப் போதிப்பகவருக்கு இடங்கிடைக்காமற் போகவே, விடூடபன் தன் எண்ணத்தை நிறைவேற்றினான். அவன் சாக்கியர்கள் மீது படையெடுத்து அவர்களைப் படாதபாடு படுத்தினான். சரணடைந்தவர்களையும் தப்பி ஓடியவர்களையும் தவிர்த்து மற்றவர்களை மனைவி மக்களோடு கொலை செய்தான்; அவர்களின் ரத்தத்தைக் கொண்டு தன் அரியணையைக் கழுவச் செய்தான்.

சாக்கியர்களை வீழ்த்திய விடூடபன் சிராவஸ்திக்கு வந்து அசிரவதி ஆற்றங்கரையில் தன் படையோடு தங்கினான். அப்பொழுது அக்கம்பக்கத்துப் பிரதேசத்தில் அகாலத்தில் பயங்கரமான மழை பொழிந்திருந்தது. அசிரவதியில் திடீரென்று பெருவெள்ளம் புரண்டது. சேனையில் சிலரோடு விடூடபன் அந்த வெள்ளத்தில் சிக்கிச் சுழலோடு சென்று மாய்ந்தான்.

மகத நாட்டைப் போலவே கோசலத்திலும் ஏகாதிபத்திய ஆட்சி முறை வலிமை பெற்று வந்தது என்பது விடூபடபன் கதையிலிருந்து தெளிவாகிறது. மக்களுக்கு அன்பனான தன் தந்தையின் அரியணையை விடூடபன் வலியக் கைப்பற்றியுங்கூட, கோசல மக்கள் அவனை எதிர்த்து ஒரு சொல் பேசவில்லை.

## 5. வஜ்ஜி

மகாஜன ஆட்சி முறையைக் கொண்ட அரசுகளில் மூன்று ராஜ்யங்களே சுதந்தரமாக இருந்தன. ஒன்று - வஜ்ஜிகளின் அரசு, மற்றவை இரண்டு - பாவா, குசிநாரா என்னும் இடங்களை ஆண்ட மல்லர்களின் அரசு. இம் மூன்றுள் வஜ்ஜியரசு வலியதாகவும் வளமாகவும் இருந்தது. அதன் மறைவும் வெகு தொலைவில் இல்லை. ஆயினும்

விடிவெள்ளியைப் போல அது ஒளி வீசியது. பகவான் புத்தர் இதே மாதிரியான மகாஜன ஆட்சியுள்ள ஒரு நாட்டில் பிறந்தார். ஆனால் சாக்கியர்களின் சுதந்தரம் முன்னமே அழிந்து போயிற்று. வஜ்ஜி மக்கள் தமக்குள்ளே ஒற்றுமையினாலும் வீரத்தினாலும் புத்தரின் வாழ்நாளில் தமது சுதந்திரத்தைக் காத்துவந்தார்கள். ஆதலால் அவருக்கு வஜ்ஜிகளிடம் தனி மதிப்பு இருந்தது இயல்புதான். மகாபரி நிர்வாணசூத்திரத்தில் பகவான், தொலைவிலிருந்து வரும் லிச்சவிகளைப் பார்த்துப் பிட்சுக்களிடம், "பிட்சுக்களே, முப்பத்துமூன்று தேவர்களைக் காணப் பெறாதவர்கள் இந்த லிச்சவிகளின் குழுவைக் காண்பார்களாக!" என்று திருவாய் மலர்ந்தருளுகிறார்.

வஜ்ஜிகளின் தலைநகரம் வைசாலி. இதன் மருங்கில் வாழ்ந்த வஜ்ஜிகளை லிச்சவிகள் என்பர். இதற்குக் கிழக்கே முன்பு விதேகர்களின் நாடு இருந்தது. ஜனகனைப் போன்ற வள்ளல்கள் அங்கே அரசாண்டார்கள். விதேகர்களின் கடைசி அரசனான சுமித்திரன் மிதிலை நகரில் ஆட்சி புரிந்ததாக லலிதவிஸ்தரத்திலிருந்து அறிகிறோம். அவனுக்குப் பிறகு விதேக நாட்டை வஜ்ஜியோடு இணைத்திருப்பார்கள் என்று தோன்றுகிறது.

புத்தர் வஜ்ஜிகளின் வளர்ச்சிக்குரிய ஏழு நியமங்களை உபதேசித்த வரலாற்றை மகாபரிநிர்வாண சூத்திரத்தின் தொடக்கமும் அங்குத்தர நிகாயத்து ஸத்தகநிபாதமும் வருணித்திருக்கின்றன மகாபரிநிர்வாண சூத்திரத்து அட்டகதையில் இந்த நியமங்களுக்கு விரிவான உரை இருக்கிறது. வஜ்ஜிகளின் ராஜ்யத்தில் ஒரு வகையான ஜூரி (பஞ்சாயத்து) முறை அமலில் இருந்ததாகவும், குற்றம்செய்யாத ஒருவனைத் திடீரென்று தண்டனைக்கு உட்படுத்தும் வழக்கம் இருந்ததில்லை என்றும் இந்த உரையிலிருந்து குறிப்பாக அறிய முடிகிறது. அவர்கள் தங்கள் சட்டங்களை எழுதி வைத்திருந்தார்கள். அவற்றின்படியே நடந்து கொள்வதிலும் அவர்கள் விழிப்போடு முனைந்திருந்தார்கள்.

## 6. மல்ல நாடு

மல்லர்களின் நாடு வஜ்ஜிக்குக் கிழக்கிலும் கோசலத்துக்கு மேற்கிலும் இருந்தது. இங்கே வஜ்ஜியைப் போலவே குழுக்களின் ஆட்சிமுறை நடந்துவந்தது. ஆனால் மல்லர்களுக்குள்ளே பிளவு ஏற்பட்டு, பாவாவில் வாழும் மல்லர்கள் என்றும், குசிநாராவில் வாழும் மல்லர்கள் என்றும் இரண்டு பிரிவுகள் தோன்றிவிட்டன.

மகதத்திலிருந்து மல்லர் நாட்டைக் கடந்தே கோசலத்துக்கு வழி செல்வதால், புத்தர் அடிக்கடி இந்த நாட்டினூடே பயணம் செல்வது வழக்கம். அவர் பாவா என்னும் இடத்தில் வாழ்ந்த சுந்தன் என்ற

கொல்லனிடம் உணவு ஏற்றார்; நோய் வாய்ப்பட்டார்; அங்கிருந்து குசிநாராவுக்குப் போனதும் அன்று இரவே பரிநிர்வாணம் அடைந்தார். இன்றும் அந்த இடத்தில் ஒரு சிறு ஸ்தூபமும் கோயிலும் இருக்கின்றன. அவற்றைத் தரிசிக்க. அங்கே பௌத்த யாத்திரிகர் வருகிறார்கள். பாவா அல்லது படவணா என்ற ஊரும் இங்கிருந்து அருகிலேயே இருக்கிறது. எனவே, பாவாவில் வாழ்ந்த மல்லர்களும் குசிநாராவில் வாழ்ந்த மல்லர்களும் அக்கம் பக்கத்திலேயே இருந்தார்கள் என்று தெரிகிறது. இந்த இரண்டு நாடுகளிலும் புத்தருடைய மாணவர்கள் ஏராளமாக இருந்தார்கள். இந்த நாடுகள் சுதந்தரமாக இருந்தன என்றாலும், இந்நாட்டு மக்களின் ஆதிக்கம், வஜ்ஜிகளின் குழு ஆட்சி முறையைப் போல அவ்வளவு சிறந்ததாக இல்லை. மேலும், வலிமையான வஜ்ஜி அரசு நிலவியதனால்தான் இவை நிலைத்திருந்தன என்றுகூடச் சொல்லலாம்.

## 7. சேதி

சேதிய ஜாதகம், வேஸ்ஸந்தர ஜாதகம் என்னும் இரண்டிலும் சேதி நாட்டைப் பற்றிய செய்தி வருகிறது. சேதியர்களின் தலைநகரம் ஸோத்திவதி (ஸ்வஸ்திவதி) என்கிறது. (422-ஆவது) சேதிய ஜாதகம். இங்கே அரசாண்ட மன்னர்களின் பரம்பரையையும் அதில் காணலாம். கடைசி அரசனான உபசரன் அல்லது அபசரன் என்பவன் பொய்சொல்லி, தன் புரோகிதனுடைய சாபத்தால் நரகில் வீழ்ந்தான். அவனுடைய ஐந்து மைந்தர்கள் புரோகிதனைச் சரணடைந்தார்கள். அவன் அவர்களை நாட்டை விட்டுப் போகச் சொன்னான். அங்ஙனமே அவர்கள் வெளியேறிச் சென்று, வெவ்வேறாக ஐந்து நகரங்களை நிறுவியதாகக் கூறுகிறது இந்த ஜாதகம்.

வேஸ்ஸந்தரனுடைய மனைவி மத்தி (மாத்திரி) என்பவள், மத்த (மத்திர) நாட்டு அரசகுமாரி. இந்த நாட்டைத்தான் சேதிய நாடு என்பர் என்று வேஸ்ஸந்திர ஜாதக கதையிலிருந்து தெரிகிறது. வேஸ்ஸந்தரனுடைய சொந்த நாடான சிவி, இந்தச் சேதிய நாட்டுக்கு அருகில் இருந்தது. அங்கே இருந்த சிவியரசன் தன் கண்களை அந்தணனுக்குக் கொடுத்த கதை, ஜாதகத்தில் பிரசித்தமானது.[1] வேஸ்ஸந்தர அரசகுமாரனும் அந்தணர்களுக்குத் தன் பட்டத்து யானையையும் இரண்டு குழந்தைகளையும் மனைவியையும் தானம் செய்ததாக வேஸ்ஸந்தர ஜாதகக் கதை கூறுகிறது. எனவே, சிவிகளின் நாட்டிலும் சேதிகளின் (சைத்யர்களின்) நாட்டிலும் அந்தணர்கள் மிகவும் வலிமையுற்றிருந்தார்கள்; ஆதலால் இந்த நாடுகள் எங்கோ மேற்குப் பக்கத்தில் இருந்திருக்க வேண்டும் என்று இதிலிருந்து தேறுகிறது.

---

1. (499-ஆவது) ஸிவி ஜாதகம் காண்க.

புத்தருடைய காலத்தில் சிவி, சேதி என்ற பெயர்கள் வழங்கி வந்தன. ஆனால் அவர் அந்த நாடுகளில் சென்றதாகவோ, அல்லது அங்கம் மகதத்தில் சேர்ந்தது போல அந்த நாடுகள் வேறு ராஜ்யத்தோடு இணைந்ததாகவோ தெரியவில்லை. எது எப்படியாயினும் சரி, புத்த பகவானின் சரித்திரத்தோடு இந்த நாடுகளுக்கு எவ்வகையான தொடர்பும் இல்லை என்பது மட்டும் திண்ணம்.

## 8. வம்ஸம் (வத்ஸம்)

வத்ஸர்களின் தலைநகர் கோஸம்பி (கௌசாம்பி). புத்தருடைய காலத்தில் இங்கே குழு ஆட்சி முறை அழிந்து, உதயணன் என்ற உல்லாச மன்னன் நாட்டை ஒரு குடைக்கீழ் அரசாண்டதாகத் தெரிகிறது. தம்மபத அட்டகதையில் வரும் இந்த அரசனுடைய வரலாறு வருமாறு:

உதயணனுக்கும் உஜ்ஜயினி அரசனான சண்டப்பிரத்தி யோதனுன்கும் கடுமையான பகைமை இருந்தது. போரில் உதயணனை வெல்ல முடியாமையால் பிரத்தியோதன் சூழ்ச்சி செய்து தன் எதிரியை மடக்க முயன்றான். உதயணனுக்கு யானையைப் பிடிக்கும் மந்திரம் தெரியும். காட்டில் யானைகள் வந்ததும் அவன் வேடர்களோடு அவற்றைத் தொடர்ந்து செல்வான். சண்டப்பிரத்தியோதன் ஒரு செயற்கை யானையைச் செய்வித்து, அதை வத்ஸர்களின் எல்லையில் கொண்டு போய் வைக்கச் சொன்னான். தன் நாட்டு எல்லையில் புதிய யானை வந்துள்ள செய்தியை அறிந்ததுமே உதயணன் அதைத் துரத்திச் சென்றான். அந்தச் செயற்கை யானைக்குள்ளே மறைந்திருந்தவர்கள் அதைச் சண்டப்பிரத்தியோதனுடைய எல்லைக்குள் கொண்டு போனார்கள். உதயணனும் அதன் பின்னால் ஓடி வரவே, அதற்குள் மறைந்திருந்த பிரத்தியோதனுடைய வீரர்கள் அவனைப் பிடித்து உஜ்ஜியினிக்கு அழைத்துச் சென்றார்கள்.

"யானை மந்திரத்தைக் கற்றுக் கொடுத்தாயானால் உன்னை நான் விட்டுவிடுகிறேன்; இல்லாவிட்டால் இங்கேயே உன்னைக் கொன்றுவிடுவேன்" என்று பிரத்தியோதன் உதயணனிடம் சொன்னான். உதயணன் அவனுடைய ஆசை வார்த்தைக்கோ மிரட்டலுக்கோ சிறிதும் அசையவில்லை; "நீ என்னை வணங்கி, மாணவன் என்ற முறையில் கற்பதாக இருந்தால் உனக்கு நான் அந்த மந்திரத்தைக் கற்றுக் கொடுப்பேன்; இல்லையென்றால் உன் விருப்பப்படியே செய்துகொள்" என்றான். பிரத்தியோதன் மிகவும் செருக்குக் கொண்டவனாதலால் அவனுக்கு இது பிடிக்கவில்லை. ஆனால் உதயணனைக் கொன்று மந்திரத்தை அழித்துவிடுவதும் சரியன்று. எனவே அவன் உதயணனிடம், "வேறு யாருக்காவது நீ இந்த மந்திரத்தைக் கற்றுக்கொடுப்பாயா?

எனக்குப் பிரியமானவருக்கு நீ இந்த மந்திரத்தைச் சொன்னால் உன்னை விடுவிக்கிறேன்" என்றான்.

"ஆணோ பெண்ணோ எவராயினும் சரி, என்னை வணங்கி மாணவர் என்ற முறையில் கற்றால் அவருக்கு நான் மந்திரத்தைக் கற்பிப்பேன்" என்றான் உதயணன்.

சண்டப்பிரத்தியோதனுடைய மகள் வாஸுலதத்தா (வாசவதத்தை) மிக்க அறிவுடையவள். அவள் மந்திரத்தைப் பெறும் திறமை வாய்ந்தவள்தான்; ஆயினும் அவளையும் உதயணனையும் சந்திக்க விடுவது பிரத்தியோதனுக்குப் பொருத்தமாகத் தோன்றவில்லை. "என் அரண்மனையில் ஒரு கூனி வேலைக்காரி இருக்கிறாள். அவள் திரைமறைவில் இருந்து உன்னை வணங்கி மாணவியாகி மந்திரத்தைக் கற்றுக்கொள்வாள். அவள் மந்திரசித்தி பெற்றுவிட்டால் நான் உன்னைச் சிறையிலிருந்து விடுவித்து உன் நாட்டுக்கு அனுப்பிவிடுகிறேன்" என்று அவன் சொன்னான்.

உதயணன் இதை ஒப்புக்கொண்டான். பிரத்தியோதன் வாசவதத்தையிடம், "வெண்குஷ்டக்காரன் ஒருவன் இருக்கிறான்; அவனுக்கு யானையை வசப்படுத்தும் மந்திரம் தெரியும். நீ அவன் முகத்தைப் பாராமல் அவனை வணங்கி அந்த மந்திரத்தைக் கற்றுக் கொள்ள வேண்டும்" என்று கூறினான். அங்ஙனமே வாசவதத்தை உதயணனைத் திரை மறைவிலிருந்து வணங்கி, மந்திரத்தைக் கற்றுக்கொள்ள ஆரம்பித்தாள். அப்பொழுது சில எழுத்துக்களை அவளால் சரியாக உச்சரிக்க முடியவில்லை. எனவே உதயணன் சினந்து, "ஏ கூனியே, உன் உதடுகள் மிகவும் தடித்திருக்க வேண்டும்!" என்றான். இதைக் கேட்டதும் வாசவதத்தை மிகவும் கொதித்தெழுந்தாள்; "அடே குஷ்டநோய்க்காரனே, அரசன் மகளையா நீ கூனி என்கிறாய்?" என்றாள்.

உதயணனுக்கு உண்மை இன்னதென்று விளங்கவில்லை. அதை அறிவதற்காக அவன் சடக்கென்று திரையை விலக்கினான். பிரத்தியோதனுடைய தந்திரத்தை அப்போது இருவருமே தெரிந்து கொண்டார்கள். அவர்கள் இருவரும் உடனே காதல் கொண்டு விட்டார்கள். அவந்தியிலிருந்து ஓடவும் ஒரு வழிசெய்தார்கள். மந்திரசித்தி ஏற்படுவதற்காக நல்ல முகூர்த்தத்தில் ஒரு பச்சிலை கொண்டுவர வேண்டும் என்று கூறி, வாசவதத்தை தன் தந்தையிடமிருந்து பத்திரவதி என்ற பெண்யானையைப் பெற்றுக் கொண்டாள். பிரத்தியோதன் பூங்காவில் விளையாடச் சென்றிருந்த சமயம் பார்த்து, அவளும் உதயணனும் அந்தப் பெண்யானையின் மேல் இவர்ந்து சென்றுவிட்டார்கள். உதயணன்தான் யானையைச் செலுத்துவதில் வல்லவனாயிற்றே. ஆயினும், பின்னாலேயே அவனைத் துரத்தி வந்த அரசனுடைய வீரர்கள் அவனை வழியில் சூழ்ந்து கொண்டார்கள். ஆனால்

அவர்களிடமிருந்து தப்புவதற்கு வாசவதத்தை முன்னமே வழி செய்திருந்தாள். அவள் தந்தையின் பொக்கிஷத்திலிருந்து தன்னால் இயன்ற அளவு, பொற்காசுகள் நிரம்பிய பைகளைக் கொண்டு வந்திருந்தாள். அவள் அவற்றிலே ஒரு பையை அவிழ்த்துக் காசுகளை வழியில் இறைத்தாள். படைவீரர்கள் அவற்றைத் திரட்டுவதில் முனைந்திருந்த பொழுது உதயணன் யானையை வேகமாக விடுத்தான் மீண்டும் வீரர்கள் யானையை அணுகினார்கள். பழைய படியே பொற்பை ஒன்று அவிழ்ந்து சிதறியது. இப்படியே காசுகளை வீசி எறிந்துகொண்டு அவர்கள் இருவரும் கௌசாம்பி போய்ச் சேர்ந்தார்கள்.

உதயணனைப்பற்றிய மற்றுமொரு கதையும் பிரசித்தமானது. ஒரு நாள் அவன் தன் உபவனத்தில் விளையாடப் போனபொழுது அங்கேயே தூங்கிவிட்டான். பிண்டோல பாரத்துவாஜ பிட்சு என்பவன் அருகிலே ஒரு மரத்தடியில் உட்கார்ந்திருந்தான். அரசன் தூங்குவதைக் கண்ட அவனுடைய மனைவியர் பிண்டோல பாரத்துவாஜனிடம் சென்று அவனுடைய உபதேசத்தைக் கேட்டுக்கொண்டு இருந்தார்கள். அதற்குள் விழித்துக்கொண்ட அரசன் அந்தக் காட்சியைக் கண்டு கடுஞ்சினங் கொண்டு பிண்டோல பாரத்துவாஜனின் உடலில் செவ்வெறும்புகளை விட முயன்றதாக ஸம்யுத்த நிகாயத்து அட்டகதை குறிப்பிடுகிறது. ஆயினும் பின்பு பிண்டோல பாரத்துவாஜனுடைய உபதேசத்தைக் கேட்டே உதயணன் புத்தருடைய உபாசகன் ஆனான்.

கௌசாம்பியில் கோஷிதன், குக்குடன், பாவாரிகன் என்ற மூன்று செட்டிமார் புத்தருடைய பிட்சு சங்கம் தங்குவதற்காக முறையே கோஷிதாராமம், குக்குடாராமம், பாவாரிகாராமம் என்ற மூன்று விஹாரங்களைக் கட்டியதாக அங்குத்தர நிகாயத்து அட்டகதையும் தம்மபத அட்டகதையும் கூறுகின்றன. உதயணனுடைய முக்கிய ராணியான ஸாமாவதியும்[1] அவளுடைய வேலைக்காரியான குஜ்ஜுத்தரா (குப்ஜா உத்தரா)வும் புத்தருக்கு இரண்டு முக்கிய உபாசகைகளாக இருந்தார்கள். அரசன் உதயணன் அவ்வளவாகச் சிரத்தையுள்ளவன் அல்லன்; ஆயினும் கௌசாம்பி மக்களில் ஏராளமானவர்கள் புத்தருக்குப்

1. குஜ்ஜுத்தராவும் ஸாமாவதியும்- மாகந்தியன் என்ற அந்தணன், புத்தரைப்பற்றி ஒன்றும் அறியாமலே, அவர் மணத்துக்கேற்ற பருவமுடையவர் என்று கருதி, தன் பெண் மாகந்தியாவை அவரிடம் அழைத்துச் சென்றான். அவனது கருத்தை அறிந்த போதிப் பெருமான் "அந்தணனே, அவா, திருப்தியின்மை, காமம் ஆகியவற்றை விளைவிப்பதான கலவியை நான் இன்பமாகக் கருதவில்லை. தூய்மையற்ற பொருள்கள் நிரம்பிய இவ்வுடல் காலினாலும் தீண்டற்குரியதன்று" என்றார்.

பெருமானின் பேச்சைக் கேட்ட மாகந்தியா பெருஞ்சினங்கொண்டு அவருக்கு எதிரியானாள். பின்பு அவளது எழிலைக் கண்டு மயங்கிய உதயண மன்னன் அவளை மணந்துகொண்டான். அவனுடைய மற்றொரு ராணியான ஸாமாவதியும்

பக்தர்களாக இருந்தார்கள் என்றும், பிட்சுக்களின் வாழ்க்கை நலனைக் காப்பதில் அவர்கள் ஆவலுடையவர்களாக இருந்தார்கள் என்றும் இந்தக் கதைகளினால் அறிகிறோம்.

## 9. குரு நாடு

குரு நாட்டின் தலைநகரம் இந்திரப்பிரஸ்தம். புத்தருடைய காலத்தில் இங்கே கௌரவியன் என்ற அரசன் ஆண்டுவந்தான் என்ற செய்தி மட்டுமே கிடைக்கிறது. இங்கு அரசியல் முறை எப்படி இருந்தது என்பதை அறிய முடியவில்லை. இந்த நாட்டில் புத்தருடைய பிட்சு சங்கத்துக்காக ஒரு விஹாரங்கூட இருந்ததில்லை. புத்தர் இந்த நாட்டுக்கு உபதேசிக்கச் செல்லும்பொழுது எங்காவது மர நிழலிலோ அல்லது அது போன்ற வேறு இடத்திலோ தங்குவார். ஆயினும் இந்த நாட்டில் அவருடைய உபதேசத்தை விரும்பினவர்கள் மிகுதியாக இருந்தனர் என்று தெரிகிறது. அவர்களுக்குள்ளே ராஷ்டிரபாலன் என்ற பணக்கார இளைஞன் பிட்சுவான கதை மஜ்ஜிமநிகாயத்தில் விரிவாக வருகிறது. குரு நாட்டிலுள்ள கம்மாஸதம்மம் (கல்மாஷதம்யம்) என்ற நகரருகில் புத்த பகவான் ஸதிபட்டானம் போன்ற சில உயர்ந்த சூத்திரங்களை உப்தேசித்த செய்தியை ஸுத்த பிடகத்தில் காண்கிறோம். இந்த நாட்டுப் பொது மக்கள் புத்தரை ஆதரித்த போதிலும், ஆட்சி முறையில் உள்ள யாரும் புத்த பக்தராக இருந்ததில்லை என்றும், வைதிக தர்மத்தின் செல்வாக்கு இங்கே ஓங்கியிருந்ததென்றும் இதனால் அறிகிறோம்.

## 10-11. பஞ்சாலம் (பாஞ்சாலம்); மச்சம் (மத்ஸ்ய நாடு)

உத்தர பாஞ்சாலர்களின் தலைநகர் கம்பில்லம் (காம்பில்யம்) என்பது ஜாதக அட்டகதையில் பல இடங்களில் வருகின்றது. ஆனால் மச்ச நாட்டின் தலை நகரைப்பற்றிய குறிப்பே இல்லை. புத்தர் காலத்தில் இவ்விரு நாடுகளுக்கும் அவ்வளவாகப் பெருமை இருந்ததில்லை என்று

---

அவளுடைய வேலைக்காரி குஜ்ஜுத்தராவும் புத்த உபாசகைள். ஆதலால் மாகந்தியா, அவர்களை அரசன் வெறுக்கும்படி பல தந்திரங்கள் செய்தாள். ஆனால் அவர்களின் மைத்திரிபாவனையினால் அரசனின் உள்ளம் மாறியது. இறுதியில் மாகந்தியா ஸாமாவதியின் அரண்மனையில் தீ இடுவித்தாள். ஸாமாவதியும் அவள் தோழிகளும் அந்தத் தீயில் எரிந்து மாய்ந்தனர். இந்தச் செய்தியை அறிந்த உதயணன், மாகந்தியாவின் உறவினர்கள் யாவரையும் அழைத்து, அவளெதிரிலேயே அவர்களைக் கொல்வித்தான். இறுதியில் அவளையும் கொன்றான். -பௌத்த சங்க வரலாறு, பக்.237-245.

இதனால் தெரிகிறது. இந்த நாடுகளில் புத்தர் சஞ்சாரம் செய்யாமையால் இங்கு இருந்த மக்களைப்பற்றியோ நகரங்களைப்பற்றியோ பௌத்த நூல்களில் மிகுதியாகச் செய்திகள் கிடைக்கவில்லை.

## 12. ஸூரஸேனம் (சூரசேனம்)

சூரசேனர்களின் தலைநகரம் மதுரை (வட மதுரை). இங்கே அவந்திபுத்திரன் என்ற அரசன் ஆண்டு வந்தான். வர்ணாசிரம தருமத்தைப்பற்றி இவனுக்கும் மகாகாத்தியாயனருக்கும் நிகழ்ந்த சம்வாதத்தை மஜ்ஜிம நிகாயத்து மதுரஸூத்தம் வருணித்திருக்கிறது. இந்த நாட்டில் எப்பொழுதாவதுதான் புத்தர் செல்வார். மதுரை அவருக்கு அவ்வளவாகப் பிடிக்கவில்லை என்பது, இந்த ஸூத்தத்திலிருந்து தெரிகிறது:-

“பிட்சுக்களே, மதுரையில் ஐந்து குறைகள் இருக்கின்றன. எவை ஐந்து? அந்த நகரத்துச் சாலைகள் மேடும் பள்ளமுமானவை; அங்கே புழுதி அதிகம்; நாய்கள் பொல்லாதவை; பேய்கள் கொடியவை; அங்கே பிட்சை கிடைப்பது மிகவும் அரிது. பிட்சுக்களே, மதுரையில் ஐந்து குறைகள் இருக்கின்றன.” (அங்குத் தரநிகாயம், பஞ்சகநிபாதம்.)

## 13. அஸ்ஸகம் (அச்மகம்)

ஸூத்திநிபாதத்துப் பாராயணவக்கத்தின் தொடக்கத்தில் இருக்கும் வத்துகாதைகளிலிருந்து, அஸ்ஸகம் என்ற அரசு எங்கோ கோதாவரியாற்றின் மருங்கில் இருந்ததாகத் தெரிகின்றது. சிராவஸ்தியில் வாழ்ந்த பாவரி என்ற அந்தணன் தன் பதினாறு மாணவர்களோடு இந்த அரசில் வந்து தங்கினான்.

“அவன் (பாவரி) அஸ்ஸக நாட்டில், அளக நாட்டுக்கு அருகில், கோதாவரிக் கரையில் பிட்சையேற்றும் கனிகளை உண்டும் வாழ்ந்து வந்தான்” என்கிறது காதை.

அஸ்ஸகனும் அளகனும் ஆந்திர (அந்தக) அரசர்கள்; அவர்களின் ராஜ்யங்களுக்கிடையில் பாவரி தன் ஆறு மாணவர்களோடு வாழ்ந்து ஓர் ஊரை அமைத்தான்; அது மேன்மேலும் வளர்ந்தது என்று அட்டகதைக்காரர் சொல்கிறார். தென்னாட்டில் வைதிக மதப் பிரசாரகர்களின் முதல் குடியேற்ற ஊர் இது என்று சொல்லத் தடை இல்லை. புத்தரோ அவர் காலத்துப் பிட்சுக்களோ இவ்வளவு தொலைவில் வராமையால் இந்த நாடுகளைப் பற்றி மிகுதியான செய்திகள் பௌத்த இலக்கியத்தில் கிடைக்கவில்லை. ஆயினும் புத்தருடைய புகழ் இவ்வளவு நெடுந்தொலைவு வரைக்கும் பரவியிருந்தது. புத்தரைப்பற்றிக் கேள்வியுற்ற பாவிரி, தன் பதினாறு

மாணவர்களையும் பெருமானைத் தரிசிக்க அனுப்பினான். அவர்கள் புறப்பட்டு மத்திய தேசத்துக்கு வந்து இறுதியில் ராஜகிருகத்தில் புத்தரைக் கண்டு அவருடைய சீடர்கள் ஆனார்கள். இந்த வரலாறு, மேற்சொன்ன பாராயணவக்கத்திலேயே இருக்கிறது. ஆனால் அதற்குப் பிறகு அவர்கள் திரும்பிப் போய், கோதாவரிப் பிரதேசத்தில் தருமோபதேசம் செய்தார்களா என்ற செய்தி எங்கும் இல்லை.

## 14. அவந்தி

அவந்தியின் தலைநகரான உஜ்ஜயினியைப் பற்றியும் அதன் அரசன் சண்டப்பிரத்தியோ தனைப்பற்றியும் மிகுதியான செய்திகள் கிடைக்கின்றன. இந்த அரசன் நோய் வாய்ப்பட்டபொழுது இவனுடைய அழைப்பினால் மகத நாட்டில் புகழ் பெற்ற மருத்துவனான ஜீவகன் கௌமார பிருத்தியன் என்பவன், இவனைக் குணப்படுத்த உஜ்ஜயினிக்கு வந்தான். பிரத்தியோதன் மிகவும் கொடிய இயல்புடையவன்; அதனால் அவனுக்குச் சண்டன் என்ற சிறப்புப் பெயர் வந்தது. இது ஜீவகனுக்கும் நன்றாகத் தெரியும். அரசனுக்கு மருந்து கொடுப்பதற்கு முன்னால், ஜீவகன் காட்டில் சென்று மூலிகைகள் கொண்டு வருவதாகப் போக்குக் காட்டி, பத்தவதி என்ற பெண்யானையைப் பெற்றுக்கொண்டான்; அரசனுக்கு மருந்து கொடுத்தவுடனே அவன் அந்த யானைமீது அமர்ந்து ஓட்டமெடுத்தான். இங்கே அரசன் மருந்தைக் குடித்ததும் பல தடவை கடுமையாக வாந்தியெடுத்தான். அதனால் அவன் மிகுந்த ஆத்திரங் கொண்டு ஜீவகனைப் பிடித்துவர ஏவினான். ஆனால் ஜீவகன்தான் முன்னமே அங்கிருந்து தப்பிவிட்டானே! அவனை விரைவில் சென்று பிடிப்பதற்காக அரசன், காகன் என்ற தன் வேலைக்காரனை அனுப்பினான். காகன் கௌசாம்பி வரைக்கும் ஓடியலைந்து ஜீவகனைப் பிடித்தான். அப்பொழுது ஜீவகன் அவனுக்கு மருந்து கலந்த ஒரு நெல்லிக்கனியை உண்ணக் கொடுத்தான்; அதனால் காகனுடைய உடல் தளர்வெய்தியது. ஜீவகன் மீண்டும் பத்தவதிமேல் இவர்ந்து இன்னலின்றி ராஜகிருகம் போய்ச் சேர்ந்தான். இதற்குள் உஜ்ஜயினியில் பிரத்தியோதன், நோய் நீங்கி நலம் பெற்றான். காகதாசனும் உடல் நலம் பெற்று உஜ்ஜயினிக்குச் சென்றான். உடம்பு நன்கு குணமாகிப் பழைய ஆரோக்கிய நிலை வந்ததும் பிரத்தியோதனுக்கு ஜீவகனிடம் மகிழ்ச்சி உண்டாயிற்று; அவனுக்குச் சம்மானமாகக் கொடுக்க, ஸிவேய்யகம் என்ற உயர்ந்த ஆடைகளை அரசன் ராஜகிருகத்துக்கு அனுப்பிவைத்தான்.[1]

இந்தக் கதைக்கும் தம்மபத அட்டகதையில் வரும் கதைக்கும் மிகுந்த ஒற்றுமை இருக்கிறது. ஆனால் ஒன்றைக் கொண்டு மற்றொன்றை

1. மஹாவக்கம், பக்கம் 8 காண்க.

எழுதினார்களா, அல்லது வெவ்வேறு காலங்களில் இந்த நிகழ்ச்சிகள் நடந்தனவா என்பதை அறுதியிட்டுச் சொல்ல முடியாது. இந்த இரண்டு கதைகளிலிருந்தும், பிரத்தியோதனுடைய கொடுமையான இயல்பும், அவன் சர்வாதிகாரம் வகித்த அரசனாக இருந்தான் என்பதும் தெளிவாகின்றன.

புத்தர் பிரத்தியோதனுடைய நாட்டுக்கு ஒருபோதும் சென்றதில்லை. ஆனால் அவருடை முக்கிய மாணவர்களில் ஒருவர்- மகாகாத்தியாயனர் - பிரத்தியோதனுடைய புரோகிதரின் மைந்தர். தந்தை இறந்ததும் அவருக்குப் புரோகிதப் பதவி கிடைத்தது. ஆனால் அதில் திருப்தி கொள்ளாமல் அவர் மத்திய தேசத்துக்குச் சென்று புத்தருக்குப் பிட்சுசிஷ்யர் ஆனார். அவர் மீண்டும் தமது நாட்டுக்குத் திரும்பியபோது அரசனும் மற்றவர்களும் அவரை நன்மதிப்போடு வரவேற்றார்கள்.[1] மகாகாத்தியாயனருக்கும் மதுரையரசனான அவந்தி புத்திரனுக்கும் சாதிப் பிரிவினைப் பற்றிய சம்வாதம் நிகழ்ந்தது. இதை மஜ்ஜிமநிகாயத்து மதுர அல்லது மதுரிய ஸுத்தத்தில் காணலாம். மதுரையிலும் உஜ்ஜயினியிலும் மகாகாத்தியாயனர் புகழ் பெற்றிருந்தபோதிலும், அந்த நாடுகளில் புத்தருடைய வாழ்நாளில் பௌத்த சமயம் நன்கு பரவியதாகத் தெரியவில்லை. தம்முடைய பிட்சு மாணர்கள் இந்த வட்டாரத்தில் மிகக் குறைந்திருந்தமையால், 'உபசம்பதை கொடுத்து ஒரு பிட்சுவைச் சங்கத்தில் சேர்த்துக்கொள்ள ஐந்து பிட்சுக்களே போதுமானவர்' என்று புத்தர் அநுமதி அளித்திருந்தார்.[2] மத்திய தேசத்தில் இந்தக் காரியத்துக்குக் குறைந்த அளவு இருபது பிட்சுக்களாவது வேண்டியிருந்தது.

## 15. கந்தாரம் ( காந்தாரம்)

காந்தாரர்களின் தலைநகரம் தக்கஸிலா (தட்சசிலை). இங்கே

1. இந்த நிகழ்ச்சியைப் பற்றிய விரிவை, 'பௌத்த சங்க வரலாறு', பக். 165-168 இல் காண்க.

2. மஹாவக்கம், பாகம் 8 காண்க, ஸோணன் என்பவன் புத்தரை வணங்கி, காத்தியாயனருடைய கோரிக்கையை அவருக்குத் தெரிவித்தான். அப்பொழுது புத்தர்பிரான் பிட்சுக்களை அழைத்து, "இன்றையிலிருந்து எல்லை நாடுகள் யாவற்றிலும் உபசம்பதையளிக்க ஐந்து பிட்சுக்களின் கூட்டமே போதுமானது (இவர்களில் ஒருவர் விநயதரராக இருத்தல் வேண்டும்.) என்று நான் அநுமதி கொடுக்கிறேன். எல்லை நாடுகளாவன: -கிழக்கில் கஜங்கலம் என்ற நகரம். பின்னர் மகாசாலம், பின்னர் எல்லை நாடு. தென்திசையில் சுவேதகர்ணிகம் என்ற நகரமும் பின்பு எல்லை நாடும். மேற்கில் ஸ்தூலம் (தூணம்) என்ற அந்தணர் ஊரும் பின்பு எல்லை நிலமும். வடக்கில் உசீரத்துவசம் என்ற மலையும் எல்லை நாடும்" என்றார். -பௌத்த சங்க வரலாறு.பக். 30-31.

புக்குஸாதி என்ற அரசன் ஆண்டு வந்தான். அவன் தளர்ந்த வயசில் தன் அரசை விட்டு, ராஜகிருகம் வரைக்கும் நடந்து சென்று, பிட்சு சங்கத்தில் சேர்ந்தான். பிறகு பிட்சைப் பாத்திரமும் துவராடையும் தேடுவதற்காக அவன் திரிந்தபோது, வெறிகொண்ட பசு ஒன்று அவனைக் கொன்றது. பசு அவனைக் கொன்ற கதை, மஜ்ஜீமநிகாயத்தில் தாது விபங்கஸுத்தத்தில் வருகிறது. அவன் தட்சசிலைக்கு அரசனாக இருந்த செய்தியையும், அவனுக்கும் பிம்பிசாரனுக்கும் எப்படி நட்பு ஏற்பட்டது என்பது போன்ற வரலாறுகளையும் இதே ஸுத்தத்து அட்டகதை விரிவாக வருணிக்கிறது. அதன் சாரமாவது:-

தட்சசிலையிலிருந்து சில வணிகர்கள் ராஜகிருகத்துக்கு வந்தார்கள். அரசன் பிம்பிசாரன் தன் வழக்கப்படி அவர்களை ஆதரவோடு வரவேற்று, அவர்களுடைய அரசனைப்பற்றிய செய்திகளைக் கேட்டான். தட்சசிலையின் அரசன் மிகவும் நல்லவன், வயசிலும் தனக்குச் சமமானவன் என்று தெரிந்ததும் பிம்பிசாரனுக்கு அவனிடம் அன்பும் மதிப்பும் உண்டாயின. அவன் அந்த வணிகர்களின் வரியை நீக்கி, புக்குஸாதி அரசனுக்குத் தன் நட்புச் செய்தியை அறிவித்தான். அதனால் புக்குஸாதிக்கு மகதராஜனிடம் மிக்க மகிழ்ச்சி ஏற்பட்டது. அவன் மகத நாட்டிலிருந்து வந்த வணிகர்கள் மீது இருந்த வரியை நீக்கியதோடு, தன் வேலைக்காரர்களைத் துணை கூட்டி, அந்த வியாபாரிகள் வாயிலாக விலையுயர்ந்த பஞ்சவர்ணச் சால்வைகள் எட்டைப் பிம்பிசாரனுக்கு அனுப்பினான். பிம்பிசாரன் இந்தச் சம்மானத்துக்கு ஈடாக, ஒரு பொன்னாடையைச் சிறந்த பேழையில் வைத்து அனுப்பினான். அந்தப் பொன்னாடையில் புத்தர், தருமம், சங்கம் ஆகிய மும்மணிகளின் மேன்மை உயர்ந்த சாதிலிங்கத்தால் பொறிக்கப் பெற்றிருந்தது. அதைப் படித்ததும் புக்குஸாதி, புத்தரைப்பற்றிய தியானத்தில் ஆழ்ந்தான். இறுதியில் அவன் அரசைத் துறந்து ராஜகிருகம் வரைக்கும் நடந்தே வந்தான்.

அங்கே ஒரு குலாலனுடைய வீட்டில் அவனும் புத்தரும் எப்படிச் சந்தித்தார்கள், புத்தர் அவனுக்கு என்ன உபதேசம் செய்தார், வெறி பிடித்த பசு எப்படி அவனைக் கடைசியில் கொன்றது என்ற செய்திகள் மேற்கூறிய தாதுவிபங்க ஸுத்தத்திலேயே இருக்கின்றன.

காந்தாரர்களைப்பற்றியும் அவர்களின் தலைநகரான தட்சசிலையைப் பற்றியும் ஜாதக அட்டகதை பல இடங்களில் குறிப்பிடுகின்றது. தட்சசிலை கலையிலும் கைத்தொழிலிலும் மட்டுமன்றிக் கல்வித் துறையிலும் முன்னணியில் இருந்தது. பார்ப்பனப் பிள்ளைகள் நான்மறை பயிலவும், க்ஷத்திரியர்கள் வில்வித்தையும் அரசியலும் கற்கவும், இள வைசியர்கள் சிற்பமும் மற்றத் தொழிற்கலைகளும் கற்றுக்கொள்ளவும் மிகச் சேய்மையிலுள்ள நாடுகளிலிருந்து தட்சசிலைக்கு வருவார்கள்.

ராஜகிருகத்தில் பெரும் புகழ் வாய்ந்த மருத்துவனாக விளங்கிய ஜீவகன் கௌமாரபிருத்தியன், இங்கேதான் ஆயுர்வேதம் பயின்றான். பாரத நாடு முழுவதிலும் மிகப் பழமையானதும் புகழ் பெற்றதுமான பல்கலைக் கழகம் தட்சசிலையில்தான் இருந்தது.

## 16. கம்போஜம் (காம்போஜம்)

'காம்போஜர்களின் அரசு வடமேற்கில் இருந்தது; அவர்களின் தலைநகரம் துவாரகை' என்பது பேராசிரியர் ரிஸ் டேவிட்ஸ் என்பரின் கொள்கை.[1] ஆனால் மஜ்ஜிமநிகாயத்தில் அஸ்ஸலாயனஸுத்தத்தில், 'யோன கம்போஜேஸு' என்று இந்த நாட்டை யவனர்களோடு சேர்த்துக் குறிப்பிட்டிருப்பதனால், இது காந்தாரத்துக்கும் அப்பால் இருந்ததாகத் தெரிகின்றது. யவன காம்போஜ நாட்டில் ஆரியர், தாசர் என்ற இரண்டு சாதிகளே இருந்தன என்றும், சில சமயம் ஆரியன் தாசனாகவும் தாசன் ஆரியனாகவும் மாறியதுண்டு என்றும் இதே ஸுத்தம் கூறுகிறது. காந்தார நாட்டில் வர்ணாசிரம தருமம் வேரூன்றியிருந்தது என்பதைச் சில ஜாதகக் கதைகளிலிருந்து தெளிவாக அறியலாம். அவ்வளவேன்? தட்ச சிலையிலேயே பெரும்பாலான ஆசிரியர்கள் அந்தணர்களாக இருந்தனர். ஆனால் காம்போஜத்தில் சதுர்வருண முறை புகவில்லை. ஆதலால் அந்த நாடு காந்தாரத்துக்கு அப்பால் இருந்தது என்றே சொல்ல வேண்டியிருக்கிறது.

இந்த நாட்டு மக்கள் காட்டுக் குதிரைகளைப் பிடிப்பதில் தேர்ச்சி பெற்றவர்கள் என்கிறது குணால ஜாதகத்து அட்டகதை. காட்டுக் குதிரைகள் தண்ணீர் குடிக்க வரும் இடத்தில், நீரின்மேல் படர்ந்த பாசியிலும் அக்கம்பக்கத்துப் புல்லிலும் தேன் தடவி வைத்திருப்பார்கள். குதிரைகள் அந்தப் புல்லைத் தின்றுகொண்டே, குதிரை பிடிப்பவர்கள் முன்னரே அமைத்து வைத்திருக்கும் ஒரு பெரிய அடைப்புக்குள் வரும். அவை உள்ளே வந்ததும் அவர்கள் அடைப்பின் வாயிலை மூடிவிட்டு, மெதுவாக அவற்றைத் தம் வசப்படுத்துவார்கள். (இப்பொழுதும் இதே மாதிரியான சில முறைகளினால் மைசூரின் யானைகளைப் பிடிக்கிறார்கள்.) இந்த வகையில் குதிரைகளை அடக்கி அவற்றுக்குக் கடிவாளமிட்டு, அவர்கள் அவற்றைத் தம் நாட்டு வியாபாரிகளுக்கு விற்பார்கள். பின்பு காம்போஜ நாட்டு வர்த்தகர்கள் இந்தக் குதிரைகளை மத்திய தேசத்தில் காசி முதலிய இடங்களுக்கு ஓட்டிப்போய் விற்பார்கள்.[2]

காம்போஜ நாட்டில் பெரும்பாலான மக்கள், புழு பூச்சி முதலியவற்றைக் கொன்றால்தான் ஆன்மசுத்தி உண்டாகும் என்று

1 'Buddhist India', பக். 28 காண்க.

2. உதாரணமாக, தண்டுலநாலி ஜாதகம் காண்க.

கருதினார்கள்.

"பூச்சி, பறவை, பாம்பு, தவளை, புழு, ஈ ஆகியவற்றைக் கொல்வதனால் மனிதன் தூய்மை பெறுகிறான் என்ற இழிவான, பொய்யான கொள்கையைக் காம்போஜத்தில் பெரும்பாலான மக்கள் கொண்டிருக்கிறார்கள்." (பூரிதத்த ஜாதகம், சுலோகம் 903.)

எனவே இந்த மக்கள், இக் காலத்தில் எல்லைப் பிரதேசத்தில் வாழும் மக்களைப்போலவே, பிற்போக்கு உடையவர்களாக இருந்தார்கள் என்று தெரிகிறது.

மனோரதபூரணி அட்டகதையில் மகாகப்பின் என்பவனுடைய கதை வருகிறது. அவன் எல்லைப்புறத்தில் குக்குடவதி என்ற தலைநகரில் இருந்து ஆண்டு வந்தான்; பிறகு புத்தரின் பெருமையைக் கேள்வியுற்று மத்திய தேசத்துக்கு வந்தான். சந்திரபாகா நதிக்கரையில் அவன் போதிப்பெருமானைக் கண்டான். அங்கே அவர் கப்பினை அவனுடைய அமைச்சர்களோடு பிட்சு சங்கத்தில் ஏற்றுக்கொண்டார்.

மகாகப்பின் அரசனாக இருந்ததற்கும் அவன் குக்குடவதியில் இருந்து ஆண்டதற்கும் ஆதாரம் ஸம்யுத்த நிகாயத்து அட்டகதையில் கிடைக் கிறது. ஆனால் குக்குடவதி என்னும் இந்தத் தலைநகர் காம்போஜத்தில் இருந்ததா, அல்லது அதற்கு அருகில் எங்காவது மலை நாட்டில் இருந்ததா என்பது தெரியவில்லை. புத்தருடைய வாழ்நாளிலேயே அவருடைய புகழும் அருளாட்சியும் இந்த எல்லைப்புறத்துக் காட்டுமிராண்டி மக்களிடையே பரவியிருந்தன என்பது திண்ணம். இதற்கு உவமையாக இந்தக் காலத்துச் செய்தி ஒன்று சொல்லலாம். பஞ்சாபில் இருக்கும் சாதிப்பற்றுள்ள மக்களைவிட எத்தனையோ மடங்கு அதிகமாக, எல்லைப்புறத்துப் பட்டாணியர் மகாத்மா காந்தியை மதிக்கிறார்கள். இதைப் போன்ற ஒரு நிலையே புத்தர் காலத்தில் நிகழ்ந்ததில் வியப்பு ஏதுமில்லை.

## லலிதவிஸ்தரத்தில் பதினாறு நாடுகள்

இந்தப் பதினாறு நாடுகளைப்பற்றி லலிதவிஸ்தரம் குறிப்பிடுவதை முன்பே கூறியிருக்கிறேன். போதிசத்துவர் துஷிததேவ பவனத்தில் இருந்தபோது, எந்த நாட்டில் பிறந்து உலகை உய்விக்கலாம் என்று சிந்திக்கிறார். இந்தச் சந்தர்ப்பத்தில் வெவ்வேறு தேவபுத்திரர்கள் வெவ்வேறு அரசகுலங்களைப் பற்றிய பண்புகளைச் சொல்லுகிறார்கள்; மற்றும் சில தேவபுத்திரர்கள் அந்தக் குலங்களின் குற்றங்களை எடுத்துக் காண்பிக்கிறார்கள்.

**1. மகத அரசகுலம்**- சில தேவபுத்திரர்கள், "மகத நாட்டில் இந்த வைதேகி குலம் மிகவும் வளமானது; போதிசத்துவர் பிறக்க அது உரிய

இடம்" என்று சொன்னார்கள். இதை மறுத்த வேறு தேவபுத்திரர்கள், "அந்தக் குலம் இவருக்கு உரியதன்று. ஏனெனில், அது தாய்வழியிலும் தந்தைவழியிலும் தூய்மையானதன்று; சஞ்சலமானது; மிக்க புண்ணியத்தினால் அபிஷேகம் ஆகாதது. அவர்களின் தலைநகரைப் பூஞ்சோலையும் குளமும் அணி செய்யவில்லை; காட்டுமிராண்டிகளுக்கு ஏற்றது அது" என்று சொன்னார்கள்.

**2. கோசல அரசகுலம்** - வேறு தேவபுத்திரர்கள், "இந்த கோசல குலம் படையும் ஊர்தியும் செல்வமும் நிறைந்திருப்பதனால் போதிசத்து வருக்குப் பொருத்தமானது" என்றார்கள். இதற்கு மற்றவர்கள், "அது மாதங்கர்களுடைய தவறுதலிலிருந்து உண்டானது; தாயும் தந்தையும் தூயவர்களல்ல. இழிவான கொள்கையில் அதற்கு நம்பிக்கை. ஆதலால் அது இவருக்கு ஏற்றதன்று" என்று மறுமாற்றம் உரைத்தார்கள்.

**3. வம்ச அரசகுலம்**- சிலர் சொன்னார்கள் - "இந்த அரசகுலம் முன்னோக்கி வளர்ந்து நற்காப்புடன் இருக்கிறது. அந்த நாடு வளமுற்றிருப்பதனால் போதிசத்துவருக்கு ஏற்றது." இதை வேறு சிலர் மறுத்தார்கள்- "அந்தக் குலம் மிகவும் சாமானியமானது, கொடுமையானது. பிற ஆண்களிலிருந்து அந்தக் குலத்தில் பல அரசர்கள் உதித்திருக்கிறார்கள். அந்தக் குலத்தில் இப்போது இருக்கும் அரசன் நாஸ்திகன். ஆதலால் அந்தக் குலம் போதிசத்துவருக்கு ஏற்றதன்று."

**4. வைசாலி அரசர்கள்** - வேறு தேவபுத்திரர்கள், "வைசாலி என்னும் இந்த மாநகரம் வளமும் காப்பும் உணவும் நிரம்பி, அழகிய மாந்தர் களிகொள்ளும் இடமாகத் துலங்குகின்றது. மாளிகைகளும் அரண்மனைகளும் பூஞ்சோலைகளும் உபவனங்களும் இதற்கு அணி செய்கின்றன. தேவர்களின் தலைநகரை நிகர்த்தது இது. ஆதலால், போதிசத்துவர் பிறக்க இது ஏற்றது" என்று கூறினார்கள். இதற்கு மற்றவர், இங்குள்ள அரசர்கள் தமக்குள் நியாயமாக நடந்து கொள்வதில்லை. அவர்கள் சமய ஒழுக்கம் வாய்ந்தவர்களல்ல. உயர்ந்தவர், நடுத்தரமானவர், முதியவர், பெரியவர் ஆகியோரிடம் அவர்கள் மதிப்பு வைப்பதில்லை. ஒவ்வொருவனும் தன்னையே அரசனாக எண்ணிக் கொள்கிறான். எவனும் மற்றொருவனுக்கு மாணவனாக விரும்புவதில்லை. எவனும் மற்றவனைப் பொருட்படுத்துவதில்லை. ஆகையால் அந்த நகரம் போதிசத்துவருக்கு ஏற்றதன்று" என்று விடையளித்தார்கள்.

**5. அவந்தி அரசகுலம்**- வேறு தேவபுத்திரர்கள், "பிரத்தி யோதனுடைய இந்தக் குலம் மிகவும் வலிமையுள்ளது, பெரிய ஊர்திகள் நிரம்பியது, பகைவர் சேனையை வெல்வது, ஆதலால் போதிசத்துவருக்கு ஏற்றது" என்றார்கள். இதற்கு மற்றவர், "அந்தக் குலத்து அரசர்கள் கோபாவேசம் கொண்டவர்கள், கொடியவர்கள், கடுமையாகப்

பேசுகிறவர்கள், எதற்கும் துணிந்தவர்கள். செயலில் அவர்களுக்கு நம்பிக்கை இல்லை. ஆதலால் அந்தக் குலம் போதிசத்துவருக்கு அழகன்று" என்றார்கள்.

**6. மதுரை அரசகுலம்**-"இந்த மதுரை நகரம் வளமும் காப்பும் உணவும் மாந்தரும் நிறைந்தது. கம்ச குலத்துச் சூரசேனர்களின் அரசன் சுபாகு என்பவனுடைய தலைநகரம் இது. போதிசத்துவருக்கு இது ஏற்றது" என்று சிலர் சொன்னார்கள். அதற்கு மற்றவர்கள், "இந்த அரசன் பொய்நோக்கம் (மித்தியாதிருஷ்டி) கொண்ட குலத்தில் பிறந்தவன்; தஸ்யுக்களை ஆள்பவன். ஆகையால் இந்த நகரமும் போதிசத்துவருக்கு ஏற்றதன்று" என்று மறுப்புக் கூறினார்கள்.

**7. குரு அரசகுலம்**- வேறு சிலர், "இந்த அஸ்தினாபுரத்தில் பாண்டவ குலத்தவனான அரசன் ஆட்சிபுரிகின்றான். அவன் வீரன், அழகன். இது பகைவரை வெல்லும் குலமாதலால் போதிசத்துவருக்கு ஏற்றது" என்றார்கள். இதற்கு மற்றவர், "பாண்டவ குலத்து அரசர்கள் தங்கள் வம்சத்தைக் கலக்கி வைத்திருக்கிறார்கள். யுதிஷ்டிரன் தருமனுக்கும், பீமன் வாயுவுக்கும், அர்ஜுனன் இந்திரனுக்கும், நகுல சகதேவர்கள் அசுவினிதேவர்களுக்கும் பிறந்ததாகச் சொல்கிறார்கள். ஆகையால் இந்தக் குலமும் போதிசத்துவருக்கு ஏற்றதன்று" என்று எதிர்வாதம் செய்தார்கள்.

**8. மைதில அரசகுலம்**- வேறு சிலர் கூறினார்கள் - "மைதில அரசனான சுமித்திரனுடைய தலைநகர் மிதிலை மிகவும் அழகானது. அந்த அரசன் யானைகளும் குதிரைகளும் காலாட்படையும் ஏராளமாக உடையவன். பொன்னும் முத்தும் மணிகளும் அவனிடம் குவிந்துள்ளன. சிற்றரசர்களின் சேனை அவன் வீரத்தைக் கண்டு நடுங்குகிறது. அவன் நண்பர்கள் நிறைந்தவன்; அறத்தில் ஆசை கொண்டவன். ஆதலால் இந்தக் குலம் போதிசத்துவருக்கு ஏற்றது." இதை மற்றவர்கள் மறுத்தார்கள்- "அந்த அரசன் இத்தகையவன் என்பது உண்மை; ஆனால் அவனுக்கு நிறையச் சந்ததிகள் இருப்பதுடன், அவன் மிகவும் முதியவனாதலால் இனி மகப் பேற்றுக்குத் தகுதியற்றவன். ஆதலால் அந்தக் குலமும் போதிசத்துவருக்கு ஏற்றதன்று."

"இப்படி அந்தத் தேவபுத்திரர்கள், நாவலந்தீவிலுள்ள பதினாறு அரசுகளில் இருந்த சிறியவையும் பெரியவையுமான குலங்களை ஆராய்ந்து பார்த்தார்கள். ஆனால் அவை யாவும் குற்றமுடையனவாக அவர்களுக்குத் தோன்றின."[1]

## எட்டே குலங்களைப்பற்றிய செய்தி

பதினாறு அரசுகளுக்குள் இங்கே எட்டு அரசகுலங்களைப் பற்றிய

1. மூல நூலிலுள்ள விஷயத்தின் சுருக்கமான மொழிபெயர்ப்பு இது.

வருணனையே இருக்கின்றது. இவற்றில் சுமித்திரனுடைய குலம் அவனுக்குப் பின்னாலேயே அழிந்து, விதேகர்கள் வஜ்ஜியரசில் சேர்ந்ததாகத் தோற்றுகிறது. மற்ற ஏழு குலங்களுக்குள், பாண்டவர்களின் பரம்பரையில் எந்த அரசன் ஆண்டான் என்ற குறிப்பு இல்லை; வேறு பௌத்த நூல்களிலும் இதைப் பற்றிய செய்தி கிடைக்கவில்லை. குரு நாட்டில் கௌரவியன் என்ற அரசன் ஆண்டதாக ரட்டபால ஸுத்தம் கூறுகின்றது. அவன் பாண்டவ குலத்தைச் சார்ந்தவன் என்பதற்கு ஏதும் சான்று இல்லை. எஞ்சிய ஆறு அரசகுலங்களைப்பற்றி இங்கே கூறியுள்ள செய்திகள் ஏறக்குறைய இப்படியே திரிபிடகத்திலும் இருக்கின்றன.

## சாக்கியர் குலம்

பௌத்த நூல்கள் சாக்கியர் குலத்தைப் பற்றி விரிவாக வரைகின்றன. அப்படி இருக்கும்போது, மேற்கூறிய ஆறு நாடுகளில் சாக்கியரின் பெயரே எங்கும் வரவில்லை. இது எப்படிப் பொருந்தும்? இதற்கு விடை இதுதான் - இந்தப் பட்டியல் தயாராவதற்கு முன்பே சாக்கியர்களின் சுதந்திரம் அழிந்து போயிற்று. அந்த நாடு கோசலத்தோடு சேர்ந்தது. அதனால்தான் இந்தப் பட்டியலில் சாக்கியர்களைப் பற்றிய குறிப்பே இல்லை.

போதிசத்துவர் இல்லத்தைத் துறந்து ராஜகிருகத்துக்கு எழுந்தருளிய போது, அரசன் பிம்பிசாரன் அவரைக் கண்டு, "தாங்கள் யார்?" என்று கேட்கிறான். அப்போது அவர் திருவாய் மலருகிறார்-

"அரசே, இங்கிருந்து நேரே இமயமலையின் அடிவாரத்தில் கோசல நாட்டைச் சார்ந்த ஒரு பகுதி இருக்கிறது. அங்குள்ள மக்கள் ஆதித்திய கோத்திரத்தையும் சாக்கியச் சாதியையும் சார்ந்தவர்கள். அந்தக் குலத்திலிருந்து, அரசே, நான் காமபோக விருப்பங்களை விட்டுப் பரிவிராஜகன் ஆனேன்." (ஸுத்தநிபாதம், பப்பஜ்ஜாஸுத்தம்.)

இந்தக் காதையில் 'கோஸலேஸு நிகேதினோ' என்ற மூலச் சொற்கள் முக்கியமானவை. கோசல நாட்டை வீடாகக் கொண்டவர்கள், அதாவது கோசல நாட்டில் சேர்த்து எண்ணப் பெறுகிறவர்கள் என்பது இதற்குப் பொருள். இதிலிருந்து சாக்கியர்களின் சுதந்திரம் முன்னரே எப்பொழுதோ அழிந்து போயிற்று என்பது எளிதில் தெரிகின்றது.

சாக்கியர்கள் கோசல அரசனுக்கு வரி செலுத்திவிட்டு, உள்நாட்டு ஏற்பாடுகளைத் தாங்களே கவனித்து வந்தார்கள். மகாநாமனுடைய அடிமைமகளைப் பஸேனதி மணந்த செய்தி முன்னமே வந்திருக்கிறது. இதைப் பற்றிப் பேராசிரியர் ரிஸ் டேவிட்ஸ் ஓர் ஐயத்தை எழுப்புகிறார். 'கோசல அரசனுடைய சர்வாதிகார ஆட்சியைச் சாக்கியர்கள் ஒப்புக்கொண்டிருந்தார்கள் என்றால் தங்கள் பெண்ணை அவனுக்குக் கொடுக்க மட்டும் அவர்கள் ஏன் மறுத்திருக்க வேண்டும்?' என்பது அவர்

கேள்வி.[1] ஆனால் இந்தியாவில் சாதி வேற்றுமை எவ்வளவு தீவிரமாக இருந்தது என்பது அவருக்குத் தெரிந்திராது. உதயபுர மன்னனான பிரதாபசிங்கன் அக்பருடைய பேராட்சியை ஒப்புக்கொண்டான்; ஆயினும் தன் மகளை அக்பருக்குக் கொடுக்க அவன் இசையவில்லை. கோசல குலம், 'மாதங்க இனத்தாரின் தவறுதலிலிருந்து பிறந்தது' என்று லலிதவிஸ்தரம் நவில்கின்றது. இந்தக் குலம் மாதங்க (புலையர்) இனத்திலிருந்து பிறந்திருக்க வேண்டும் என்று இதனால் தெரிகிறது. இத்தகைய குலத்தோடு மணக் கலப்புக் கொள்வதைச் சாக்கியர்கள் மறுத்ததில் வியப்பு என்ன இருக்கிறது?

## குழு அரசுகளின் ஆட்சிநிலை

இந்த அரசுகள் ஒரு காலத்தில் குழுக்கள் அல்லது மகாஜனங்களின் ஆதிக்கத்தில் விளங்கியதை முன்னரே சொல்லியிருக்கின்றேன். வஜ்ஜி, மல்லர், சாக்கியர் ஆகியவர்களைப்பற்றித் திரிபிடகத்தில் காணும் செய்திகளிலிருந்து, இந்த அரசுகளில் ஊர்தோறும் தலைவனாக இருந்தவனை ராஜா என்று அழைத்ததாகத் தெரிகிறது. இந்த ராஜாக்கள் அனைவரும் ஒன்று சேர்ந்து தமக்குள் ஒருவனைத் தலைவனாகத் தேர்ந்தெடுப்பார்கள். அந்தத் தலைவனுடைய ஆட்சிக் காலம் அவன் வாழ்நாள் முழுவதுமா அல்லது குறிப்பிட்ட காலத்துக்குத்தானா என்பது தெரியவில்லை. வஜ்ஜியில் மகாராஜா எவனும் இருந்ததாகப் புலப்படவில்லை. வஜ்ஜிகளின் படைத்தலைவனைப் பற்றிய குறிப்பு இருக்கிறதே தவிர, மகாராஜாவைப் பற்றியது ஒன்றும் இல்லை. ஒருகால் அவ்வப்போது வேண்டிய கால அளவுக்கு அவர்கள் தலைவனைத் தேர்ந்தெடுத்துச் செயலாற்றுவார்கள் போலும், நீதி வழங்குவதைப் பற்றியும் ஆட்சி முறையைப் பற்றியும் இந்தக் குழு அரசுகள் சில சட்டங்களை ஏற்படுத்தியிருந்தன; அவற்றைப் பின்பற்றியே இந்தக் குழு அரசர்கள் தங்கள் ஆட்சியை நடத்தினார்கள்.

## குழு அரசுகள் அழிந்தது ஏன்?

பதினாறு நாடுகளின் குழு அரசு நசித்து, பெரும்பாலான நாடுகளில் மகாராஜாவின் ஆட்சி நிலவியது. மல்லர்களின் இரண்டு சிறு நாடுகளும், வஜ்ஜிகளின் வலிய நாடு ஒன்றும் ஆகிய மூன்று சுதந்திர ராஜ்யங்களே குழுக்களின் ஆதிக்கத்தில் எஞ்சியிருந்தன; ஆனால் அவையும் ஏகாதிபத்திய ஆட்சி முறைக்கு இரையாகும் நிலையில் இருந்தன. இதற்குக் காரணங்கள் யாவை? குழு அரசர்களின் கேளிக்கை வாழ்வும்,

1. Buddhist India, பக். 11-12.

அரசியலில் அந்தணர்களின் ஆதிக்கமுமே இந்தப் புரட்சிக்கு முக்கியக் காரணங்களாக இருந்திருக்க வேண்டும் என்பது என் கருத்து.

குழு அரசர்களை யாரும் தேர்ந்தெடுப்பதில்லை. தகப்பனுக்குப் பிறகு மகன் அரசனாவான். வழிவழியாக இந்த உரிமை கிடைத்ததனால் இப்படிக் கேளிக்கையும் பொறுப்பற்ற தன்மையும் உண்டாவது இயல்புதான். லலிதவிஸ்த்ரத்தில் வரும் வஜ்ஜி வருணனையை முன்னரே படித்திருக்கிறோம். அதைக் கொண்டு பார்த்தால், இந்தக் குழு அரசர்கள் வலியவர்களாக இருந்தும் தமக்குள் ஒருவரிடம் மற்றவர் மதிப்பின்றித் தருக்கி வாழ்ந்தார்கள் என்றும், ஒவ்வொருவனும் தன்னையே அரசனாக எண்ணினான் என்றும் தெரிகிறது. ஆதலால்தான் புத்தருடைய பரிநிர்வாணத்துக்குப் பிறகு அஜாதசத்துரு இந்த வஜ்ஜிகளின் குழு அரசியல் பிளவை உண்டாக்கி இந்த நாட்டை எளிதில் கைப்பற்ற முடிந்தது.

பொது மக்கள் இந்தக் குழு அரசர்களுக்குப் பக்க பலமாக இருப்பது சாத்தியமன்று. ஒவ்வோர் அரசனும் தன்னால் இயன்றவரைக்கும் மக்களைக் கொடுமைப்படுத்தினான்; அதைத் தடுக்கும் வல்லமை மக்களுக்கோ மற்ற அரசர்களுக்கோ இல்லை. எனவே இந்த அரசர்கள் அனைவருமே அழிந்து, சர்வாதிகாரம் வாய்ந்த ஒரே அரசன் இருப்பதை மக்கள் ஓரளவுக்கு விரும்பினார்கள். மகாராஜா தன் வசமுள்ள அதிகாரிகளைக் கொடுமைப்படுத்துவான்; தலைநகரின் மருங்கில் எவளாவது அழகிய இளநங்கை தென்பட்டால் அவளைத் தன் அந்தப்புரத்தில் வைத்துக் கொள்வான். இப்படிச் சில அநீதிகளை அவன் செய்தாலும், குழு அரசர்களைப்போல அளவுக்கு மிஞ்சிய கொடுமைகளை அவன் செய்ய முடியாது. குழு அரசர்கள் ஊருக்கு ஊர் இருந்தமையால், மக்களில் யாருமே அவர்களுடைய கொடுமைக்குத் தப்ப முடியவில்லை. வரி சுமத்தியும், ஊதியமின்றி வேலை வாங்கியும் இந்த அரசர்கள் எல்லா மக்களையுமே துன்புறுத்தினார்கள். ஏகாதிபத்திய ஆட்சி நடத்தும் மகாராசனுக்கோ இப்படிக் குடியானவரைத் துன்புறுத்த வேண்டிய தேவை இல்லை. தன் கேளிக்கைகளுக்கும் வசதிகளுக்கும் வேண்டிய பணத்தை அவன் திட்டமான வரி விதித்து எளிதில் தண்ட முடிந்தது. ஆகவே பொது மக்கள், 'கருங்கல்லைச் சுமப்பதைவிடச் செங்கல்லைச் சுமப்பது தேவலை' என்ற முறையில் ஏகாதிபத்திய ஆட்சியை விரும்பியதில் வியப்பு இல்லை.

ஏகாதிபத்திய ஆட்சியில் புரோகிதத் தொழில், வம்ச பரம்பரையாகவோ, அந்தணர் சமூகத்தின் உடன்பாட்டினாலோ, அந்தணனுக்குத்தான் கிடைக்கும். முதல் அமைச்சன் முதலியவர்களின் தொழில்களும் அந்தணர்களுக்குத்தான் கிடைக்கும். எனவே ஏகாதிபத்திய ஆட்சியில் மிகுந்த நன்மையைப் பெற்று அநுபவித்தவர்கள்

பார்ப்பனர்கள். 'பிராம்மணக் கிரந்த'ங்களில் குழு அரசர்களைப் பற்றிய பெயரே எங்கும் இல்லை என்பது சிந்திக்கத்தக்கது. குழு ஆதிக்கமுள்ள அரசியல் முறையை அந்தணர்கள் அறவே விரும்பவில்லை என்பது இதனால் தெரிகிறது. சாக்கியர்களைப்போன்ற குழு அரசர்கள் அந்தணர்களை மதிப்பதில்லை என்று அம்பஷ்டன் என்ற பார்ப்பனன் அவர்கள்மீது குற்றம் சுமத்தியதாக, தீகநிகாயத்தில் அம்பட்டஸுத்தம் குறிப்பிடுகிறது. குழு அரசில் வேள்விகளுக்கு அடியோடு ஆதரவு கிடையாது; ஏகாதிபத்திய ஆட்சியிலோ மகாராஜாக்கள் அந்தணர்களுக்கு வேள்வி நடத்த வம்சபரம்பரையாக இறையிலி நிலங்களைக் கொடுத்தார்கள். பிம்பிசாரன் ஒருவனுடைய ஆட்சியில் மட்டும் ஸோணதண்டன், கூடதந்தன் முதலிய பல அந்தணர்களுக்கும், அது போலவே கோசல நாட்டில் போக்கரஸாதி (பௌஷ்கர ஸாதி), தாருக்கன் (தாருக்ஷன்) முதலிய அந்தணர்களுக்கும் பெரிய பெரிய மானியங்கள் இருந்ததாக ஸுத்தபிடகம் விரித்துரைக்கின்றது.

எனவே, 'ஒருவரை ஒருவர் ஆதரித்துப் பெருநன்மையைப் பெறுவீர்களாக' என்று கீதையில் சொன்ன மாதிரி, அந்தணர் இனமும் ஏகாதிபத்திய அரசியல் முறையும் ஒன்றுக்கு ஒன்று உதவி செய்துகொண்டு தமது ஆதிக்கத்தைப் பெருக்கிக்கொள்வது எளிதாயிற்று.

புத்தருடைய காலத்தில் அந்தணர்களைக் காட்டிலும் சிரமணர்களின் (துறவிகளின்) பெருமை மேன்மேலும் வளர்ந்தது. அடுத்த அத்தியாயம் இதைத் தெளிவாக விளக்கும். குழு ஆட்சியுள்ள நாடுகளில் இந்தச் சிரமணர்களுக்கு மதிப்பு இருந்தது. ஏனென்றால் இந்த நாடுகளில் வேள்வியை யாரும் கேட்பாரில்லை. ஆயினும், ஆன்ம சிந்தனையில் மூழ்கியிருந்தமையால், அரசியலைப் பற்றிச் சிந்தித்து இந்தக் குழு அரசுகளில் என்ன சீர்திருத்தங்கள் செய்யலாம் என்று வழி கண்டுபிடிக்க இந்தத் துறவிகளுக்கு நேரமே இல்லை. நாட்டில் நடக்கும் அரசியல் நிகழ்ச்சியாவும் இன்றியமையாதனவே என்று இவர்கள் கருதியதாகத் தெரிகிறது.

குழு அரசர்களிடம் புத்தர் மதிப்புக் கொண்டிருந்தார் என்பது தெளிவு. வஜ்ஜிகளின் முன்னேற்றத்துக்கு உரிய ஏழு நியமங்களை அவர் கூறினார். ஆனால் அவருங்கூட, இந்தப் பழைய அரசியலை மாற்றிப் புதிய ஒழுங்கான அரசியலை எப்படி நிறுவ முடியும் என்பது பற்றித் தம் சிந்தனைகளை வெளியிட்டதாகத் தெரியவில்லை. குழு அரசர்களில் எவனாவது ஒருவன் கொடுமை செய்தால் மற்ற அரசர்கள் ஒன்று சேர்ந்து அவனைத் தடுப்பார்களா? அல்லது, இந்தக் குழு அரசர்கள் யாவரையுமே மக்கள் அவ்வப்பொழுது தேர்ந்தெடுத்துத் தங்கள் ஆதிக்கத்தில் அவர்களை வைத்துக் கொள்வார்களா? - இதுபோன்ற சிந்தனைகள் பௌத்த இலக்கியத்தில் எங்குமே காணக் கிடைப்பதில்லை.

புத்தரைப் பின்பற்றியவர்களோ குழு அரசுகளைப் பற்றிய கருத்தையே வெளிப்படையாகக் கைவிட்டார்கள். தீகநிகாயத்தில், நல்ல அரசியல் முறைக்கு மாதிரி காண்பிக்கும் சக்கவத்தி ஸுத்தம், மஹாஸுதஸ்ஸன ஸுத்தம் என்ற இரண்டு சூத்திரங்கள் இருக்கின்றன. அவை, சக்கரவர்த்தி யான அரசனுடைய பெருமையை மிகைப்பட வருணித்திருக்கின்றன. அந்தணர்களின் ஸம்ராட்டுக்கும் இந்தச் சக்கரவர்த்திக்கும் ஒரே ஒரு வேறுபாடு- முதல்வன் (அதாவது ஸம்ராட்), பொது மக்களைப் பற்றிக் கவலைப்படாமல் மிகுதியான யாகயக்ஞங்கள் செய்து அந்தணர்களை மட்டும் ஓம்புவான்; மற்றவன், மக்கள் அனைவரையும் நியாயமாக நடத்தி இன்பம் விளைவிக்கப்பாடுவடுவான். நாட்டில் அமைதி நிலவியதும் அவன் மக்களுக்குச் செய்யும் உபதேசம் இது-

"உயிர்களைக் கொல்லலாகாது, திருடலாகாது, பிறன்மனை விழைதலாகாது, பொய் சொல்லலாகாது, மது அருந்தலாகாது."

அதாவது பௌத்த இல்லறத்தாரின் பஞ்ச சீல நியமங்களைக் காக்கும்படி இந்தச் சக்கரவர்த்திகள் உபதேசம் செய்வார்கள். எனவே, அந்தணர்களுடைய கருத்தைக் கொண்டு பார்த்தாலும் சரி, புத்தரைப் பின்பற்றியவர்களுடைய கருத்தைக் கொண்டு பார்த்தாலும் சரி, மொத்தத்தில் ஏகாதிபத்திய ஆட்சி முறையே நல்லது என்ற முடிவு ஏற்பட்டது. தத்துவத்தில் மாறுதல் இல்லை. விரிவுரையில்தான் மாறுதல்.

ஆனால் கோதம போதிசத்துவரைப் பொறுத்த வரையில் குழு ஆட்சி முறைதான் அவர் நெஞ்சில் பதிந்தது. புத்தர் தமது சங்கத்தை இந்தக் குழு ஆட்சிமுறையை அடிப்படையாகக் கொண்டே நிறுவினார் என்று தோன்றுகிறது. ஆதலினால்தான் இந்தக் குழு அரசுகளைப் பற்றிக் கிடைக்கும் அற்ப சொற்பமான செய்திகளும் மிகுந்த மதிப்பும் வாய்ந்தவையாம்.

# 3. அந்தக் காலத்துச் சமய நிலை

## தவறான சிந்தனைப்போக்கு

'முதல்முதலில் அந்தணர்கள் வேதங்களுக்கே முழுப் பெருமை தந்தார்கள்; பிறகு அவர்கள் வேள்விகளைப் போற்றினார்கள்; வேத வேள்விகளினின்று உபநிடதங்களாகிய தத்துவ ஞானம் பிறந்தது. பின்பு புத்தர் அந்த ஞானத்தில் சீர்திருத்தங்கள் செய்து தமது சமயத்தை நிறுவினார்' என்று இந்தக் காலத்தில் பல அறிஞர்கள் கருதுகிறார்கள். இந்தக் கருத்து மிகவும் தவறானது; மயக்கத்திலிருந்து எழுந்தது. இதை நீக்கினாலன்றி, புத்தருடைய சரித்திரத்தை உள்ளபடி அறிய முடியாது. ஆதலால் இந்த அத்தியாயத்தில், புத்தருடைய காலத்தில் சமய நிலை எவ்வாறு இருந்தது என்பதைச் சுருக்கமாகக் கூறுகிறேன்.

## வேள்விப் பண்பாட்டு வெள்ளம்

ஆரியர்களுக்கும் தாசர்களுக்கும் நிகழ்ந்த போராட்டத்தினடியாகச் சப்தசிந்துப் பிரதேசத்தில் வேள்விப் பண்பாடு உதித்த வரலாறும், பரீட்சித்தின் ஆட்சியிலும் அவன் மகன் ஜனமேஜயனுடைய ஆட்சிக் காலத்திலும் இந்த வைதிகப் பண்பாடு குரு நாட்டில் நிலையாகக் குடிகொண்ட செய்தியும் முதல் அத்தியாயத்தில் வந்திருக்கின்றன. ஆனால் அந்தப் பண்பாட்டு வெள்ளம் குரு நாட்டைக் கடந்து கிழக்கே வேகமாகப் பெருகவில்லை. அந்த வெள்ளத்தின் போக்கு, குரு நாட்டுக்குள்ளேயே குன்றிவிட்டது. இது இவ்வாறு குன்றியதற்கு முக்கியக் காரணம், கிழக்கு நாடுகளில் முனிவர்களின் அஹிம்சைக்கும் தவத்துக்கும் பெருமை கொடுத்த மக்கள் மிகுதியாக இருந்தார்கள் என்பதுதான்.

## தவசிகளான முனிவர்கள்

ஜாதக அட்டகதையில் தவத்தினரான ரிஷிகள் முனிவர்களைப் பற்றிப் பல கதைகள் வந்திருக்கின்றன. இவர்கள் காட்டில் சென்று தவம் செய்ததாக அவற்றிலிருந்து தெரிகிறது. எந்த உயிரையும் துன்புறுத்தாமல், கூடிய அளவு தம் உடலை வருத்துவதே இவர்களுடைய தவத்தின் முக்கிய நோக்கமாகும். இவர்கள் தனித்தனியாகவோ, சங்கமாகச் சேர்ந்தோ இருந்து வந்தார்கள். ஒவ்வொரு சங்கத்திலும் ஐந்நூறு தவசிகளான பரிவி

ராஜகர்கள் இருந்ததாகப் பல ஜாதகக் கதைகள் குறிப்பிடுகின்றன. காட்டிலுள்ள கிழங்கு, வேர், கனி முதலியவற்றை உண்டு இவர்கள் வாழ்ந்தார்கள்; எப்பொழுதாவது உப்பும் புளிப்புமான பண்டங்களை உண்ணும் பொருட்டு மக்கள் வாழும் இடங்களுக்கு வருவார்கள். இவர்களிடம் மக்கள் பெருமதிப்பு வைத்திருந்தார்கள்; இவர்களுக்குத் தேவையான எந்தப் பண்டத்தையும் குறைவின்றிக் கொடுத்தார்கள். இந்த முனிவர்களுக்கு மக்களிடம் மிகுந்த செல்வாக்கு இருந்தது; ஆயினும் இவர்கள் ஜனங்களுக்குத் தருமோபதேசம் செய்வதில்லை. இவர்களுடைய ஒழுக்கத்தை நேரில் கண்டு மக்கள் அஹிம்சையை ஒப்புக்கொண்டார்கள்; அவ்வளவுதான்.

## முனிவர்கள் அப்பாவிகள்

இந்தத் தவசிகளுக்கு உலக விவகாரமோ சூழ்ச்சியோ தெரியாது. ஆதலால் சில சமயங்களில் இவர்கள் இல்லறத்தில் மாட்டிக் கொள்வார்கள். ரிச்யசிருங்கரைப் பெண்கள் ஏமாற்றி அழைத்து வந்த வரலாறும், பராசரர் சத்தியவதியிடம் ஈடுபட்ட கதையும் புராணங்களில் வருணிக்கப் பெற்றுள்ளன. இவற்றைத் தவிர, எத்தனையோ ரிஷிகளும் முனிவர்களும் கோணல் வழியில் சென்ற வரலாறுகள் பல, ஜாதக அட்டகதையிலும் காண்கின்றன. அவற்றுள் ஒன்றை மட்டும் இங்கே சொல்கிறேன்-

பழங்காலத்தில் வாராணசி நகரில் பிரம்மதத்தன் என்ற அரசன் ஆட்சி செய்தபொழுது, போதிசத்துவர் காசி நாட்டில் ஔதீச்ய அந்தணர் குலத்தில் பிறந்தார். வயசு வந்ததும் அவர் துறவு பூண்டு, ஐந்நூறு சீடர்களோடு இமயமலையின் அடிவாரத்தில் வாழலானார். மழைக்காலம் நெருங்கியதும் சீடர்கள் அவரிடம், "ஆசிரியரே, நாம் மக்களின் இருப்பிடத்துக்குச் சென்று உப்பும் புளிப்புமான பண்டங்களை உண்ணலாம், வாருங்கள்" என்றார்கள். ஆசிரியரோ, "நீண்ட ஆயுள் வாய்ந்த மாணவர்களே, நான் இங்கேயே இருக்கிறேன். நீங்கள் போய் உடலுக்கு உகந்த பண்டங்களை உண்டு வாருங்கள்" என்றார்.

அந்தத் தவசிகள் வாராணசிக்கு வந்தார்கள். அரசன் அவர்களுடைய புகழைக் கேள்வியுற்று, அவர்களைச் சாதுர்மாசத்தில் தன் பூங்காவனத்தில் தங்கும்படி வேண்டினான்; அவர்களுடைய உணவுக்கும் பானத்துக்கும் ஏற்பாடுகளைத் தன் அரண்மனையிலேயே செய்தான். ஒரு நாள் நகரத்தில் உண்டாட்டு விழா நிகழ்ந்தது. துறவிகளுக்குக் காட்டில் கள் கிடைப்பது அரிதாகையால் அரசன் அவர்களுக்கு உயர்ந்த மதுவை வழங்கினான். துறவிகள் கள்ளைக் குடித்துக் கூத்தாடினார்கள், பாடினார்கள்; சிலர் ஒழுங்கில்லாமல் தரையில் விழுந்தார்கள். மீண்டும் பழைய நிலைக்கு வந்தபோது அவர்கள் மிகவும் மனவருத்தம் அடைந்தார்கள். அன்றைக்கே

அவர்கள் அரசனுடைய பூங்காவை விட்டு இமயத்துக்குத் திரும்பினார்கள்; முறையே தங்கள் ஆசிரமத்துக்கு வந்து ஆசிரியரை வணங்கி ஒரு புறமாக அமர்ந்தார்கள். "மக்கள் வாழும் ஊர்களில் உங்களுக்குப் பிட்சை வருத்தமின்றிக் கிடைத்ததா? நீங்கள் முழுப்பான்மையோடு (சமக்கிரபாவத்தோடு) இருந்தீர்களா?" என்று ஆசிரியர் அவர்களைக் கேட்டார். அவர்கள் கூறினார்கள் "ஆசிரியரே, நாங்கள் சுகமாக இருந்தோம்; ஆனால் எதைக் குடிக்கலாகாதோ அதைக் குடித்தோம். நாங்கள் மதுவைக் குடித்தோம், ஆடினோம், பாடினோம், அழுதோம், வெறியூட்டும் கள்ளைக் குடித்து நாங்கள் குரங்குகள் ஆகாமல் தப்பினோமே, அதுவே பெரிது!"[1]

## முனிவர்களிடையே சாதிவேற்றுமை இல்லை

தவம் செய்த முனிவர்களிடையே சாதிவேற்றுமைக்குச் சிறிதும் இடம் இல்லை. எந்தச் சாதியைச் சேர்ந்தவனும் தவசியாகிவிட்டால் சமூகம் முழுவதும், அவனை மதித்து வந்தது. உதாரணமாக, ஜாதகத்தில் வரும் மாதங்க ரிஷியின் கதையை[2] இங்கே சுருக்கமாகக் கூறுகிறேன்-

மாதங்கன் வாராணசி நகருக்குப் புறம்பே புலையர் குலத்தில் பிறந்தான். வயசு வந்ததும் அவன் ஒரு நாள் வழியில் வாராணசியைச் சார்ந்த செட்டிப் பெண்ணாகிய திருஷ்டிமங்கலிகை என்பவளைக் கண்டான். கண்டதும் ஒரு புறமாக ஒதுங்கி நின்றான். அந்த இளமங்கை தன் வேலைக்காரர்களிடம், "இதோ ஒதுங்கி நிற்பவன் எவன்?" என்று கேட்டாள். "அவன் புலையன்" என்று அவர்கள் சொன்னதும், அதை அபசகுனமாக எண்ணி அவள் அங்கிருந்தே வீட்டுக்கு திரும்பினாள்.

திருஷ்டமங்கலிகை இரண்டொரு மாதத்துக்கு ஒரு தடவை பூங்காவுக்குச் சென்று, தன்னோடு இருப்பவர்களுக்கும் அங்கே வரும் மற்றவர்களுக்கும் காசு கொடுப்பது வழக்கம். அவள் இப்படி வீடு திரும்பினதால் அன்று அவர்கள் அனைவருக்கும் ஏமாற்றமாகிவிட்டது. அவர்கள் மாதங்கனை உணர்விழக்கும் வரையில் அடித்துத் தெருவில் கிடத்திச் சென்றார்கள். சிறிது நேரங்கழித்து அவனுக்கு உணர்வு வந்தது அவன் திருஷ்டமங்கலிகையின் தந்தையினுடைய வீட்டு வாசற்படியில் போய்க் குறுக்கே விழுந்து கிடந்தான் "ஏன் இப்படித் தொல்லை கொடுக்கிறாய்?" என்று செட்டி அவனைக் கேட்டபோது திருஷ்ட மங்கலிகையை அழைத்துக் கொள்ளாமல் நான் இங்கிருந்து நகர மாட்டேன்" என்று அவன் சொன்னான். ஏழு நாள் அவன் இப்படிக் கிடந்ததும், செட்டி வேறு வழியில்லாமல் தன் பெண்ணை அவனிடம்

1 ஸுராபான ஜாதகம் (81).

2. மாதங்க ஜாதகம் (497).

ஒப்படைத்தான். அவளை அழைத்துக்கொண்டு மாதங்கன் புலைச்சேரிக்குச் சென்றான்.

திருஷ்டமங்கலிகை அவனுக்கு மனைவியாக வாழ ஆயத்தமாக இருந்தாள்; ஆயினும் அவன் அவளிடம் கணவன் என்ற முறையில் நடந்துகொள்ளாமல், காட்டுக்குப் போய்க் கடுமையான தவம் செய்தான். ஏழு நாட்கள் கழித்து அவன் திரும்பி வந்து, திருஷ்டமங்கலிகையிடம், "நீ ஊராருக்குச் சொல்; 'என் கணவன் மாதங்கன் அல்ல, மகாப்பிரம்மா. அவன் பௌர்ணிமையன்று சந்திரமண்டலத்திலிருந்து பூமிக்கு இறங்கி வரப்போகிறான்' என்று தெரிவி" என்றான். அப்படியே திருஷ்டமங்கலிகை எல்லாருக்கும் அறிவித்தாள். பௌர்ணிமையன்று இரவு, பெரிய மக்கள் கூட்டம் புலைச்சேரியில் அவளுடைய வீட்டுக்கு எதிரில் குழுமியது. அப்போது மாதங்க முனிவன் சந்திர மண்டலத்திலிருந்து இறங்கி வந்து, தன் குடிசையில் நுழைந்து திருஷ்டமங்கலிகையின் உந்தியைத் தன் கட்டைவிரலால் தொட்டான்.

அங்கே கூடியிருந்த பிரம்ம பக்தர்கள் இந்த வியத்தகு நிகழ்ச்சியைக் கண்டு, திருஷ்டமங்கலிகையை வாராணசி நகருக்கு ஊர்வலமாகக் கொண்டு சென்று, நகரத்துக்கு நடுவே பெரிய மண்டபம் ஒன்று அமைத்து, அங்கே அவளை வழிபட்டார்கள். மக்கள் அவளைப் போற்றினார்கள். ஒன்பது மாதங்களுக்குப் பிறகு அதே மண்டபத்தில் அவளுக்கு ஆண்குழந்தை பிறந்தது. மண்டபத்தில் பிறந்ததனால் அந்தக் குழந்தைக்கு மாண்டவியன் என்று பெயர் வைத்தார்கள். பொது மக்கள் அந்த மண்டபத்துக்கு அருகிலேயே பெரிய மாளிகை கட்டி அங்கே தாயையும் மகனையும் இருக்கச் செய்து வழிபட்டார்கள்.

சிறு வயசிலிருந்தே மாண்டவிய குமாரனுக்குக் கல்வி கற்பிக்கப் பெரிய பெரிய வைதிகப் பண்டிதர்கள் தாமாக முன்வந்தார்கள். அவன் மூன்று வேதங்களிலும் கரை கடந்தவனானான்; அந்தணர்களுக்கு நிரம்ப உதவிகள் செய்தான். ஒரு நாள் மாதங்க ரிஷி அவன் வீட்டு வாசலில் பிட்சைக்கு வந்து நின்றான். அப்பொழுது மாண்டவியன், "கந்தைகளைச் சுற்றிக்கொண்டு பிசாசுபோல இங்கே நிற்கிற நீ யார்?" என்று கேட்டான்.

"உன் வீட்டில், அன்னமும் பானமும் நிறைய இருக்கின்றன. ஆகையால் ஏதாவது மிச்சம் மீதி கிடைக்கும் என்றுதான் இங்கே வந்து நிற்கிறேன்" என்றான் முனிவன்.

"ஆனால் இந்த அன்னம் அந்தணர்களுக்குத்தான்; உன்னைப் போன்ற இழிந்தவனுக்குக் கொடுப்பதற்கு அன்று" என்று மாண்டவியன் மொழிந்தான்.

இருவருக்கும் நீண்டநேரம் வாக்குவாதம் நடந்தது. இறுதியில் மாண்டவியன் தன் வாயில்காப்பவர்கள் மூவரை விட்டு மாதங்கனை உதைத்து வெளியே அனுப்பினான். ஆனால் இதன் பயனாக

மாண்டவியனுக்கு வாய் அடைத்துவிட்டது; கண்கள் பஞ்சடைந்தன; அவன் உணர்விழந்து தரையில் விழுந்தான். அவனோடு இருந்த அந்தணர்களும் ஏறக்குறைய இதே நிலையை அடைந்தார்கள். முகம் கோணி இழுக்க, அவர்கள் யாவரும் தரையில் குப்புறப் புரண்டார்கள். இந்த நிகழ்ச்சியைக் கண்டு, திருஷ்டமங்கலிகை பயந்துவிட்டாள். ஓர் ஏழைத் தவசியின் சக்தியினால் தன் மகனும் மற்ற அந்தணர்களும் இந்த நிலைக்கு வந்திருக்கிறார்கள் என்பதை அறிந்ததுமே அவள் அந்தத் தவசியைத் தேடிச்சென்றாள். மாதங்க முனிவன் ஓர் இடத்தில் உட்கார்ந்து, பிட்சையில் கிடைத்த கஞ்சியைக் குடித்துக் கொண்டு இருந்தான். திருஷ்டிமங்கலிகை அவனை அணுகித் தன் மகனை மன்னிக்க வேண்டினாள். மாதங்கன் தன் எச்சிற் கஞ்சியில் சிறு பகுதியை அவளிடம் கொடுத்து, "இந்தக் கஞ்சியை மகனுக்கும் மற்ற அந்தணர்களுக்கும் வாயில் ஊற்று. அவர்கள் நலம் பெறுவார்கள்" என்றான். திருஷ்டமங்கலிகை அவ்வாறே செய்தாள்; யாவரும் புழையபடி ஆனார்கள். ஆனால், புலையனுடைய எச்சிலினால் அந்தணர்கள் உடல்நலம் பெற்ற செய்தி வாராணசி நெடுகிலும் பரவியது. அப்போது மக்களின் பழிச்சொல்லுக்கு நாணி, அந்தணர்கள் மேஜ்ஜ (மேத்திய) நாட்டுக்குப் போனார்கள். மாண்டவியன் மட்டும் வாராணசியிலேயே இருந்தான்.

மாதங்க ரிஷி சில காலம் இங்கும் அங்கும் சுற்றிக் கொண்டு மேஜ்ஜ நாட்டுக்குப் போய்ச் சேர்ந்தான். மாண்டவியனோடு இருந்தவர்களான அந்தணர்களுக்கு இந்தச் செய்தி தெரிந்ததும், அவர்கள் மேஜ்ஜ அரசனிடம் போய், "புதிதாக வந்திருக்கும் இந்தப் பிச்சைக்காரன் பெரிய மாயாவி; அவன் நாடு முழுவதையும் அழித்துவிடுவான்" என்று சொன்னார்கள். இதைக் கேட்டதும் அரசன், மாதங்கனைத் தேடுவதற்குத் தன் படைவீரர்களை அனுப்பினான். அவர்கள் அவனை ஒரு சுவர் அருகில் கண்டார்கள் அவன் அங்கே உட்கார்ந்து, பிட்சையில் கிடைத்த சோற்றைத் தின்றுகொண்டிருந்தான். அந்த இடத்திலேயே அவர்கள் அவனைக் கொன்றார்கள். இதனால் தேவர்கள் கொதிப்படைந்தார்கள்; அந்த நாடு பாழாகிவிட்டது.

மாதங்கனைக் கொன்றமையால் மேஜ்ஜ நாடு பாழான செய்தி, அநேக ஜாதகக் கதைகளில் வருகிறது. இந்தக் கட்டுக்கதையில் எவ்வளவு உண்மை இருக்கிறது என்பதைக் கூற முடியாது. ஆயினும், மாதங்க ரிஷி புலையனாக இருந்தவன் என்பதும், அந்தணர்களும் க்ஷத்திரியர்களுங்கூட அவனை வழிபட்டு வந்தார்கள் என்பதும் வஸலஸுத்தத்தில் வரும் இந்தக் காதைகளிலிருந்து தெளிவாகின்றன-

(1) இதற்கு நான் ஓர் உதாரணம் தருகிறேன். நாய் மாமிசம் தின்னும் புலையனுடைய மகன் ஒருவன் மாதங்கன் என்று பெயர் பெற்றிருந்தான்.

(2) அந்த மாதங்கனுக்கு மிகவும் சிறந்த அரிய புகழ் கிடைத்தது. அவனுக்குப் பணிவிடை செய்யப் பல க்ஷத்திரியர்களும் அந்தணர்களும் எப்போதும் இருப்பார்கள்.

(3) பற்றை அறுக்கும் பெருவழியையும் தேவயானத்தையும் (சமாதி) கடைப்பிடித்து அவன் பிரம்மலோகத்துக்குச் சென்றான். பிரம்மலோகத்தில் உதிப்பதற்கு அவனுடைய பிறவி அவனுக்குத் தடையாக இல்லை.

## சம்பூகனுடைய கதை வெறும் கற்பனை

சம்பூகன் என்ற பெயருடைய சூத்திரன் காட்டில் தவம் செய்துகொண்டு இருந்தான். அதனால் ஒரு பார்ப்பனனுடைய மகன் செத்துப் போனான். ராமனுக்கு இந்தச் செய்தி தெரிந்ததும் அவன் காட்டுக்குச் சென்று சம்பூகனுடைய தலையை வெட்டிப் பார்ப்பனப் பிள்ளையைப் பிழைக்க வைத்தான். இந்தக் கதை ராமாயணத்தில் மிகவும் விரிவாக வருகின்றது. இந்தக் கதைக்கு அமைதியான வடிவம் கொடுத்து, பவபூதி தனது உத்தரராமசரிதத்திலும் இதைக் குறிப்பிட்டிருக்கின்றன. ஆனால் இத்தகைய நிகழ்ச்சி, புத்தருக்கு முன்போ, அல்லது பௌத்த சமயம் இந்தியாவில் இருந்த வரையிலோ நடந்ததாக எங்குமே சான்று கிடைக்கவில்லை. அரசன் இன்ன வகையாக நடந்து கொள்ள வேண்டும் என்பதைக் காண்பிப்பதுதான் இந்தக் கதையைப் படைத்ததற்கு நோக்கமாக இருக்கும்.

## சிரமணர்

காட்டில் வாழும் இந்த முனிவர்களைத் தாபதர் அல்லது பரிவிராஜகர் என்பர். இவர்கள் எவ்வகையாகத் தவம் செய்தார்கள் என்பதுபற்றி விசேடமாக ஏதும் தெரியவில்லை. இந்தத் தவசிகளின் சங்கங்களிலிருந்து தான், மக்கள் வாழும் இடங்களுக்கு வந்து தருமோப தேசம் செய்யும் வெவ்வேறு சிரமண சங்கங்கள் ஏற்பட்டன. சிரமணன் என்ற சொல் 'ச்ரம்' என்ற தாதுவிலிருந்து வந்தது. உழைப்பவன் என்று இதற்குப் பொருள். உடலினால் உழைக்கும் தொழிலாளிகளின் பெருமை இன்று வளர்ந்து வருவது போலவே, புத்தர் காலத்தில் சிரமணர்களின் பெருமை வளர்ந்து வந்தது. ஆனால் தொழிலாளிகளுக்கும் இவர்களுக்கும் வேற்றுமை என்னவென்றால், சமூகத்துக்குப் பயன்படும் பொருள்களை விளைவிக்கத் தொழிலாளிகள் பாடு படுகிறார்கள்; சிரமணர்களோ சமூகத்தில் ஆன்ம விழிப்பு உண்டாக்கப் பாடுபட்டு வந்தார்கள். இவர்கள் தவத்தினால் உடலுக்குச் சிரமம் கொடுத்ததனால் இவர்களுக்குச் சிரமணர் என்ற பெயர் வந்ததுபோலும். ஆயினும் காட்டில் வாழும்

முனிவர்களுங்கூட உடலைத் தவத்தினால் வருத்தித்தான் வந்தார்கள்; ஆனால் அவர்களைச் சிரமணர் என்று சொல்வதில்லை. எனவே, மக்களின் நன்மைக்காகத் தாமாகவே சிரமப்படுகிறவர்கள் என்பதனால் இவர்களுக்குச் சிரமணர் என்ற பெயர் ஏற்பட்டது. இப்படிக் கொள்வதே மிகவும் பொருத்தமாகும்.

## அறுபத்துமூன்று சிரமண மதங்கள்

புத்தருடைய காலத்தில் இப்படிச் சிறியவையும் பெரியவையுமாக அறுபத்துமூன்று சிரமண மதங்கள் நிலவின. 'யானி ச தீணி யானி ச ஸட்டி' என்ற வாக்கியத்தில், மூன்றும் அறுபதுமான மதங்கள் கூறப் பெற்றுள்ளன. இவற்றில் பௌத்த மதமும் சேர்ந்ததா அல்லவா என்பதைச் சொல்ல முடியாது. அதுவும் சேர்ந்தது என்று வைத்துக்கொண்டால், பாலி இலக்கியத்தில் பல இடங்களில் காணும் அறுபத்திரண்டு மதங்களைப் பற்றிய குறிப்பு (த்வாஸட்டி திட்டிகதானி என்பது), சரியாகப் பொருந்திப் பொருளுடையதாகிறது. அதாவது, புத்தருடைய சிரமண மதத்தைத் தவிர அப்பொழுது பின்னும் அறுபத்திரண்டு சிரமண மதங்கள் இருந்தன என்று முடிவாகிறது. இந்த அறுபத்திரண்டு சிரமண மதங்களின் கொள்கைகளை விரிவாகக் காண்பிக்க முயலுகிறது, தீகநிகாயத்தைச் சார்ந்த முதல் பிரஹ்மஜாலஸூத்தம். ஆனால் அது போலி என்று தோற்றுகிறது. இந்த ஸூத்தம் எழுதப்பெற்ற காலத்தில், அறுபத்திரண்டு என்ற எண்ணைத் தவிர வேறு எவ்வகையான செய்தியும் இருந்ததில்லை. எனவே இந்த ஸூத்தத்தை எழுதியவன், அறுபத்திரண்டு என்ற எண்ணை நிரப்புவதற்காகப் புதிய வரலாறுகளை உண்டாக்கி இதில் சேர்த்து விட்டான். பழமையான இந்த அறுபத்திரண்டு சிரமண மதங்களைப் பற்றிய உண்மைச் செய்திகள் அழிந்ததற்குக் காரணம், அவற்றுள் பிரசித்தமான மதங்கள் மிக்க் குறைவாக இருந்தமையேயாம். சின்னஞ்சிறு மதங்கள் பெரிய மதத்தில் சேர்ந்துகொண்டன. உதாரணமாக, இந்தக் காலத்திலேயே பாருங்களேன்; புவா, பைராகி முதலிய மதங்களைச் செம்மையாக ஆராய்ந்தால் அவற்றின் எண்ணிக்கை ஏராளமாக இருக்கும்; ஆனால் அவற்றில் முக்கியமானவற்றை- கபீர், தாது, உதாசி முதலிய மதங்களை -விரல் விட்டு எண்ணிவிடலாம்.

## தவத்தின் வகைகள்

புத்தருடைய காலத்தில் மிகப் பெரிய சிரமண சங்கங்கள் ஆறே இருந்தன. அவற்றிலுங்கூட நிக்கந்தச் (நிர்க்கிரந்த) சிரமணர்களின் மதம் முதன்மையானது. இந்த மதத்தை நிறுவியவர் பார்சுவமுனி என்பது சரித்திர வாயிலாகத் தெரிகிறது. அவருடைய பரிநிர்வாணம், புத்தருடைய

பிறப்புக்கு 193 ஆண்டுகளுக்கு முன்பு ஆயிற்று என்று ஊகிக்கலாம். அதற்கு முன்னரே நாற்பது ஐம்பது ஆண்டுகளாவது பார்சுவ தீர்த்தங்கரர் தருமோபதேசம் செய்திருப்பார். இவருடைய மதத்தைப் பற்றியும் மற்றச் சிரமண சங்க நாயகர்களுடைய மதத்தைப்பற்றியும் பின்னால் விரிவாகக் கூறுவேன். இப்பொழுது, இவர்களுடைய தவத்தின் வகைகள் யாவை என்பதை மட்டுமே குறிப்பிடுகிறேன். ஏனென்றால், இந்தத் தவசிகள் எவ்வகையாகத் தவம் செய்து வந்தார்கள் என்பதைச் சிறிதளவாவது அறிந்துகொள்ள வேண்டியது அவசியம். சிரமணர்களுடைய தவ வகைகளைப்பற்றிப் பல ஸுத்தங்கள் கூறுகின்றன. ஆனால் அவற்றுக்குள் மஜ்ஜிமநிகாயத்து மஹாஸீஹநாத ஸுத்தத்தில் வந்துள்ள தவ வருணனை மிகவும் சிறப்பாக இருப்பதனால் அதன் சாரத்தை இங்கே தெரிவிக்கிறேன்.

புத்த பகவான் ஸாரிபுத்தனுக்குக் கூறுகிறார்- "ஸாரிபுத்தனே, நான் நால்வகையாகத் தவம் செய்தது என் நினைவுக்கு வருகிறது. நான் தவமுடையவனானேன், வறட்சியுடையவனானேன், அருவருப்புடையவனானேன், தனிமையுடையவனானேன்."

## தவம்

"ஸாரிபுத்தனே, என் தவம் எப்படி இருந்தது என்பதைச் சொல்கிறேன்:

[1](நி) "நான் ஆடையின்றி இருந்து வந்தேன். உலகப் பழக்கங்களைக் கடைப்பிடிப்பதில்லை. கையில் பிட்சை வாங்கி உண்பேன். 'பதந்தரே, இப்படி வாருங்கள்' என்று யாராவது சொன்னால் நான் கேட்பதில்லை. 'பதந்தரே, நில்லுங்கள்' என்று யாராவது சொன்னால் நான் கேட்பதில்லை. உட்கார்ந்த இடத்தில் கொண்டு கொடுத்த உணவையும், எனக்காகச் சமைத்த உணவையும், அழைப்பையும் நான் ஏற்பதில்லை. எந்தப் பாண்டத்தில் உணவைச் சமைத்தார்களோ அந்தப் பாண்டத்தோடு அதைக் கொண்டு வந்து கொடுத்தால் நான் ஏற்பதில்லை. உரலிலிருந்து தின்பண்டம் கொண்டு வந்து கொடுத்தால் அதை ஏற்பதில்லை. வாசற்படிக்கும் வாசற்காலுக்கும் அப்புறம் நின்று கொடுக்கும் பிட்சையை நான் ஏற்பதில்லை. இருவர் உண்ணும்போது ஒருவர் எழுந்து கொடுக்கும் பிட்சையை ஏற்பதில்லை. கருவுற்றவள், குழந்தைக்குப் பாலூட்டுகிறவள், கணவனுடன் தனிமையில் இருப்பவள் ஆகிய பெண்களிடமிருந்து நான் பிச்சையை ஏற்பதில்லை. கூட்டத்திலும் திருவிழாவிலும் சமைத்த உணவை ஏற்பதில்லை. நாய் நிற்கும் இடத்திலோ, ஈக்கள் சூழ்ந்து நொய் என்று சத்தமிடும் இடத்திலோ நான் பிட்சையை ஏற்பதில்லை. மீன், புலால், கள் முதலிய பண்டங்களை

1. (நி) என்பது நிக்கந்தர்களையும், (இ) என்பது இதர மதங்களையும் குறிக்கும்.

ஏற்பதில்லை.[1] ஒரே வீட்டில் பிட்சையெடுத்து ஒரே கவளத்தால் நான் உயிர் வாழ்ந்து வந்தேன். அல்லது இரண்டு வீடுகளில் பிட்சையேற்று இரண்டு கவளங்களைக் கொண்டு வாழ்வது, இப்படியே ஏற்றிக்கொண்டு போய் ஏழாவது நாள் ஏழு வீடுகளில் பிட்சையெடுத்து ஏழு கவளங்கள் உண்டு வாழ்வேன். ஒரு கரண்டியளவு உணவு உண்பேன். பின்பு ஒவ்வொரு கரண்டியாக ஏற்றிக்கொண்டு போய் ஏழாவது நாள் ஏழு கரண்டி உணவில் வாழ்வேன். ஒரு நாள் விட்டு ஒரு நாள் உண்பேன். இரண்டு நாளைக்கு ஒரு தரம் உண்பேன். இப்படியே உபவாச எல்லையை வளர்த்துக் கொண்டு போய், ஏழு நாளைக்கு ஒரு முறை அல்லது பதினைந்து நாளைக்கு ஒரு முறை உண்பேன்.

(இ) "கீரை, புல்லரிசி, செந்நெல், சக்கிலியன் எறிந்த தோலின் துணுக்குகள், வேலம்பாசி, தவிடு, காந்தற்சோறு, பிண்ணுக்கு, புல் அல்லது பசுஞ்சாணத்தை உண்டு வாழ்வேன். இல்லையேல் காட்டில் எளிதிற்கிடைக்கும் கனிகளையும் வேர்களையும் உட்கொள்வேன். நான் சணல் ஆடைகளை உடுத்துவேன். பலவகையான ஆடைகளை உடுத்துவேன். பிணங்களின் மீது போட்ட துணிகளை உடுத்துவேன். தெருவிலுள்ள கந்தைகளை ஆடையாக அணிவேன். மரவுரி உடுத்துவேன். மான்தோல் அணிவேன். தர்ப்பையாலான துவராடையைத் தரிப்பேன். நாரினாலான துவராடையை அணிவேன். மனிதர்களுடைய கேசத்தினாற் செய்த கம்பளத்தையோ, குதிரைகளின் கேசத்தினாற் செய்த கம்பளத்தையோ, ஆந்தைகளின் இறகுகளினால் செய்த ஆடைகளையோ உடுப்பேன்.

(நி) "நான் தாடிமீசையையும் தலைமயிரையும் பறித்து எடுப்பேன். நின்றபடியே தவம் செய்வேன். நெருக்கி உட்கார்ந்து தவம் செய்வேன்.

(இ) "நான் முட்படுக்கையில் தூங்குவேன். நாள் தோறும் மூன்று முறை நீரில் மூழ்குவேன். இப்படிப் பல வகையாக உடலை வருத்துவேன். இது என் தவம்."

## வறட்சி

"ஸாரிபுத்தனே, என் வறட்சி எவ்வாறு இருந்தது என்பதைக் கூறுகிறேன்:

(நி) "பல ஆண்டுகளாகத் தூசு படிந்து என் உடலில் அழுக்கு அடையடையாக ஏறியிருந்தது. தும்பைச் செடியில் பல ஆண்டுகளாகத் தூசு படிந்திருப்பதுபோல என் உடலும் இருந்தது. ஆனால் இந்தத்

1. ஜைனத் துறவிகள் மீனும் புலாலும் உட்கொள்வது உண்டு; ஆனால் கள் குடித்ததாகச் சான்று கிடைக்கவில்லை. புலால் உணவைப் பற்றிய ஆராய்ச்சியைப் பதினோராவது அத்தியாயத்தில் காண்க.

தூசியின் அடையை நானோ வேறு யாராவதோ கையால் தட்டி உதற வேண்டும் என்றே எனக்குத் தோன்றவில்லை. இப்படி இருந்தது என் வறட்சி."

## அருவருப்பு

"இனி என் அருவருப்பு எப்படி இருந்தது என்று சொல்கிறேன்:

(நி) "நான் மிகவும் கவலையோடு போவேன், வருவேன். தண்ணீர்த் துளிமீதும் நான் மிகுந்த இரக்கம் கொண்டிருந்தேன். இசைகேடாக அகப்பட்டுக் கொண்ட நுண்ணிய உயிரைக்கூட என் கையால் கொல்லலாகாதென்று மிகவும் ஜாக்கிரதையாக இருந்தேன். இவ்வாறு இருந்தது என் அருவருப்பு." (அருவருப்பு என்றால், ஹிம்சையில் வெறுப்பு.)

## தனிமை

"ஸாரிபுத்தனே, இனி என் தனிமை எப்படி இருந்தது என்று சொல்கிறேன்:

(இ) "நான் ஏதாவது காட்டில் இருக்கும்போது எவனாவது ஓர் ஆயனையோ புல்வெட்டுகிறவனையோ, விறகு கொண்டு செல்பவனையோ அல்லது காட்டின் காவலாளியையோ கண்டால், உடனே அடர்ந்த புதர்களிலும் பள்ளங்களிலும் மைதானத்திலுமாக ஒரேயடியாக ஓடுவேன். ஏனென்றால், அவர்கள் என்னைப் பார்க்கலாகாது; நான் அவர்களைப் பார்க்கலாகாது என்று கருதுவேன். காட்டுவிலங்கு மனிதர்களைக் கண்டு ஓடுவதுபோல நானும் ஓட்டமாக ஓடிவிடுவேன். இப்படி இருந்தது என் தனிமை."

## வேறுபாடான உணவு

(இ) "பசுக்களைக் கட்டும் இடத்திலும், சற்று நேரத்துக்கு முன்புதான் பசுக்கள் மேயப் போய்விட்ட தொழுவத்திலும் நான் கையாலும் காலாலும் தவழ்ந்து சென்று கன்றுக்குட்டிகளின் சாணத்தை உண்பேன். என் மலமும் மூத்திரமும் இருக்கும் வரைக்கும் அவற்றைக் கொண்டே நான் வாழ்ந்து வந்தேன். இப்படி மிகவும் வேறுபாடாக இருந்தது என் உணவு."

## அசட்டை

(நி) "நான் ஏதாவது ஒரு பயங்கரக் காட்டில் வாழ்வேன். பற்றொழியாதவன் எவனாவது அந்தக் காட்டில் நுழைந்தால் அவனுக்கு மெய் நடுங்கும்; அவ்வளவு பயங்கரமாக இருக்கும் அந்தக் காடு.

பனிக்காலத்தில் கடுமையாகப் பனி விழும்போது நான் திறந்த வெளியில் இருப்பேன்; பகலில் காட்டில் புகுவேன். கோடையில் கடைசி மாதத்தில் பகலில் திறந்த வெளியில் இருப்பேன்; இரவில் காட்டில் புகுவேன். நான் மயானத்தில் மனிதர்களின் எலும்பைத் தலையணையாக வைத்துப் படுப்பேன். பட்டிக்காட்டு மக்கள் வந்து என்மேல் எச்சிலை உமிழ்வார்கள்; சிறுநீர் கழிப்பார்கள்; புழுதியை வீசுவார்கள்; என் காதில் ஈர்க்கைச் செருகுவார்கள். ஆயினும் அவர்களைப் பற்றி என் மனத்தில் ஒருபோதும் பாவ எண்ணம் எழுந்ததில்லை."

## உணவு விரதம்

(இ) "உணவினால் ஆன்மசுத்தி உண்டாவதாகப் பல சிரமணர்களும் அந்தணர்களும் கருதுகிறார்கள். அவர்கள் இலந்தையை மட்டுமே உண்டு வாழ்கிறார்கள்; இலந்தைப் பொடியை உண்கிறார்கள்; இலந்தைக் கஷாயம் குடிக்கிறார்கள்; வேறு எந்தப் பண்டத்தையும் இலந்தையினாலேயே சமைத்து உண்ணுகிறார்கள். நான் ஒரே ஓர் இலந்தையை உண்டு வாழ்ந்தது எனக்கு நினைவு இருக்கிறது. ஸாரிபுத்தனே, அந்தக் காலத்தில் இலந்தைகள் மிகவும் பெரியனவாக இருந்தனவோ என்று எண்ணாதே. இன்று இலந்தைகள் இருப்பதுபோலவே அந்தக் காலத்திலும் இருந்தன. இப்படி ஒரே இலந்தையை உண்டு வாழ்ந்ததனால் என் உடல் மிகவும் மெலிந்திருந்தது. ஆஸீதகம் அல்லது காலவல்லி என்னும் கொடிகளின் முடிச்சுப்போல என் உடலிலுள்ள மூட்டுக்கள் தெளிவாகத் தெரிந்தன. என் இடுப்பு, ஒட்டகத்தின் காலடிபோல இருந்தது. நூற்கண்டுகளின் மாலையைப்போல இருந்தன, என் முதுகெலும்பின் தண்டுகள். இடிந்த வீட்டின் வலிச்சல்களைப் போல என் விலாவெலும்புகள் மேலும் கீழுமாக ஏறியும் இறங்கியும் இருந்தன. ஆழமான கிணற்றில் படிந்த நட்சத்திரங்களின் பிரதிபிம்பம்போல, என் விழிகள் ஆழத்தில் சென்றிருந்தன. இளமையும் கசப்புமான பூசனிக்காயைப் பறித்து வெயிலில் போட்டால் அதுவாடி வதங்குமே, அதுபோல என் தலையின் சருமம் வதங்கியிருந்தது. நான் வயிற்றைக் கையால் தடவினால் முதுகெலும்பின் தண்டுகள் என் கையில் படும். முதுகெலும்பைத் தடவினால் வயிற்றின் தோல் கைக்குத்தென்படும். இப்படி என் முதுகெலும்புத் தண்டும் வயிற்றுத் தோலும் ஒன்றாகியிருந்தன. மலங்கழிக்கவோ சிறுநீர் விடவோ உட்கார முயன்றால் நான் அங்கேயே விழுவேன். உடலைக் கையால் தடவினால் பலவீனமான உரோமங்கள் அகன்று உதிரும். அந்த உபவாசத்தினால் என் நிலைமை இப்படி ஆயிற்று.

"எத்தனையோ சிரமணர்களும் அந்தணர்களும் பயற்றம் பருப்பை உண்டு வாழ்கிறார்கள்; எள்ளை உண்டு வாழ்கிறார்கள்; அல்லது

அரிசியை உண்டு வாழ்கிறார்கள். இந்தப் பண்டங்களினால் ஆன்மசுத்தி உண்டாவதாக அவர்கள் கருதுகிறார்கள். ஸாரிபுத்தனே, நான் ஒரே ஓர் எள்ளோ, ஒரே ஓர் அரிசியோ அல்லது ஒரே ஒரு பயற்றம் பருப்போ உண்டு வாழ்ந்தேன். அப்போது இந்தத் தானியங்கள் பெரியனவாக இருந்தனவோ என்று எண்ணாதே. இன்றுபோலவேதான் இவை அன்றும் இருந்தன. இந்த உபவாசத்தினால் என் நிலைமை அவ்வண்ணமே (மேலே வருணித்தபடி) இருந்தது."

புத்தர்பெருமான் இந்தத் தவத்தை ஏதோ ஒரு முற்பிறப்பில் செய்தார் என்று புத்தகோஷாசாரியர் புகழுகின்றார். அந்தக் காலத்தில் இலந்தை முதலியவை இப்போதுபோலவே இருந்தன என்று இந்தத் தவவருணனையில் குறித்திருப்பதைப் பார்த்தால், அவர் சொல்வது சரியென்றே தோன்றுகிறது. ஆதலால், புத்தர் காலத்தில் நிகழ்ந்து வந்த வெவ்வேறு வகையான தவங்கள் பயனற்றவை என்று காண்பிக்கவே, சூத்திரம் இயற்றியவர் மேற்கண்ட செய்திகளைப் புத்தரின் வாயினால் சொல்ல வைத்திருக்கிறார் என்பது தெளிவு.

அடிக்குறிப்பில் முன்பு கூறிய புலாலைப்பற்றிய செய்தியைத் தவிர, (நி) என்று குறிப்பிட்ட தவங்களை நிக்கந்தர்கள் என்னும் ஜைனத் துறவிகள் செய்து வந்தார்கள். இன்றும் மயிரைப் பறிப்பது, உபவாசம் இருப்பது முதலிய பழக்கங்கள் அவர்களிடம் இருக்கின்றன.

(இ) என்று குறிப்பிட்ட தவங்களை, இதர மதங்களைச் சேர்ந்த சிரமணர்களும் அந்தணர்களும் செய்து வந்தார்கள். அவற்றில் பெரும்பாலானவை இன்னமும் புவா, பைராகி முதலியவர்களிடையே பழக்கத்தில் இருக்கின்றன.

## மலமூத்திரம் உட்கொள்ளும் வழக்கம்

தன்னுடைய மலமூத்திரங்களை ஒருவன் உட்கொள்ளும் வழக்கம் இன்னமும் அகோரி என்னும் மதத்தாரிடம் இருப்பதாகத் தெரிகிறது. காசியில் தெலுங்கு ஸ்வாமி என்று புகழ்பெற்ற துறவியொருவர் இருந்தார். அவர் திகம்பரராகவே இருந்தார். அவரைப்போலவே ஆடையின்றி உலவும் வேறு பல பரமஹம்சர்களும் காசியில் இருந்தார்கள். அந்தக் காலத்தில் கோட்வின் என்ற கலெக்டர், மக்களுக்கு மிகவும் பிரியமாக இருந்தான். காசியில் இருப்பவர்கள் அவனைக் கோவிந்த துரை என்பார்கள். ஹிந்துக்களின் பழக்க வழக்கங்களைப்பற்றி அவன் ஆவலோடும் பரிவோடும் பல விஷயங்களை அறிந்து கொண்டான். இந்த நிர்வாணச் சாமியார்கள் கோவணம் கட்டிக்கொண்டு உலவினால் நலம் என்று அவன் ஒரு யுக்தி செய்தான்.

வழியில் திரியும் நிர்வாணத் துறவி ஒருவனைக் கண்டதுமே போலீஸ்காரன் அவனைத் துரையிடம் அழைத்துச் செல்வான். "நீ

பரமஹம்சனா?" என்று துரை அந்தத் துறவியைக் கேட்பான். துறவி ஆம் என்றதும், துரை தன் உணவை அவனைச் சாப்பிடச் சொல்வான். திகம்பரசாமிக்கு துரையின் உணவு பிடிக்காது என்பதுதான் எல்லாருக்கும் தெரியுமே. அவன் அதை மறுப்பான். அப்பொழுது கோவிந்த துரை, "பரமஹம்சன் எவ்வகையான வேற்றுமையும் பாராட்ட மாட்டான் என்று சாத்திரத்தில் சொல்லியிருக்கிறது. உன் மனத்திலோ வேற்றுமை எண்ணம் இருக்கிறது; ஆகவே நீ ஆடையின்றித் திரியக் கூடாது" என்பான். இப்படிப் பல திகம்பரச்சாமிகளை அவன் கோவணச் சாமிகளாக மாற்றினான்.

இதே மாதிரியான நிலைமை ஒரு தடவை தெலுங்கு ஸ்வாமிக்கும் நேர்ந்தது. போலீஸ்காரன் ஸ்வாமியைக் கலெக்டரின் பங்களாவுக்கு அழைத்துச் சென்ற செய்தி தெரிந்ததுமே, அவருடைய சீடர்களும், அவரை விரும்பிய பெரிய பெரிய புலவர்களும், மற்றும் செல்வாக்கு உடையவர்களும் துரையின் பங்களாவுக்குப் போனார்கள். துரை எல்லாரையும் உட்காரவைத்து, தெலுங்கு ஸ்வாமியைப் பார்த்து, "நீங்கள் பரமஹம்சரா?" என்று கேட்டான். "ஆம்" என்றார் ஸ்வாமி. உடனே துரை, "நீங்கள் என் வீட்டு உணவை உண்பீர்களா?" என்று இரண்டாவது கேள்வி கேட்டான். அதற்கு விடையாக ஸ்வாமி, "நீங்கள் என் உணவைத் தின்பீர்களா?" என்று மறுகேள்வி கேட்டார். "நான் பரமஹம்சன் அல்ல; ஆயினும் யாருடைய உணவையும் தின்பேன்" என்று துரைபதில் சொன்னான்.

ஸ்வாமி அந்த இடத்திலேயே தமது கையில் மலத்தைக் கழித்து, அந்தக் கையைக் கோவிந்த துரையின் முன்னால் நீட்டி, "இந்தாருங்கள் என் உணவு. இதை நீங்கள் தின்று காண்பியுங்கள்" என்றார். துரைக்கு மிகவும் அருவருப்பாக இருந்தது; அவன் கொதிப்படைந்து, "மனிதன் தின்னக் கூடிய உணவா இது?" என்றான். அப்போது ஸ்வாமி அதை முழுவதும் விழுங்கி விட்டுக் கையை நக்கிச் சுத்தம் செய்துகொண்டார். துரை ஸ்வாமியை விட்டுவிட்டான்; அது மட்டுமின்றி, பிறகு அவன் அவரைப் பற்றிய ஒரு வார்த்தைகூட விசாரிக்கவில்லை!

நான் 1902-ஆம் ஆண்டில் காசியில் இருந்த பொழுது இந்தக் கதையைக் காசிப் பண்டிதர்கள் மிகவும் மதிப்பாகச் சொல்லிக் கேட்டிருக்கிறேன். அதற்கு முன்பே, 'காசி யாத்திரை' என்ற நூலில் பேராதரவோடு இது எழுதப் பெற்றிருப்பதையும் படித்திருக்கிறேன்.

## இந்தக் காலத்துத் தவம்

மேற்கூறிய தெலுங்கு ஸ்வாமி கடுங்குளிரில் தலையை மட்டும் வெளியே நீட்டிக் கங்கையில் உட்காருவார்; கடுங்கோடையில், நடந்தால்

கால் கொப்புளிக்கக் கூடிய கங்கை மணலில் உட்காருவார்.

இரும்பு முட்களால் கட்டில் செய்துகொண்டு அதில் தூங்கும் பைராகிகளைப் பலர் பார்த்திருக்கக் கூடும். 1902-ஆம் ஆண்டில் இத்தகைய பைராகி ஒருவர் காசியில் பிந்துமாதவர் கோயிலுக்கு அருகில் இருந்து வந்தார். மரத்தாலான கோவணம் அணிந்து திரியும் சாமியார்களையும் நான் பார்த்திருக்கிறேன்.

## சிரமணர்களுக்குத் தவத்தில் மதிப்பு

மேலே சொன்ன தவ வகைகளுக்குள், கீரை, புல்லரிசி, காட்டில் எளிதாகக் கிடைக்கும் பழங்கள் வேர்கள் ஆகியவற்றை உண்டு வாழும் முறையை அரணியத்தில் உண்டு வாழும் முறையை அரணியத்தில் இருந்த முனிவர்கள் மேற்கொண்டிருந்தார்கள். அவர்கள் மரவுரி அணிவார்கள். பெரும்பாலானவர்கள் அக்கினிஹோத்திரமும் செய்வார்கள். ஆனால் புதிதாகக் கிளம்பிய சிரமண மதங்கள் அக்கினி ஹோத்திரத்துக்கு விடை கொடுத்துவிட்டு, அரணியத்தில் வாழ்ந்த முனிவர்களின் தவ ஒழுக்கங்கள் பலவற்றை ஏற்றுக்கொண்டு, அவற்றுடன் தோல்துணுக்கு முதலியவற்றைத் தின்னும் தவங்களையும் சேர்த்துக்கொண்டன.

புத்தர் காலத்தில் நிக்கந்தர்களின் (ஜைனர்களின்) மதம் ஓங்கியிருந்தது என்பதை முன்னரே கூறியிருக்கிறேன். இதைத் தவிர, பூரண காசியபன், மக்கலி கோஸாலன், அஜித கேஸகம்பலன், பகுத காத்தியாயனன், ஸஞ்சய பேலட்டபுத்தன் ஆகிய ஐந்து சிரமண நாயகர்களின் சிரமண மதங்கள் பெரிதும் பரவியிருந்தன. இவர்களுடைய தத்துவ ஞானத்தைப் பற்றி ஏழாவது அத்தியாயத்தில் சுருக்கமாகக் கூறியிருக்கிறேன். அதைப் படித்தால், இவர்களுக்குள் தத்தவ விஷயத்தில் மிகப் பெரிய வேற்றுமைகள் இருந்த வரலாறும், ஆயினும் இவர்கள் யாவருக்கும் (1) வேள்வியில் வெறுப்பு, (2) தவத்தில் ஓரளவு மதிப்பு ஆகிய இரண்டு திறத்தில் மட்டும் ஒற்றுமை இருந்த செய்தியும் தெரியவரும்.

## சிரமணர்களின் பிரசாரம்

நிக்கந்தர்களுக்கும் மேறகூறிய சிரமண நாயகர்களுக்கும் வேறு சிரமணர்களுக்கும் மக்களிடம் மிகுந்த செல்வாக்கு இருந்தது என்று முன்னரே சொன்னேன். இந்தச் சிரமணர்கள் கிழக்கே சம்பா(பாகல்பூர்), மேற்கே குருநாடு, வடக்கே இமயம், தெற்கே விந்தியம் என்னும் எல்லைகளுக்கு உட்பட்ட பிரதேசத்தில், மழைக்காலமாகிய நான்கு மாதங்கள் தவிர்த்து மீதி எட்டு மாத காலமும் ஓயாமல் திரிந்து, தங்கள் தங்கள் மதத்தை மக்களுக்கு உபதேசிப்பார்கள். அதனால்

பொதுமக்களுக்கு வேள்வியிலே அசட்டையும், தவத்திலே மதிப்பும் ஏற்பட்டன.

## வேள்விகளின் வளர்ச்சி

பொது மக்கள் இவ்வாறு வேள்விகளை வெறுத்த போதிலும், மன்னர்கள் போரில் வெற்றி பெறுவதற்காக வேள்விகள் செய்வது அவசியம் என்று கருதினார்கள். வேள்விகளை நிலைக்கச் செய்வதற்குக் கோசல நாட்டுப் பஸேனதி ராஜன் உக்கட்டா என்ற கிராமத்தைப் போக்கரஸாதி (பௌஷ்கரஸாதி) என்ற அந்தணனுக்கும், ஸாலவதிகா என்ற ஊரை லோஹிச்சன் (லௌஹித்யன்) என்ற அந்தணனுக்கும் முற்றூட்டாகக் கொடுத்தான். இது போலவே மகத நாட்டில் பிம்பிசார மன்னன் சம்பா நகரத்தை ஸோணதண்டன் என்ற அந்தணனுக்கும், காணுமதம் என்ற ஊரைக் கூடதந்தன் என்ற அந்தனனுக்கும் மானியமாகக் கொடுத்தான். இந்தச் செய்திகள் தீகநிகாயத்தில் கிடைக்கின்றன. இதைத் தவிர, பஸேனதி ராஜன் தானே வேள்விகள் செய்ததாகக் கோஸலஸம்யுத்தத்தில் ஒன்பதாவது ஸுத்தத்திலிருந்து தெரிகிறது. ஆனால் இந்த வேள்விகளின் பரப்பு கோசலத்துப் பஸேனதி, மகதத்துப் பிம்பிசாரன் ஆகியவர்களின் அரசுவரைக்குமே இருந்தது. அதற்கு மேல் இது வளர்ச்சி பெறவில்லை. ஏனென்றால், பெரிய பெரிய யாகயக்ஞங்கள் செய்வது, அரசர்களாலும் மானியமுடையவர்களான அந்தணர்களாலுமே நிறைவேற்றக் கூடிய செயலாக இருந்தது.

இங்ஙனம் மாபெரும் வேள்விகள் செய்வது சாமானிய மக்களின் சக்திக்குப் புறம்பாக இருந்ததனால், வேள்விகளின் சுருக்க வடிவங்கள் தோன்றலாயின. இன்ன வகையான மரத்திற் செய்த இன்ன வகையான தர்வி (கரண்டி)யினால் உமியை தவிட்டை இன்ன வகையான அரிசியை, இன்ன மாதிரியான நெய்யை, இன்ன மாதிரியான எண்ணெயை, இன்ன பிராணியின் குருதியை ஓமம் செய்தால், இன்ன இன்ன காரியம் நிறைவேறும் என்று சொல்லி, அந்தணர்கள் பொதுமக்களை ஓமங்கள் செய்ய வைப்பார்கள். சில சிரமணர்களும் இதில் பங்கெடுத்துக் கொண்டார்கள் என்று தீகநிகாயத்திலிருந்து தெரிகிறது.[1] காரியசித்திக்காக மக்கள் ஓமங்கள் செய்தபோதிலும், அவற்றை மதச் சடங்காக எண்ணவில்லை. ஏனென்றால் அவர்கள் அந்த ஓமம் செய்விக்கும் அந்தணர்களையும் சிரமணர்களையும் மிகுதியாக மதித்துப் பாராட்டவில்லை.

1. தீகநிகாயம்-பிரம்மஜாலம், ஸாமஞ்ஞபலம் முதலிய ஸுத்தங்கள் காண்க.

## தெய்வ வழிபாடு

இக்காலத்தில் ஹிந்துக்கள் தெய்வங்களையும் பேய்பிசாசு முதலியவற்றையும் நம்பி அவற்றைத் திருப்தி செய்யப் பலி கொடுக்கிறார்களே; இது போலவே புத்தர் காலத்து ஹிந்துக்களும் தெய்வங்களை நம்பிப் பலிகொடுத்து வந்தார்கள். இதில் சிறப்பு என்னவென்றால், இந்தக் காலத்தில் பெரும்பாலான தெய்வங்களுக்குப் பூசாரிகள் தேவை; பெரும்பாலும் இவர்கள் அந்தணர்களாக இருக்கிறார்கள். இதைத் தவிர, இக் காலத்துத் தெய்வங்களும் புத்தர் காலத்துத் தெய்வங்களைப் போலவே கற்பனையில் தோன்றியவைதாம் என்றாலும், இவற்றில் பெரும்பாலனவற்றுக்குப் புராணங்கள் ஏற்பட்டிருக்கின்றன. புத்தர் காலத்தில் இவ்வகையான சுவடிகள் இல்லை. ஆலமரத்திலோ, ஏதாவது ஒரு மலையிலோ காட்டிலோ மகாநுபாவர்களான தேவதைகள் வாழ்ந்ததாகவும், அவர்களை வேண்டிக்கொண்டால் அவர்கள் திருப்தி அடைவதாகவும், மக்கள் கருதினார்கள். ஆடு, கோழி முதலிய உயிர்களைப் பலிகொடுத்து அவர்கள் தங்கள் பிரார்த்தனையைச் செலுத்தினார்கள். அந்தணர்களும் தெய்வங்களை வழிபட்டு வந்ததாகப் பலாஸ ஜாதகத்துக் (307-ஆவது) கதையிலிருந்து தெரிகிறது. ஆனால் அவர்கள் தங்கள் வயிற்றுப் பிழைப்புக்காக வலுவில் பூசாரிகள் ஆனதாக எங்கும் ஆதாரம் இல்லை. இன்று மகாராஷ்டிரத்தில் தகடோபா, ம்ஹஸோபா அல்லது ஜாகாயீ, ஜோகாயீ என்னும் தெய்வங்களுக்கு அந்தணப் பூசாரிகள் இல்லாதது போலவே அந்தக் காலத்தில் எல்லாத் தெய்வங்களுக்குமே பூசாரிகள் இல்லை. மக்கள் பிரார்த்தனை செய்து கொண்டு, இடையில் யாரும் இல்லாமலே தங்கள் கையால் பலிகொடுப்பார்கள். சுஜாதை ஆலமரத்துத் தெய்வத்துக்குப் பாற்பாயசம் கொடுப்பதாகப் பிரார்த்தனை செய்து கொண்டாள்; இறுதியில் அந்த மரத்தடியில் அமர்ந்திருந்த கோதமபோதிசத்துவருக்கே அவள் அந்தப் பாயசத்தைக் கொடுத்தாள். இந்தக் கதை பௌத்த இலக்கியத்தில் பெயர் பெற்றது. பௌத்த ஓவியக் கலையிலும் இது மேன்மையான இடம் பெற்றிருக்கிறது. தெய்வங்களை வழிபடுவதற்குப் பூசாரி அந்தணர்களின் தேவை அந்தக் காலத்தில் இருந்ததில்லை என்று இதனால் தெரிகிறது.

## சிரமணர்களின் உயர்வு

அக் காலத்துத் தெய்வங்களுக்குப் புராணங்களும் பூசாரிகளும் இல்லாமையால், இக் காலத்திய மதவடிவத்தை அவை பெறவில்லை. எல்லாத்துறையிலுள்ளவர்களும் தங்கள் இடுக்கணைத் தவிர்ப்பதற் காகவோ, தங்கள் பிரார்த்தனையைத் தெய்வம் நிறைவேற்றியது

என்பதற்காகவோ அதற்குப் பலி கொடுப்பார்கள். ஆனால் இதை அவர்கள் மதச் சடங்காகக் கருதவில்லை. அந்தணர்களின் வேள்விகளுக்கு வேதங்களும் வைதிக இலக்கியமும் வலிமையான ஆதாரங்களாக இருந்தமையால் அவ்வேள்விகள் மதச் சடங்குகளாக மதிக்கப் பெற்றன. ஆனால் அந்த வேள்விகள் மிகவும் செலவு செய்தே நிறைவேற்றக் கூடியவை; ஆதலால் அவை சாமானிய மக்களின் கட்டுக்கு அடங்கக் கூடியவனாக இல்லை. நூற்றுக்கணக்கான பசுக்களையும் எருதுகளையும் இந்த யாகயக்ஞங்களில் கொல்வார்கள். வேளாண்மைக்குப் பயன்படும் இந்த விலங்குகளை அரசர்களும் மற்றப் பெரிய மனிதர்களும் வலிந்து பிடித்துச் செல்வார்கள்; ஆதலால் பொது மக்களுக்கு இந்த வேள்விகளில் மிகவும் வெறுப்பு உண்டாயிற்று. இதற்கு மாறாக, மக்கள் சிரமணர்களை ஆதரவோடு வரவேற்று உபசரித்தார்கள்; மழைக் காலத்து நான்கு மாதங்களிலும் குடிசை முதலியன கட்டிக் கொடுத்து அவர்கள் தங்குவதற்கு வசதி செய்தார்கள்; அவர்களின் உபதேசங்களைக் கேட்க ஆவலோடு இருந்தார்கள். அதனால், சிரமணர் சங்சங்கள் மேன்மேலும் வளர்ச்சியடைந்தன.

## உபநிஷத்துக் காலத்து ரிஷிகள்

வேதங்களிலிருந்து உபநிடதங்களும், அவற்றிலிருந்து பௌத்தம், ஜைனம் முதலிய சமயங்களும் தோன்றியிருப்பதனால், அந்தச் சமயங்களும் வைதிக மதங்களே என்று இப்போது ஒரு கொள்கை நிலவி வருகிறது. பௌத்தர்கள், ஜைனர்கள் ஆகியவர்களின் பரம்பரை, வேதங்களிலிருந்தோ உபநிடதங்களிலிருந்தோ தோன்றியதன்று; அது வேத காலத்துக்கு முன்னரே மத்திய இந்தியாவில் விளங்கிய ரிஷிமுனிவர்களின் பரம்பரையிலிருந்து தோன்றியது. இந்த உண்மை, மேலே நான் விவரித்துள்ள ஆராய்ச்சியைப் படிப்பவர்களுக்குத் தெளிவாகும் என்று நம்புகிறேன். ஆயினும் உபநிடதங்களில் வருணிக்கப் பெற்றுள்ள அந்தணர்கள் புத்தர் காலத்தில் எந்த நிலையில் இருந்தார்கள் என்பதை இங்கே சுருக்கமாக ஆராய்கிறேன்.

ஆரணியகங்களும் உபநிஷத்துக்களும் புத்தருடைய காலத்துக்குப் பின்பு பல ஆண்டுகள் கழித்து இயற்றப் பெற்றவை என்பதை, 'இந்தியப் பண்பாடும் அஹிம்சையும்' என்ற நூலில் நான் விரிவாகக் காண்பித்திருக்கிறேன். ஆயினும் புத்தருடைய காலத்திலேயே, உபநிடதங்களில் கூறப்பெற்றுள்ள அந்தணர்களைப் போலவே சில அந்தணர்களும் க்ஷத்திரியர்களும் இருந்தார்கள் என்று கொள்வதில் தடை ஏதும் இல்லை. ஆனால் அவர்களில் பலரும் ஓமம் செய்வதை விட்டுத் தூய சிரமணர்களாக இருந்தார்கள் என்று ஜாதக்கதைகள் பலவற்றிலிருந்து

தெரிகிறது. உதாரணமாக, நங்குட்ட ஜாதகத்துச் (144-ஆவது) செய்தியை இங்கே கூறுகிறேன்.

வாராணசியில் பிரம்மதத்தன் ஆண்ட காலத்தில் போதிசத்துவர் ஔதீச்ய அந்தணர் குலத்தில் பிறந்தார். அவர் பிறந்த அன்றே பெற்றோர் ஜாதாக்கினியை வைத்து வளர்த்தார்கள். அவருக்கு வயசு பதினாறு ஆனதும் அவர்கள், "அப்பனே, நீ பிறந்த அன்று நாங்கள் இந்த அக்கினியை மூட்டினோம். நீ இல்லறத்தானாக விரும்பினால் மூவேதங்களைப் பயில்; ஆனால் நீ பிரம்மலோகத்தைப் பெற விரும்பினால், இந்த அக்கினியை எடுத்துக்கொண்டு அரணியத்தில் சென்று, இதனை ஓம்பி அதனால் பிரம்மதேவரை வழிபட்டுப் பிரம்மலோகத்தைப் பெறுவாயாக" என்றார்கள்.

போதிசத்துவர் இல்லறத்தை வேண்டவில்லை. அவர் ஜாதாக்கினியை எடுத்துக்கொண்டு அரணியத்துக்குச் சென்றார். அங்கே குடில் அமைத்துக் கொண்டு அந்த அக்கினியை ஓம்பி வாழ்ந்தார். ஒரு நாள் ஒரு குடியானவன் அவருக்கு ஓர் எருதைக் காணிக்கையாகக் கொடுத்தான். பெருமான் அதை அக்கினிக்குப் பலிகொடுத்து வழிபட எண்ணினார். ஆனால் ஆசிரமத்தில் உப்பு இல்லை. அதற்காக அவர் ஊருக்குள் போனபொழுது, சில தீயோர்கள் ஆசிரமத்தில் புகுந்து அந்த எருதைக் கொன்று, தங்களுக்குத் தேவையான புலாலை வேள்வித் தீயில் சமைத்துத் தின்றுவிட்டு, எஞ்சியதை எடுத்துச் சென்றார்கள்.

அந்தணர் உப்புடன் திரும்பி வந்து பார்த்தார். எருதின் தோலும் வாலும் எலும்புகளுமே எஞ்சியிருந்தன. "இந்த அக்கினி தன் பலிப்பொருளையே காத்துக்கொள்ள முடியவில்லையே! இவன் என்னை எப்படிக் காக்க முடியும்?" என்று கூறிக்கொண்டே அவர் தமது வேள்வித் தீயைத் தண்ணீரில் எறிந்து, முனிவர்களின் துறவை ஏற்றார்.

புத்தருடைய உபதேசத்தைக் கேட்டு உருவேல காச்யபன், நதீகாச்யபன், கயாகாச்யபன் என்ற மூன்று பிராம்மண சகோதரர்கள் தங்கள் வேள்வித் தீயை ஆற்றில் எறிந்த கதை, பௌத்த இலக்கியத்தில் யாவரும் அறிந்தது.

## உபநிஷத்து ரிஷிகள்

சில அந்தணர்களுக்கு இப்படி வெளிப்படையாகச் சிரமண மதத்தை ஏற்றுக் கொள்ளும் துணிவு இல்லை. அவர்கள் வைதிக வேள்விக்கும் சிரமணர்களின் தத்துவ ஞானத்துக்கும் இடையே அலைபாய்ந்து கொண்டிருந்தார்கள். அசுவமேதம் முதலியனவாக உருவகம் செய்து, அவற்றிலிருந்தே அவர்கள் ஆன்ம தத்துவத்தைக் கண்டுபிடிக்க முயன்றார்கள். உதாரணமாக, பிருகதாரணியக உபநிஷத்தில் முதல் அத்தியாத்தில் இரண்டாவது பிராம்மணத்தின் தொடக்கத்தில் வரும் கதையைப் பாருங்கள். அங்கே ரிஷி கூறுகின்றான்- "இந்த உலகில்

உற்பத்திக்கு முன்பு ஒன்றுமே இல்லை. மிருத்தியுவினால் எல்லாம் மூடியிருந்தது. ஏன் அப்படி என்றால், தின்னும் ஆசையினால்தான். தின்னும் விருப்பத்தைத்தான் மிருத்தியு என்கிறார்கள். அது ஆத்மவான் (ஆத்மாவை உடையது) ஆக விரும்பியது... 'பெருவேள்வியால் நான் மீண்டும் வேட்டல் வேண்டும்' என்று அந்த மிருத்தியு எண்ணியது. இப்படி எண்ணி அது களைப்படைந்தது; பிறகு தவம் செய்யலாயிற்று. அந்தக் களைப்பினாலும் தவத்தினாலும் கனல் வீசிய மிருத்தியுவிலிருந்து புகழும் வீரியமும் உண்டாயின. பிராணன் என்பதுதான் புகழ்; அதுதான் வீரியம். இவ்வாறு அந்தப் பிராணன் உடலைவிட்டுப் போனதும், பிரஜாபதியின் அந்த உடல் ஊதியது; ஆனால் அவன் மனம் அந்த உடலில் இருந்தது. 'எனது இந்த உடல் தூயதாக (வேள்விக்கு உரியதாக) இருக்க வேண்டும்; அதனால் நான் ஆத்மவான் ஆக வேண்டும்' என்று அவன் விரும்பினான். அந்த உடல் என் பிரிவினால் புகழும் வீரியமுமற்று ஊத ஊத, அது அசுவமம் (ஊதியது) ஆயிற்று. அவ்வுடல் மேத்தியம் (தூயதாக) ஆனதால் அதுவே அசுவமேதத்தின் அசுவமேதத்துவமாக (குதிரையின் தூய்மையாக) இருக்கின்றது. இப்படி எவன் அசுவத்தை அறிகின்றானோ அவனே அசுவமேதத்தை அறிந்தவனாகிறான்."

இங்கே அசுவமேதமாக உருவகம் செய்து, தவத்தையே முதன்மையாக உடைய அஹிம்சா தர்மத்தை விளக்க முயல்வது நன்றாகத் தெரிகிறது. உண்ணும் விருப்பம் என்பதுதான் மிருத்தியு. அது ஆத்மவான் ஆயிற்று என்றால், அது ஓர் ஆள் ஆயிற்று என்று பொருள். அடைவே அந்த ஆளுக்கு வேள்வியில் விருப்பம் உண்டாயிற்று. அந்த விருப்பத்திலிருந்து புகழ், வீரியம் என்ற இரண்டு பண்புகள் தோன்றின. அவையே உண்மையான உயிர். அவை போய்விட்டால் உடல் செத்து, (குதிரைபோல) ஊதிவிடும் என்று தெரிந்துகொள்ளுங்கள். பிறகு அது எரிப்பதற்கே உரியது. இந்தத் தத்தவத்தை அறிகிறவனே அசுவமேதத்தை அறிகின்றான்.

சாந்தோக்கிய உபநிஷத்தில் பிரவாஹண ஜைவலி, அருணனுடைய மகனுக்குச் சொல்கிறான்- "ஏ கௌதமா, வானுலகம் என்பதுதான் அக்கினி. ஆதித்தியன் அதற்குச் சமிதை; கதிர் என்பது புகை; பகல் என்பது தீக்கொழுந்து; திங்கள் என்பது எரிதழல்; நட்சத்திரங்கள் என்பவை தீப்பொறிகள்." (சாந்.உப.5-4)

இந்த அந்தண ரிஷிகளின் உள்ளத்தில் சிரமணப் பண்பாடு முழுக்க முழுக்க ஊறிப் பதிந்திருந்தது; ஆயினும் நடைமுறையில் இந்தத் தத்துவங்களை வெளிப்படையாக விளக்க அவர்கள் விரும்பவில்லை. ஆதலினால்தான் இப்படி உருவக வடிவான முறையைப் பயன்படுத்தினார்கள் என்பது மேற்கூறியவற்றிலிருந்து தெளிவாகிறது.

## உபநிஷத்து ரிஷிகளும் சாதி வேற்றுமை பாராட்டவில்லை

பழங்காலத்து ரிஷிமுனிகள், சிரமணர்கள், உப நிஷத்து ரிஷிகள் ஆகியவர்களுக்குள் ஒரே ஒரு விஷயத்தில் ஒற்றுமையான பேச்சு இருந்தது- அதாவது சாதி வேற்றுமை பாராட்டாமை. மாதங்க ரிஷியின் கதை முன்னரே வந்துள்ளது. ரிஷிமுனிவர்களுக்குள்ளே சாதி வேற்றுமை இருந்ததில்லை என்று அதிலிருந்து தெளிவாகத் தெரிகிறது சிரமணர் சங்கத்திலோ வேற்றுமைக்கு அடியோடு இடமே இல்லை. உபநிஷத்து ரிஷிகளும் சாதிக்கு அவ்வளவாகப் பெருமை கொடுத்ததில்லை என்பதைப் பின்வரும் கதையிலிருந்து அறியலாம்.

சத்தியகாமன் தன் தாய் ஜபாலாவிடம், "அம்மா, நான் பிரம்மசரிய ஒழுக்கத்தை மேற்கொள்ள விரும்புகிறேன். (பிரம்ம ஞானம் பெற விரும்புகிறேன்.) என் கோத்திரம் யாதென்று சொல்" என்றான். "குழந்தாய், அது எனக்கு தெரியாது. இளமையில் நான் பல ஆண்களோடு இருந்திருக்கிறேன். அப்பொழுது நீ பிறந்தாய். ஆகவே உன் கோத்திரம் எனக்குத் தெரியாது. என் பெயர் ஜபாலா; உன் பெயர் சத்தியகாமன். எனவே நீ உன் பெயரைச் சத்தியகாம ஜாபாலன் என்று சொல்லிக் கொள்" என்றாள் அந்தத் தாய்.

அவன் (சத்தியகாமன்) ஹாரித்துருமத கௌதமரிடம் சென்று, "தங்களிடம் பிரம்ம ஞானம் பயில வந்திருக்கிறேன்" என்றான்.

"உன் கோத்திரம் யாது?" என்று கௌதமர் கேட்டார்.

"அது எனக்குத் தெரியாது. அம்மாவை நான் கேட்டேன். அப்போது அவள், 'இளமையில் பல ஆண்களோடு தொடர்பு இருந்ததனால் எனக்குக் கோத்திரம் தெரியாது; எனவே உன் பெயர் சத்தியகாம ஜாபாலன் என்று சொல்லிக்கொள்' என்றாள்." -இப்படிச் சத்தியகாமன் உரைத்தான்.

"நீ சத்தியத்தினின்றும் பிறழவில்லை. அந்தணனல்லாதவனால் இது இயலாது. எனவே சமிதை எடுத்துவா. உனக்கு உபநயனம் செய்கிறேன்" என்று மொழிந்து, கௌதமர் அவனுக்கு உபநயனம் செய்தார். (சாந்,உப.4-4)

## குப்தர்களின் ஆட்சிக் காலத்திலிருந்து சாதி வேற்றுமை வலுத்தது

உபநிஷத்து ரிஷிகள் சாதி வேற்றுமையை ஒப்புக் கொண்டவர்கள்; ஆயினும் அவர்கள் சாதியைவிட வாய்மைக்கே சிறப்பான மதிப்புக் கொடுத்தார்கள் என்பது சத்தியகாமன் கதையிலிருந்து தெளிவாகின்றது. ஆனால், அந்த உபநிடதங்களையே ஒன்றாக இணைத்துச் சமன் செய்ய முயன்ற பாதராயண வியாசரும், பாஷ்யகாரரான சங்கராசாரியரும் சாதி

வேற்றுமையை எவ்வளவு கோலாகலமாகப் புகழ்ந்து பறையறைகிறார்கள் என்பதைப் பாருங்கள்-

"கேட்கவும் பயிலவும் பொருளறியவும் கூடாது; ஸ்மிருதியும் அங்ஙனமே" என்கிறார் வியாசர், தமது பிரம்மஸூத்திரத்தில்.

இதற்கு உரை வகுத்த சங்கராசாரியர், "இதனால் தான் சூத்திரனுக்கு, (பிரம்மஞானத்தில்) உரிமை இல்லை. ஏனென்றால், ஸ்மிருதி அவனை வேதங் கேட்கவும் பயிலவும் கூடாது என்று மறுத்திருக்கிறது. வேதத்தைக் கேட்கக் கூடாது, வேதத்தைப் பயிலக் கூடாது, அதன் பொருளை அறியக் கூடாது, அதன்படி ஒழுகக் கூடாது- இவ்வளவு விலக்குகளை ஸ்மிருதி சூத்திரனுக்குக் கூறுகிறது. 'அவன் வேதவாக்கியத்தைக் கேட்டால் அவன் காதில் அரக்கையும் ஈயத்தையும் காய்ச்சி ஊற்ற வேண்டும்' என்று, அவன் வேதங் கேட்பதை விலக்கியிருக்கிறது. 'சூத்திரன் என்றால் நடக்கும் சுடுகாடு. ஆதலால் அவனுக்கு அக்கம்பக்கத்தில் வேதாத்தியயனம் செய்யலாகாது.' எனவே இதனால், அவன் வேதம் பயில்வதையும் தடுத்ததாயிற்று. ஏனென்றால், எவனுடைய அக்கம் பக்கத்தில்கூட வேதாத்தியயனம் செய்யலாகாதோ அத்தன்கயவன், தானே எங்ஙனம் வேதத்தைப் பயில்வது? மேலும், அவன் வேதத்தை உச்சரித்தால் அவனுடைய நாக்கைத் துண்டிக்க வேண்டும் என்றும், (வேத மந்திரத்தை) உள்ளத்தில் கொண்டால் அவனைக் கொல்ல வேண்டும் (உடலைத் துணிக்க வேண்டும்) என்றும் சொல்லியிருக்கிறது. ஆதலால் அவன் வேதத்தின் பொருளை அறிவதோ அதன்படி ஒழுகுவதோ கூடாது என்று ஏற்படுகிறது. 'சூத்திரனுக்கு அறிவைக் கொடுக்காதே.' என்று வரைகிறார். (பிரம்மஸூத்திர சாங்கர பாஷ்யம், அத். 1-3-38.)

சங்கராசாரியர் இப்படிச் சூத்திரர்களைத் துன்புறுத்தி அடக்குவதற்கு எடுத்துக் கொண்ட சான்றுகள் குப்த அரசர்கள் காலத்திய கௌதமதர்மஸூத்திரம் முதலிய நூல்களில் இருக்கின்றன. அதாவது, சமுத்திரகுப்தனுடைய காலத்தில் (கி.பி. நான்காம் நூற்றாண்டில்) ஆரம்பித்து, சங்கராசாரியரின் காலம் (கி.பி. ஒன்பதாவது நூற்றாண்டின் ஆரம்பம்) வரைக்கும் நம்முடைய அந்தண முன்னோர்கள் சூத்திரர்களை அமுக்கிவைத்துத் தமது ஆதிக்கத்தை நிலைநிறுத்த இடைவிடாமல் முயன்று வந்தார்கள் என்று தெரிகிறது. தர்மஸூத்திரகாரர்களுக்கும் சங்கராசாரியருக்கும் வேறுபாடு என்னவென்றால், ஸூத்திரகாரர்களின் காலத்தில் முஸ்லிம்கள் இந்த நாட்டில் நுழையவில்லை. சங்கராச்சாரியாரின் காலத்திலே சிந்து நாடு முஸ்லிம்களின் ஆட்சிக்கு உட்பட்டதோடு, அங்கே முஸ்லிம் மதம் ஆற்றலுடன் பரவிக்கொண்டு இருந்தது. அவர்களிடமிருந்தாவது நம்முடைய ஆசாரியர்கள் சமத்துவப் பாடத்தைக் கற்றுக்கொண்டு இருந்திருக்க வேண்டும். அப்படிச் செய்யாமல் இந்த ஆசாரியர்கள், சாதி வேற்றுமையாகிய தங்கள் வெறிக்

குதிரையைத் தட்டி ஓட்டிக்கொண்டே இருந்தார்கள். அதன் பயனை இந்தத்துரதிருஷ்ட நாடு எப்படியெல்லாம் அநுபவிக்க வேண்டியிருந்தது என்பதைச் சரித்திரம் கூறுகிறது.

## தவப் பெண்டிரின் சங்கம்

தவத்திற் சிறந்த முனிவர்களிலோ, வேத காலத்து ரிஷிகளிலோ பெண்கள் யாருமில்லை. கார்க்கி வாசக்னவியைப் போன்ற பெண்கள் பிரம்மஞானத்தைப் பற்றிய ஆராய்ச்சியில் ஈடுபட்டார்கள்.[1] ஆனால் அவர்களுக்குச் சுதந்திரமான சங்கம் இல்லை. பெண்களின் சுதந்திரச் சங்கங்கள் புத்தர் காலத்துக்கு இரண்டொரு நூற்றாண்டுகள் முன்புதான் ஏற்பட்டன. அவற்றுள் மிகப் பழமையானது ஜைனத் தவப் பெண்டிரின் சங்கம் என்று தோன்றுகிறது. இந்த ஜைனத் தவமகளிர் சமயவாதங்களில் தேர்ச்சி பெற்றிருந்தார்கள் என்பது பத்திரா குண்டலகேசா[2] வைப் போன்றவர்களின் கதையிலிருந்து நன்கு தெரிகிறது.

பழங்காலத்து முனிவர்கள் காட்டில் வாழ்ந்தார்கள்; எப்பொழுதாவதுதான் அவர்கள் ஊருக்குள் வருவார்கள். ஆதலால், பெண்களின் சங்கத்தை நிறுவ அவர்களால் இயலவில்லை. ஆனால் சிரமணர்களோ, மக்கள் வாழும் ஊர்களின் மருங்கில் இருந்தார்கள். மேலும் அந்தக் காலத்து நிலைமை துணையாக இருந்தமையால்,

---

1. பிருகதாரணியக உபநிஷத்து, 3-6-1 முதலியவை காண்க.

2. பத்திரா குண்டலகேசா - ராஜகிருகத்துச் செட்டிமார் வீட்டில் பத்திரா பிறந்தாள். அரச புரோகிதனுடைய மகனான சத்துருகன் என்ற திருடன், ஒரு திருட்டு வழக்கில் பிடிபட்டு, தூக்கிலிடுவதற்காக அரசாங்க அதிகாரியால் நகருக்கு வெளியே அழைத்துச் செல்லப்பட்டான். அப்பொழுது சத்துருகனைக் கண்டு பத்திரா காதல் கொண்டாள். அரசாங்க அதிகாரிக்கு ஆயிரம் பொன் கொடுத்து அவள் சத்துருக்கனைமீட்டாள் ஆயினும் சத்துருகன் மனம் திருட்டுத் தொழிலையே நாடியது.ஆதலால் அவன் அவளை நகருக்கு மிகத் தொலைவில் மலையுச்சிக்கு அழைத்துப் போனான். அவள் அவனுக்கு அறிவூட்ட எவ்வளவோ முயன்றும், அதை அவன் காதில் வாங்கிக் கொள்ளவில்லை. இறுதியில் அவள் அவனை அணைப்பதாகப் பாவனை செய்து மலை உச்சியிலிருந்து உருட்டிவிட்டாள். அப்பொழுது வனதேவதைகள், "எல்லா இடங்களிலுமே ஆண் அறிவாளியாக இருக்கிறான் என்பதில்லை. சில சமயம் சூழ்ச்சிக்காரியான பெண்ணும் தன் அறிவை வெளிப்படுத்துவது உண்டு" என்று கூறினராம். இந்த நிகழ்ச்சிக்குப் பிறகு பத்திரா, நிக்கந்தர்களின் ஆசிரமத்துக்குச் சென்று தன் கூந்தலை எடுத்துவிட்டாள். மீண்டும் கூந்தல் வளர்ந்தபோது அது குண்டலம்போல வளைந்திருந்தது. எனவே மக்கள் அவளைக் 'குண்டலகேசா' என்று அழைத்தார்கள். ஸாரிபுத்தன் அவளைச் சமயவாதத்தில் தோல்வியுறச் செய்த பின்னர், அவள் பௌத்த பிட்சுணியானாள்.- பௌத்த சங்க வரலாறு, பக். 214-217.

பெண்களின் சங்கத்தை அவர்களால் நிறுவ முடிந்தது. அந்தக் காலத்தில் சமயத் துறையில் ஆண்களைப் போலவே பெண்களும் முற்போக்குடையவர்களாக இருந்தார்கள் என்ற விசேடச் செய்தி, பௌத்த ஜைன நூல்களைப் படித்தால் தெரியவரும். குழு ஆதிக்கமுள்ள அரசில் பெண்களுக்கு முழுச் சுதந்தரம் இருந்தமைதான் இதற்குக் காரணம். புத்தர்பெருமான் வஜ்ஜிகளின் வளர்ச்சிக்காகக் கூறிய ஏழு நியமங்களில் ஐந்தாவது, 'பெண்களின் மானத்தைக் காக்க வேண்டும் மணமான பெண்ணின் மீதோ மணமாகாத பெண்ணின் மீதோ எவ்வகையான பலாத்காரத்துக்கும் இடம் தரலாகாது' என்பது. வஜ்ஜி மக்கள் இதன்படியே புத்தருடைய காலம் வரைக்குமாவது நடந்தார்கள் என்று கூறலாம். வஜ்ஜிகளைப் போலவே மல்லர்களின் நாட்டிலும் பெண்களுக்கு மதிப்புக் கொடுத்தார்கள். அங்கம், காசி, சாக்கிய நாடு, கோலிய நாடு முதலிய குழு ஆதிக்கமுள்ள அரசுகள் அழிந்த போதிலும், உள்நாட்டு ஆட்சி அந்த அந்த மக்களின் கையில் இருந்ததனால், பெண்விடுதலைக்கு அவ்வளவாகத் தீங்கு ஏற்படவில்லை.

மகத நாட்டிலும் கோசல நாட்டிலும் ஏகாதிபத்திய ஆட்சி வேரூன்றியதாயினும், பழைய குழு ஆட்சியில் இருந்த முறைகளை அடியோடு மாற்ற அந்நாட்டு அரசர்களால் முடியவில்லை. பிம்பிசார மகாராஜனோ, பஸேனதி மகாராஜனோ எந்தப் பெண்ணையும் வற்புறுத்தித் தன் அந்தப்புரத்திற் சேர்த்துக் கொண்டதாக எங்கும் எவ்வகையான குறிப்பும் இல்லை.

## சில ஏகாதிபத்திய அரசுகளில் பெண்களுக்கு மதிப்பு

குழு ஆட்சிமுறை மக்களின் நினைவை விட்டு மறைந்து ஏகாதிபத்திய ஆட்சிமுறை வலுத்தது. அது வலுக்க வலுக்க, பெண்களின் சுதந்திரமும் குறைந்து கொண்டே வந்தது. ஆயினும் சில அரசர்கள் பெண்களுக்கு உரிய மதிப்புக் கொடுத்தார்கள் என்பது, உன் மாதயந்தி (உம்மதந்தி)யின் கதையிலிருந்து தெரிகின்றது.[1]

போதிசத்துவர் சிவி ராஜகுலத்தில் பிறந்தார். அவரைச் சிவிகுமாரன் என்றே அழைத்தார்கள். சிவியரசனுடைய படைத்தலைவன் மகனான அபிபாரகனும், சிவிகுமாரனும் ஒத்த பிராயத்தினர். தட்சசிலைக்குச் சென்று அவர்கள் இருவரும் சாத்திரம் பயின்றார்கள். தந்தை இறந்ததும் சிவிகுமாரன் அரசனானான். படைத்தலைவன் இறந்த பின் அவன் அபிபாரகனை படைத்தலைவனாக்கினான். அபிபாரகன் உன்மாதயந்தி என்ற பேரழகியான செட்டிப் பெண்ணை மணந்து கொண்டான். அரசன்

1.527-ஆவது, உம்மதந்தி ஜாதகம்.

நகர் வலம்வந்தபொழுது சாளத்தின் அருகில் நின் உன் மாதயந்தியை கண்டான். அரசன் அவளிடம் கொண்ட மோகத்தால் பித்துப் பிடித்தவனாகி, அரண்மனைக்குச் சென்று படுக்கையில் விழுந்து கிடந்தான். அபிபாரகனுக்கு இந்தச் செய்தி தெரிந்தது. அப்பொழுது அவன் அரசனிடம் சென்று, தன் மனைவியை ஏற்றுப் பித்துத் தெளியும் படி அவனை வேண்டினான். அதனால் அரசன் தன் நிலைக்கு வந்து, "இது சிவிகளின் தருமமன்று. நான் சிவிகளின் தலைவன். சிவிகளின் தருமத்தைக் காப்பதே என் கடமை. ஆதலால் மனம் திரிவதற்கு இடங்கொடுப்பது எனக்கு ஏற்றதன்று" என்று கூறினான்.

இந்தக் கதை விரிவாகவும் சுவை நிரம்பியதாகவும் இருக்கிறது. அதன் சாரத்தை மட்டுமே இங்கே கொடுத்திருக்கிறேன். இந்தக் கதையை இயற்றியவருடைய காலத்தில், குழு ஆதிக்கமுள்ள அரசியல் முறை அடியோடு அழிந்துவிட்டிருந்தது என்று தெரிகின்றது. ஆயினும், குழு ஆதிக்கமுடையவர்களான சிவிகள் போன்ற அரசர்கள் பெண்களின் அறம் காத்து ஒழுகினதை அந்த ஆசிரியர் நன்கு அறிந்திருந்தார். சர்வாதிகாரம் தாங்கிய அரசர்களும் இதை நினைவில் வைத்துக் கொள்ள வேண்டும் என்பதே அவர் இந்தக் கதை எழுதியதன் நோக்கமாகும். சிவிகுமாரனுடைய பேச்சின் முத்தாய்ப்பாக அவர் பாடியிருக்கும் பாடல் இது-

"நான் சிவிகளின் தலைவன், தந்தை, நாட்டைக் காக்கும் அதிபதி. ஆதலால் சிவிகளின் கடமையை மதித்து, அவர்களின் தருமத்தை நன்றாகச் சிந்தித்து, நான் என்மனோ விகாரத்துக்கு வசமாகாமல் இருப்பேன்."

## பால்ய விவாகப் பழக்கம்

பௌத்த அரசர்களைப் பொறுத்தவரைக்கும் இத்தகைய ஒழுக்கத்தினால் நல்ல பயனே ஏற்பட்டது. ஆனால் வேறு ஒரு தீய பழக்கமும் இதிலிருந்தே உண்டாயிற்று எனலாம். பர்மா நாட்டு அரசர்கள், மணமான பெண்ணைத் தங்கள் அந்தப்புரத்தில் வைத்துக் கொள்வதில்லை; மணமான பெண்ணின் கணவன் விவாக விலக்குச் செய்து அவளை அரசனிடம் ஒப்படைக்க ஒப்புக் கொண்டாலுங்கூட, இதைப் பெரிய அதருமம் என்றே அவர்கள் கருதினார்கள். ஆனால் மணமாகாத பெண்ணை அவளுடைய பெற்றோரின் உடன்பாடு இல்லாமலே அவர்கள் களிப்புடன் தூக்கி வந்துவிடுவார்கள். அரசன் தன் பெண்ணை வலிந்து அழைத்துச் செல்வானோ என்ற பயத்தினால், பெற்றோர்கள் தங்கள் பெண்ணுக்குச் சிறு பருவத்திலேயே மணஞ்செய்வித்து, அவள் கழுத்தில் தாலியைக் கட்டி வைப்பார்கள். இந்தத் திருமணங்கள் அவ்வளவும் பொய்யானவையாக இருக்கும். இந்தப் பெண்கள் கணவன் வீட்டுக்குப் போவதில்லை; அது

மட்டுமின்றி, முதல் கணவனை விட்டு, தமக்குத் தோன்றியவனை மணந்துகொள்ள இவர்களுக்கு முழு உரிமை உண்டு. அரசர்களின் கொடுமையிலிருந்து பெண்களைக்காக்கும் உபாயமாக மட்டுமே இது இருந்தது. இந்தியாவில் பால்ய விவாகப் பழக்கம் இம்மாதிரியான நிலைமையினால்தான் ஏற்பட்டு வேரூன்றியது என்று உறுதியாகச் சொல்ல முடியாது. ஆயினும் இந்தப் பழக்கம் புத்தருடைய காலத்தில் எல்லா இடங்களிலும் பரவியிருக்கவில்லை. ஏகாதிபத்திய ஆட்சிமுறை வலிபெற்ற பிறகு இது மதச் சடங்காகிவிட்டது என்பதில் சந்தேகம் இல்லை. இந்தியாவில் குழு ஆதிக்கமுள்ள ஆட்சிமுறை வளர்ந்திருக்குமானால், பால்ய விவாகத்துக்கு அடியோடு இடமே இருந்திராது.

## நான்கு வகையான சிரமண அந்தணர்கள்

புத்தர் காலம் வரைக்கும் நான்கு வகையான சிரமண அந்தணர்கள் இருந்தார்கள். அவர்களைப் பற்றிய ஓர் உருவகக் கதையும் அதன் விளக்கமும் மஜ்ஜிமநிகாயத்து நிவாபஸுத்தில் இருக்கின்றன. அவற்றின் சாரமான பகுதி இது-

புத்தர்பெருமான் சிராவஸ்தியில் அநாதபிண்டிகனுடைய ஆராமத்தில் தங்கியிருந்தபொழுது பிட்சுக்களை நோக்கிச் சொன்னார்: "பிட்சுக்களே, பசும்புல்லை நிலத்தில் வளர்ப்பவன் மான்களின் நன்மைக்காக அதைச் செழிக்கச் செய்வதில்லை; அந்த நிலத்திலுள்ள பசும் புல்லை மேய்ந்து மான்கள் கொழுக்க வேண்டும்; அவை முழுக்க முழுக்கத் தன் வசமாக வேண்டும் என்பதுதான் அவனுடைய நோக்கம்.

"(1) பிட்சுக்களே, இத்தகைய ஒரு புல்நிலத்தில் மான்கள் புகுந்தன. அவை அங்கேயே இருந்து புல்லை மேய்ந்து கொழுத்தமையால் அந்த நிலத்தை வளர்த்தவனுக்கு வசமாகிவிட்டன. (2) இதைக் கண்டு வேறுசில மான்கள், 'இந்தப் புல்நிலத்திற்குள் புகுவது மிகவும் கெடுதலானது' என்று அறிந்தன. எனவே அந்தப் புல்நிலத்தை விட்டு, அவை பாலையான வனத்திற்குச் சென்றன. கடுங்கோடை வந்ததும் அங்கே அவற்றுக்குத் தீனியும் தண்ணீரும் கிடைக்கவில்லை. ஆதலால் அவற்றின் உடலில் வலிமை இல்லாமற் போயிற்று. வயிற்றுப்பசி தாங்காமல் அவை அந்தப் புல்நிலத்தில் புகுந்து, தலைகால் தெரியாமல் தீனியையும் தண்ணீரையும் உட்கொண்டதனால் அந்த நிலக்காரனுக்கு வசமாயின. (3) மூன்றாவது வகையான சில மான்கள் இந்த இரண்டு வழிகளையும் விடுத்து, புல்நிலத்தின் மருங்கிலுள்ள காட்டைப் புகலாகக் கொண்டன. அவை மிகவும் ஜாக்கிரதையோடு அந்த நிலத்துப் புல்லை மேய்ந்து வந்தன. நீண்ட நாள்வரைக்கும் நிலக்காரனுக்கு அது

தெரியவில்லை. சில நாள் கழித்து அவன் அந்த மான்கள் வாழும் இடத்தைக் கண்டுபிடித்தான்; அந்த இடத்தைச் சுற்றி வலைகளைப் பரப்பி அவற்றைப் பிடித்துக்கொண்டான். (4) ஆனால் நான்காவது வகையான மான்கள் மிகவும் திறமை வாய்ந்தவை. அவை அந்தப் புல்நிலத்துக்கு மிகத் தொலைவில் அடர்ந்த காட்டில் தங்கி வாழ்ந்தன. அங்கிருந்தே அவை நிலத்திலுள்ள தீனியையும் தண்ணீரையும் ஜாக்கிரதையாக உட்கொண்டன. அவற்றின் இருப்பிடத்தை நிலத்தின் சொந்தக்காரனால் கண்டுபிடிக்க முடியவில்லை.

"பிட்சுக்களே, இதை நான் உருவகக் கதையாகச் சொல்லியிருக்கிறேன். பசும்புல்லை வளர்ப்பவன் வேறுயாருமல்ல; அவனே மாரன். (1)புலன்களின் இன்பத்தையே ஆனந்தமாகக் கருதிய சிரமண அந்தணர்கள் முதல் வகையான மான்கள். (2) புலன்களின் இன்பத்துக்கு அஞ்சி, அரணியத்தில் வாழ்வை ஏற்று, உலக முழுவதிலிருந்தும் வேறுபட்டவர்கள் இரண்டாவது வகையான மான்கள். (3) மிகவும் ஜாக்கிரதையாகப் புலன்களைப் பயன்படுத்திக்கொண்டு, 'உலகம் நிலையானதா, நிலையற்றதா? ஆன்மா அழிவற்றதா, அழிவை யுடையதா?' என்பவை போன்ற வாக்குவாதங்கள் செய்து கொண்டு, தங்கள் பொழுதை வீணாக்கும் சிரமண அந்தணர்கள் மூன்றாவது வகையான மான்கள். (4)ஆனால் இத்தகைய வாக்கு வாதங்களில் சிக்கிக் கொள்ளாமல், தங்கள் உள்ளத்தை மாசற்றதாக வைத்துக்கொள்ளும் கவனத்தை யுடையவர்கள் நான்காவது வகையான மான்கள்."

இந்த ஸுத்தத்தில் கூறப்பெற்ற முதல்வகைச் சிரமண அந்தணர்கள், 'தருமம் அனைத்துமே வேள்வியிலும் சோமபானத்திலுந்தான் இருக்கிறது' என்று கருதும் வைதிகப் பிராம்மணர்களாம். வைதிக ஹிம்சையையும் சோமபானத்தையும் வெறுத்துக் காட்டிற்புகுந்து, அங்கே கிடைத்த கிழங்குகளையும் வேர்களையும் உண்டு வாழ்ந்த ரிஷிகளும் முனிவர்களும் இரண்டாவது வகையான சிரமண அந்தணர்கள் என்க. காட்டில் கனிகளும் வேர்களும் கிடைக்காமற்போனால், அல்லது உப்பும் புளிப்புமான பண்டங்களைப் புசிக்கும் விருப்பம் உண்டானால், அப்பொழுது அவர்கள் ஊருக்குள் வந்து இல்லற வலையில் சிக்கிக் கொள்வார்கள். இதற்கு உதாரணம் முன்னரே கூறி விளக்கியிருக்கிறேன். கனிகளையும் வேர்களையும் கொண்டு வாழும் முனிவர்களின் வழியை விடுத்து, வெவ்வேறு வகையான சிரமண மரபுகளை நிறுவியவர்கள், மூன்றாவது வகையான சிரமண அந்தணர்கள். இந்தத் துறவிகள் அடர்ந்த காட்டில் செல்லாமல், மக்கள் வாழும் இடத்திலேயே அவர்களுடைய துணைபெற்று வாழ்ந்து, அவர்கள் கொடுக்கும் உணவையும் ஆடையையும் மிகவும் ஜாக்கிரதையாகப் பயன்படுத்துவார்கள். ஆயினும் அவர்கள், 'ஆன்மா என்பது உண்டா, இல்லையா?' என்பது

போன்ற வாக்குவாதத்தில் ஆழ்ந்துவிடுவார்கள். ஆகையால் அவர்கள் ஆன்மசுத்தி பெறாமல், மாரனுடைய வலையிற் படுவார்கள். புத்தர் இந்தப் பயன்ற்ற வாதங்களையெல்லாம் விட்டு, ஆன்மசுத்திக்கு உரிய வழியைக் கண்டுபிடித்தார். அவருடைய பிட்சுக்கள் நான்காவது வகையைச் சார்ந்த சிரமண அந்தணர்களாக மதிக்கப்பெறுகிறார்கள். மற்றச் சிரமண அந்தணர்களின் கொள்கைக்கும் புத்தருடைய ஆன்மவாதத்துக்கும் என்ன வேற்றுமை இருந்தது என்பதை ஏழாவது அத்தியாயத்தில் விளக்கியுரைப்பேன். இந்த நால்வகையான சிரமண அந்தணர்களுக்குள் உபநிஷத்து ரிஷிகள் வரவே இல்லை என்பது மட்டுமே இங்கே கவனிக்க வேண்டிய விஷயம். எனவே, 'உபநிடதங்களிலிருந்து பௌத்த மதம் உண்டாயிற்று' என்று கூற்று ஆதாரமற்றது என்பது இதனால் தேறுகின்றது.

# 4. கோதம போதிசத்துவர்

## கோதமர் பிறந்த ஆண்டு

கோதமர் பிறந்த ஆண்டைப்பற்றி இக்காலத்து ஆராய்ச்சியாளர்களிடையே மிகுதியான கருத்து வேற்றுமை இருக்கிறது. திவான் பகதூர் சாமிக்கண்ணுப்பிள்ளை அவர்களுடைய கருத்து, கி.மு.478-ஆம் ஆண்டில் புத்தர் பரிநிர்வாணம் அடைந்தார் என்பது. மற்றும் சில ஆராய்ச்சியாளர்கள், அது கி.மு.486-87-ஆம் ஆண்டில் நடைபெற்றதாகச் சொல்கிறார்கள். ஆனால் இப்போதைய புதிய ஆராய்ச்சியின்படி, மகாவம்சத்திலும் தீபவம்சத்திலும் புத்தருடைய பரிநிர்வாணத்தைப் பற்றிக் குறித்திருக்கும் ஆண்டே பொருத்தமானது[1] என்று தெரிகிறது. கி.மு. 543-இல் புத்தர் பரிநிர்வாணம் அடைந்ததாக இந்த நூல்கள் கூறுகின்றன. இந்த ஆண்டை ஆதாரமாக வைத்துக்கொண்டால் புத்தர் கி.மு. 623-ஆம் ஆண்டில் பிறந்தார் எனலாம்.

## போதிசத்துவர்

கோதமர் பிறந்ததிலிருந்து அவர் புத்த நிலையை அடைந்தவரைக்கும் அவரைப் போதிசத்துவர் என்று கூறும் மரபு மிகப் பழமையானது. பாலி இலக்கியத்தில் அனைத்திலும் பழையதான ஸுத்தநிபாதத்தில், "சிறந்த ரத்தனம்போல ஒப்பற்றவரான அந்தப் போதிசத்துவர் லும்பினி நாட்டில் சாக்கியர்களின் ஊரில் மாந்தரின் நன்மைக்காகவும் இன்பத்துக்காகவும் பிறந்தார்" என்று கூறப்பெற்றுள்ளது.

போதி என்றால், மனிதனை உய்விக்கும் அறிவு. அந்த அறிவுக்காகப் பாடுபடுகிற ஜீவன் (சத்துவன்), போதிசத்துவன் எனப் பெயர் பெறுகிறான். ஆரம்பத்தில், கோதமர் பிறந்ததிலிருந்து அவருக்குச் சம்போதிஞானம் உண்டானவரைக்கும் இந்தச் சிறப்புப் பெயரால் அவரைக் குறிப்பிட்டு வந்தார்கள். நாளடைவில், அவர் இந்தப் பிறப்புக்கு முன்பு மற்றும் பல பிறப்புக்களை எய்தியிருப்பதாக ஒரு கொள்கை பரவியது. அப்பொழுது முற்பிறப்புக்களிலும் அவரைப் போதிசத்துவர் என்ற சிறப்பு பெயராலேயே அழைக்கலானார்கள். அவருடைய முற்பிறப்புக் கதைகளை ஜாதகத்தில் கொடுத்து இருக்கிறார்கள். அந்த கதைகளில் முக்கிய பாத்திரமாக யார் வந்தாலும் அவருக்கு போதிசத்துவர் என்று பெயர் வைத்து, அவர் முற்பிறப்பைச் சார்ந்த கோதமர் என்றே

1.The Early History of India by V.A.Smith (Oxford 1924), pp.49-50.

கூறியிருக்கிறார்கள்.[1] சில கதைகளில் தகுந்த பாத்திரம் அமையா விட்டால், அப்பொழுது அந்தக் கதையில் விசேடத் தொடர்பு இல்லாத ஒரு வனதேவதையின் உருவையோ, வேறொரு சாமானிய மனிதனின் உருவையோ போதிசத்துவருக்குக் கொடுத்து எப்படியோ தொடர்பை ஏற்படுத்தியிருக்கிறார்கள். இது நிற்க. கோதமர் பிறந்தது முதல் புத்தநிலையை அடைந்த வரைக்கும் அவரைப் போதிசத்துவர் என்ற சிறப்புப் பெயரால் நாம் அழைக்க வேண்டும். அவருடைய முற்பிறப்புகளுக்கும் இந்தச் சிறப்புப் பெயருக்கும் எவ்வகையான தொடர்பையும் இங்கே நாம் குறிக்க வேண்டுவதில்லை.

## போதிசத்துவரின் குலம்

போதிசத்துவருடைய குலத்தைப்பற்றியும் குழந்தைப் பிராயத்தைப் பற்றியும் திரிபிடகத்தில் மிகக் குறைவான செய்தியே கிடைக்கிறது. இந்தச் செய்தியும், அவர் ஏதோ சந்தர்ப்ப வசமாக உபதேசித்த ஸுத்தங்களில் வந்திருக்கிறது. இந்தச் செய்திக்கும் அட்டகதைகளில் கிடைக்கும் செய்திக்கும் சில இடங்களில் பொருத்தம் இல்லை. ஆதலால் ஒன்றுக்கு ஒன்று முரணான இந்தச் செய்திகளை நேர்மையாக ஆராய்ந்து அதிலிருந்து என்ன முடிவு ஏற்படுகிறது என்று பார்ப்பதுதான் நியாயம்.

மஜ்ஜிம நிகாயத்தில் சூளதுக்கக்கந்த ஸுத்தத்து அட்டகதையில் கோதமருடைய குடும்பத்தைப்பற்றிப் பின்வரும் செய்தி கிடைக்கிறது-

"சுத்தோதனன், சுக்கிலோதனன், சாக்கியோதனன், தோதனன், அமிதோதனன் என்ற ஐவரும் சகோதரர்கள். அமிதா தேவி அவர்களின் தங்கை. திஷ்ய ஸ்தவிரன் அவளுடைய மகன். ததாகதனும் நந்தனும் சுத்தோதனனுடைய மக்கள். மகாநாமனும் அநுருத்தனும் சுக்கிலோதனனுடைய மக்கள். ஆனந்த ஸ்தவிரன் அமிதோதனனுடைய மகன், புத்தபெருமானை விட இவன் சிறியவன்; மகாநாமன் பெரியவன்."

இங்கே கொடுத்துள்ள வரிசைப்படி அமிதோதனன் கடைசித் தம்பி என்று தெரிகிறது. ஆதலால் அவன் மகன் ஆனந்தன் போதிப் பெருமானைவிட வயசில் சிறியவனாக இருப்பது பொருத்தந்தான். ஆனால், மனோரத பூரணி அட்டகதையில் அநுருத்தனைப் பற்றி எழுதுகையில், "அமிதோதன சாக்கியனுடைய வீட்டில் பிறந்தான்" என்று சொல்லப்பெறுகிறது! புத்தகோஷாசாரியார் ஒருவரே எழுதிய இவ்விரண்டு அட்டகதைகளில் இப்படி முரண்பட்ட செய்தி கிடைக்கிறது. முதல் அட்டகதையில் ஆனந்தன் அமிதோதனனுடைய மகன் என்று, சொன்னவர், மற்றோர் அட்டகதையில் அநுருத்தன் அவனுடைய மகன் என்கிறார். ஆகவே சுக்கிலோதனன் முதலிய

1. இதன் விரிவை, பௌத்த சங்க வரலாறு, பக். 154-இல் காணலாம்.

பெயர்களும் கற்பனையில் எழுந்தவைதாமோ என்ற ஐயம் எழுகிறது.

## போதிசத்துவரின் பிறப்பிடம்

முன்னால் கூறிய ஸுத்தநிபாதத்து மேற்கோளிலிருந்து, புத்தர் லும்பினி நாட்டில் பிறந்ததாகத் தெரிகிறது. இன்றுங்கூட இந்த இடத்தை லும்பினி தேவி என்கிறார்கள். பூமிக்குள் புதைந்து போன அசோகருடைய கற்றூண் ஒன்று இங்கே கிடைத்திருக்கிறது. அதில், 'லும்மினிகாமே உபாலிகே கதே' என்ற வாக்கியம் காண்கிறது. போதிசத்துவர் லும்பினி என்னும் கிராமத்தில் பிறந்தார் என்பது இதனால் நன்கு புலனாகிறது.

மற்றும் பல ஸுத்தங்களிலிருந்து, மகாநாமன் என்னும் சாக்கியன் கபிலவஸ்துவில் வாழ்ந்தவன் என்ற குறிப்புக் கிடைக்கிறது. ஆனால் சுத்தோதனன் கபில வஸ்துவில் இருந்தான் என்பதை மகாவக்கம் மட்டுமே கூறுகிறது. லும்பினி கிராமத்துக்கும் கபிலவஸ்துவுக்கு மிடையே 14-15 மைல் தொலைவு இருந்தது. எனவே சுத்தோதனன் சில சமயம் லும்பினி கிராமத்தில் தன் ஜமீன்தாரியில் இருந்து வந்தான்; அங்கேதான் போதிசத்துவர் பிறந்தார் என்று சொல்ல வேண்டியிருக்கும். ஆனால், அங்குத்தர நிகாயத்தில் திகநிபாதத்தில் வரும் 124-ஆவது ஸுத்தத்திலிருந்து, இந்தக் கொள்கைக்கும் வலிய தடை ஏற்படுகிறது. அந்த ஸுத்தம் கூறுவதாவது-

## காலாமனின் ஆசிரமம்

ஒரு சமயம் புத்தர்பிரான் கோசலநாட்டில் பிரயாணம் செய்தபடியே கபிலவஸ்துவுக்கு வந்தார். அவர் வந்த செய்தியைக் கேட்டு மகாநாம சாக்கியன் அவரைச் சந்தித்தான். அப்பொழுது அவர் தாம் ஓர் இரவு தங்குவதற்கு இடம் பார்க்கும்படி மகா நாமனிடம் சொன்னார். ஆனால் அவர் தங்கத் தகுதியான இடம் மகாநாமனுக்கு எங்குமே கிடைக்க வில்லை. அவன் திரும்பி வந்து அவரிடம், "பதந்தரே, தங்களுக்குத் தகுதியான இடம் எனக்குக் கிடைக்கவில்லை. தங்களுடைய பழைய சக மாணவனான பரண்டு காலாமனுடைய ஆசிரமத்தில் தாங்கள் ஓர் இரவு இருங்கள்" என்றான். புத்தர் மகாநாமனை அங்கே ஆசனம் தயாரிக்கச் சொன்னார். அவர் அவ்விரவு அந்த ஆசிரமத்தில் இருந்தார்.

மறுநாள் காலையில் மகாநாமன் போதிப்பகவனைப் பார்க்க வந்தான். அப்பொழுது பகவன் அவனிடம், "மகாநாமனே, இந்த உலகில் மூன்று வகையான சமயகுரவர்கள் இருக்கிறார்கள். முதலாமவன் காமபோகங் களைக் கடக்க வேண்டும் (தியாகம் செய்ய வேண்டும்) என்றான்; ஆனால் உருவங்களையும் வேதனைகளையும் கடக்க வேண்டும் என்று கூறுவதில்லை. இரண்டாமவன் காமபோகங்களையும் உருவங்களையும்

கடக்க வேண்டும் என்று என்கிறான்; ஆனால் வேதனைகளைக் கடக்க வேண்டும் என்று கூறுவதில்லை. மூன்றாமவன் இந்த மூன்றையுமே கடக்க வேண்டும் என்கிறான். இந்தச் சமயகுரவர்களின் நோக்கம் ஒன்றுதானா அல்லது வெவ்வேறானதா?" என்றார்.

இதற்குப் பரண்டு காலாமன், "மகாநாமனே, இவர்கள் எல்லாருடைய நோக்கமும் ஒன்றுதான் என்று சொல்லு" என்று கூறினான். ஆனால் பகவன், "மகாநாமனே, அவர்களின் நோக்கம் வெவ்வேறானது என்று சொல்லு" என்றார். இரண்டாவது தடவையும் மூன்றாவது தடவையுங் கூடப் பரண்டு, அவர்களின் நோக்கம் ஒன்றே என்று சொல்லச் சொன்னான்; பகவனோ, அவர்களின் நோக்கங்கள் வெவ்வேறானவை என்று சொல்லச் சொன்னார். செல்வாக்கு மிகுந்தவனான மகாநாம சாக்கியனுக்கு எதிரில் சிரமண கோதமர் தன்னை அவமதித்ததாக எண்ணி, பரண்டு காலாமன் கபிலவஸ்துவிலிருந்து போய்விட்டான்; பிறகு அவன் ஒருபொழுதும் திரும்பி வரவே இல்லை.

பரண்டு காலாம ஸுத்தத்தின் முழு மொழிபெயர்ப்பு இது.

## பரண்டு காலாம ஸுத்தத்திலிருந்து விளங்கும் செய்தி

மேற்கூறிய ஸுத்தத்திலிருந்து புத்தர் சரித்திரத்தில் இரண்டு அல்லது மூன்று செய்திகள் நன்றாக விளங்குகின்றன. அவற்றுள் முதலாவது - புத்தர் ஆன பிறகு கோதமர் பெரிய பிட்சு சங்கத்தோடு கபில வஸ்துவுக்கு வரவில்லை; சாக்கியர்களும் அவரை மதித்துப் போற்றவில்லை. அவர் தன்னந்தனியே அங்கு வந்தார். அவருக்கு உரிய இடத்தைத் தேடிக் கண்டு பிடிப்பது மகாநாமனுக்கு மிகவும் சிரமமாக இருந்தது. சுத்தோதன மன்னன் போதிசத்துவருக்காக மூன்று அரண்மனைகளைக் கட்டியிருந்தான் என்றால், அவற்றில் ஒன்றை ஒழித்துப் புத்தருக்கு ஏன் கொடுக்கவில்லை? சாக்கியர்களுக்குக் கபிலவஸ்துவில் ஒரு நகர மாளிகை இருந்த செய்தி பல இடங்களில் காணக் கிடைக்கிறது. புத்தருடைய முதிய பிராயத்தில் சாக்கியர்கள் இந்த நகர மாளிகையை மீண்டும் கட்டினார்கள். மேலும், முதல் முதலில் புத்தரைப் பிட்சு சங்கத்தோடு அங்கே ஓர் இரவு தங்கும்படியாக வேண்டிக்கொண்டு தருமோபதேசமும் செய்வித்தார்கள்.[1] ஆனால்முந்திய சந்தர்ப்பத்தில் அவருக்கு இந்த நகர மாளிகையில் தங்க இடம் கிடைக்கவில்லை. எனவே, புத்தர் சாக்கியர்களுக்குள் ஒரு சாமானிய இளைஞராக இருந்தார் என்றும், அவருக்குக் கபிலவஸ்துவில் அவ்வளவாகப் பெருமை இல்லை என்றும் தெரியவருகின்றன.

---

1. ஸளாயதன ஸம்யுத்தம், ஆஸீவிஸவக்கம், ஸுத்தம் 6 காண்க.

இரண்டாவது விஷயம்-கோதமர் வீட்டைத் துறந்து செல்வதற்கு முன்பே கபிலவஸ்துவில் காலாமனுடைய இந்த ஆசிரமம் இருந்தது. காலாமனுடைய சமயக் கருத்தைத் தெரிந்துகொள்வதற்கு அவர் மகதர்களுடைய ராஜகிருகம் வரைக்கும் போகவேண்டிய தேவையே அடியோடு இல்லை. காலாமனுடைய தத்துவஞானத்தை அவர் கபிலவஸ்துவிலேயே தெரிந்து கொண்டார் என்பது இந்த ஸுத்தத்திலிருந்தே ஏற்பட்டுவிடுகிறது.

மூன்றாவது விஷயம்-மகாநாம சாக்கியன் புத்தருடைய சிற்றப்பன் மகன் என்ற முறையில் அவருக்குச் சகோதரனாக இருந்திருப்பானானால், அவன் பரண்டு காலாமனுடைய ஆசிரமத்தில் அவர் தங்கும்படியா ஏற்பாடு செய்வான்? தன் வீட்டுக்கு அருகிலேயே எங்காவது சிறந்த இடத்தில் அவருக்கு வசதியான ஏற்பாடு செய்திருக்க மாட்டானா? சிரமணர்கள் இல்லறத்தாரின் வீட்டில் மூன்று நாட்களுக்குமேல் தங்குவதில்லை. ஆனால் புத்தருக்கு ஒரே இரவு தங்குவதற்குத்தான் இடம் வேண்டியிருந்தது. மகாநாமன் தன் வீட்டிலோ, தனது அதிதி அறையிலோ இதற்கு ஏற்பாடு செய்திருக்கலாமே. ஆதலால்; ஒன்று-மகாநாமனுடைய வீடு மிகவும் சிறியதாக இருந்திருக்க வேண்டும்; அல்லது- புத்தருக்கு ஓர் இரவு தங்க இடம் கொடுப்பதற்குரிய அவசியம் ஏதுமில்லை என்று அவன் எண்ணியிருக்க வேண்டும்.

இவை எல்லாவற்றையும் சிந்தித்துப் பார்த்தால், மகாநாம சாக்கியனுக்கும் புத்தர் பெருமானுக்கும் நெருங்கிய தொடர்பு ஏதுமில்லை என்று தெரிகிறது. சுத்தோதன சாக்கியனோ கபிலவஸ்துவிலிருந்து பதினான்கு மைல் தொலைவில் இருந்துவந்தான். அவனுக்கும் கபிலவஸ்துவுக்கும் தொடர்பு மிகக் குறைாகவே இருந்திருக்க வேண்டும். சாக்கியர்களின் சபை கூடும்பொழுதுதான் அவன் கபிலவஸ்துவுக்கு வருவான் என்று சொல்லலாம்.

## பத்திய மன்னனின் கதை

சுத்தோதனன் அரசன் என்றும், அவனுடைய தலைநகர் கபிலவஸ்து என்றும் மகாபதானஸுத்தம் கூறுகிறது. ஆனால், விநயபிடகத்தில் சுல்லவக்கத்தில் வரும் பத்தியனுடைய கதை, இதற்கு முற்றும் முரணாக இருக்கிறது.

அநுருத்தனுடைய அண்ணன் மகாநாமன், தந்தையின் காலத்துக்குப் பிறகு, வீட்டு விவகாரங்கள் அனைத்தையும் கவனித்து வந்தான். அநுருத்தனுக்கு உலக விகாரமே அடியோடு தெரியாது. புத்தர் பெருமானின் புகழ் எங்கும் பரவியதும், உயர்ந்த சாக்கிய குலத்து இளைஞர்கள் பிட்சுக்களாகி அவருடைய சங்கத்தில் சேரலானார்கள். இதைப் பார்த்த மகாநாமன் அநுருத்தனிடம், "நமது குலத்திலிருந்து

ஒருவனும் பிட்சுவாகவில்லையே. எனவே நீயாவது பிட்சுவாகிவிடு; அல்லது நானாவது பிட்சுவாகிறேன்" என்றான். அநுருத்தன், "எனக்கு அந்த வேலை சரிப்படாது; நீங்களே பிட்சுவாகிவிடுங்கள்" என்று விடையளித்தான்.

மகாநாமன் இதை ஒப்புக் கொண்டு தம்பிக்கு உலக விவகாரங்களைக் கற்றுக் கொடுக்கலானான். "முதலில் வயலை உழ வேண்டும். பிறகு விதைக்க வேண்டும். அப்புறம் வாய்க்காலிலிருந்து அதற்கு நீர் பாய்ச்சவேண்டும். பின்பு தண்ணீரை வடியவிட்டுக் களையெடுக்க வேண்டும். தானியம் முதிர்ந்ததும் அறுவடை செய்ய வேண்டும்" என்று அவன் சொன்னான்.

அநுருத்தனோ, "இது மிகவும் தொந்தரவான வேலையாகக் காண்கிறது. வீட்டு விவகாரங்களை நீங்களே கவனித்துக் கொள்ளுங்கள். நான் பிட்சுவாகிறேன்" என்றான். ஆனால் அவனுடைய தாய் அவன் பிட்சு ஆவதற்கு இசையவில்லை. அவனோ பிடிவாதம் பிடித்தான். அப்பொழுது அவள், "சாக்கியர்களின் மன்னனான பத்தியன் உன்னோடு பிட்சு ஆவதாக இருந்தால் நான் உனக்குப் பிட்சு ஆக அநுமதி தருகிறேன்" என்றாள்.

மன்னன் பத்தியன், அநுருத்தனுடைய நண்பன். ஆனால் அவன் அரசப் பதவியை விட்டுப் பிட்சுவாக மாட்டான் என்று அநுருந்தனுடைய தாய் நினைத்தாள்; அதனால்தான் அவள் இந்த நிபந்தனையை விதித்தாள். அநுருத்தன் தன் நண்பனிடம் சென்று அவனையும் பிட்சு ஆகும்படி வற்புறுத்தினான். அப்பொழுது பத்தியன், "நீ ஏழு ஆண்டுகள் பொறுத்திரு; பிறகு நாம் பிட்சு ஆவோம்" என்றான். ஆனால் அநுருத்தன் அத்தனை காலம் காத்திருக்க விரும்பவில்லை. ஆறு ஆண்டுகள், ஐந்து ஆண்டுகள், நான்கு, மூன்று, இரண்டு ஆண்டுகள், ஓர் ஆண்டு, ஏழு மாதங்கள்- இப்படிக் குறைத்துக் கொண்டே வந்து பத்தியன் ஏழு நாட்களில் அநுருத்தனோடு புறப்பட ஒப்புக்கொண்டான். ஏழு நாட்களுக்குப் பிறகு பத்தியன், அநுருத்தன், ஆனந்தன், பகு, கிம்பலன், தேவதத்தன் என்ற ஆறுசாக்கிய புத்திரர்களும், அவர்களோடு உபாலி என்ற நாவிதனுமாக ஏழு பேர் நாற்படையைத் திரட்டிக் கொண்டு கபிலவஸ்துவிலிருந்து மிகத் தொலைவில் சென்றார்கள். அங்கிருந்து படைகளைத் திருப்பியபின் அவர்கள் சாக்கிய நாட்டு எல்லையைக் கடந்தார்கள். அப்பொழுது புத்தர்பிரான் மல்லர்களின் அநுப்பிரியம் என்ற கிராமத்தில் இருந்து வந்தார். அங்கே போய் இந்த எழுவரும் பிரவிரஜ்யை[1] பெற்றார்கள்.

1. பிரவிரஜ்யை - பழைய நிலையிலிருந்து நீங்குதல். துறவின் முதற்படி இது. (மொ-ர்.)

## பத்தியன் கதையிலிருந்து தேறிய முடிவு

புத்தருடைய பெரும் புகழைக் கேட்டு ஏராளமான சாக்கிய குமாரர்கள் பிட்சுக்கள் ஆகிவந்தார்கள். அதுவரைக்கும் சாக்கியர்களின் அரியணையில் பத்தியன் அமர்ந்திருந்தான் அப்படியானால் சுத்தோதனன் மன்னனாக இருந்தது எப்பொழுது? சாக்கியர்கள் அனைவரும் சேர்ந்து மன்னனைத் தேர்ந்தெடுப்பது வழக்கமா, அல்லது கோசல மகாராஜன் சாக்கிய மன்னனை நியமிப்பானா என்பது திட்டமாகத் தெரியவில்லை. சாக்கியர்களே அவனைத் தேர்ந்தெடுப்பதாக வைத்துக் கொண்டால், அவர்கள் அவனைவிடப் பெரியவனான மகாநாம சாக்கியனைப் போன்ற ஒருவனையே எளிதில் தேர்ந்தெடுத்திருப்பார்கள். இதைத் தவிர, அங்குத்தர நிகாயத்தில் முதல் நிபாதத்தில், "உயர்குலத்தில் பிறந்தவர்களான என்பிட்சு சிராவகர்களுக்குள்ளே காலிகோதாவின் மகனான பத்தியன் சிறந்தவன்" என்ற புத்தர் வாக்குக் காண்கிறது. குழு அரசர்களான சாக்கியர்கள் உயர்குலத்தில் பிறந்ததனாலே மட்டும் பத்தியனைத் தங்கள் அரசனாக்குவார்கள் என்பது பொருத்தமன்று. கோசல நாட்டுப் பஸேனதி மன்னனே அவனை அரசனாக நியமித்திருக்க வேண்டும்; இதுதான் சிறப்பாகப் பொருந்துகிறது. எது எப்படியாயினும், சுத்தோதனன் எப்போதுமே சாக்கியர்களுக்கு அரசனாகவில்லை என்றே கூற வேண்டியிருக்கிறது.

## சாக்கியர்களின் முக்கியத் தொழில் வேளாண்மை

திரிபிடக இலக்கியத்தில் கிடைக்கும் செய்தியை அசோகனுடைய லும்பினிதேவிக் கல்வெட்டின் ஆதாரத்தைக் கொண்டு ஆராயும்போது, 'சுத்தோதனன் சாக்கியர்களில் ஒருவன். அவன் லும்பினி என்னும் ஊரில் இருந்தான். அங்கேதான் போதிசத்துவர் பிறந்தார்' என்று தெரிகிறது. மேலே குறிப்பிட்டபடி மகாநாமனுக்கும் அநுருத்தனுக்கும் நிகழ்ந்த உரையாடலைப் பார்த்தால், சாக்கியர்களின் முக்கியத் தொழில் வேளாண்மை என்று தேறுகிறது. மகாநாமனைப் போன்ற சாக்கியன் தானே பயிர்த்தொழில் செய்து வந்ததுபோல, சுத்தோதன சாக்கியனும் செய்துவந்தான். ஜாதகத்து நிதான கதையில் சுத்தோதனனை மகாராஜாவாக்கி, அவன் பயிர்த்தொழில் செய்தமையை இவ்வாறு வருணித்திருக்கிறார்கள்-

"ஒரு நாள் அரசன் விதை விதைக்கும் திருவிழ (வப்பமங்கலம்). அன்று நகரம்-முழுவதையும்-தேவர்களின் விமானத்தைப்போலக் கோலம் செய்வார்கள். எல்லா அடிமைகளும் தொழிலாளிகளும் புத்தாடை அணிந்து நறுமணமாலைகள் புனைந்து அரண்மனையில் ஒன்றாகக் கூடுவார்கள். அரசனுடைய வயலுக்கு ஆயிரம் கலப்பைகளைப்

பயன்படுத்துவார்கள். அன்று எழுநூற்றுத் தொண்ணூற்றொன்பது கலப்பைகளின் கயிறுகளுக்கும், எருதுகளுக்கும், எருதுகளின் மூக்கணாங்கயிறுகளுக்கும் வெள்ளி பூசியிருப்பார்கள். அரசனுடைய கலப்பை முதலியவற்றுக்குப் பத்தரைமாற்றுத் தங்கம் பூசியிருப்பார்கள். அரசன் பொற்றகடு அடித்த கலப்பையைப் பிடித்துக்கொள்வான். வெள்ளித் தகடு அடித்த எழுநூற்றுத் தொண்ணுற்றொன்பது கலப்பைகளை அமைச்சர்கள் பிடித்துக் கொள்வார்கள். மீதி இருநூற்றை மற்றவர்கள் படித்துக் கொள்வார்கள் எல்லாருமாகச் சேர்ந்து வயலை உழுவார்கள். அரசன் நேராக ஒரு கோடியிலிருந்து மறுகோடி வரைக்கும் கலப்பையை ஓட்டுவான்."

இந்தக் கதையில் துரும்பைத் தூணாக்கியிருந்த போதிலும், சுத்தோதனன் தானே பயிர்த்தொழில் செய்துவந்தான் என்பது மட்டும் உண்மை. இந்தக் காலத்தில் மகாராஷ்டிரத்திலும் குஜராத்திலும் பரம்பரை நில உரிமையுள்ள மணியக்காரர்களான பாடீல்கள், தாமே பயிர்த்தொழில் செய்கிறார்கள்; படியாட்களைக் கொண்டும் செய்விக்கிறார்கள். இவர்களைப் போலத்தான் சாக்கியர்களும் இருந்தார்கள். ஆனால் இருவருக்கும் ஒரே ஒரு வேற்றுமை- இக்காலத்துப் பாடீல்களுக்கு அரசியல் அதிகாரம் மிகக் குறைவு; சாக்கியர்களுக்கோ அரசியல் அதிகாரம் நிறைய இருந்தது. தங்கள் வயலில் வேலைசெய்த குடியானவர்களுக்கும் படியாட்களுக்கும் அவர்களே நீதி வழங்கிவந்தார்கள். தங்கள் நாட்டின் உள் விவகாரங்களை நகர மாளிகையில் ஒன்றுகூடிக் கவனித்தார்கள். தங்களுக்குள் ஏதாவது சச்சரவு நேர்ந்தால் அதை அவர்கள் தாங்களே தீர்த்துக்கொள்வார்கள். ஆனால் எவனையாவது நாடு கடத்த வேண்டியிருந்தாலோ, தூக்கிலிட வேண்டியிருந்தாலோ அதற்கு மட்டும் அவர்கள் கோசல மன்னனுடைய உடன்பாட்டைப் பெறவேண்டியிருந்தது. இது சூளஸச் சகஸுத்தத்தில் வரும் இந்த உரையாடலிலிருந்து தெரிகிறது-

"அக்கிவேஸ்ஸனா, பஸேனதி கோசலன் அல்லது மகதத்து அஜாதசத்துருவைப் போன்ற முடி மன்னனுக்குத் தன் குடிமக்களில் எவனாவது ஒரு குற்றவாளியைத் தூக்கிலிட்டுச் சிட்சிக்கவோ தண்டிக்கவோ நாடு கடத்தவோ முழு உரிமை உண்டா, இல்லையா?" என்று புத்த பகவான் கேட்கிறார்.

"கோதமரே, வஜ்ஜிகள், மல்லர்கள் ஆகிய குழு அரசர்களுக்குக் கூடத் தங்கள் நாட்டுக் குற்றவாளியைத் தூக்கிலிடவோ தண்டிக்கவோ நாடு கடத்தவோ உரிமை உண்டு. அப்படியிருக்க, கோசல மன்னனான பஸேனதிக்கும் மகத மன்னனான அஜாதசத்துருவுக்கும் இந்த உரிமை உண்டு என்பதைச் சொல்லவேண்டியதே இல்லை" என்று ஸச்சகன் விடை கூறுகிறான்.

இந்த உரையாடலிலிருந்து, 'குழு அரசுகளுக்குள்ளே வஜ்ஜிகளுக்கும் மல்லர்களுக்கும் மட்டுமே முழுச் சுதந்தரம் நிலைத்திருந்தது. சாக்கியர், கோலியர், காசியர், அங்கர் முதலிய குழு அரசர்களுக்குக் குற்றவாளியைத் தூக்கிலிடவோ கடுமையாகத் தண்டிக்கவோ நாடு கடத்தவோ உரிமை இல்லை. அப்படிச் செய்ய வேண்டுமானால் சாக்கியர், கோலியர், காசியர் என்ற குழு அரசர்கள் கோசல மன்னனிடமும் அங்கர் என்னும் குழு அரசர்கள் மகத மன்னனிடமும் அநுமதி பெற வேண்டும்' என்று அறிகிறோம்.

## மாயாதேவியைப்பற்றிய செய்தி

போதிசத்துருடைய தாயைப்பற்றி மிகவும் குறைவான செய்திகளே கிடைக்கின்றன. அவள் பெயர் மாயா தேவி என்பதில் ஐயம் இல்லை. ஆனால் சுத்தோதனன் எந்த வயசில் மணம் செய்துகொண்டான், மாயாதேவி போதிசத்துவரை எந்த வயசில் பெற்றாள் என்பவை போன்ற கேள்விகளுக்கு எங்குமே விடை கிடைக்கவில்லை. அபதான நூலில் மகாப்பிரஜாபதி கோதமியைப்பற்றிய ஓர் அபதானம் இருக்கிறது. அதில் அவள் கூறுகிறாள்-

"கடைசியான இந்தப் பிறப்பில் நான் தேவதக நகரத்தில் பிறந்தேன். என் தந்தை அஞ்சன சாக்கியர். என் தாய் சுலட்சணை. பிறகு (வயசு வந்ததும்) நான் கபிலவஸ்துவுக்குச் சுத்தோதனனுடைய வீட்டுக்குப் போனேன். (அதாவது எனக்குச் சுத்தோதனனுடன் மணம் நிகழ்ந்தது.)"

கோதமியின் இந்தப் பேச்சில் எவ்வளவு உண்மை இருக்கிறது என்று சொல்ல முடியாது. 'கபிலவஸ்துவுக்குச் சுத்தோதனனுடைய வீட்டுக்குப் போனேன்' என்ற பேச்சு, மேலே நாம் செய்த ஆராய்ச்சிக்குப் பொருந்தவில்லை.[1] ஆனால் இவள் அஞ்சன சாக்கியனுக்கும் சுலட்சணைக்கும் மகளாகப் பிறந்தாள் என்ற செய்திக்கு முரணாக எங்கும் ஒரு விஷயமும் கிடைக்கவில்லை. ஆதலால் இவளும் இவளுடைய தமக்கையான மாயாதேவியும் அஞ்சன சாக்கியனுடைய பெண்கள்; இவர்கள் இருவருக்குமே சுத்தோதனனுடன் மணம் நிகழ்ந்தது என்று கூறுவதற்குத் தடை இல்லை. ஆனால் இந்தத் திருமணங்கள் ஒரே சமயத்தில் நிகழ்ந்தனவா அல்லது வெவ்வேறு சமயங்களில் நிகழ்ந்தனவா என்பதை அறிய வகை இல்லை.

போதிசத்துவர் பிறந்த ஏழாவது நாள் மாயாதேவி காலமானாள் என்ற செய்தி பௌத்த இலக்கியத்தில் மிகப் பிரசித்தமானது. அதற்குப் பிறகு போதிசத்து வரைக் கவனித்து வளர்க்க யாரும் இல்லாமையால்

---

1. ஏனென்றால், பரண்டுவின் கதையிருந்து சுத்தோதனன் கபிலவஸ்துவில் குடியிருக்கவில்லை என்று ஏற்படுகிறது.

சுத்தோதன்ன மாயாதேவியின் தங்கையையே மணந்திருக்கக்கூடும்.

இது மிகப் பொருத்தமாகவும் தோன்றுகிறது. கோதமி போதிசத்து வரைத் தாயைப் போலவே மிகுந்த அன்போடு வளர்ந்தாள்; அதனால் தாயில்லாக் குறையை அவர் எப்போதும் உணரவே இல்லை என்பது மட்டும் உண்மை.

## போதிசத்துவரின் பிறப்பு

"மாயாதேவி பத்துமாதக் கர்ப்பிணியாக இருந்தாள். அப்பொழுது அவள் பிறந்தகம் செல்லும் விருப்பத்தை வெளிப்படுத்தினாள். சுத்தோதன ராஜன் அவளுடைய விருப்பத்தை அறிந்து, கபில வஸ்துவிலிருந்து தேவதக நகரம் வரைக்கும் வழி முழுவதையும் செப்பஞ் செய்வித்துக் கொடிகளாலும் தோரணங்களாலும் அலங்கரித்தான். பொற்பல்லக்கில் பெரிய பரிவாரத்தோடு அவளைப் பிறந்தகத்துக்கு அனுப்பினான். அவள் அங்கே போகும்பொழுது வழியில் லும்பினிவனத்தில் ஒரு சாலமரத்தினடியில் கருவுயிர்த்தாள்." இது ஜாதகத்து நிதான கதையிலுள்ள வருணனையின் சாரம். சுத்தோதன ராஜன் ஒரு சாமானிய ஜமீன்தாராக இருந்தால் இப்படி வழி முழுவதையும் சிங்காரிப்பது முடியாத செயல். இரண்டாவதாக, பத்து மாதம் முடிந்த பிறகு கர்ப்பிணிப் பெண்ணை யாரும் பிறந்தகத்திற்கு அனுப்ப மாட்டார்கள். எனவே, இந்தக் கதையில் உண்மை மிகவும் குறைவு என்று தெரிகிறது.

போதிசத்துவர் தாயின் வயிற்றில் பிரவேசிப்பதிலிருந்து, பிறந்து ஏழாம் நாள் வரைக்கும், மொத்தம் பதினான்கு அற்புதமான விசேடங்கள் நிகழ்ந்ததாக மகாபதானஸுத்தம் வருணிக்கின்றது. அவற்றுள், ஒன்பதாவது அற்புதம் - போதிசத்துவரின் தாய் பத்துமாதங்கள் நிறைந்த பிறகே கருவுயிர்க்கிறாள் என்பது. பத்தாவது அற்புதம்- அவள் நின்றபடியே கருவுயிர்க்கிறாள் என்பது. எட்டாவது அற்புதம் - போதிசத்துவர் பிறந்த ஏழாவது நாள் அவள் காலமாகிறாள் என்பது. இந்த மூன்று சிறப்பான நிகழ்ச்சிகள் கோதம் போதிசத்துவரின் வாழ்விலிருந்து எடுக்கப் பெற்றவை எனலாம். மற்றவையாவும் கற்பனையில் தோன்றியவை. மெல்ல மெல்ல அவையும் கோதமரின் சரித்திரத்தில் புகுந்துவிட்டன என்று தோன்றுகிறது. எனவே, போதிசத்துவரின் தாய் நின்றிருந்தபொழுதே கருவுயிர்த்தாள் என்றும், அவர் பிறந்த ஏழாவது நாள் காலமானால் என்றும் நாம் முடிவாகக் கொள்வதில் தடை ஏதுமில்லை. ஜாதகத்து நிதான கதையில், அவள் பிரசவித்தது சாலமரத்தின் அடியில் என்றும், லலிதவிஸ்தரத்தில் இறலி மரத்தின் அடியில் என்றும் வருணனை இருக்கிறது. லும்பினி கிராமத்தில்

சுத்தோதனனுடைய வீட்டில் வெளித் தோட்டத்தில் உலாவிக் கொண்டிருந்தபொழுது அவள் மகவை ஈன்றாள். இந்த நிகழ்ச்சி சாலமரத்தின் அடியில் நடந்திருந்தாலும் சரி, இறலி மரத்தின் அடியில் நடந்திருந்தாலும் சரி, அவள் நின்றிருந்தபோது பிரசவித்தாள் என்பது மட்டுமே இந்த வருணனையில் உண்மையானது என்று அறிகிறோம்.

## போதிசத்துவரைப்பற்றிய சோதிடம்

"போதிசத்துவர் பிறந்ததும் அவரைத் தாயுடன் வீட்டுக்கு அழைத்து வந்து, சுத்தோதனன் பெரிய பெரிய பண்டிதர்களான அந்தணர்களிடம் குழந்தையின் எதிர்காலத்தைப் பற்றிக் கேட்டான். பண்டிதர்கள் அவனுடைய முப்பத்திரண்டு லட்சணங்களைப் பார்த்து, 'இவன் மிகப் பெரிய சக்கரவர்த்தியாக இருப்பான்; அல்லது மிகப் பெரிய ஞானியாகிப் புத்தனாக (ஸம்யக் ஸம்புத்தனாக) விளங்குவான்' என்று சோதிடம் கூறினார்கள்." இந்தக் கருத்துள்ள விரிவான வருணனைகள் ஜாதகத்து நிதானகதையிலும், லலிதாவிஸ்தரத்திலும், புத்தசரித காவியத்திலும் வந்திருக்கின்றன. அந்தக் காலத்தில் இந்த லட்சணங்களின் மீது மக்களுக்கு மிகுந்த நம்பிக்கை இருந்தது என்பதில் ஐயம் இல்லை. திரிபிடக இலக்கியத்தில் இவற்றைப்பற்றிய விரிவுகள் பல இடங்களில் காண்கின்றன. போக்கரஸாதி என்னும் அந்தணன் இளைஞனான அம்பஷ்டனை, புத்தருடைய உடலில் இந்த லட்சணங்கள் இருக்கின்றனவா இல்லையா என்று பார்ப்பதற்காக அனுப்பினான். அம்பஷ்டன் முப்பது லட்சணங்களைத் தெளிவாகப் பார்த்தான்; ஆனால் இரண்ட லட்சணங்கள் அவன் கண்ணுக்குப் புலப்படவில்லை. புத்தர் அற்புதமான மாயம் செய்து அவற்றை அவனுக்குக் காண்பித்தார்.[1] இப்படி இந்த லட்சணங்களுக்கும் புத்தர் சரித்திரத்துக்கும் அங்கங்கே தொடர்பு காண்பித்திருக்கிறார்கள். பக்தர்கள் புத்தருடைய பெருமையைப் பாராட்ட வேண்டும் என்பதற்காக நடந்த முயற்சி இது. ஆதலால் இதில் தனிப்பட்ட உண்மை இருப்பதாகக் கருத வேண்டிய அவசியம் இல்லை. ஆயினும், போதிசத்துவர் பிறந்ததும் அஸித முனிவர் வந்து அவரைப் பற்றி நிமித்தங்கள் கூறினார் என்ற கதை மிகவும் பழமையானதாகத் தெரிகிறது. அது பற்றிய வருணனை ஸுத்தநிபாதத்தில் நாலகஸுத்தத்து முன்னுரையில் இருக்கிறது. அங்குள்ள செய்தியை இங்கே தருகிறேன்-

"நல்ல ஆடைகள் அணிந்து, இந்திரனைப் போற்றி, தேவர்கள் தங்கள் மேலாடைகளை வானத்தில் வீசி விழாக் கொண்டாடினார்கள். அஸித முனிவர் அவர்களைக் கண்டு, 'இந்த விழா எதற்காக?' என்று கேட்டார். 'லும்பினி கிராமத்தில் சாக்கிய குலத்தில் போதிசத்துவர் பிறந்திருக்கிறர்;

---

1. தீக நிகாயம் அம்பட்ட ஸுத்தம் காண்க

ஆதலால் விழாக் கொண்டாடுகிறோம்' என்று தேவர்கள் அவரிடம் சொன்னார்கள். அதைக் கேட்ட முனிவர் விநயத்தோடு சுத்தோதனனுடைய வீட்டுக்கு வந்தார்; குழந்தையைக் காண வேண்டும் என்ற தமது விருப்பத்தைத் தெரிவித்தார். சாக்கியர்கள் போதிசத்துவரை அஸித முனிவருக்கு முன்னால் கொண்டு வந்தார்கள். குழந்தையின் சிறப்பான லட்சணங்களைக் கண்ட முனிவர், 'இவன் மாந்தருக்குள் அனைவரிலும் உயர்ந்தவன்' என மொழிந்தார். ஆனால் தமக்கு எஞ்சியுள்ள ஆயுள் குறைவாகவே இருப்பதை எண்ணியதும் அவர் கண்களிலிருந்து நீர் துளும்பியது. அதைக் கவனித்த சாக்கியர்கள், 'குழந்தைக்கு ஏதாவது இடுக்கண் உண்டோ?' என்று கேட்டார்கள். அப்பொழுது அஸிதர், 'இந்தக் குமாரன் வருங்காலத்தில் நல்லறிவு பெற்றுப் புத்தன் ஆகப்போகிறான். ஆனால் என் ஆயுளில் எஞ்சியுள்ளது மிகவும் குறைவாக இருப்பதானால் இவனுடைய தருமோபதேசத்தைக் கேட்கும் வாய்ப்பு எனக்கு இல்லையே என்று வருந்துகிறேன்' என்று கூறி, அவர்களைத் தேற்றினார். அவர்களை மகிழ்வித்த பின்பு அவர் புறப்பட்டுச் சென்றார்.

## போதிசத்துவரின் பெயர்கள்

அமரகோசத்தில் போதிசத்துவருக்கு ஆறு பெயர்கள் கூறப் பெற்றுள்ளன- சாக்கியசிம்மன், சர்வார்த்த சித்தன், சௌத்தோதனி, கௌதமன், அர்க்கபந்து, மாயாதேவி மகன். இவற்றுள் சாக்கியசிம்மன், சௌத்தோதனி (சுத்தோதனன் மகன்), மாயாதேவி மகன் என்பவை அவருடைய சிறப்பைச் சொல்ல வந்தவை. அர்க்கபந்து என்பது அவருடைய கோத்திரப் பெயர். ஆகவே, 'சர்வார்த்தசித்தன், கௌதமன் என்ற எஞ்சியுள்ள இரண்டு பெயர்களில் அவருடைய இயற்பெயர் எது? அல்லது இவை இரண்டுமே அவருடைய பெயர்களா?' என்ற கேள்வி எழுகிறது.

திரிபிடக இலக்கியத்தில் போதிசத்துவருக்கு 'ஸர்வார்த்தஸித்தர்' என்ற பெயர் எங்குமே காணவில்லை. ஜாதகத்து நிதான கதையில் மட்டும் சித்தார்த்தன் (ஸித்தத்த) என்று அவர் பெயர் வந்திருக்கிறது. ஆனால் அதுவும் லலிதவிஸ்தரத்திலிருந்து எடுக்கப்பெற்றதாக இருக்க வேண்டும். அந்த நூல், இவன் பிறந்ததுமே என் விருப்பங்கள் யாவும் நிறைவேறின; ஆதலால் இவனுக்குச் சர்வார்த்தசித்தன் என்று பெயரிடுகிறேன். -இப்படிக் கருதிய அரசன் போதி சத்துவருக்கு மிகப் பெருமை செய்து சர்வார்த்தசித்தன் என்று பெயரிட்டான் என்று கூறுகிறது.

சர்வார்த்தசித்தன் என்ற இதே பெயர்தான் அமர கோசத்தில் வருகிறது. ஆனால் லலிதவிஸ்தரத்தில் போதிசத்துவரின் பெயர் அடிக்கடி சித்தார்த்தகுமாரன் என்றும் வருகிறது. அதன் பாலி உருவந்தான்

'ஸித்தத்தன்' என்பது. சர்வார்த்தசித்தன் என்பது பாலியல் ஸப்பத்தஸித்தன் என்று ஆகும். அந்தப் பெயர் ஏதோ விந்தையாகத் தோன்றியதனால் ஜாதக அட்டகதை எழுதியவர் 'ஸித்தத்தன்' என்ற பெயரையே வழங்கினார் எனலாம். ஆகவே, சர்வார்த்த சித்தன், சித்தார்த்தன் என்னும் இரண்டு பெயர்களும் லலிதவிஸ்தர ஆசிரியருடைய கற்பனையிலோ, புத்தபக்தரான வேறொரு கவியின் கற்பனையிலோ தோன்றியவையாக இருக்க வேண்டும்.

போதிசத்துவருடைய இயற்பெயர் கோதமர் என்பதில் ஐயமே இல்லை. தேரி காதையில், மகாப்பிரஜாபதி கோதமியின் காதைகளுள் ஒன்று இது-

"பெரும்பான்மையோரின் நன்மைக்காக மாயாகோதமனைப் பெற்றாள். நோயினாலும் சாவினாலும் வாடும் மக்களின் துன்பக் குவியலை அவன் அழித்தான்."

ஆனால் மகாபதான ஸுத்தத்தில் 'கோத்திரத்தினாலே கோதமர்' என்று வருகிறது. இப்படியே அபதான நூலில் பல இடங்களில், 'பெயரால் கோதமர்' (கோதமோ நாம நாமேன ) என்றும் 'கோத்திரத்தினால் கோதமர்' (கோதமோ நாம கோத்தேன) என்றும் இரு வகையான குறிப்புக்கள் காண்கின்றன. இவற்றிலிருந்து, 'போதிசத்துவருடைய பெயரும் கோத்திரமும் ஒன்றுதானா?' என்ற ஐயம் எழுகிறது. ஆனால் ஸுத்த நிபாதத்தில் பப்பஜ்ஜாஸுத்தத்தில் வரும் காதைகள் இந்த ஐயத்தை நீக்க வல்லவை.

போதிசத்துவர் பிம்பிசார மன்னனிடம் கூறுகிறார்- "அரசனே, இங்கிருந்து நேரே இமயமலையின் அடிவாரத்தில், செல்வமும் வீரமும் கொழிக்கும் நாடு ஒன்று இருக்கிறது. அது கோசல ராஜ்யத்துக்குள் அடங்கியது. அங்குள்ள மக்கள் ஆதித்திய கோத்திரத்தைச் சார்ந்தவர்கள். அவர்களைச் சாக்கியர் என்பர். அந்தக் குலத்திலிருந்து நான் பரிவிராஜகன் ஆனேன். அரசே, காமநுகர்ச்சியின் விருப்பத்தால் நான் துறவியாக வில்லை."[1]

சாக்கியர்கள் ஆதித்திய கோத்திரத்தைச் சார்ந்தவர்கள் என்கின்றன இந்தக் காதைகள். ஒரே சமயத்தில் ஆதித்தியம், கோதமம் என்ற இரண்டு கோத்திரங்களும் இருப்பது இயலாது. ஸுத்தநிபாதம் மிகவும் பழமையானது; ஆதலால் சாக்கியர்களின் உண்மையான கோத்திரம் ஆதித்தியமாகவே இருக்க வேண்டும். மேலே சொன்ன அமரகோசத்துச் சுலோகத்திலும் அர்க்கபந்து என்று வரும் புத்தரின் பெயரை அவருடைய கோத்திரப் பெயராகவே கொள்ள வேண்டும். ஏனென்றால், ஆதித்திய கோத்திரத்தைச் சார்ந்தவர்கள் (ஆதிச்சா நாம கோத்தேன) என்ற வாக்கியத்துடன் இது நன்கு பொருந்துகிறது. போதிசத்துவரின்

1. பப்பஜ்ஜா ஸுத்தம், காதை 18-19.

இயற்பெயர் கோதமர்; அவர் புத்த நிலையை அடைந்த பிறகும் அதே பெயரால் புகழப்பெற்றார். "சிரமணரான கோதமரே, சாக்கிய குலத்திலிருந்து துறவியானவரே" என்ற குறிப்புக்கள் ஸுத்தபிடகத்தில் பல இடங்களில் காண்கின்றன.

## போதிசத்துவரின் சமாதியன்பு

'முன்பே குறிப்பிட்டபடி சுத்தோதன ராஜன் வேளாண்மை விழாவைத் துவக்கி வைத்தபொழுது, சிறுவரான போதிசத்துவரை அங்கே அழைத்துச் சென்றார்கள். அவருடைய வளர்ப்புத் தாய் அவரை ஒரு நாவல் மரத்தடியில் படுக்கையில் தூங்க வைத்தாள். சித்தார்த்த குமாரன் தூங்குவதைக் கண்ட தாதிகள் திருவிழாப் பார்க்கப் போனார்கள். இதற்குள் போதிசத்துவர் எழுந்து ஆசனமிட்டுத் தியானத்தில் அமர்ந்தார். நீண்ட நேரங்கழித்துத் தாதிகள் திரும்பி வந்து பார்த்தபொழுது, மற்ற மரங்களின் நிழல் இறங்கியிருந்தது. ஆனால் அந்த நாவல் மரத்தின் நிழல் மட்டும் முன்போலவே இருந்தது. இந்த அற்புதத்தைக் கண்ட சுத்தோதன ராஜன் போதிசத்துவரை வணங்கினான்' ஜாதகத்திலுள்ள கட்டுக்கதையின் சாரம் இது. போதிசத்துவருடைய வாழ்வில் நிகழ்ந்த முக்கியமான செய்தியை இப்படி அற்புதமாயமாக மாற்றியதனால் அதற்கு எவ்வகைப் பெருமையும் இல்லாதுபோயிற்று. உண்மையாக நிகழ்ந்தது எது? போதிசத்துவர் தந்தையோடு வயலுக்குச் சென்று உழுதல் முதலிய வேலைகளைச் செய்வார்; ஓய்வு நேரத்தில் ஒரு நாவல் மரத்தடியில் தியானத்தில் அமருவார்.

மஜ்ஜிம நிகாயத்தில் மகாஸச்சகஸுத்தத்தில் புத்தபகவான் ஸச்சகனை நோக்கிக் கூறுகிறார் - "எனக்கு நினைவு இருக்கிறது. நான் தந்தையாரின் வயலுக்குச் செல்லும்போது நாவல் மரத்தின் குளிர்ந்த நிழலில் உட்கார்ந்து, காமநுகர்ச்சிகளினின்றும் தீய சிந்தனைகளினின்றும் விடுபட்டு, ஆராய்ச்சியும் கருத்தும் விவேகமும் உண்டாக்குகின்ற அன்பெனும் இன்பம் எதில் இருக்கிறதோ அத்தகைய முதல் தியானத்தைப் பயின்றுவந்தேன். 'ஞானபோதத்தின் உண்மை வழி இதுவாகத்தான் இருக்குமோ?' என்ற கேள்வி எழுந்தது. என் விஞ்ஞானம் நினைவைப் பின்பற்றியது. இதுதான் போதத்தின் வழி என்று தோன்றிற்று. அக்கிவேஸ்ஸனா. நான் எனக்குள், 'காம நுகர்ச்சிகளோடும் தீய சிந்தனைகளோடும் கலவாத இந்த இன்பத்தைக் கண்டு நான் ஏன் அஞ்சுகிறேன்?' என்று கேட்டுக்கொண்டேன். இந்த இன்பத்துக்கு அஞ்சலாகாது என்று எண்ணினேன். ஆனால் அந்த இன்பம், (உடலைத் துன்புறுத்தியதனால்) மெலிவுற்ற உடம்பினால் பெறக்கூடியதாக இல்லை; ஆதலால் நான் மீண்டும் நிறைய உணவு கொள்ள வேண்டும்."

போதிசத்துவர் ஏழு ஆண்டுகள் உடலை வருத்திய பிறகு, அவருக்குத்

தந்தையின் வயலில் நாவல் மரத்தடியில் தாம் பெற்ற முதல் தியானம் நினைவுக்கு வந்தது. அதுதான் தத்துவபோதத்துக்கு வழி என்று எண்ணி, அவர் உடலை வருத்துவதை விட்டு, உணவு உட்கொள்ளத் தொடங்கினார்.

ஆனால் போதிசத்துவர் சிறுபருவத்திலேயே இந்தத் தியானத்தை யாரிடமிருந்து கற்றார்? அல்லது இது அவருக்குத் தானாகவே கிட்டியதா? ஜாதக அட்டகதைக் காரரும், லலிதவிஸ்தர ஆசிரியரும், புத்தசரித்திரம் பாடிய கவியும், இந்தத் தியானம் மிகவும் சிறுபிராயத்திலேயே புத்தருக்குக் கிட்டியது என்று வருணித்திருப்பதனால், 'இது அவருக்குத் தானாகவே வந்து அமைந்தது; அது ஓர் அற்புத மாயந்தான்' என்று கொள்வதே பொருத்தம். ஆனால் முன்னரே நாம் விவரித்த பரண்டு காலாம ஸுத்தத்தைக் கொண்டு பார்க்கும்பொழுது இந்த அற்புதம் நன்றாக விளங்கும். காலாமனுடைய ஆசிரமம் கபிலவஸ்துவில் இருந்தது. எனவே, சாக்கியர்களிடையே பெரும்பாலோர் அவனுடைய சமயவழியை அறிந்திருந்தார்கள். பின்னால் காலாமனைப்பற்றிய விரிவான வரலாறு வருகின்றது. அதைப் படித்தால், காலாமன் தியான மார்க்கத்தில் இருந்தவன் என்பதும், அவன் சமாதியின் ஏழு படிகளைக் கற்றுக்கொடுத்தான் என்பதும் தெரியவரும். அவற்றுள் முதற்படியான முதல் தியானத்தைப் போதிசத்துவர் வீட்டில் இருந்தபடியே எய்திவிட்டார் என்றால் இதில் என்ன மாயம் இருக்கிறது? சிறு பருவத்தில் வயலில் வேலை செய்துவந்தபொழுதே போதிசத்துவருக்குச் சமயப் பற்று இருந்தது; அவர் அடிக்கடி தியான சமாதியைப் பயின்றுவந்தார் என்பது மட்டுமே அற்புதமான செய்தி என்று சொல்லலாம்.

## போதிசத்துவருடைய சமாதியின் விஷயம்

போதிசத்துவர் எந்த விஷயத்தைப் பற்றித் தியானித்து வந்தார் என்பதைச் சொல்வது எளிதன்று. மொத்தம் இருபத்தாறு[1] விஷயங்களைத் தன்னுள் கொண்டது முதல் தியானம். அவற்றுள் போதிசத்துவர் எதைப்பற்றித் தியானித்தார் என்பதை வரையறுத்துக் கூறுவது சிரமமாயினும், மைத்திரி, கருணை, முதிதை, உபேட்சை ஆகிய நான்கில் ஏதாவது ஒன்றைப்பற்றி அவர் தியானித்திருப்பார் என்று ஊகிப்பதில் தவறில்லை. ஏனெனில், அவருடைய அன்பியல்புக்கு இது ஏற்றதுதான்.

1. புத்தகோஷாசாரியருடைய கொள்கைப்படியும், அபிதர்மரின் கருத்துப்படியும் இருபத்தைந்து விஷயங்களாம். ஆனால் உபேட்சையைக் கொண்டும் முதல் தியானம் சாத்தியமாகிறது என்று கொண்டால், இருபத்தாறு விஷயங்களாம். "மைத்திரி, முதிதை, கருணை என்னும் மூன்று பாவனைகளினால் முதல் மூன்று தியானங்களே

இதற்கு மற்றோர் ஆதாரமும் உண்டு. அதாவது-

"புத்த பகவான் கோலிய நாட்டில் ஹரித்திர வஸனம் என்ற கோலியர் நகருக்கு அருகில் வாழ்ந்த பொழுது சில பிட்சுக்கள் காலை நேரத்தில் பிட்சைக்குப் போவதற்கு முன்பு, வேறு பரிவிராஜாக்களின் ஆராமத்துக்குச் சென்றார்கள். அப்பொழுது அந்தப் பரிவிராஜகர்கள் இவர்களிடம், 'நாங்கள் எங்கள் சிராவகர்களுக்குச் செய்யும் உபதேசம் இது-நண்பர்களே, மனத்தை வாட்டி வலிவிழக்கச் செய்யும் ஐந்து நீவரணங்கள்[2] இருக்கின்றனவே, அவற்றை ஒழித்து நீங்கள் மைத்தரியோடு ஒன்றிய சித்தத்தினால் முதல் திசையை நிரப்புங்கள்; இரண்டாவது, மூன்றாவது, நான்காவது திசைகளை நிரப்புங்கள். இது போலவே மேலும் கீழும் நாற்புறமும் உலகம் முழுவதையும், பரந்த உயர்ந்த எல்லையற்ற பகையற்ற வெறுப்பற்ற மைத்திரியோடு ஒன்றிய சித்தத்தினால் நிரப்புங்கள்; கருணையோடு ஒன்றிய சித்தத்தினால்........ முதிதையோடு ஒன்றிய சித்தத்தினால்...உபேட்சை (இகழ்ச்சி)யோடு ஒன்றிய சித்தத்தினால் நிரப்புங்கள் என்கிறோம். சிரமண கோதமனும் இப்படித்தான் உபதேசம் செய்கிறான். எனவே அவனுடைய உபதேசத்துக்கும் எங்கள் உபதேசத்துக்கும் என்ன வேற்றுமை இருக்கிறது?' என்றார்கள்." (போஜ்ஜங்கஸம்யுத்தம், வக்கம் 6, ஸுத்தம் 4.)

சாகியரும் கோலியரும் அக்கம்பக்கத்தில் இருந்தவர்களாதலால் அவர்களுக்குள் நெருங்கிய தொடர்பு இருந்தது. சில சமயம் ரோகிணி ஆற்றின் தண்ணீர் விஷயமாக அவர்களுக்குள் சச்சரவும் நிகழ்வதுண்டு. ஜாதக அட்டகதையிலும் வேறு அட்டகதைகளிலும் இதற்குப் பல ஆதாரங்கள் இருக்கின்றன. அந்தக் கோலியர்களின் ராஜ்யத்தில், வேறு மதத்தைச் சார்ந்த பரிவிராஜகர்கள் பௌத்த சங்கத்துப் பிட்சுக்களை நோக்கி மேற்சொன்ன கேள்வியைக் கேட்கிறார்கள். இந்தப் பரிவிராஜகர்கள் அங்கே பல ஆண்டுகளாக வாழ்பவர்கள். அவர்களுடைய ஆசிரமம், புத்தர் தருமோபதேசம் செய்ய ஆரம்பித்த

---

சித்திக்கின்றன; உபேட்சை என்னும் பாவனையினால் நான்காவது தியானம் மட்டும் கிட்டுகின்றது என்பது அபிதர்மரின் கருத்து. புத்தகோஷாசாரியருக்கும் இது உடன்பாடுதான். முதல் மூன்று பாவனைகளுள் ஏதாவது ஒன்றின் வாயிலாக, முதல் மூன்று தியானங்களைப் பெற்ற பின்பு, உபேட்சை என்னும் பாவனை தொடங்குகிறது; இதனால் நான்காவது தியானம் மட்டும் கிட்டுகின்றது என்று அவர் கூறுகின்றார். நாம் இங்கு மேற்கோளாகக் காட்டிய ஸுத்தத்தினால், மைத்திரி பாவனையோடு உபேட்சையும், உபேட்சைப் பாவனையோடு பிரீதியும் இருக்க முடியும் என்பது தெளிவாகின்றது." -*சமாதி மார்க்கம், பக். 68- 69.*

2. காமச்சந்தம் (காமவிகாரம்), வியாபாதம் (வெகுளி), தீன மித்தம் (சோம்பல்), உத்தேச்சம் (மயக்கம்), விசிகிச்சை (ஐயப்பாடு) ஆகியவை ஐந்து நீவரணங்களாம். -*சமாதி மார்க்கம், பக். 31-35.*

பிறகு நிறுவியதன்று; அது முன்பிருந்தே அங்கு நிலவியது என்பது நிச்சயம். மேலும் இந்தப் பரிவிராஜகர்கள் மைத்திரி, கருணை, முதிதை, உபேட்சை என்ற நான்கு பிரஹ்மவிஹார பாவனை செய்ய வேண்டுமென்று உபதேசித்து வந்தார்கள்.[1] எனவே அவர்கள் காலாமனுடைய மதத்தைச் சார்ந்தவர்கள் என்று கொள்வதில் தடை என்ன இருக்கிறது? எப்படியும், இந்தப் பிரஹ்மவிஹார பாவனைகள் போதிசத்துவருக்குச் சிறு பிராயத்திலேயே தெரிந்திருந்தன; அவற்றை நினைந்து அவர் முதல் தியான நிலையைப் பெற்றார் என்பது தெளிந்த கொள்கையாம்.

## போதிசத்துவர் வீட்டைத் துறக்கக் காரணங்கள் யாவை?

அடுத்த முக்கியமான விஷயம், போதிசத்துவர் தமது அரண்மனையிலிருந்து உய்யானவனத்துக்கு (விளையாடும் காவற்சோலைக்கு)ச் சென்றார் என்பது. சுத்தோதன மன்னன் அவர் போகும் வழியில் முதியவனோ நோயாளியோ பிணமோ வரக்கூடாது என்று ஏற்பாடு செய்திருந்தும், தேவர்கள் ஒரு கிழவனை உண்டாக்கி அவர் முன்னால் கொண்டு நிறுத்துகிறார்கள். அந்தக் கிழவனைக் கண்ட போதிசத்துவர் விரக்தியடைந்து தமது அரண்மனைக்குத் திரும்புகிறார். இரண்டாவது முறை நோயாளியையும், மூன்றாவது முறை பிணத்தையும், நான்காவது முறை பரிவிராஜகனையும் தேவர்கள் அவருக்குக் காண்பிக்கிறார்கள். அதனால் அவர் முற்றும் விரக்தராகி, வீட்டைத் துறந்து, தத்துவஞான வழியைத் தேட முனைகிறார். லலிதவிஸ்தரம் முதலிய நூல்கள் இந்த நிகழ்ச்சியைச் சுவையோடு வருணித்திருக் கின்றன. ஆனால் இந்தச் சம்பவங்கள் அடியோடு ஒப்புக்கொள்ளத் தக்கவையல்ல என்றே கூற வேண்டியதாகிறது. போதிசத்துவர் தந்தையுடனோ தனியாகவோ வயலில் சென்று வேலை செய்து வந்தார் என்றால், ஆளார காலாமனுடைய ஆசிரமத்துக்குச் சென்று அவனுடைய தத்துவஞானத்தைப் பயின்று வந்தார் என்றால், அவர் கிழவனையும் நோயாளியையும் பிணத்தையும் பார்த்ததில்லை என்பது எப்படிப் பொருந்தும்? பாராமல் அவர் எப்படி இருந்திருக்க முடியும்?

கடைசி நாள் போதிசத்துவர் சோலைக்குச் சென்ற பொழுது,

---

1.'சமாதி மார்க்கம்', ஐந்தாவது அத்தியாயத்தில் இந்தப் பிரஹ்மவிஹார பாவனையின் விளக்கம் காண்க. (-மூல ஆசிரியர்.) மைத்திரி, கருணை, முதிதை, உபேட்சை என்னும் நான்கு பாவனைகளும் உயர்வுபற்றிப் பிரஹ்மவிஹார பாவனை எனப்பெறும். இவற்றுள் முதல் மூன்றினால் வெகுளியையும், உபேட்சை என்னும் பாவனையினால் மயக்கத்தையும் போக்குக. மணிமேகலை, 30-256 காண்க. (மொ-ர்.)

"தேவர்கள் சிறந்த பரிவிராஜகர் ஒருவரை உண்டாக்கிப் போதிசத்துவரின் முன்னால் கொண்டு நிறுத்தினார்கள். அப்பொழுது போதிசத்துவர் சாரதியைப் பார்த்து, 'இவன் யார்?' என்று கேட்டார். அப்பொழுது- போதிசத்துவர் புத்தர் ஆகவில்லையாதலால்- பரிவிராஜகனைப் பற்றியோ அவனுக்கு உரிய பண்புகளைப் பற்றியோ சாரதிக்கு ஒன்றுமே தெரியாது; என்றாலும் அவன் தேவர்களுடைய சக்தியினால், 'இவன் பரிவிராஜகன்' என்று கூறியதோடு, பரிவிராஜகனுக்கு உரிய பண்புகளையும் வருணித்தான் என்றார் ஜாதக அட்டகதைக்காரர். ஆனால், கபிலவஸ்துவிலும், அருகிலே சாக்கியர்களின் ராஜ்யத்திலும் பரிவிராஜகர்களின் ஆசிரமங்கள் இருந்துங்கூட, போதிசத்துவருக்கோ அவருடைய சாரதிக்கோ பரிவிராஜகர்களைப் பற்றி ஒன்றுமே தெரியாது என்று கூறுவது ஆச்சரியமாக இருக்கிறதல்லவா?

அங்குத்தரநிகாயத்தில் சதுக்க நிபாதத்தில் (ஸுத்தம் 195), வப்பன் என்னும் சாக்கியனுடைய கதை வருகிறது. அவன் நிக்கந்த (ஜைன) மதத்தைச் சார்ந்த சிராவகன். ஒரு தடவை அவனுக்கும் மகாமோக்கல்லானனுக்கும் உரையாடல் நிகழ்ந்து கொண்டிருந்த பொழுது புத்த பகவான் அங்கு வந்தார். அவர் வப்பனுக்கு உபதேசம் செய்தார். அப்பொழுது வப்பன், "நிக்கந்தர்களை (ஜைனத் துறவிகளை) வழிபட்டதனால் எனக்கு எவ்வகைப் பயனும் உண்டாகவில்லை. இனி நான் பகவானுடைய உபாசகனானேன்" என்றான். வப்பன் புத்தபகவானுக்குச் சிற்றப்பன் என்று அட்டகதைக்காரர் கதைக்கிறார். இந்தச் செய்தி, மகாதுக்கக்கந்த ஸுத்தத்தின் அட்டகதையோடு பொருந்த வில்லை. எது எப்படியாயினும், வப்பன் என்ற பெயருள்ள கிழவனான சாக்கியன் ஒருவன் ஜைனனாக இருந்தான் என்பதில் ஐயமே இல்லை. அதாவது போதிசத்துவர் பிறக்கு முன்பே சாக்கியர் நாட்டில் ஜைனமதம் பரந்திருந்தது. எனவே போதிசத்துவருக்குப் பரிவிராஜகர்களைப் பற்றித் தெரியாது என்பது அடியோடு சாத்தியமன்று.

அப்படியானால் இந்த அற்புதக் கதைகள் யாவும் போதிசத்துவருடைய சரித்திரத்தில் எங்கிருந்து வந்தன? மகாபதான ஸுத்த[1]த்திலிருந்து வந்தன. முதியவனைக் கண்டதும் போதிசத்துவர் எவ்வாறு சாரதியைக் கேள்வி கேட்டார் என்பது பற்றிக் குறிப்பிடுகையில் ஜாதக அட்டகதைக்காரர், "மகாபதானஸுத்தில் வந்துள்ள கதையை அநுசரித்துக் கேள்விகள் கேட்டு" (மஹாபதானே ஆகதநயேன புச்சித்வா) என்கிறார். எனவே, இந்த அற்புதக் கதைகள் யாவும் மகாபதான ஸுத்தத்தில் இருந்து

1. அபதானம் (அவதானம் என்பது சம்ஸ்கிருதம்) என்றால் நற்சரித்திரம். பெரியவர்களின் நற்சரித்திரங்களைத் தொகுத்த ஸுத்தத்துக்கு 'மஹாபதான ஸுத்தம்' என்று பெயர். இதில், முந்திய யுகங்களில் ஆறு புத்தர்களும் இந்த யுகத்தில் கோதம புத்தரும் சேர்ந்து ஏழு புத்தர்களின் சரித்திரம் ஆரம்பத்தில் சுருக்கமாக வருகிறது.

கொள்ளப் பெற்றிருக்கின்றன என்று அறிகிறோம். அப்படியானால் போதிசத்துவர் வீட்டைத் துறந்து செல்ல காரணங்கள் எவையாக இருக்கும். இதற்கு விடையை அத்ததண்ட சூத்திரத்தில் புத்த பகவான் தாமே அருளுகிறார்-

*(1)* "ஆயுதம் தாங்குவது பயங்கரமாகத் தோன்றியது. *(அதனைக் கொண்டு)* இந்த மக்கள் எப்படிச் சண்டையிடுகிறார்கள், பாருங்கள்! எனக்குச் சம்வேகம் (வைராக்கியம்) எப்படி ஏற்பட்டது என்பதைக் கூறுகிறேன். *(2)* குறைவான நீரில் மீன்கள் துடிப்பது போல, ஒருவரையொருவர் பகைத்துத் துடிக்கும் மக்களைக் கண்டு என் உள்ளத்தில் அச்சம் புகுந்தது. *(3)* நான்கு பக்கங்களிலும் உலகம் சாரமற்றதாகப் புலப்பட்டது; திசைகள் யாவும் நடுங்குவனவாகத் தோன்றின; அங்கே புகலுக்கு உரிய இடத்தைத் தேடியபொழுது, அச்சமற்ற இடமே தென்படவில்லை. எனவே, கடைசி வரைக்கும் மக்கள் யாவரும் தமக்குள் எதிரிகளாகவே இருப்பதைக் கண்டதனால், எனக்கு வெறுப்பு உண்டாயிற்று."

ரோகிணியாற்றின் நீருக்காகச் சாக்கியரும் கோலியரும் சண்டையிட்டு வந்தார்கள். ஒரு தடவை இரு திறத்தாரும் படை திரட்டிக் கொண்டு ரோகிணியாற்றங் கரைக்குச் சென்றார்கள். அப்பொழுது புத்தர் பெருமான் இரண்டு சேனைகளுக்கும் நடுவில் நின்று இந்த ஸுத்தத்தை உபதேசித்ததாக, ஜாதக அட்டகதை பல இடங்களில் கூறுகிறது. ஆனால் இந்த ஸுத்தத்தை அங்கு வைத்தது பொருத்தமாகத் தோன்றவில்லை.

---

பின்பு விபஸ்தி புத்தருடைய சரித்திரம் விரிவாகக் கூறப்படுகிறது. இதை மாதிரியாகக் கொண்டு இதன்படியே மற்றப் புத்த சரித்திரங்களையும் வருணித்து இயற்றவேண்டும் என்பது அட்டகதைக்காரரின் கொள்கை. இந்த வருணனைகளில் பெரும்பாலான பகுதிகள், இந்த ஸுத்தம் வெளிவருவதற்கு முன்போ பின்போ, கோதம புத்தருடைய சரித்திரத்தில் இடம் பெற்றன. திரிபிடக மூலத்திலுங்கூட அவை வெவ்வேறு இடங்களில் புலப்படுகின்றன. ஆனால் உய்யானத்தைக் காணும் பகுதி மட்டும் திரிபிடகத்தில் இல்லை. இதை ஜாதக அட்டகதைக்காரர் எடுத்துக்கொண்டார். அவருக்கும் முன்பு லலிதவிஸ்தரத்திலும் புத்தசரித காவியத்திலும் இந்தக் கதை நுழைக்கப் பெற்றது.

கோதம போதிசத்துவருக்காக மூன்று அரண்மனைகள் கட்டப்பெற்ற செய்தி சரித்திர ஆதாரமுடையது என்று நான் எண்ணியிருந்தேன். ஆனால் அதுவும் கற்பனை என்றே தேறியது. காரணம், தானே உடலால் உழைக்கும் சிறிய ஜமீன்தாரான சுத்தோதனன் தன் மகனுக்கு மூன்று அரண்மனைகள் கட்டிக் கொடுப்பது நிகழக் கூடிய செயலன்று.

---

தீகநிகாயம், இரண்டாவது பாகத்தின் தொடக்கதிலேயே மகாபதான ஸுத்தம் வருகிறது. ஆவலுள்ள வாசகர்கள் அதைக் கட்டாயம் படிக்க வேண்டும். மராட்டி மொழியில் சிந்தாமண் பைஜநாத் ராஜவாடே என்பவர் இந்த நூலை மொழி பெயர்த்திருக்கிறார்.

சாக்கியர்களுக்கும் கோலியர்களுக்கும் புத்தர் அறிவுரை கூறி, அவர்களுடைய சண்டைகளைத் தீர்த்திருக்கக் கூடும். ஆனால் அந்தச் சந்தர்ப்பத்தில் இந்த ஸுத்தத்தை உபதேசிப்பதற்கு எத்தகைய காரணமும் இருப்பதாகப் புலப்படவில்லை. தமக்கு வைராக்கியம் எப்படி ஏற்பட்டது, வீட்டை விட்டுத் தாம் வெளியேறக் காரணம் என்ன என்பவற்றையே பகவான் இங்கே கூறுகிறார். ரோகிணி நதியின் நீரைப்பற்றியோ அல்லது இத்தகைய அற்ப விஷயத்துக்காகவோ சாக்கியரும் கோலியரும் சண்டையிடுவது வழக்கம். அந்த நிலையில் தாம் ஆயுதம் தாங்குவதா வேண்டாமா என்ற கேள்வி போதிசத்துவருக்கு எழுந்தது. இந்தச் சண்டைகள் படைக்கலத்தால் எப்படியும் தீருவதாக இல்லை. சாக்கியருக்கும் கோலியருக்கும் இருந்த சண்டைகளை வலியச் சென்று எவனாவது தீர்த்து வைத்தாலுங்கூட அவை தீர்ந்திருக்க மாட்டா. ஏனெனில், அப்படிச் சண்டையைத் தீர்ப்பவன், மீண்டும் அடுத்த நாட்டு அரசனுக்கு எதிராக ஆயுதம் தாங்க வேண்டி வரும். அவனையும் வென்றாலும், அடுத்தபடி பக்கத்திலுள்ள அரசனை அவன் எதிர்த்த வெல்ல வேண்டிய கட்டாயம்வரும். இப்படியாக, ஆயுதம் தாங்கியே இங்குமங்கும் வெற்றிவாகை சூடவேண்டியிருக்கும். ஆனால் இந்த வெற்றி கிடைத்துங்கூட அவனுக்கு அமைதி எங்கிருந்து கிடைக்கப் போகிறது? கோசல நாட்டுப் பஸேனதியின் மகனும் பிம்பிசாரனுடைய மகனுமே புத்தருக்குப் பகைவர்களானார்கள். எனவே இப்படிப் படையெடுப்பதனால் என்ன பயன்? இறுதிவரைக்கும் போராடியபடியே இருக்க வேண்டியதுதான். பயன்! ஆயுதம் தாங்கும் இந்தப் பிரவிருத்தி மார்க்கம் அன்புள்ளங் கொண்ட போதிசத்துவருக்கு வெறுப்பை உண்டாக்கியது; ஆகையால் அவர் ஆயுத நீக்க வழியை மேற்கொண்டார்.

ஸுத்த நிபாதத்தில் பப்பஜ்ஜா ஸுத்தத்தில் தொடக்கத்திலேயே இந்தக் காதைகள் வருகின்றன-

"(1) கண்ணுடையவர் (புத்தர்) ஏன் துறவு பூண்டார், அது அவருக்கு எந்த எண்ணத்தினால் விருப்பமாயிற்று என்பதைக் கூறி, (அவருடைய) துறவை நான் வருணிக்கிறேன்.

(2) இல்லறம் என்றால் தொல்லையும் குப்பையுமான இடம்; துறவு என்றால் காற்று வீசும் திறந்த வெளி. இதை அறிந்து அவர் பரிவிராஜகர் ஆனார்."

இந்தச் செய்திக்கு ஆதாரம், மஜ்ஜிமநிகாயதத்தில் மகாஸச்சக ஸுத்தத்திலும் கிடைக்கிறது. அங்கே புத்தபகவான் கூறுகிறார்- "அக்கிவேஸ்ஸனா, சம்போதி ஞானம் உதயமாவதற்கு முன்பே, நான் போதிசத்துவனாக இருந்த பொழுதே, 'இல்லறம் தொல்லையும் குப்பையுமான இடம். துறவு என்பது திறந்த வெளி. இல்லறத்தில் இருந்து மிகவும் பூர்ணமானதும் தூயதுமான பிரம்மசரியத்தைப் பயிலுவது

சாத்தியமன்று. ஆதலால் தலையை மழித்துக் காவி உடைகளை அணிந்து வீட்டிலிருந்து வெளியேறிப் பரிவிராஜகன் ஆவதுதான் தகுந்தது' என்று எனக்குத் தோன்றிற்று."

ஆனால் அரியபரியேஸன ஸுத்தத்தில் இதினின்றும் சிறிது வேறு வகைப்பட்ட காரணம் காணப்பெறுகிறது. அங்கே புத்தர்பெருமான் மொழி இது-"பிட்சுக்களே, சம்போதி ஞானம் உண்டாவதற்கு முன்பு நான் போதிசத்துவனாக இருந்த பொழுதே, நானே பிறப்புத்தன்மை யுடையவனாக இருந்த காலத்தில், பிறப்பின் சுழலில் சிக்கிய பொருள்களை (புதல்வன், மனைவி, வேலைக்காரன், வேலைக்காரி முதலியவர்களை)ப் பின்பற்றி வந்தேன். (அதாவது, என் இன்பம் அவர்களைச் சார்ந்திருப்பதாக எனக்குத் தோன்றியது.) நானே முதுமைத்தன்மை யுடையவனாக இருந்தபொழுது, நோய்த்தன்மை யுடையவனாக இருந்தபொழுது, இறப்புத்தன்மை யுடையவனாக இருந்தபொழுது, துயரத்தன்மை யுடையவனாக இருந்த பொழுது, முதுமை நோய் சாவு துயரம் ஆகியவற்றின் சுழலில் சிக்கிய பொருள்களையே பின்பற்றி வந்தேன். அப்பொழுது, 'நான் என்னைப் பொறுத்த வரைக்குமே பிறப்பு, முதுமை, சாவு, நோய், துயரம் இவற்றோடு கட்டுப்பட்டிருக்கும் பொழுது அவற்றுடனேயே கட்டுப்பட்ட புதல்வன் மனைவி முதலியோரைப் பின்பற்றுகிறேனே, இது சரியன்று. ஆதலால், இதற்கு மாறாக, நான் இந்தப் பிறப்பு, முதுமை முதலியவற்றினால் நேரும் தீங்கைக் கண்டு, பிறப்பற்றதும் முதுமையற்றதும் நோயற்றதும் சாவற்றதும் துயரற்றதுமான மிகவும் சிறந்த நிர்வாண நிலையைத் தேடிக் கண்டுபிடிப்பதுதான் நல்லது' என்று சிந்திக்கலானேன்."

இவ்வாறு போதிசத்துவரின் துறவுக்குப் பொதுவாக மூன்று காரணங்கள் தரப்பெறுகின்றன- 1) அவருடைய சுற்றத்தினர் தங்களுக்குள் போரிடுவதற்காக ஆயுதம் தாங்கியதனால் அவருக்கு அச்சம் உண்டாயிற்று. (2) இல்லம் என்பது தொல்லையும் குப்பையுமான இடம் என்று தோன்றியது. (3) பிறப்பு, முதுமை, சாவு, நோய் ஆகியவற்றால் தாம் கட்டுண்டிருக்கையில் அதே மாதிரியான பொருள்களின்மீது பற்றுக் கொண்டு வாழ்வது கூடாது என்று தோன்றியது. இந்த மூன்று காரணங்களையும் நாம் பொருத்திப் பார்க்க முடியும்.

போதிசத்துவருடைய இனத்தவரான சாக்கியருக்கும் கோலியருக்கு மிடையே சண்டை சச்சரவுகள் நிகழ்ந்தன. அப்பொழுது அவற்றில் தாம் தலையிடுவதா வேண்டாமா என்ற கேள்வி அவருக்கு எழுந்தது. அடிதடியினால் இந்தச் சச்சரவுகள் தீரமாட்டா என்பதை அவர் அறிந்தார். ஆனால் அவர் அவற்றில் ஈடுபடாவிட்டால் மக்கள் அவரைப் பயங்கொள்ளி என்பார்கள்; இல்லறத்துக்கும் அது ஏற்றதன்று. ஆகவே

இல்லறம் அவருக்குத் தொல்லையான இடமாகத் தோன்றியது. அதைவிட, துறவியாகி எதிலும் விருப்பற்றுக் காடுமேடுகளில் திரிவது எவ்வளவோ மேலல்லவா? ஆனால் அவருக்குத் தம் மனைவியிடமும் புதல்வனிடமும் அன்பு இருந்ததனால் வீட்டைத் துறப்பது மிகவும் கடினமாக இருந்தது. எனவே அவர் பின்னும் தீவிரமாகச் சிந்திக்க வேண்டியதாயிற்று. 'நானே பிறப்பு முதுமை நோய்சாவு ஆகியவற்றின் தன்மைகளையுடையவனாக இருக்கும் பொழுது, இதே இயல்பினால் கட்டுண்டவர்களான புதல்வன் மனைவி முதலியவர்களிடம் பற்றுக் கொண்டு, இந்தத் தொல்லையும் குப்பையுமான இல்லறத்தில் விழுந்து கிடப்பது சரியன்று' என்று அவருக்குத் தோன்றிற்று. அதனால் அவர் பரிவிராஜகரானார். இந்த மூன்று காரணங்களில் முதன்மையானது, சாக்கியருக்கும் கோலியருக்கும் நிகழ்ந்து வந்த அடிதடிச் சண்டைகள். இதைக் கருத்தில் கொண்டு பார்த்தால், போதிசத்துவர் பிறகு புத்தராகிக் கண்டுபிடித்த 'மத்தியம மார்க்க'த்தின் பொருள் சரியாக விளங்கும்.

## ராகுல குமாரன்

போதிசத்துவருக்கு இளமையில் மணமாகி, அவர் வீட்டைத் துறந்து செல்லுமுன் அவருக்கு ராகுலன் என்ற மகன் பிறந்தான். திரிபிடகத்தில் இதற்குப் பல இடங்களில் ஆதாரங்கள் கிடைக்கின்றன. ராகுல குமாரன் பிறந்த அன்று இரவே போதிசத்துவர் வீட்டைத் துறந்ததாக ஜாதகத்து நிதானகதை கூறுகிறது. ஆனால் மற்ற அட்டகதைக்காரர்கள், ராகுல குமாரன் பிறந்த ஏழாவது நாள் போதிசத்துவர் வீட்டைத் துறந்தார் என்கிறார்கள். இந்த இரண்டு செய்திகளுக்குமே பழைய இலக்கியத்தில் ஆதாரம் இல்லை. போதிசத்துவர் வீட்டினின்று ஏகுவதற்கு முன்பு அவருக்கு ராகுலன் என்ற ஒரு மகன் இருந்தான் என்பது மட்டும் நிச்சயம். கோதம போதிசத்துவர் புத்தராகிக் கபிலவஸ்துவுக்கு வந்தார்; அப்பொழுது ராகுலனுக்குத் தீட்சை செய்வித்தார் என்ற வருணனைகள் மகாவக்கத்திலும் வேறு இடங்களிலும் இருக்கின்றன. அப்பொழுது ராகுலனுக்கு ஏழுவயசு என்று அட்டகதைகளில் பல இடங்களில் சொல்லப்பெறுகிறது. 'ததாகதர் ராகுலனைச் சிராமணேர் ஆக்கினாரா இல்லையா? அப்பொழுது அவனுக்கு என்ன வயசு?' -இதைப்பற்றி ஆறாவது அத்தியாயத்தில் ஆராய்ந்திருக்கிறேன். ஏனென்றால், சிராமணேர் என்பவர்களின் விஷயம், பிட்சு சங்கத்துடன் தொடர்புடையது.

## ராகுலமாதா தேவி

ராகுலனுடைய தாயை மகாவக்கத்திலும் ஜாதக அட்டகதையிலும் எங்கும் 'ராகுலமாதா தேவி' என்றே சொல்லியிருக்கிறார்கள். யஸோதரா

(யசோதரை) என்ற அவள் பெயர் அபதானக் கிரந்தத்தில் மட்டுமே கிடைக்கிறது. "நம்முடைய போதிசித்துவர் லும்பினி வனத்தில் பிறந்த அதே சமயத்தில் ராகுலமாதா தேவியும், சன்ன அமாத்தியனும், காளுதாயி (காளா உதாயி) அமாத்தியனும், கந்தக அசுவராஜனும், (புத்தகயையின்) மகாபோதி மரமும், நான்கு நிதிக்கும்பிகளும் (செல்வம் நிரம்பிய சால்கள்) தோன்றியதாகக் கொள்க" என்கிறது ஜாதகத்து நிதானகதை. இவற்றுள், போதி மரமும், நிதிகள் நிரம்பிய சால்களும் கோதமர் பிறந்தபொழுதே தோன்றின என்பது வெறும் கட்டுக்கதை. ஆனால், போதிசத்துவரும் ராகுலமாதவும் சன்னனும் காளா உதாயியும் ஒரே சமயத்தில் பிறக்கவில்லையாயினும் சமவயசுடையவர்கள் என்று கொள்ளத் தடையில்லை. ராகுலமாதா எழுபத்தெட்டாவது வயசில், அதாவது புத்தருடைய பரிநிர்வாணத்துக்கு இரண்டு ஆண்டுகள் முன்பு, காலமானதாகத் தெரிகிறது. அபதானத்தில் (584-ஆவதில்) அவள் சொல்கிறாள்- "இன்று நான் 78 வயசானவள். இது என் கடைசிப் பிறப்பு. உங்களை விட்டு நான் போகிறேன். என் முக்தியை நான் பெற்றிருக்கிறேன்."

இந்த இறுதிப் பிறப்பில் சாக்கிய குலத்திலே தான் பிறந்ததாகவும் அவள் கூறுகிறாள். ஆனால் அந்தக் குலத்தைப்பற்றிய விவரம் எங்குமே இல்லை. அவள் பிட்சுணியாகி வாழ்ந்தாள்; 78 -ஆம் வயசில் புத்தரருகில் சென்று அவள் மேற்கண்டபடி பேசினாள் என்கிறார் அபதானகாரர். ஆனால் பிட்சுணியான பிறகு அவள் ஏதாவது உபதேசம் செய்ததாகவோ, பௌத்த சங்கத்துடன் எவ்வகையிலாவது தொடர்பு கொண்டிருந்ததாக வோ தெரியவில்லை. எனவே அவள் உண்மையான பிட்சுணியானாளா இல்லையா என்பது பற்றி உறுதியாகச் சொல்ல முடியாது. அபதானக் கிரந்தத்தில் அவள்பெயர் யசோதரை என்றும், லலிதவிஸ்தரத்தில் கோபா என்றும் குறிக்கப்பெறுகிறது. இவ்விரண்டில் எது அவளுடைய இயற்பெயர், அல்லது இரண்டுமே அவளுடைய பெயர்கள் தாமா என்பது தெரியவில்லை.

## வீட்டைத் துறந்த நிகழ்ச்சி

போதிசத்துவர் வீட்டைத் துறந்த அன்று இரவு தமது மாளிகையில் அமர்ந்திருந்தார். அவருடைய குழுவில் இருந்த பெண்கள் வாத்தியம் கீதம் முதலியவற்றினால் அவரைக் களிப்பிக்க எவ்வளவோ முயன்றார்கள். ஆனால் போதிசத்துவர் அவற்றுள் எதிலும் ஈடுபட வில்லை. கடைசியில் அந்தப் பெண்கள் அலுத்துத் தூங்கிவிட்டார்கள். சிலர் தூக்கத்தில் பிதற்றினார்கள்; சிலருடைய வாயிலிருந்து சொள்ளுப்பெருகியது. அவர்களைக் கண்டு அவருக்கு மிகவும்

அருவருப்பாக இருந்தது; வெறுப்பாக இருந்தது. அவர் மாடியிலிருந்து இறங்கிப் போய், சன்னன் என்ற சாரதியை கூவி எழுப்பினார் சன்னன் கந்தகம் என்ற குதிரையை அலங்கரித்து கொண்டுவந்தான். போதிசத்துவர் அதன் மேல் அமர்ந்தார். சன்னன் குதிரையின் வாலைப் பிடித்துக் கொண்டு உட்கார்ந்தான். தேவர்கள், அவர்கள் இருவருக்காகவும் நகர வாயிலைத் திறந்தார்கள். அதைக் கடந்து வெளியேறிய அவர்கள் இருவரும் அநோமா என்ற ஆற்றின் கரைக்குச் சென்றார்கள். அங்கே போதிசத்துவர் தமது கேசத்தைத் தமது வாளினால் மழித்துக் கொண்டார். அணிகலன் களைச் சன்னனிடம் ஒப்படைத்துவிட்டு, போதிசத்துவர் ராஜகிருகத்துக்குச் சென்றார். அவருடைய பிரிவைத் தாங்காமல், கந்தகம் அநோமா நதிக்கரையிலேயே இறந்தது. சன்னன் அணிகலன்களை எடுத்துக் கொண்டு கபிலவஸ்துவுக்குப் போனான்.

நிதானகதையிலுள்ள வரலாற்றின் சாரம் இது. நிதானகதையிலும் லலிதவிஸ்தரத்திலும் புத்தசரித காவியத்திலும் இந்த நிகழ்ச்சியைப் பற்றிய ரசமான வருணனைகளைக் காணலாம். பௌத்த ஓவியக்கலை இந்த வருணனைகளைப் பயன்படுத்தி வளமுற்றிருக்கிறது. ஆனால் இந்த வருணனைகளில் உண்மை என்பது அடியோடு இல்லை; அல்லது மிகவும் குறைவாக இருக்கிறது என்றே தோன்றுகிறது. ஏனென்றால், மிகப் பழமையான ஸுத்தங்களில் இந்த அபத்தக் களஞ்சியமான கட்டுக்கதைக்கு அடியோடு ஆதாரம் கிடைக்கவில்லை.

அரியபரியேஸன ஸுத்தத்தில் புத்த பகவான் தாமே, தமது வீட்டைத் துறந்தபோது நிகழ்ந்த செய்தியைக் கூறுகிறார்-

"பிட்சுக்களே, இப்படிச் சிந்தனை செய்து கொண்டிருக்கையில் சில காலம் கழித்து, -அப்பொழுது நான் இளைஞனாக இருந்தேன், எனது கேசம் ஒன்றுகூட நரைக்கவில்லை, நான் நிறைப் பருவத்தில் இருந்தேன், என் தாய் தந்தையர் எனக்கு அநுமதி கொடுக்கவில்லை, கண்ணீர் வெள்ளத்தில் அவர்களின் முகம் மூழ்கியிருந்தது; அவர்கள் ஓயாமல் அழுதார்கள்; ஆயினும் நான் (அவற்றையெல்லாம் பொருட்படுத்தாமல்) தலையை முண்டனம் செய்து கொண்டு, துவராடைகளால் உடலை மூடியவனாய், வீட்டிலிருந்து வெளியேறினேன். (நான் துறவியானேன்.)"

இந்த மேற்கோள் இப்படியே மகாஸச்சக ஸுத்தத்தில் இருப்பதைக் காணலாம். இதிலிருந்து, போதிசத்துவர் வீட்டிலுள்ளவர்களுக்கு ஒன்றும் அறிவிக்காமல் சன்னனோடு கந்தகமென்னும் குதிரைமீதேறி ஓடிவிட்டார் என்று சொல்வது எவ்வளவு பெரிய அபத்தம் என்பது தெளிவாகத் தெரிகிறது. போதிசத்துவருடைய சொந்தத் தாயான மாயாதேவி கருவுயிர்த்த ஏழாவது நாள் காலமானபோதிலும், மகாப்பிரஜாபதி கோதமி அவரைத் தன் வயிற்றுப் பிள்ளைபோலவே வளர்த்தாள். எனவே இந்த மேற்கோளில் அவளைத்தான் புத்தர் தாய் என்று கூறுகிறார் எனக்

கொள்ளவேண்டும். சுத்தோதனனுக்கும் கோதமிக்கும் அவர் பரிவிராஜகர் ஆகப்போகும் செய்தி பல நாட்களாகவே தெரிந்திருந்தது; அவர்களுடைய விருப்பத்துக்கு மாறாக அவர்களின் எதிரிலேயே அவர் துறவு கொண்டார் என்பது இந்த மேற்கோளிலிருந்து தெளிவாகத் தெரிகின்றது.

# 5. தவமும் தத்துவஞானமும்

## ஆளார காலாமனைக் கண்டது

வீட்டைத் துறந்ததும் போதிசத்துவர் நேரே ராஜ கிருகத்துக்குச் சென்றார். அங்கே அவருக்கும் பிம்பிசார மன்னனுக்கும் சந்திப்பு ஏற்பட்டது. பிறகு அவர் ஆளார காலாமனிடம் போய் அவனுடைய தத்தவ ஞானத்தை அறிந்து கொண்டார். இப்படி ஜாதகத்து நிதானகதை வருணித்திருக்கிறது. அசுவகோஷர் தமது புத்த சரித காவியத்தில் இதே கால அடைவை ஒப்புக்கொண்டிருக்கிறார். லலிதவிஸ்தரமோ, 'போதிசத்துவர் முதலில் வைசாலிக்குச் சென்றார். அங்கே ஆளார காலாமனுக்குச் சீடரானார். பிறகு ராஜகிருகத்துக்குப் போனார். அங்கே பிம்பிசார மன்னன் அவரைச் சந்தித்தான். பின்பு அவர் உத்தக ராமபுத்தனிடம் சென்றார்' என்று விரிவாகக் கூறுகின்றது. ஆனால் இந்த இரண்டு வர்ணனைகளுமே பழமையான ஸுத்தங்களோடு பொருந்தவில்லை. முன் அத்தியாயத்தில் கண்ட அரியபரியேஸன ஸுத்தத்து மேற்கோளில், போதிசத்துவர் வீட்டில் இருந்தபொழுதே தாய்தந்தையரின் எதிரில் துறவை ஏற்றுக்கொண்டார் என்பதைக் காண்கிறோம். அதற்குப் பிறகு அடுத்த செய்தி இதோவருகிறது-

பகவான் கூறுகிறார்: "இப்படிப் பரிவிரஜ்யை ஏற்றதும், நான் நன்மையான வழி எது என்பதை அறியும் நோக்கத்தோடு, உயர்ந்ததும் உலகத்திலேயே சிறந்ததும் சாந்தமுமான தத்துவத்தைத் தேடிக் கொண்டு ஆளார காலாமனிடம் சென்றேன்."

இந்த மேற்கோளிலிருந்து, போதிசத்துவர் ராஜகிருகத்துக்குப் போகாமல் முதலில் ஆளார காலாமனிடம் சென்றார் என்று தெரிகிறது. ஆளார காலாமன் கோசல நாட்டிலேயே வாழ்ந்தவன். அங்குத்தர நிகாயத்தில் திகநிபாதத்தில் (ஸுத்தம் 65), காலாமர் என்ற பெயருள்ள க்ஷத்திரியர்களின் கேஸபுத்த நகரத்தைப்பற்றிய குறிப்புக் காண்கிறது. அதிலிருந்து, அந்தக் காலாமர்களுள் ஒருவன்தான் இந்த ஆளார காலாமன் என்று தெரிகிறது. சாக்கிய நாட்டிலும் கோலிய நாட்டிலும் இவனுக்குப் பெரும்புகழ் இருந்தது. இவனுடைய மாணவர்களில் ஒருவனான பரண்டு காலாமனுடைய ஆசிரமம் கபிலவஸ்துவில் இருந்தது என்பதை முன்பே கூறியிருக்கிறேன். இவனுடைய மற்ற மாணவர்களும், உத்தக ராமபுத்தனுடைய சில மாணவர்களும் அருகிலுள்ள கோலிய நாட்டில் இருந்தார்கள். இந்த மதங்களுக்குச் சாக்கிய நாட்டிலும் கோலிய

நாட்டிலும் மிகுந்த செல்வாக்கு இருந்தது என்பதில் ஐயமே இல்லை. போதிசத்துவர் முதல் தியான வழியை இந்தப் பரிவி ராஜகர்களிட மிருந்துதான் அறிந்துகொண்டார். அவருக்குச் சந்நியாச தீட்சையும் அவர்களே அளித்திருக்க வேண்டும்.

ஆனால் சாக்கிய நாட்டிலோ கோலிய நாட்டிலோ ஓர் ஆசிரமத்தில் இருந்து காலத்தைக் கழிப்பது போதிசத்துவருக்குச் சரியென்று தோன்றவில்லை. நன்மையான வழியையும், உயர்ந்த, உலகத்திலேயே சிறந்த, சாந்தமான தத்துவத்தையும் அறிந்துகொள்வதற்காக அவர் நேரே வந்து ஆளார காலாமனைக் கண்டார். அப்பொழுது ஆளார காலாமன் கோசல நாட்டில் எங்கோ ஓர் இடத்தில் இருந்திருக்க வேண்டும். அவன் போதிசத்துவருக்கு நான்கு தியானங்களையும் அவற்றின் மேலுள்ள மூன்று படிகளையும் கற்றுக்கொடுத்தான். ஆனால், சமாதியின் இந்த ஏழு படிகளினால் மட்டும் பகவானுக்குத் திருப்தி உண்டாகவில்லை. மனத்தை அடக்கும் வழி இது என்பது உண்மை; ஆனால் மனித இனம் முழுமைக்கும் இதனால் என்ன பயன்? ஆதலினால் தான், பின்னும் நன்மையான வழியைப் பெருமான் மேலும் மேலும் தேடலானார்.

## உத்தக ராமபுத்தனைக் கண்டது

ஆளார காலாமனும் உத்தக ராமபுத்தனும் ஒரே சமாதி வழியைத்தான் கற்பித்து வந்தார்கள். அவர்களுக்குள் வேற்றுமை என்னவென்றால், ஆளார காலாமன் சமாதியில் ஏழு படிகளைக் கற்றுக்கொடுத்தான்; உத்தக ராமபுத்தன் எட்டுப் படிகளைக் கற்றுக் கொடுத்தான்; இவர்கள் இருவருக்கும் பொதுவாக எவனோ ஒரு குரு இருந்திருக்கிறான். பிறகு இவர்கள் இந்த இரண்டு மதங்களை உண்டாக்கினார்கள். ஆளார காலாமனை விட்டு போதிசத்துவர் உத்தகனிடம் சென்றார். ஆனால் அவனுடைய வழியிலும் அவருக்குச் சிறப்பான தத்துவம் ஏதும் புலப்படவில்லை. அப்பொழுது அவர் ராஜகிருகத்துக்குச் சென்று அங்கே புகழ்பெற்றிருந்த சிரமண மதங்களின் தத்துவத்தை அறிந்து கொள்ளத் தீர்மானித்தார்.

## பிம்பிசார மன்னனைக் கண்டது

ராஜகிருகத்தில் போதிசத்துவர் எழுந்தருளிய வரலாற்றை, பெயர் தெரியாத ஒரு கவி ஸுத்த நிபாதத்ததில் பப்பஜ்ஜா ஸுத்தத்தில் வருணித்திருக்கிறார். அதன் நேரான மொழிபெயர்ப்பு வருமாறு-

1. கண்ணுடையவர் (போதிசத்துவர்) ஏன் துறவு கொண்டார், எந்த எண்ணத்தினால் அவர் அதை விரும்பினார் என்பதைக் கூறி, நான் அவரது துறவை வருணிக்கிறேன்.

2. இல்லறம் என்பது தொந்தரவும் குப்பையுமான இடம்; துறவு என்பது திறந்த வெளி என்று அறிந்து அவர் துறவை ஏற்றார்.

3. துறவேற்று அவர் உடலினால் செய்யக்கூடிய பாவங்களை விட்டார்; வாயினால் நிகழக்கூடிய தீய ஒழுக்கங்களை விட்டார்; தமது வாழ்க்கையைத் தூய வழியில் நடத்தினார்.

4. புத்தர் மகதர்களுடைய கிரிவிரஜத்துக்கு (ராஜகிருகத்துக்கு) வந்தார். உடல் முழுவதும் உயர்ந்த அடையாளங்கள் பரவிய அவர் ராஜகிருகத்தில் பிட்சைக்காக நுழைந்தார்.

5. தனது அரண்மனையிலிருந்து பிம்பிசாரன் அவரைப் பார்த்தான். அவருடைய லட்சணமாகிய செல்வத்தைக் கண்டு அவன் கூறலானான்-

6. 'ஐயா, நான் சொல்வதைக் கேளுங்கள். இவன் அழகன், கம்பீரமாணவன், தூயவன், நல்லொழுக்கம் நிறைந்தவன்; காலருகில் இரண்டு முழத் தொலைவில் மட்டும் பார்வையைச் செலுத்திக் கொண்டே நடக்கிறான்.

7. 'காலருகில் பார்வை வைத்து நடக்கும் இந்த விழிப்புள்ள பிட்சு, தாழ்ந்த குலத்தவனாகத் தோன்றவில்லை. அவன் எங்கே போகிறான் என்பதை அரச தூதர்கள் ஓடிப்போய்ப் பார்க்கட்டும்.'

8. அந்தப் பிட்சு (போதிசத்துவர்) எங்கே போகிறார், ஊருக்குள் எங்கே தங்குகிறார் என்பதைக் காண்பதற்கு, (பிம்பிசார மன்னன் அனுப்பிய) அந்தத் தூதர்கள் அவர் பின்னாலேயே சென்றார்கள்.

9. புலன்களைக் காத்து, வீட்டுக்கு வீடு பிச்சையேற்று, விவேகமும் விழிப்புமுள்ள போதிசத்துவர், உடனே பாத்திரம் நிரம்பப் பிட்சை பெற்றுக்கொண்டார்.

10. பிட்சாடனம் முடிந்ததும் அந்த முனிவர் நகரத்துக்குப் புறம்பே வந்து, 'இங்கே தங்கலாம்' என்று எண்ணி, பாண்டவமலையருகில் அமர்ந்தார்.

11. அவர் தங்கியதைக் கண்ட அந்தத் தூதர்கள் அவரருகில் உட்கார்ந்தார்கள். அவர்களில் ஒருவன் போய் அரசனுக்குச் செய்தி சொன்னான்-

12. 'பேரரசே, அந்தப் பிட்சு பாண்டவ மலையின் கிழக்கில் புலிபோல, ஏறுபோல, மலைக்குகையில் வாழும் சிங்கம்போல அமர்ந்திருக்கிறார்!'

13. தூதனுடைய அந்தப் பேச்சைக் கேட்டு அந்த க்ஷத்திரியன் (மன்னன்) சிறந்த ஊர்தியில் உட்கார்ந்து வேகமாகப் பாண்டவ மலையை நோக்கிப் புறப்பட்டான்.

14. எதுவரைக்கும் ஊர்தியில் செல்ல இயலுமோ அதுவரைக்கும் சென்று அந்த க்ஷத்திரியன் ஊர்தியினின்றும் இறங்கி, நடந்தே (போதிசத்துவருக்கு) அருகில் வந்து அவரெதிரில் அமர்ந்தான்.

15. அங்கே உட்கார்ந்து மன்னன் அவருடைய நலம் முதலியவற்றைக் கேட்டான். சேமம் முதலியவற்றைக் கேட்டபிறகு அவன் கூறலானான்-

16. 'தாங்கள் இளமை துள்ளும் வீரராக விளங்குகிறீர்கள்; மனிதனுடைய முதற் பருவத்திலே இருக்கிறீர்கள். தங்கள் சுடரொளி, உயர்குலத்து க்ஷத்திரியனுடைய ஒளிபோல மிகவும் கவர்ச்சி வாய்ந்ததாக இருக்கிறது.

17. 'தாங்கள் யானைக் கூட்டத்தை உடன் கொண்டு என் சேனைக்கு எழிலூட்டுங்கள். நான் தங்களுக்குச் செல்வம் வழங்குகிறேன்; அதை அநுபவித்து இன்புறுங்கள். இனி, உங்கள் சாதி எது என்பதை எனக்குச் சொல்லுங்கள்.'

18. 'அரசே, இங்கிருந்து நேரே இமயமலையின் அடிவாரத்தில், செல்வமும் வீரமும் கொழிக்கின்ற - கோசல நாட்டைச் சார்ந்த - நிலம் இருக்கிறது.

19. '(அங்கு வாழும்) குடிமக்களுடைய கோத்திரம் ஆதித்தியம் என்பது; அவர்களுடைய இனத்தைச் சாக்கியம் என்பர். அந்தக் குலத்தினின்று, அரசே, நான் பரிவிராஜகன் ஆனேன்; காமநுகர்ச்சியில் விருப்பங்கொண்டபடியே நான் துறவேற்றவன் அல்ல.

20. 'காமநுகர்ச்சி எனக்குக் குற்றமாகத் தோன்றியது. தனிமை வாழ்வு இன்பமாக இருந்தது. இப்பொழுது நான் தவமியற்றச் செல்கிறேன். அந்த வழியில் என் மனம் ஈடுபடுகிறது.'

இந்த ஸுத்தத்தில் மூன்றாவது காதையில், போதிசத்துவர் உடல், வாக்கு, வாழ்க்கை வழி ஆகியவற்றை ஆராய்ந்ததாகக் குறிப்புக் காண்கிறது. வீட்டினின்று வெளியேறிய பின்பு வழியிலேயே அவர் இந்த ஆராய்ச்சியை நிகழ்த்தினார் என்பது சாத்தியமன்று. ஆளார காலாமனிடமும் உத்தக ராமபுரத்தனிடமும் இருந்து, அவர்களுடைய நடைமுறைகளையும் சிந்தனைகளையும் நன்கு கடைப்பிடித்த பின்னரே போதிசத்துவர் இந்த ஆராய்ச்சியை நிகழ்த்தியிருக்க வேண்டும். ஆனால் இவ்வளவிலும் திருப்தி கொள்ளாமல், அவர் புகழ்வாய்ந்த சிரமணத் தலைவர்களின் தத்துவத்தை அறிவதற்காக ராஜகிருகத்துக்கு வந்தார். அங்கே எல்லாச் சமயத்தவர்களும் ஏறவோ குறையவோ தவத்தில் ஈடுபட்டிருந்ததை அவர் கண்டார். ஆதலால் தாமும் அவ்வண்ணமே தவம் இயற்ற வேண்டும் என்று அவருக்குத் தோன்றிற்று. அதனால்தான் இந்த ஸுத்தத்தின் இறுதிக் காதையில், 'இப்பொழுது நான் தவம் இயற்றச் செல்கிறேன்' என்று அவர் கூறுகிறார். அவர் மனம் முன்னமே சிற்றின்பத்தினின்று நீங்கிவிட்டமையால், மகத மன்னன் கொடுப்பதாகச் சொன்ன அதிகாரப் பதவி அவருக்கு ஏற்கவில்லை.

## உருவேலாவுக்கு வருகை

ராஜகிருகத்திலிருந்து போதிசத்துவர் உருவேலாவுக்கு வந்தார். தவமியற்ற இந்த இடத்தை அவர் விரும்பினார். அரியபரியேஸன ஸுத்தத்தில் இதன் வருணனை இருக்கிறது.

பெருமான் கூறுகிறார்- "பிட்சுக்களே, நலம் எது என்பதை அறியும் நோக்கத்தோடு நான் உலகத்திலேயே சிறந்த அமைதியான நல்லிடத்தைத் தேடிக்கொண்டே முறையாக யாத்திரை செய்து உருவேலாவில் சேனா நிகமம் என்ற இடத்துக்கு வந்தேன். அங்கே நான் அழகிய நிலப்பரப்பைக் கண்டேன். அந்த இடத்தில் வனப்பு வாய்ந்த வனம் இருந்தது; மெல்ல மெல்ல ஆறு ஓடியது. ஆற்றின் இருபுறமும் வெண்மணல். இறக்கம் எளிதாக இருந்தது. ஆறு மிகவும் ரம்மியமாகத் தோன்றியது. இந்த வனத்தின் நாற்புறமும் பிட்சையேற்றுத் திரிய, ஊர்கள் நிலவின. அந்த நிலப்பரப்பு அழகாக இருந்தமையால், 'உயர் குலத்தவனுக்குத் தவம் செய்ய இதுவே ஏற்றது' என்று கருதி, நான் அங்கேயே தவமியற்றலானேன்."

ராஜகிருகத்தைச் சுற்றியுள்ள குன்றுகளில் நிக்கந்தர் முதலிய சிரமணர்கள் தவம் செய்வதுண்டு என்ற குறிப்பை நூல்களில் பல இடங்களில் காண்கிறோம். ஆனால் போதிசத்துவருக்கு அந்த வறட்சியான குன்றுகள் தவத்துக்கு ஏற்ற இடமாகத் தோன்றவில்லை; கண்ணுக்கும் கருத்துக்கும் கவர்ச்சியான உருவேலாவையே அவர் விரும்பினார். இதிலிருந்து, இயற்கையெழிலில் அவர் கொண்டிருந்த அன்பு புலப்படுகின்றது.

## மூன்று உவமைகள்

தவத்தைத் தொடங்குமுன்பு போதிசத்தவருக்கு மூன்று உவமைகள் தோன்றின. மகாஸச்சக ஸுத்தத்தில் அவற்றின் வரலாற்றைக் காணலாம். பெருமான் கூறுகிறார் - "அக்கிவேஸ்ஸனா, ஓர் ஈர விறகு தண்ணீரில் கிடக்கிறது. ஒருவன் வேள்விச்சாலையிலிருந்து அரணியை (தீக்கடை கோலை)க் கொண்டு வந்து அந்த விறகைக் கடைந்து தீயை உண்டாக்க முயன்றால், அதிலிருந்து தீத் தோன்றுமா?"

ஸச்சகன் விடை பகர்ந்தான்- "கோதமரே, அந்த விறகிலிருந்து தீ உண்டாக்க முடியாது. ஏனென்றால், அது ஈரமானது. அந்த மனிதனுக்கு உழைப்பு வீணாகி, வருத்தம் மட்டுமே உண்டாகும்."

"அதுபோலவே, அக்கிவேஸ்ஸனா, எந்தச் சிரமணரும் அந்தணரும் காமநுகர்ச்சியிலிருந்து உடலாலும் மனத்தாலும் நீங்கவில்லையோ, எவர்களுடைய காம வெறி அடங்கவில்லையோ, அந்தச் சிரமணரும் அந்தணரும் எவ்வளவுதான் துன்புற்றாலும் அவர்களுக்கு ஞான

திருஷ்டியும் மிகச் சிறந்த தத்துவ போதமும் கிடைக்க முடியாது. அக்கிவேஸ்ஸனா, இரண்டாவது உவமை எனக்குத் தோன்றுகிறது. ஈர விறகு ஒன்று, நீரிலிருந்து தொலைவில் கிடக்கிறது. ஒருவன் வேள்வியரணியைக் கடைந்து அந்த விறகிலிருந்து தீயை உண்டாக்க முயன்றால், அதிலிருந்து தீத் தோன்றுமா?" என்றார் பெருமான்.

—"தோன்றாது, கோதமரே! அந்த மனிதனுடைய முயற்சி வீணாகி, அவனுக்கு வருத்தம் மட்டுமே உண்டாகும். ஏனென்றால், அந்த விறகு ஈரமானது" என்றான் ஸச்சகன்.

பெருமான் கூறுவார் - "அதுபோலவே, அக்கிவேஸ்ஸனா, எந்தச் சிரமணரும் அந்த்ணரும் காமநுகர்ச்சிகளை விட்டு, உடலாலும் மனத்தாலும் அவற்றுடன் அறவே ஒட்டாமல் இருந்துங்கூட, மனத்தில் மட்டும் காமவெறிகள் அடங்காதவர்களாய் இருக்கிறார்களோ, அந்தச் சிரமணரும் அந்தணரும் எவ்வளவுதான் துன்புற்றாலும் அதனால் அவர்களுக்கு ஞான திருஷ்டியும் மிகச் சிறந்த தத்தவபோதமும் கிடைக்க முடியாது. அக்கிவேஸ்ஸனா, இப்பொழுது மூன்றாவது உவமையொன்று எனக்குத் தோன்றுகிறது. காய்ந்த ஒரு விறகு, நீரிலிருந்து தொலைவில் கிடக்கிறது. ஒருவன் அதன்மீது வேள்வியரணியைக் கடைந்து தீயை உண்டாக்க முயன்றால், அவன் தீயை உண்டாக்குவானா மாட்டானா?"

"உண்டாக்குவான், கோதமரே! ஏனென்றால், அந்த விறகு முழுமையும் காய்ந்திருக்கிறது; அது நீரில் விழவில்லை" என்றான் ஸச்சகன்.

பெருமான் உரைக்கலானார்- "அதுபோலவே, அக்கிவேஸ்ஸனா, எந்தச் சிரமண அந்தணர்கள் உடலாலும் மனத்தாலும் காம நுகர்ச்சிகளினின்று தொலைவில் இருக்கிறார்களோ, எவர்களுடைய மனத்தில் காமவெறிகள் முழுமையும் அழிந்துவிட்டனவோ அந்தச் சிரமண அந்தணர்கள் உடலை மிகவும் வருத்தினாலும் சரி, வருத்தாமலே இருந்தாலும் சரி, அவர்களுக்கு ஞானதிருஷ்டியும் மிகச் சிறந்த தத்துவபோதமும் கிடைக்க முடியும்."

இந்த மூன்று உவமைகள் போதிசத்துவருக்குத் தவம் தொடங்கும் போது தோன்றின. வேள்வி முதலியவற்றிலேயே திருப்தி கொள்ளும் சிரமண அந்தணர்கள், அத்தகைய சந்தர்ப்பத்தில் தவஞ் செய்து உடலை வருத்தினாலுங்கூட அவர்களுக்குத் தத்துவஞானம் உண்டாகாது. வேறு சிரமண அந்தணர்கள் வேள்வி வழியை விட்டுக் காட்டில் சென்று வாழ்ந்தார்கள்; ஆனால் அவர்களுடைய உள்ளத்திலிருந்து காமவெறிகள் அழியவில்லை என்றால் அவர்களுக்குத் தவத்தினால் ஏதும் பயன் இல்லை. ஈர விறகின்மீது வேள்வியரணியைக் கடைந்து தீயை உண்டாக்கும் முயற்சிபோல, அவர்களுடைய தவமுயற்சி அனைத்தும் வீணாகும். ஆனால் எவனாயினும் ஒருவன் காமநுகர்ச்சிகளினின்றும்

தொலைவில் இருந்து, மனத்திலுள்ள காமவெறிகளை அறவே ஒழிப்பானாயின், அவன் உடலை வருத்தாமலே தத்துவபோதத்தைப் பெற முடியும்.

## ஹடயோகம்

போதிசத்துவருக்கு இந்த உவமைகள் தோன்றியபோதிலுங்கூட, அவர் அந்தக் காலத்துச் சிரமணப் பழக்கத்தையொட்டிக் கடுமையான தவமியற்றத் தீர்மானித்தார். முதலில் அவர் ஹடயோகத்தை உறுதியாகப் பயின்றார். பகவான் இதுபற்றி ஸச்சகனுக்குக் கூறுகிறர்-

"அக்கிவேஸ்ஸனா, நான் பற்களின்மேல் பற்களை அழுத்தி நாக்கை அண்ணத்தில் பொருத்தி மனத்தை அடக்கும்பொழுது என் அக்குளிலிருந்து வேர்வை வடியும். வலிமை வாய்ந்த ஒருவன், வலிவில்லாதவனைத் தலையிலோ தோளிலோ பிடித்து அமுக்குவது போல நான் என் மனத்தை அமுக்கி வந்தேன்.

"அக்கிவேஸ்ஸனா, அதன்பிறகு நான் உள்மூச்சையும் வெளி மூச்சையும் அடக்கித் தியானம் செய்யலானேன். அப்பொழுது என் காதுகளிலிருந்து மூச்சுவிடும் ஒலி கேட்டது. கொல்லனுடைய துருத்திபோல என் காதிஸருந்து ஒலி வந்தது. ஆயினும் அக்கிவேஸ்ஸனா, நான் உள்மூச்சையும் வெளிமூச்சையும் காதுகளையும் அடக்கிக் கொண்டு தியானம் செய்யலானேன். அப்பொழுது கூரிய கத்தியின் முனையினால் யாரோ என் தலையைக் குடைவதுபோல எனக்குத் தோற்றியது. ஆயினும் இந்தத் தியானத்தையே நான் மேலும் தொடர்ந்தேன். என் தலையால் தோல்பட்டையை வளைத்து யாரோ அழுத்திப் பிடிப்பதாக எனக்குத் தோற்றியது. ஆயினும் இந்த தியானத்தையே நான் தொடர்ந்தேன். அதனால் என் வயிற்றில் வேதனைகள் எழுந்தன. ஊன்வாணிகன் கத்தியினால் பசுவின் வயிற்றைச் செதுக்குவதுபோல என் வயிற்றை யாரோ வெட்டுவதாக எனக்குத் தோற்றியது. இந்தத் தொந்தரவுகள் யாவற்றுக்குமிடையே என் உற்சாகம் குன்றாமல் இருந்தது; நினைவு நிலைத்திருந்தது; ஆனால் உடலில் வலிமை குறைந்தது. ஆயினும் அந்தத் துன்புறுத்தும் வேதனைகள் என் மனத்தைத் தடை செய்ய முடியவில்லை."

மூன்றாவது அத்தியாயத்தில், சிரமணர்களின் பலவகைத் தவங்களைக் கூறியிருக்கிறேன். அவற்றுள் ஹடயோகம் வரவில்லை. ஆயினும் அந்தக் காலத்தில் மேற்கூறியதுபோன்ற ஹடயோகத்தைப் பயிலும் தவசிகள் இருந்தார்கள் என்றே கொள்ள வேண்டும். இல்லாவிட்டால் போதிசத்துவர் இத்தகைய யோகத்தை மேற்கொண்டிருக்க மாட்டார்.

## உபவாசகங்கள்

இப்படி ஹடயோகம் பயின்று அதில் ஏதும் பயனில்லை என்று

தெரிந்ததும் போதிசத்துவர் உபவாசங்களைத் தொடங்கினார். உணவையும் நீரையும் அறவே விடுவது அவருக்குச் சரியென்று தோன்றவில்லை. எனவே அவர் மிகவும் குறைவாகவே உண்ணலானார்.

பெருமான் ஸச்சகனிடம் கூறுகிறார்- "அக்கிவேஸ்ஸனா, நான் மிகவும் குறைவாக உண்ணலானேன். பயற்றங்கஞ்சி, கொள்ளுக் கஞ்சி, பட்டாணிக் கஞ்சி அல்லது கடலைக் கஞ்சியைக் குடித்தே நான் வாழ்ந்தேன். அதுவும் மிகக் குறைவாக இருந்ததனால் என் உடல் மிகவும் மெலிந்தது. ஆஸீதகம், காலவல்லி என்னும் கொடிகளின் கணுப்போல என் உடலின் மூட்டுக்கள் தெரிந்தன. ஒட்டகத்தின் காலடிபோல என் இடுப்பு வளைந்திருந்தது. நூற்கண்டின் மாலை போல என் முதுகெலும்புத்தண்டு தோன்றியது. இடிந்த வீட்டின் வலிச்சல்கள் மேலும் கீழுமாக இருப்பதுபோல என் விலா எழும்புகள் காட்சி தந்தன. ஆழமான கிணற்றில் படும் நட்சத்திரங்களின் பிரதிபிம்பம்போல என் கண்ணின் கருமணிகள் ஆழத்தில் சென்றன. பழுக்காத பூசனியை நறுக்கி வெயிலில் உலர்த்தினால் அது வாடுவதுபோல என் தலையின் தோல் வதங்கியிருந்தது. நான் என் வயிற்றைத் தடவினால் முதுகெலும்புக் கணு கைக்குத் தட்டுப்படும்; முதுகந்தண்டைத் தடவினால் வயிற்றுத்தோல் கைக்குத் தட்டுப்படும். இப்படி என் முதுகந்தண்டும் வயிற்றுத் தோலும் ஒட்டியிருந்தன. மலமோ மூத்திரமோ கழிக்க உட்காரும் பொழுது நான் அங்கேயே விழுந்து கிடப்பேன். என் உடலைக் கையால் தடவும்பொழுது, வலிவிழந்த உரோமங்கள் தாமாகவே நழுவி உதிரும்."

## எண்ணங்களை வசப்படுத்தியது

போதிசத்துவர் ஏழு ஆண்டுகள் தவம் செய்ததாக நூல்கள் கூறுகின்றன. இந்த ஏழு ஆண்டுகளில் முக்கியமாக உடலை வருத்தி வந்தார் என்றாலும், அவர் மனத்தில் வேறு எண்ணங்களே தோன்றவில்லை என்று சொல்ல முடியாது. மேலே கூறிய மூன்று உவமைகளைக் கவனித்தாலுங்கூட, 'காமக்கலக்கத்தை அறவே அழித்தாலன்றி வெவ்வேறு வகையான உடல்வருத்தத்தினால் ஏதும் பயனில்லை' என்பதை அவர் தெளிவாக அறிந்திருந்தார் என்று தெரிகிறது. இதைத் தவிர இன்னும் பல நல்ல எண்ணங்கள் அவர் மனத்தில் எழுந்தன என்று பல ஸுத்தங்களிலிருந்து தெரிகிறது. அவற்றில் சில எண்ணங்களை இங்கே சுருக்கமாகக் கூறுகிறேன்.

மஜ்ஜிமநிகாயத்தில் த்வேதாவிதக்க ஸுத்தத்தில் பெருமானின் அருள்மொழி இது- "பிட்சுக்களே, எனக்குத் தத்துவபோதம் கிடைக்கு முன்பு, நான் போதிசத்துவனாக இருந்தபொழுதே, விதர்க்கங்களை (எண்ணங்களை) இரு வகையாகப் பிரிக்க வேண்டும் என்று எனக்குத் தோன்றியது. அதன்படியே காம விதர்க்கம் (உலகப் பற்று), வியாபாத

விதர்க்கம் (பகைமை எண்ணம்), விஹிம்ஸா விதர்க்கம் (பிறரையோ தன்னையோ துன்புறுத்தும் எண்ணம்) என்ற இந்த மூன்று விதர்க்கங்களை ஒரு பிரிவாக்கினேன். நைஷ்கர் மியம் (தனிமை வாழ்வு), அவியாபாதம் (நட்பு), அவிஹிம்ஸை (துன்புறுத்தக் கூடாது என்ற எண்ணம்) ஆகிய மூன்று விதர்க்கங்களையும் வேறொரு பிரிவாக்கினேன். அதன் பிறகு நான் மிகவும் ஜாக்கிரதையாகவும் கவனமாகவும் நடந்து கொண்டபொழுது, முதல் மூன்று விதர்க்கங்களில் ஏதாவது ஒன்று என் மனத்தில் தோன்றும். அப்பொழுது நான் சிந்திப்பேன்: 'இந்தத் தீய விதர்க்கம் என் மனத்தில் தோன்றியிருக்கிறது. இது என் துன்பத்துக்கோ, பிறருடைய துன்பத்துக்கோ, இருவகையினருடைய துன்பத்துக்குமோ காரணமாகும்; அறிவைத் தடுக்கும்; நிர்வாணத்துக்குப் போகவிடாது.' இப்படிச் சிந்திப்பதனால் அந்த விதர்க்கம் என் மனத்திலிருந்து நீங்கிவிடும்.

"பிட்சுக்களே, சரத்காலத்தில் இங்கும் அங்கும் வயல்களில் தானியக்கதிர்கள் முற்றியிருக்கும்பொழுது ஆயன் மாடுகளை மிகவும் கவனமாகக் காக்கிறான்; தடியால் அடித்துங்கூட அவற்றை வயலிலிருந்து ஓட்டுகிறான். ஏனென்றால், அப்படிச் செய்யாவிட்டால் மாடுகள் மக்களின் வயலில் புகும்; அதற்குத் தான் அபராதம் கட்டவேண்டி வரும் என்பது அவனுக்குத் தெரியும். அதுபோலவே காமம், வியாபாதம், விஹிம்ஸை முதலிய தீய மனப்பான்மைகள் பயங்கரமானவை என்பதை நான் அறிந்தேன்.

"அந்தச் சமயத்தில் நான் ஜாக்கிரதையாகவும் உற்சாகமாகவும் நடந்து கொண்டபொழுது என் மனத்தில் நைஷ்கர்மியம், அவியாபாதம், அவிஹிம்ஸை ஆகிய மூன்று விதர்க்கங்களில் ஏதாவது ஒன்று தோன்றும். அப்பொழுது நான் இப்படிச் சிந்திப்பேன்- 'இந்த நல்ல எண்ணம் என் மனத்தில் தோன்றியிருக்கிறது. இது எனக்கோ பிறருக்கோ அல்லது இருவருக்குமோ துன்பம் கொடுப்பதன்று; இது அறிவை வளர்த்து, நிர்வாணத்தை அடைவிப்பது.' அந்த நல்ல எண்ணத்தை இரவு முழுவதுமோ பகல் முழுவதுமோ சிந்தித்தாலும் அதனால் அச்சம் ஏதும் இல்லை. ஆனால் நீண்டநேரம் சிந்தித்தால் என் உடல் சோர்ந்துவிடும்; அதனால் என் மனம் நிலை நிற்காது. நிலைநிற்காத மனத்துக்குச் சமாதி எங்கிருந்து கிட்டும்? ஆதலால் (சிறிது நேரம் கழித்து) நான் என் மனத்தை உள்ளேயே நிலைப்படுத்திக் கொள்வேன்.

"கோடைக்காலத்து முடிவில், மக்கள் தானியத்தை அறுவடை செய்து வீட்டுக்குக் கொண்டுபோன பின்பு, ஆயன் மாடுகளைத் தாராளமாக அவிழ்த்துவிடுகிறான். அவன் மரநிழலில் இருந்தாலும் திறந்த வெளியில் இருந்தாலும் மாட்டைச் சும்மா கவனித்துக் கொள்வது தவிர வேறு ஏதும் செய்வதில்லை. அதுபோலவே, நைஷ்கர் மியம் முதலிய நல்ல எண்ணங்கள் எழுந்தபொழுது, 'இவை நல்ல தன்மைகள்' என்று மட்டுமே நான் நினைவில் வைத்து வந்தேன். (அவற்றை ஒடுக்க முயல வில்லை.)"

## அச்சமின்மை

நல்ல எண்ணங்களின் உதவியினால் தீய எண்ணங்களை வென்றபிறகுங்கூட, அறநெறியில் செல்லும் ஒருவனுடைய மனத்தில் அச்சமின்மை தோன்றவில்லை என்றால், அதுவரைக்கும் அவனுக்குத் தத்துவபோதம் கிடைப்பது இயலாது. கொள்ளைக்காரர்களோ படை வீரர்களோ தங்கள் எதிரிகளைத் துணிந்து தாக்குகிறார்கள். ஆனால் அவர்களிடத்தில் அச்சமின்மை எது? அவர்கள் எவ்வளவுதான் படைக்கலங்கள் தாங்கியிருந்தாலும் அச்சத்தால் நடுங்கியபடி இருப்பார்கள்; 'நம் பகைவர் நம்மை எப்போது தாக்குவார்கள் என்ற நேமம் இல்லையே!' என்று அவர்கள் கருதுகிறார்கள். எனவே அவர்களுடைய அச்சமின்மை உண்மையானதன்று. ஆன்மிக வழியில் கிடைக்கும் அச்சமின்மைதான் உண்மையானது. போதிசத்துவர் அதை எப்படிப் பெற்றார் என்பதை விளக்குகிறது, இந்த மேற்கோள்-

புத்த பகவான் ஜாநுசுரோணி என்னும் அந்தணனுக்குக் கூறுகிறார்- "அந்தணனே, நான் தத்துவ போதம் பெறுவதற்கு முன்பு வெறும் போதிசத்துவனாக இருந்தபொழுது, 'தூய உடற்செயல்களைக் கைக்கொள்ளாமல் காட்டில் வாழ்கிற சிரமணர்களாயினும் சரி, அந்தணர்களாயினும் சரி; அவர்கள் இந்தக் குற்றத்தின் வாயிலாகக் கொடிய அச்சத்தை வருவித்துக்கொள்கிறார்கள். ஆனால் என் செயல்கள் தூயவை' என்று நினைத்தேன். தூய உடற்செயல்களைக் கைக்கொண்டு காட்டில் வாழும் மேலோர்களில் (ஆரியர்களில்) நானும் ஒருவன் என்பதை நான் உணர்ந்தபொழுது, காட்டு வாழ்க்கை எனக்கு மிகவும் அச்சமற்றதாகத் தோன்றியது. வேறு சில சிரமணர்கள் அல்லது அந்தணர்கள் தூய்மையற்ற வாக்கினால் செயல் புரிந்துகொண்டு, தூய்மையற்ற மனத்தினால் செயல் புரிந்துகொண்டு, தூய்மையற்ற பிழைப்பு வழியைக் கொண்டு காட்டில் வாழ்கிறார்கள்; அவர்கள் இந்தக் குற்றங்களின் வாயிலாகக் கொடிய அச்சத்தை வருவித்துக் கொள்கிறார்கள். ஆனால் நான் வாக்கினாலும் மனத்தினாலும் ஆற்றும் செயல்களும், என் பிழைப்பு வழிகளும் தூயவை. இவை அனைத்துமே தூய்மையாக உடைய பெரியோர்களில் நானும் ஒருவன் என்பதைக் கண்டபிறகு, காட்டு வாழ்க்கை எனக்கு மிகவும் அச்சமற்றதாகத் தோன்றியது.

"அந்தணனே, பேராசையும் தீய மனமும் சோம்பலும் மயக்கமும் ஐயமும் வாய்ந்தவர்களாய் வனத்தில் வாழும் சிரமணர்கள் அல்லது அந்தணர்கள், இந்தக் குற்றங்களின் வாயிலாகக் கொடிய அச்சத்தை (பய பைரவனை) அழைக்கிறார்கள். ஆனால் என் நெஞ்சம் காமக் கலக்கத்தினின்று நீங்கியிருக்கிறது, பகைமையினின்று விடுபட்டிருக் கிறது (அதாவது எல்லா உயிர்களிடத்தும் நான் நட்புப் பாராட்டுகிறேன்);

என் மனம் உற்சாகம் நிறைந்து, நிலையாக, கவலையற்று இருக்கிறது. இந்தப் பண்புகள் வாய்ந்தவர்களாய் வனத்தில் வாழும் மேலோர்களிலே நானும் ஒருவன் என்பதைக் கண்டபொழுது, காட்டு வாழ்க்கை எனக்கு மிகவும் அச்சமற்றதாகத் தோன்றியது.

"அந்தணனே, தற்பெருமையினால் தம்மையே போற்றிப் பிறரை இகழ்ந்து, பயங்கொள்ளிகளாய், மதிப்பிலும் மரியாதையிலும் ஆசைகொண்டு, அறிவிலிகளாகக் காட்டில் வாழும் சிரமணர்கள் அல்லது அந்தணர்கள், இந்தக் குற்றங்களின் வாயிலாகக் கொடிய அச்சத்தை வருவித்துக் கொள்கிறார்கள். ஆனால் என்னிடம் இந்தத் தீய தன்மைகள் இல்லை. நான் தற்புகழ்ச்சி செய்வதில்லை; பிறரைப் பழிப்பதில்லை. நான் பயங்கொள்ளியல்ல. மதிப்பிலும் மரியாதையிலும் எனக்கு அவா இல்லை. நான் அறிவுள்ளவன். இந்தப் பண்புகள் வாய்ந்தவர்களாய் வனத்தில் வாழும் மேலோர்களிலே நானும் ஒருவன் என்பதைக் கண்டபொழுது, காட்டு வாழ்க்கை எனக்கு மிகவும் அச்சமற்றதாகத் தோன்றியது.

"அந்தணனே, சதுர்த்தசி பௌர்ணமி அமாவாசை அஷ்டமி ஆகிய இரவுகள் (அச்சத்துக்குப் பெயர் போனவை. அந்த இரவுகளில், மக்கள் தேவதைகளுக்குப் பலிகொடுக்கும் உய்யானத்திலோ காட்டிலோ மரத்து அடியிலோ அல்லது மிகவும் பயங்கரமானவை என்று மக்கள் கருதும் இடங்களிலோ நான் (தனியே) வாழ்ந்து வந்தேன். ஏனென்றால், கொடிய அச்சம் எப்படி இருக்கிறது என்பதை நான் தெரிந்துகொள்ள விரும்பினேன். இத்தகைய இடங்களில் நான் இருக்கும் போது ஏதாவது ஒரு மான் அந்தப் பக்கமாகப் போகும்; ஏதாவது ஒரு மயில் மரத்திலிருந்து காய்ந்த கொம்பைக் கீழே தள்ளும்; அல்லது மரத்தின் இலைகள் காற்றில் அசையும். 'இதுதான் அந்தக் கொடிய அச்சம்' என்று எனக்கு அப்பொழுது தோன்றும். 'பய அரக்கனைக் காணும் எண்ணத்தோடு நான் இங்கே வந்திருக்கிறேன்; ஆதலால் இந்த நிலையிலேயே அந்த அரக்கனை அழிக்க வேண்டும்' என்று எனக்குள் சொல்லிக்கொள்வேன். நான் நடக்கும்போது அவன் வந்தால் நடக்கும் போதே அவனை அழிப்பேன். அவனை அழிக்கும்வரைக்கும் நான் நிற்கமாட்டேன், உட்கார மாட்டேன், படுக்கவும் மாட்டேன். அந்த அச்ச அரக்கன் நான் நிற்கும்போது வந்தால், நின்றபடியே நான் அவனை அழிப்பேன். அவனை அழிக்காதவரைக்கும் நடக்க மாட்டேன், உட்கார மாட்டேன், படுக்கவும் மாட்டேன். நான் உட்கார்ந்திருககையில் அந்த அச்ச அரக்கன் வந்தால், நான் தூங்க மாட்டேன், நிற்க மாட்டேன், நடக்கவும் மாட்டேன்; உட்கார்ந்தபடியே அவனை அழிப்பேன். நான் படுக்கையில் கிடக்கும்போது அவன் வந்தால், எழுந்து உட்காரமாட்டேன், நிற்க மாட்டேன், நடக்கவும் மாட்டேன்; படுக்கையில் கிடந்தபடியே அவனை அழிப்பேன்."

## ராஜயோகம்

போதிசத்துவர் ஹடயோகத்திலும் தவத்திலும் மட்டுமே தமது காலம் முழுவதையும் கழித்தார் என்பதில்லை. அப்படிச் செய்வது எந்தத் தவசியாலுமே முடியாது. நடுநடுவே அவர் நல்ல உணவு கொள்ள வேண்டியிருந்தது. உடலில் சிறிது வலிமை வந்ததும் அவர் மீண்டும் உண்ணாநோன்பு முதலியவற்றினால் காயக்கிலேசம் செய்வார். ஏழு ஆண்டுகள் அவர் முக்கியமாகத் தவமியற்றிய போதிலும் இடையிடையே நல்ல உணவை உண்டு, அமைதியான சமாதியையும் அநுபவத்து வந்தார் என்பதில் ஐயமில்லை. ஹடயோகத்தை விட்டு அவர் ஆநாபான ஸ்மிருதி சமாதியை எப்படிப் பாவித்து வந்தார் என்பதை, ஆநாபானஸம்யுத்தத்தின் முதல் வக்கத்தில் எட்டாவது ஸுத்தத்தில், அவர் வாக்கினாலேயே கேளுங்கள்.

பகவான் கூறுகிறார்- "பிட்சுக்களே, ஆநாபான ஸ்மிருதி சமாதியைப் பாவித்தால் பெரும் பயன் ஏற்படுகிறது. அதை எந்த வகையில் பாவனை செய்தால் பெரும் பயன் உண்டாகிறது? பிட்சு ஒருவன் காட்டில் மரத்தின் அடியிலோ, வேறு தனிமையான இடத்திலோ ஆசனமிட்டுக் கொண்டு உட்காருகிறான். அவன் நீண்ட வெளிமூச்சை உள்ளே இழுத்துக் கொள்ளும் போது, நீண்ட வெளிமூச்சை ஏற்றுக்கொள்வதை உணர்கிறான் நீண்ட உள்மூச்சை வெளிவிடும்போது, நீண்ட உள் மூச்சு விடுவதை உணருகிறான்; குறுகியவெளி மூச்சை இழுத்துக்கொள்ளும்போது.... முதலியன.[1] இவ்வண்ணம் ஆநாபான ஸ்மிருதி சமாதியைப் பாவித்தால் பெரும்பயன் ஏற்படுகிறது. பிட்சுக்களே, நானும் பூரண ஞானம் பெறுமுன்பு, போதிசத்துவ நிலையில் இருந்தபொழுது, பெரும்பாலும் இந்தப் பாவனையே செய்து வந்தேன். அதனால் என் உடலுக்கும் கண்களுக்கும் தொந்தரவு இராது; என் மனம் பாவச் சிந்தனைகளிலிருந்து விடுபட்டிருக்கும்."

போதிசத்துவர் எப்போதும் ஹடயோகத்தையே பயின்று கொண்டிருக்கவில்லை என்பது இதிலிருந்து தெளிவாகத் தெரிகிறது. அவர் இடையிடையே அமைதியான ராஜயோகத்தைப் பயின்று வந்தார்; அதனால் அவருக்குத் திருப்தி ஏற்பட்டது.

1. இதன் விரிவைச் சமாதி மார்க்கம் என்னும் நூலில் காண்க.

# தியான வழியை மேற்கொண்டது

இம்மாதிரியாக உண்ணா நோன்புக்கும் உணவு கொள்வதற்கும், ஹடயோகத்துக்கும் ராஜயோகத்துக்கும் நடுவே மாறி மாறி அலைக்கழிந்த பின்பு, இறுதியில் போதிசத்துவர் திடீரென்று ஒரு முடிவுக்கு வந்தார். 'தவம் செய்வது அறவே பயனற்றது; அது இல்லாமலே முக்தி பெற இயலும்' என்று அவர் தீர்மானித்தார். ஆதலால் அவர் அதை விட்டு, மீண்டும் முழுக்க முழுக்கத் தியான வழியை மேற்கொண்டார். இதைப் பற்றிய சுருக்கமான வருணனை மகாஸச்சக ஸுத்தத்தில் வருகிறது.

பெருமான் ஸச்சகனிடம் கூறுகிறார்- "அக்கிவேஸ்ஸனா, என் சாக்கியத் தந்தையின் வயலில் வேலை நடந்துவந்த பொழுது நான் நாவல் மரத்தின் குளிர்ந்த நிழலில் அமர்ந்து, முதல் தியான நிலையைப் பெற்றது என் நினைவுக்கு வந்தது. அந்த நினைவைப் பின்பற்றி, இதுவே பேரறிவு பெறும் வழியாக இருக்க வேண்டும் என்று கருதினேன். கேளிக்கைப் பொருள்களின் நுகர்ச்சி இல்லாமலே கிடைப்பதும், நல்ல எண்ணங்களிலிருந்து கிடைப்பதுமான அந்த இன்பத்துக்கு நான் ஏன் அஞ்ச வேண்டும்? இந்தச் சிந்தனை தோன்றியதும், 'அந்த இன்பத்துக்கு நான் அஞ்ச மாட்டேன்' என்று தீர்மானித்தேன். ஆனால் அந்த இன்பம் மிகவும் மெலிந்த உடலினால் கிடைப்பதாக இல்லை. ஆதலால் நான் கொஞ்சங் கொஞ்சமாக உணவு கொள்ளத் தீர்மானித்து அதன்படி நடந்துகொண்டேன். அந்தச் சமயத்தில் ஐந்து பிட்சுக்கள் எனக்குப் பணி செய்து வந்தார்கள். ஏனென்றால், எனக்குக் கிடைக்கும் தத்துவ போதத்தை நான் அவர்களுக்குக் கற்பிப்பேன் என்று அவர்கள் நினைத்தார்கள். ஆனால் நான் உணவு உட்கொண்ட பொழுது (தவத்தை விட்டபொழுது), 'இந்தக் கோதமன் தவத்திலிருந்து நழுவி உண்டியிலும் குடியிலும் திரும்ப ஈடுபட்டுவிட்டான்' என்று எண்ணி, அந்த ஐந்து பிட்சுக்களும் என்னிடம் வெறுப்போடு புறப்பட்டுச் சென்றார்கள்."

ஆயினும் போதிசத்துவர் தமது தீர்மானத்தைத் தளரவிடவில்லை. தவ வழியை விடுத்து, எளிய தியான வழியினாலேயே தத்துவ போதத்தைப் பெறவேண்டும் என்பதில் அவர் நம்பிக்கை கொண்டார்.

## மார யுத்தம்

இந்தச் சந்தர்ப்பத்தில் போதிசத்துவரோடு மாரன் போரிட்டான். அதைப்பற்றிய வருணனையைப் புத்த சரிதம் முதலிய நூல்களில்

காணலாம். அதற்கு ஆதாரமானது, ஸுத்த நிபாதத்தில் இருக்கும் பதான ஸுத்தம். அந்த ஸுத்தத்தின் மொழிபெயர்ப்பு வருமாறு-

1. நைரஞ்சரா நதிக் கரையில் தவத்தைத் தொடங்கி நிர்வாணத்தைப் பெறுவதற்காக நான் மிகவும் உற்சாகத்தோடு தியானம் செய்துகொண்டு இருக்கையில்-

2. மாரன் இரங்கத்தக்க குரலோடு என்னிடம் வந்தான். (அவன் சொன்னான்:) 'நீ மெலிந்து நிறம்மாறி இருக்கிறாய். சாவு உன் அருகில் இருக்கிறது.

3. 'ஆயிரம் பங்கு நீ சாவாய். ஒரு பங்கு உன் உயிர் எஞ்சியிருக்கிறது. ஏ நல்லவனே, நீ உயிர்பிழைத்துக்கொள். உயிர் வாழ்வது சிறந்தது; உயிரோடு இருந்தால் நீ புண்ணியச் செயல்களை ஆற்ற முடியும்.

4. 'பிரம்மசரியத்துடன் வாழ்ந்து அக்கினிஹோத்திரம் செய்து வழிபட்டால், நீ அளவற்ற புண்ணியத்தைக் குவிக்க முடியும். இந்த நிர்வாண முயற்சி ஏதுக்கு?

5. 'நிர்வாண வழி மிகவும் கடுமையானது, செல்வதற்கு அரியது.' இந்தக் காதைகளைக் கூறி மாரன் புத்தரருகில் நின்றான்.

6. இப்படிப் பேசும் அந்த மாரனிடம் பகவான் கூறுவார்- 'கவலைகொள்ளாத மனிதனுடைய நண்பனே, பாவியே, நீ இங்கு ஏன் வந்தாய்? (அது எனக்குத் தெரியும்.)

7. 'அத்தகைய புண்ணியம் எனக்கு அடியோடு வேண்டியதில்லை. புண்ணியம் எவனுக்குத் தேவையோ அவன் மாரனுடைய இந்தப் பேச்சுக்களைப் பேசட்டும்.

8. 'எனக்குச் சிரத்தை இருக்கிறது, வீரியம் இருக்கிறது, உணர்ச்சியும் இருக்கிறது. இவ்வாறு நான் என் லட்சியத்தில் மனத்தை நிலைநிறுத்தி இருக்கும் பொழுது நீ எனக்கு உயிர்வாழ்வதைப்பற்றி ஏன் உபதேசம் செய்கிறாய்?

9. 'ஆற்று வெள்ளத்தைக்கூட இந்தக் காற்று வற்ற அடிக்க முடியும். ஆனால் லட்சியத்தில் மனம் வைத்த (பிரேஷிதாத்மாவான) என் இரத்தத்தை அது வற்ற அடிக்க முடியாது.

10. '(ஆனால் என் முயற்சியினாலேயே) இரத்தம் சுண்டிப் போனால் அதனோடு பித்தம், சிலேட்டுமம் என்ற மாறுபாடுகளும் வற்றும்; என் ஊன் குறைந்து தேயத்தேய, உள்ளம் பின்னும் நன்றாகத் தெளிந்து, நினைவும் உணர்ச்சியும் சமாதி நிலையும் மேன்மேலும் ஓங்கி வளரும்.

11. 'இவ்வண்ணம் இருந்து சிறந்த இன்பத்தைப் பெறும்பொழுது என் மனம் காமநுகர்ச்சிகளை நோக்கித் திரும்புவதில்லை. இந்த என் ஆன்மசுத்தியைப் பார்.

12. '(மாரனே,) காமநுகர்ச்சி என்பது உன் முதற்படை. அரதி (மன நிறைவு இல்லாமை) இரண்டாவது படை; பசியும் விடாயும் மூன்றாவது

படை; திருஷ்ணை (வேட்கை) என்பது நான்காவது படை.

13. ஐந்தாவது சோம்பல், ஆறாவது அச்சம், ஏழாவது வீண் சந்தேகம், எட்டாவது செருக்கு,

14. லாபம், சம்மானம், வழிபாடு இவைகளில் ஆசை (இது ஒன்பதாவது படை), தவறான வழியில் கிடைத்த புகழ் (இது பத்தாவது படை); இதனால் மனிதன் தன்னைப் போற்றிப் பிறரை இகழ்கின்றான்.

15. 'அடே கரிய நமுசி (அசுரனே), (மக்களை) அடித்து வீழ்த்தும் உன் சேனை இது. பயங்கொள்ளியாக இருப்பவன் இதை வெல்ல முடியாது. இதை வெல்கிறவனுக்குத் தான் இன்பம் கிடைக்கும்.

16. 'இதோ நான் என் தலையில் முஞ்சப் புல்லைத் தரித்திருக்கிறேன்.[1] நான் தோல்வியுற்றால் உயிரோடு இருப்பது வீண். தோல்வியடைந்து உயிர்வாழ்வதை விட, போரில் சாவது மேலானது.

17. 'எத்தனையோ சிரமண அந்தணர்கள் உன் சேனையில் கலந்துவிட்டதனால் ஒளியிழந்து நிற்கிறார்கள்; நல்லவர்கள் செல்லும் வழி அவர்களுக்குத் தெரியவில்லை.

18. 'நான்கு பக்கங்களிலும் மாரன் சேனை புலப்படுகிறது. மாரன் தன் ஊர்தியோடு படைதாங்கி நிற்கிறான். அவனோடு போராடுவதற்கு நான் முன்னால் விரைகிறேன். ஏனென்றால், அவன் என்னை என் இடத்திலிருந்து நழுவச் செய்யக்கூடாது.

19. 'தேவரும் மனிதரும் உன் சேனையின் முன்பு நிற்க முடியாது. அத்தகைய உன் சேனையை, கல்லால் மண்பாண்டத்தை உடைப்பது போல நான் என் உணர்வினால் சிதற அடித்துத் தோல்வியுறச் செய்வேன்.

20. 'மனத் துணிவை மேற்கொண்டு நினைவை விழிக்கச் செய்து, நான் பல சிராவகர்களுக்கு உபதேசம் செய்துகொண்டு நாடு நாடாகத் திரிவேன்.

21. 'அவர்கள் (சிராவகர்கள்) என் உபதேசப்படி ஜாக்கிரதையாக நடந்து, தங்கள் லட்சியத்தில் மனத்தை ஒன்றவைத்து, உன் விருப்பத்துக்கு மாறாக, துயரத்துக்கே இடமில்லாத பெரும்பதத்தை அடைவார்கள்.'

22. (மாரன் பேசினான்:) 'ஏழு ஆண்டுகள் வரைக்கும் பகவானுக்குப் பின்னாலேயே சுற்றினேன்; ஆனால் நினைவு வாய்ந்த புத்தரிடம் ஒரு குறையும் புலப்படவில்லை.

23. 'இங்கே ஏதாவது மென்மையான பண்டம் கிடைக்கும், ஏதாவது இனிமையான பண்டம் கிடைக்கும் என்ற ஆவலோடு காகம் ஊன் வண்ணமுள்ள பாறையருகில் வந்தது.

24. 'ஆனால் அங்கே எவ்வகை லாபமும் பெறாமையால் காகம் அங்கிருந்து பறந்தோடியது. அந்தக் காகத்தைப் போலவே நானும் கோதமரிடமிருந்து திரும்பிப் போகிறேன்!'

---

1. போரிலிருந்து தோல்வியுற்றுப் பின்வாங்காமலிருக்க, முன் காலத்தில் முஞ்சப் புல்லைத் தலையில் கட்டிக்கொண்டு சூளுறவு கொள்வது வழக்கம்.

25. இப்படித் துயருற்றபோது மாரனுடைய அக்குளிலிருந்து வீணை கீழே விழுந்தது. துன்புற்ற அந்த மாரன் அங்கேயே மறைந்தான்.

இந்த ஸுத்தத்தின் மொழிபெயர்ப்பு, லலிதவிஸ்தரத்தில் பதினெட்டாவது அத்தியாயத்தில் வந்திருக்கிறது. அதிலிருந்து இதன் பழமை புலனாகிறது. மேலே சொன்ன அச்ச அரக்கனைப்பற்றிய பயபைரவ ஸுத்தத்துச் செய்தியை இதனோடு ஒப்பிட்டுப் பார்த்தால் இந்தத் தெளிவான உருவகத்தின் பொருள் தானாக விளங்கும். மாந்தரின் நன்மைக்காக ஒருவன் முன்வந்தால் அவனை முதல்முதலில் தாக்குவது மாரசேனை. அதாவது காமவாசனை ஆகும். அதை அடக்கி அவன் முன்னேறுவதற்குள் அதிருப்தி (அரதி) அவனை எதிர்த்து எழுகிறது. அதற்குப் பிறகு பசி, விடாய் முதலியவை ஒன்றன்பின் ஒன்றாக வருகின்றன. அந்த வாசனைகள் (பற்று முதலியன) அனைத்தையும் மனோவிகாரங்களையும் வென்றாலன்றி, நன்மை பயக்கும் தத்துவத்தை நேரில் காண்பது ஒருபொழுதும் இயலாது எனவே, புத்தர் மாரனைத் தோல்வியுறச் செய்தார் என்றால், இத்தகைய மனப்பான்மைகளை வென்றார் என்று அறிய வேண்டும்.

## சுஜாதை அளித்த பிட்சை

போதிசத்துவருக்கு வைசாக பூர்ணிமையன்று இரவு, சம்போதி ஞானம் (பூரணஞானம்) உண்டாயிற்று. அன்று நடுப்பகலில் சுஜாதை என்ற உயர்குலத்து இளம்பெண், அவருக்கு உத்தமமான அன்னத்தைப் பிட்சையளித்தாள். ஸுத்தபிடகத்தில் இதைப்பற்றிய குறிப்பு எங்கோதான் கிடைக்கிறது[1]. இந்தச்சந்தர்ப்பத்தைத் தவிர வேறு எங்குமே

1.அங்குத்தர நிகாயம், ஏககநிபாதம். முதல்முதலில் புத்தரைச் சரணடைந்த உபாசகைகளில் சுஜாதை முதன்மையானவள். அவள் உருவேலாவைச் சார்ந்த ஒரு படைத்தலைவனின் மகள். தனக்கு நல்ல வரன் கிடைத்து முதலில் மகன் பிறந்தால் ஆண்டுதோறும் தக்க காணிக்கை செலுத்துவதாக, அவள் ஆலமரத்துத் தெய்வத்தை வேண்டிக் கொண்டாள். தன் விருப்பம் நிறைவேறியவுடனே, அவள் தன் பிரார்த் தனையை நிறைவேற்றக் கருதி, தூய பாலில் பாயசம் சமைத்தாள். ஆலமரத்தடியில் இடத்தைச் சுத்தம் செய்வதற்காக அவள் தன் வேலைக்காரியை அனுப்பினாள். அன்று போதிசத்துவ கோதமர் அந்த மரத்தின் அடியில் அமர்ந்திருந்தார். அவரைக் கண்ட வேலைக்காரி, சுஜாதாவின் சமர்ப்பணத்தை ஏற்றுக்கொள்ள மரத்தெய்வமே அவதாரம் கொண்டு வந்திருப்பதாகக்கருதினாள் அவள்தன் தலைவியிடம் ஓடிப் போய் இந்த செய்தியை அறிவித்தாள் சுஜாதை பால் பாயசத்தை எடுத்துக்கொண்டு வேலைக்காரியுடன் அங்கே சென்றதும், மரத்தின் அடியில் இருப்பது தேவதை அல்ல; பெருந்தவ முனிவரான போதிசத்துவரே வீற்றிருக்கிறார் என்பதை அறிந்தாள். ஆயினும் அவள் அந்தப்பாயசத்தை மிகுந்த பக்தியோடு போதிசத்துவருக்கு அர்ப்பித்தாள். இந்தப் பிட்சையை ஏற்ற போதிசத்துவர் அன்று இரவே புத்த நிலையை எய்தினார். - பௌத்த சங்க வரலாறு, பக். 236.

சுஜாதையின் பெயர் காணவில்லை ஆயினும் பௌத்த ஓவியக் கலையில் சுசுஜாதைக்குச் சிறந்த இடம் கிடைத்திருக்கிறது. புத்தருடைய நோக்கத்தின்படியும் இந்தச் சந்தர்ப்பம் நீண்ட காலம் நினைவில் இருக்கத்தக்கதாக விளங்கியது. சுந்தன் என்ற கொல்லன் அளித்த பிட்சையை ஏற்றுப் பெருமான் நோய்வாய்ப்பட்டார். அந்த நோயினால் தமது பரிநிர்வாணம் நிகழப்போவதை அவர் அறிந்தார். தமது காலத்துக்குப் பிறகு மக்கள் சுந்தனைப் பழிக்கலாகாது என்று கருதிய அவர் ஆனந்தனிடம், "எனக்குச் சம்போதி ஞானம் உதித்த அன்று கிடைத்த பிட்சையும் இன்று கிடைத்த பிட்சையும் சரிசமமானவை என்பதை நீங்கள் சுதந்தனிடம் சொல்லி அவனைத் தேற்றுங்கள்" என்று கூறினார்.

## போதிமரத்தின் அடியில் அமர்ந்தது

சுஜாதை அளித்த பிட்சையை ஏற்ற போதிசத்துவர் நைரஞ்சரா நதிக் கரையில் உணவு கொண்டார். அன்று இரவு ஓர் அரசமரத்து அடியில் வந்து அமர்ந்தார். அந்த மரம் இப்பொழுது இல்லை. கசாங்கன் என்ற அரசன் அதை அழித்ததாகச் சொல்கிறார்கள். ஆனால் அது இருந்த இடத்தில் புதிதாக வளர்த்த அரசமரமும் அதை அடுத்தே புகழ் பெற்ற புத்தகையை ஆலயமும் இருக்கின்றன. அந்த அரசமரத்தின் அடியில் அமர்ந்ததும் மீண்டும் ஒரு தடவை மார யுத்தம் நிகழ்ந்ததாக லலிதவிஸ்தரம் வருணிக்கிறது. ஸம்யுத்த நிகாயத்தில் ஸகாதாவக்கத்தில், மாரன் புத்தரை மயக்குவதற்குப் போதிமரத்தின் அடியில் திருஷ்ணை, அரதி, ரகா என்ற தன் மூன்று பெண்களையும் அனுப்பியதாக வருணனை இருக்கிறது. ஜாதகத்து நிதான கதையிலோ, இந்தச் சந்தர்ப்பத்தில் மாரன் சேனை நான்கு பக்கங்களிலிருந்தும் புத்தரை எப்படித் தாக்கியது என்பது பற்றிய விரிவான வருணனையைக் காணலாம். மாரனுடைய படையைக் கண்டு பிரமன் முதலிய தேவர்கள் ஓடிவருகிறார்கள்; போதிசத்துவர் மட்டுமே தனியாக இருக்கிறார். பிறகு மாரன் அது தனது இடம் என்று கூறி, புத்தரை அங்கிருந்து எழச் சொல்லுகிறான்; அந்த இடத்தில் தனது உரிமையை நிறுவ மாரசேனையைச் சாட்சியாக வைக்கிறான்; தேவர்கள் யாவரும் ஓடிப்போனமையால் புத்தருக்கு அப்பொழுது ஒரு சாட்சியும் கிடைக்க வில்லை.

எனவே அவர் தமது வலக் கையைத் தாழ்த்தி, "எல்லாவற்றையும் பொறுத்துக் கொள்ளும் இந்தப் பூமியே சாட்சி" என்கிறார். அப்போது பூமிதேவி விசுவரூபமெடுத்து மாரசேனையைத் தோல்வியுற் செய்கிறாள். இப்படிப் புராணமாக ஜாதக அட்டகதைக்காரர் வருணித்திருக்கிறார்.

பௌத்த ஓவியக் கலையில் இந்தக் காட்சியை ஓவியர்கள் அற்புதமாக வரைந்திருக்கிறார்கள். பேராசை, பகைமை, மயக்கம், செருக்கு, பொறாமை முதலிய தீய மனப்பான்மைகளை உருக்கொடுத்து உலவ

வைத்திருக்கும் அவர்களுடைய முயற்சி பாராட்டுக்கு உரியது. முதலில் கவி இந்தக் காட்சியை வருணித்து அதற்கு ஏற்ப ஓவியர்கள் இதற்கு உருகொடுக்க முயன்றார்களா அல்லது ஓவியங்கள் இந்தக் காட்சியை வரைந்த பின்பு கவிகள் இதை வருணித்தார்களா என்பதை நிச்சயப் படுத்திக் கூற முடியாது. எது எப்படியாயினும், மேலே கூறிய மாரசேனைக்கு உயிர்வடிவம் தரும் முயற்சி இது என்பது மட்டும் உண்மை.

## தத்துவ போதம்

அந்த வைசாக பூர்ணிமையன்று இரவு போதிசத்துவருக்குத் தத்துவ போதம் பிறந்தது. அப்பொழுதிலிருந்து அவர் புத்தர் ஆனார். அதாவது, அதற்கு முன்வரைக்கும் கோதம போதிசத்துவராக இருந்தவர் அன்றையிலிருந்து கோதம புத்தர் ஆனார். புத்தருக்கு உண்டான தத்துவ போதம் என்பன, நான்கு ஆரிய சத்தியங்களும், அவற்றுள் அடங்கிய அஷ்டாங்க மார்க்கமும் (நல்வழிகள் எட்டும்) ஆகும். அவர் தம்மோடு இருந்த ஐந்து துணைவர்களுக்கு அதை முதல்முதலில் உபதேசித்தார். (இதன் விவரம் பின்னால் வருகிறது.)

## விமுக்தி இன்பத்தின் சுவை

ஞானோதயமான பிறகு புத்த பகவான் அதே அரசரமரத்து அடியில் ஏழு நாட்கள் அமர்ந்திருந்து விமுக்தி இன்பத்தின் சுவையை நுகர்ந்தார். அப்பொழுது இரவுகளில் மூன்றாம் யாமத்தில் அவர் கீழ்க் குறித்துள்ள பிரதீத்யஸமுத்பாதத்தை[1] முன்னும் பின்னுமாக மனத்தில் கொண்டுவந்தார் என்கிறது மகாவக்கம். ஆனால் ஸம்யுத்தநிகாயத்தில் இரண்டு ஸுத்தங்களில், புத்தர் போதிசத்துவ நிலையில் இருந்த பொழுதே இந்தப் பிரதீத்யஸமுத்பாதத்தை அறிந்ததாகச் சொல்லப் பட்டிருக்கிறது [2] இந்த ஸுத்தங்களுக்கும் மகாவக்கத்திலுள்ள செய்திகளுக்கும் யாதும் பொருத்தம் இல்லை. மகாவக்கம் எழுதிய காலத்தில் இந்தப் பிரதீத்ய ஸமுத்பாதத்துக்கு அநாவசியமான பெருமை ஏற்பட்டிருந்ததாகத் தெரிகிறது. மகாயான சம்பிரதாயத்து ஆசிரியர்களான நாகார்ஜுனர் போன்றவர்களோ, இந்தப் பிரதீத்யஸமுத்பாதத்தைத் தங்கள்

1. பிரதீத்ய - அழிந்து, ஸமுத்பாதம் - தோன்றுவது; ஒன்று அழிந்து மற்றொன்று தோன்றுகிறது என்ற தத்துவம். துவாதச நிதானங்கள் என்னும் பன்னிரண்டு தத்துவங்களின் தொகுதி இது. காரிய காரண முறையோடு கூடிய இவையே பிரதீத்யஸமுபாதம் எனப்பெறும். (மொ-ர்.)

2. நிதானவக்க ஸம்யுத்தம், ஸுத்தம் 10- 65 உம் காண்க.

தத்துவ ஞானத்துக்கு ஆதாரமான அஸ்திவாரமாகவே கொண்டார்கள்.[1]

## பிரதீத்யஸமுத்பாதம்

அந்தப் பிரதீத்யஸமுத்பாதம்[2] என்பது, சுருக்கமாக இதுதான்-

"அவித்தை (பேதைமை)யிலிருந்து ஸம்ஸ்காரங்கள் (செய்கைகள்) உண்டாகின்றன; ஸம்ஸ்காரங்களிலிருந்து விஞ்ஞானம் (உணர்வு) உண்டாகிறது. விஞ்ஞானத்திலிருந்து நாமரூபங்கள் (பெயரும்வடிவும்) உண்டாகின்றன; நாமரூபங்களிலிருந்து ஷடாயதனங்கள் (வாயில்கள்) உண்டாகின்றன; ஷடாயதனங்களிலிருந்து ஸ்பரிசம் (ஊறு) உண்டாகிறது; ஸ்பரிசத்திலிருந்து வேதனை (நுகர்வு) உண்டாகிறது. வேதனையிலிருந்து திருஷ்ணை (வேட்கை) உண்டாகிறது; திருஷ்ணையிலிருந்து உபாதானம் (பற்று) உண்டாகிறது; உபாதனத்திலிருந்து பவம் (பிறப்புக்கு வேரான வினைத் தொகுதி) உண்டாகிறது; பவத்திலிருந்து பிறப்பு உண்டாகிறது; பிறப்பிலிருந்து மூப்பும் சாக்காடும் பிணியும் அழுகையும் துன்பமும் கவலையும் ஏக்கமும் உண்டாகின்றன."

அவாவை முற்றும் துறந்தால் பேதைமை மீளும்; பேதைமை மீளச் செய்கை மீளும். செய்கை மீள, உணர்வு மீளும். உணர்வு மீள, பெயரும் வடிவும் மீளும். அவை மீள, வாயில் மீளும். வாயில்மீள ஊறுமீளும் ஊறுமீள நுகர்வு மீளும். நுகர்வு மீள, வேட்கை மீளும். வேட்கை மீள, பற்று மீளும். பற்று மீள பாவம் மீளும், பாவம் மீள, பிறப்பு மீளும். பிறப்பு மீள, மூப்பு சாக்காடு பிணி அழுகை துன்பம் கவலை ஏக்கம் ஆகிய அனைத்தும் மீளும். இதுதான் துன்பத்துக்கு மீட்சி.[3]

துன்பத்தின் பின்னால் இவ்வளவு பெரிய காரிய காரண முறையைச் சேர்த்ததனால் பொதுமக்களுக்கு அது விளங்குவது மிகவும் சிரமமாயிற்று. நாளடைவில் இந்தப் பிரதீத்யஸமுத்பாதம் ஆழ்ந்த தத்துவஞானமாக வடிவெடுத்து, அதைப் பற்றி வாத விவாதங்கள் எழலாயின. நாகார்ஜுனாசாரியர் தமது 'மாத்தியமிக காரிகை' என்ற நூலை இந்தப் பிரதீத்யஸமுத்பாதத்தை அடிப்படையாகக் கொண்டே எழுந்திருக்கிறார். புத்தகோஷாசாரியர் தமது 'விசுத்தி மார்க்கம்' என்ற நூலில் ஆறில் ஒருபகுதியை (ஏறக்குறைய நூறு பக்கங்களை) இதுபற்றிய ஆராய்ச்சியிலேயே செலவழித்திருக்கிறார். இந்த ஆராய்ச்சிகள் அனைத்தையும் படித்த பிறகு அறிவாளிக்கே தடுமாற்றம் நேருகிறது என்றால், பொது மக்கள் இந்தத் தத்தவஞானத்தை எப்படி அறிய முடியும்? புத்தபகவானுடைய சமயக் கருத்து, வேதியர் க்ஷத்திரியர்

1. 'மாத்தியமிக காரிகை'யின் தொடக்கம் காண்க.

2. மணிமேகலை, 30-ஆம் காதை, 104-18 காண்க. (மொ-ர்.)

3. மணி மேகலை காதை 30, 119-33 காண்க

முதலிய உயர்வகுப்பு மக்களைவிட மிகுதியாகத் தாழ்ந்த வகுப்பு மக்களிடையே பரவியதற்குக் காரணம், இத்தகைய ஆழ்ந்த தத்துவ ஞானம் அன்று, நான்கு ஆரிய சத்தியங்கள் பற்றிய தத்துவ ஞானந்தான் மிகவும் எளியது. அது எல்லாவகையான மக்களுக்கும் விளங்கியதில் வியப்பே இல்லை. அதைப்பற்றிய ஆராய்ச்சி மேலே வருகிறது.

## பிரமதேவனுடைய வேண்டுகோள்

ஞானோதயமான பின்பு புத்தர்பெருமான் ஒரு வாரகாலம் போதிமரத்தின் அடியில் (அதாவது அந்த அரச மரத்தின் அடியில்) இருந்ததாக முன்பு கூறினோம். இதற்குப் பிறகு இரண்டாவது வாரத்தில் அவர் அஜபாலம் என்ற ஆலமரத்தடியிலும், மூன்றாவது வாரத்தில் முசலிந்தம் என்ற மரத்தடியிலும், நான்காவது வாரத்தில் ராஜாயதனம் என்ற மரத்தின் அடியிலும் இருந்துவிட்டு, மீண்டும் அஜபாலம் என்ற மரத்தின் அடிக்கு வந்தார். அப்போது, 'இந்தத் தருமத்தை நான் மிகவும் கஷ்டப்பட்டு அறிந்திருக்கிறேன்; எனவே மக்களுக்கு இதை உபதேசித்து மேலும் தொந்தரவை ஏற்றுக்கொள்வது சரியன்று' என்று அவருக்குத் தோன்றிற்று. பிரமதேவன் அவருடைய இந்த எண்ணத்தை அறிந்தான்; பகவான் தருமோபதேசம் செய்ய வேண்டுமென்று அவன் வேண்டிக்கொண்டான். இந்தக் கதை விரிவாக மகாவக்கத்திலும், மஜ்ஜிமநிகாயத்தில் அரியபரியேஸன ஸுத்தத்திலும் வந்துள்ளது. ஆனால் இது கோதம புத்தருடைய வரலாற்றைச் சேர்ந்ததாக அறவே இருக்க முடியாது. எவனோ ஒரு புராணக்காரன் விபஸ்ஸி புத்தரைப்பற்றி இதை எழுதினான்; பிறகு இது அப்படியே கோதம புத்தருடைய சரித்திரத்தில் சேர்ந்துவிட்டது. இந்த உருவகக் கதையின் பொருளை நான் 'புத்தரும் தர்மமும் சங்கமும்' என்ற நூலில் (பக். 16-19) தெளிவிக்க முயன்றிருக்கிறேன். ஆதலால் அதைப் பற்றி இங்கே ஆராயவில்லை.

## பஞ்சவர்க்கத்துப் பிட்சுக்களுக்கு உபதேசிக்கக் கருதியது

தமக்குக் கிடைத்த நான்கு ஆரிய சத்தியங்களைப் பற்றிய அறிவை முதல்முதலில் யாருக்குத் தெரிவிப்பது என்ற எண்ணம் புத்தருக்கு எழுந்தது. போதிசத்துவருடைய இரண்டு குருமாராகிய ஆளார காலாமனும், உத்தக ராமபுத்தனும் அப்பொழுது உயிரோடு இருந்திருந் தால் இந்தப் புதுவழி அவர்களுக்கு உடனே விளங்கியிருந்திருக்கும். ஆனால் அவர்கள் இறந்துவிட்டார்கள். எனவே பகவான் தம்முடன் இருந்த ஐந்து தோழர்களுக்கு ( பஞ்சவர்க்கத்துப் பிட்சுக்களுக்கு)

உபதேசம் செய்யத் தீர்மானித்தார். இந்தப் பிட்சுக்கள் அப்பொழுது காசியருகில் ரிஷிபத்தனத்தில் வாழ்ந்து வந்தார்கள். பகாவன் அங்கே போகப் புறப்பட்டார். வழியில் உபகன் என்னும் பெயருள்ள ஆசீவகச் சிரமணன்[1] அவரைக் கண்டான். "எனக்குத் தத்துவபோதம் ஏற்பட்டிருக் கிறது" என்று புத்தர் அவனிடம் கூறினார். ஆனால் உபகன் அதை நம்பவில்லை; "இருக்கலாம் ஒருவேளை" என்று சொல்லிவிட்டு அவன் வேறு வழியில் நடந்தான். வேறு பிரிவுகளைச் சார்ந்த சிரமணர்களுக்கு உபதேசம் செய்வது வீண் என்பதை இந்த ஒரு நிகழ்ச்சியிலிருந்தே பகவான் அறிந்துகொண்டார்.

## பஞ்சவர்க்கத்தவருக்கு அறிவுறுத்தியது

ஆஷாட மாதத்துப் பூர்ணிமைக்கு முன்பு பகவான் வாராணசி போய்ச்சேர்ந்தார். அவர் ரிஷிபத்தனத்துக்கு எழுந்தருளிய போது, தொலைவிலிருந்தே அவரைக் கண்ட பஞ்சவர்க்கத்தவர்கள், எவ்வகையிலும் அவரை வரவேற்று வழிபட்க் கூடாது என்று தீர்மானித்தார்கள். ஆனால் அவர் அருகில் வர வர, அவர்களின் உறுதி தளர்ந்தது. அவர்கள் முறையே அவரைத் தக்கபடி வரவேற்று மரியாதை செய்தார்கள். ஆனால் அவருடைய புதிய சமய வழியைக் காதில் போட்டுக்கொள்ள அவர்கள், இசையவில்லை. "எனக்கு ஒரு புதிய சமயவழி கிடைத்திருக்கின்றது" என்று பகவான் மொழிந்தபோது அவர்கள், "நீண்ட ஆயுளுடைய கோதமரே, நீங்கள் அவ்வாறு கடுந்தவம் செய்துங்கூட உங்களுக்கு நற்சமய வழி கிட்டவில்லையே இப்பொழுதோ நீங்கள் தவத்தினின்று வலுவிய உணவிலும் பாணத்திலும் திரும்பி விட்டீர்கள் இந்த நிலையில் உங்களுக்கு நற்சமயம் வழியைப் பற்றிய அறிவு எங்ஙனம் உண்டாகும்?" என்று கேட்டார்கள்.

பெருமான் கூறலானார்: "பிட்சுக்களே, நான் இதற்கு முன்பு எப்போதாவது உங்களிடம் வீண்பெருமை பேசியது உண்டோ? இல்லையே? எனவே நீங்கள் என் பேச்சைக் கவனியுங்கள். அமுத வழி எனக்குக் கிடைத்திருக்கிறது. இந்த வழியைக் கடைப்பிடித்தால் உங்களுக்கு விரைவில் விமுக்தி கிடைக்கும்."

புத்தர் இவ்வாறு பஞ்சவர்க்கத்துப் பிட்சுக்களுக்கு அறிவுறுத்தி நம்பிக்கையை உண்டாக்கி, சிறிது காலத்துக்குப் பின் அவர்கள் தம்முடைய புதிய சமயத்தைச் செவியுறும்படியாகச் செய்தார். அந்தச் சந்தர்ப்பத்தில் அவர் செய்த உபதேசத்தை, 'தர்ம சக்கரப் பிரவர்த்தனம்'

1. ஆசீவகன், சமணரில் ஒரு பிரிவினன். (மணிமேகலை, 27-108.) ஆசீவக மதம், முற்காலத்தில் சமதண்டம் என்று பெயருள்ள ஓர் ஊரில் பரவியிருந்ததாக நீலகேசி கூறுகிறது. (மொ-ர்.)

என்பர். இந்த ஸுத்தம், ஸச்சஸம்யுத்தத்தின் இரண்டாவது வக்கத்திலும், விநயக் கிரந்தத்தின் மகாவக்கத்திலும் வருகிறது. இதன் சம்ஸ்கிருத மொழிபெயர்ப்பை லலித விஸ்தரத்தில் இருபத்தாறாவது அத்தியாயத்தில் காணலாம். பாலி ஸுத்தத்தின் நேர் மொழிபெயர்ப்பை அடுத்தபடி காண்க.

## தர்மசக்கரப் பிரவர்த்தனம்

பின்வருமாறு நான் கேள்வியுற்றிருக்கிறேன். ஒருமுறை பகவான் வாராணசியில் ரிஷிபத்தனத்தில் மான்வனத்தில் இருந்தார். அங்கே அவர் பஞ்சவர்க்கத்துப் பிட்சுக்களை நோக்கிக் கூறியதாவது: "பிட்சுக்களே, சமய சிந்தனையுள்ளவன் (பரிவிராசகன்) இரண்டு முனைகளுக்குப் போகலாகாது. அந்த இரண்டு முனைகள் யாவை? ஒன்று, காமபோகத்தில் இன்பம் காண்பது. இந்த முனை இழிவானது, அருவருப்புத் தருவது, சாமானிய மக்கள் கடைப்பிடிப்பது, சிறுமையுடையது, அநர்த்தம் விளைவிப்பது. மற்றொன்று, உடலை வருத்துதல். இந்த முனை துன்பம் பயப்பது, சிறுமையுடையது, அநர்த்தம் விளைவிப்பது. ததாகதர் இந்த இரண்டு முனைகளிலும் (அந்தங்களிலும்) செல்லாமல், அறிவுக் கண்ணை உண்டாக்குவதும், உபசமம் பிரக்ஞை சம்போதம் நிர்வாணம் ஆகியவற்றுக்குக் காரணமாக இருப்பதுமான மத்தியம மார்க்கத்தைத் தேடிக் கண்டு பிடித்திருக்கிறார். அது யாது? நற்காட்சி (ஸம்யக் திருஷ்டி), நல்லூற்றம் (ஸம்யக் ஸங்கல்பம்), நல்வாய்மை (ஸம்யக் வாசா), நற்செய்கை (ஸம்யக் கர்மாந்தம்), நல்வாழ்க்கை (ஸம்யக் ஆஜீவம்), நன் முயற்சி (ஸம்யக் வ்யாயாமம்), நற்கடைப்பிடி (ஸம்யக்ஸ்மிருதி), நல்லுளத்தோர் தலைப்பாடு (ஸம்யக் ஸமாதி) என்னும் ஆரிய அஷ்டாங்க மார்க்கமே அது.

"பிட்சுக்களே, துக்கம் என்ற முதல் ஆரிய சத்தியம் இதுவே. பிறவி துன்பம் தருவது. மூப்புத் துன்பம் தருவது. பிணி துன்பம் தருவது. சாவு துன்பம் தருவது. விருப்பமற்றவர்களோடு தொடர்பும், விருப்பமுள்ளவர் களிடமிருந்து பிரிவும் துன்பம் தருவன. ஆசைப்பட்ட பொருள் கிடைக்காவிட்டால் அதனாலும் துன்பம் உண்டாகிறது. சுருக்கமாகக் கூறினால், ஐந்து உபாதான ஸ்கந்தங்கள் துன்பம் விளைவிப்பனவாம்.[1]

"பிட்சுக்களே, மீண்டும் மீண்டும் உண்டாவதும், பல விஷயங்களில் ஈடுபடுவதுமான வேட்கை (திருஷ்ணை)யே - இல்லற இன்பங்களில்

1. பஞ்சஸ்கந்தங்கள் - ரூபம் (உருவு), வேதனை (நுகர்ச்சி), சம்ஞை (குறி), சம்ஸ்காரம் (பாவனை), விஞ்ஞானம் (உள்ள அறிவு) என்னும் ஐம்பொருள்களும் பஞ்ச ஸ்கந்தங்களாம். மண் நீர் எரி கால் என்னும் நான்கு பூதங்களும் இவற்றினின்று உண்டான பொருள்களும் ரூப ஸ்கந்தமாம். இன்பமுண்டாக்கும் உணர்வு, துன்பமுண்டாக்கும் உணர்வு, தேவையுணர்வு ஆகிய மூவகை உணர்வுகளும் வேதனா

வேட்கையாகிய காமதிருஷ்ணை, சொர்க்க இன்பங்களில் வேட்கையாகிய பவதிருஷ்ணை, உடலை ஒடுக்கித் தன்னை அழித்துக் கொள்ளும் வேட்கையாகிய விநாசதிருஷ்ணை ஆகியவையே-துக்கோற்பத்தி என்னும் இரண்டாவது ஆரிய சத்தியமாம்.

"(மேற்கூறிய) ஆரிய அஷ்டாங்க மார்க்கமே துன்பத்தைத் தடுக்க அடியெடுத்து வைப்பதாகிய துக்க நிவாரண மார்க்கம் என்னும் நான்காவது ஆரிய சத்தியமாம்.

"(க) 'இது துன்பம்' என்பதை அறிந்தபொழுது எனக்குப் புதிய பார்வை உண்டாயிற்று. அறிவு எழுந்தது, கல்வி தோன்றியது, ஒளி வீசியது. 'இந்தத் துன்பம் அறிவதற்கு உரியது' என்பதைத் தெரிந்து கொண்ட பொழுது எனக்குப் புதிய பார்வை உண்டாயிற்று, அறிவு எழுந்தது...... (முதலியன). 'இந்தத் துன்பத்தை நான் அறிந்தேன்' என்றபொழுது எனக்குப் புதிய பார்வை....(முதலியன).

"(ங) இந்தத் துக்கோற்பத்தி ஆரிய சத்தியம் என்பதை நான் அறிந்தேன்; அது துறத்தற்கு உரியது என்று நான் அறிந்தேன்; 'அதைத் துறந்தேன்' என்று நான் அறிந்தேன்; அப்பொழுது எனக்குப் புதிய ப்ார்வை....(முதலியன)

"(ச) இந்தத் துக்க நிவாரணம் ஆரிய சத்தியம் என்பதை நான்

---

ஸ்கந்தமாம். வீடு, மரம், ஊர் முதலியவை பற்றிய அறிவுணர்வுகள் ஸம்ஜ்ஞா ஸ்கந்தமாம். சம்ஸ்காரம் என்றால் மனப் பண்பாடு. இது மூவகைப்படும் - குசலம் (நல்லது), அகுசலம் (தீயது), அவியாகிருதம் (நல்லதுமல்லாமல் தீயதுமல்லாமல் இருப்பது). சில பொருள்களில் சுவை தோன்ற, சில பொருள்களில் சுவையின்மை தோன்றுவது, அவியாகிருதத்துக்கு உதாரணமாம். விஞ்ஞானம் என்றால் அறிவது. அது அறுவகைப்படும் - கண், செவி, மூக்கு, நாக்கு, மெய், மனம் என்னும் ஆறு இந்திரியங்களால் உண்டாகும் அறுவகை யறிவு. இந்த ஆறு அறிவுகளின் தொகுதி விஞ்ஞான ஸ்கந்தமாம். இந்த ஐந்து ஸ்கந்தங்களும் வாசனையோடு (முற்பிறப்பின் அநுபவத்தால் இம்மையில் உண்டாகும் பற்று முதலியவற்றோடு) சேரும் பொழுது, இவற்றை உபாதான ஸ்கந்தம் என்பர். இவற்றினால் தான் மறுபிறப்பு ஏற்படுகிறது. இந்தப் பிறப்பில் நல்லனவும் தீயனவுமான செயல்கள் செய்வதனால் அடுத்த பிறப்பில் ஐந்து உபாதான ஸ்கந்தங்கள் தோன்றுகின்றன. வாசனை வேருடன் அழியும்பொழுது, இந்த ஸ்கந்தங்கள் உபாதான ஸ்கந்தங்களாக இருப்பதில்லை; அவற்றைக் கேவல ஸ்கந்தம் என்பர். ஏனெனில், அவற்றினால் மறுபிறப்பு ஏற்படுவதில்லை. அர்ஹத் பதத்தைப் பெற்றதும் வாசனை வேரோடு அற்று விடுகிறது. அர்ஹத் பதத்தைப் பெறுபவர்களின் பஞ்சஸ்கந்தங்கள் அவர்கள் இறக்கும் வரையில் இருக்கின்றன. ஆனால் அர்ஹத் பதத்தைப் பெற்றவுடனே தீய (அகுசல) சம்ஸ்காரங்கள் முற்றும் அழிந்துவிடுகின்றன. இறக்கும்போது அர்ஹத்துக்களின் பஞ்ச ஸ்கந்தங்கள் நிர்வாணத்தில் முற்றும் லயித்து ஒடுங்கிவிடுகின்றன. அதாவது அவற்றிலிருந்து புதிய பஞ்ச ஸ்கந்தங்கள் தோன்றுவதில்லை. - 'புத்தரும் தர்ம'மும் சங்கமும், பக். 90-91.

அறிந்தேன்; அது நேரில் காண்பதற்கு உரியது என்று நான் அறிந்தேன்; ‘அதை நேரில் கண்டேன்’ என்று நான் அறிந்தேன்; அப்பொழுது எனக்குப் புதிய பார்வை....(முதலியன).

“(ஞ) இந்தத் துன்பத் தடுப்பு வழி ஆரிய சத்தியம் என்பதை நான் அறிந்தேன்; அது பயிலுவதற்கு உரியது என்று நான் அறிந்தேன்; ‘அதைப் பயின்றேன்’ என்று நான் அறிந்தேன்; அப்பொழுது எனக்குப் புதிய பார்வை உண்டாயிற்று; அறிவு எழுந்தது, கல்வி தோன்றியது, ஒளி வீசியது. ஒவ்வொன்றும் மூன்று வகையும், மொத்தம் பன்னிரண்டு வகையுமான இந்த நான்கு ஆரிய சத்தியங்களைப் பற்றிய அறிவு எனக்கு உண்டாகாத வரைக்கும், பூரண சம்போதி ஞானம் எனக்குக் கிட்டவில்லை.”

புத்தர் செய்த உபதேசங்கள் பலவும் ஸுத்த பிடகத்தில் தொகுக்கப் பெற்றுள்ளன. ஆனால் அவற்றுள், அவருடைய சமயத்துக்கு ஆதாரமாக நிலவும் உபதேசம் இதுவே. ஸச்சஸம்யுத்தம் ஒன்றில் மட்டும், இந்த நான்கு ஆரிய சத்தியங்களைப் பற்றி மொத்தம் 131 ஸுத்தங்கள் இருக்கின்றன. இதைத் தவிர, வேறு நிகாயங்களிலும் இவற்றை அடிக்கடி குறிப்பிடுகிறார்கள். புத்தருடைய மற்ற உபதேசங்கள் யாவும் இந்த நான்கு ஆரிய சத்தியங்களையே பின்பற்றி இருப்பதனால், இவை மிகப் பெருமை வாய்ந்தனவாம்.

மேலே (க) முதல் (ஞ) வரையில் குறிப்பிட்டுள்ள பகுதி, ஸச்சஸம்பு யுத்தத்தின் ஒரு ஸுத்தத்திலும் மகாவக்கத்திலும் மட்டுமே கிடைக்கிறது. வேறு இடங்களில் இது குறிப்பிடப்பெறவில்லை. எனவே, இது பின்னால் சேர்க்கப்பெற்றதாக இருக்குமோ என்ற வலிவான ஐயம் எழுதுகிறது. ஆயினும், நான்கு ஆரிய சத்தியங்களை விளக்க இது உதவுவதனால், இதையும் இங்கே கொடுத்திருக்கிறேன்.

## நான்கு ஆரிய சத்தியங்களைப்பற்றிய விளக்கம்

உலகில் துன்பம் இருக்கிறது என்பதை யாரும் ஒப்புக்கொள்ளாமல் இருக்க முடியாது. ஆனால் ஒவ்வொருவனும் தன் துன்பம் எப்படி அழியும் என்ற எண்ணத்திலேயே இருக்கிறான். அதன் முடிவு யாதெனில், பிறரை அழித்தாவது தான் இன்புறவே ஒவ்வொருவனும் விரும்புகிறான். பிறரைத் துன்புறுத்தினாலும் அறிவாளிகளாக இருப்பவர்கள் தலைவர்களாகி விடுகிறார்கள்; மற்றவர்கள் அவர்களுக்கு அடங்கி இருக்க வேண்டியதாகிறது. இம்சை நாட்டமே கொண்டிருப்பதனால் இந்தத் தலைவர்களுக்குள்ளும் ஒற்றுமை இருப்பதில்லை; அவர்கள் தங்கள் எல்லாரிலும் மிகுந்த இம்சிக்கும் தன்மை வாய்ந்தவனும் அறிவாளியுமான தலைவனை அரசனாக்கி, அவனுடைய ஆட்சிக்கு

உட்பட வேண்டியதாகிறது. தன் ராஜ்யத்தை மற்றோர் அரசன் பறித்துக் கொள்வானோ என்ற பயம் அரசனுக்குத் தோன்றுகிறது; ஆதலால் அவன் தன் ராஜ்யத்தின் நற்காப்புக்காக வேள்விகள் செய்து பல உயிர்களை பல கொடுக்கிறான். இவ்வாறு மனிதர்களுக்கும் பிற உயிர்களுக்கும் உபத்திரவத்தை உண்டாக்கும் சமூக அமைப்பை அழித்து, அதற்கு மாறாக நன்மையும் இன்பமும் பயக்கும் அமைப்பை ஏற்படுத்த வேண்டு மென்றால், ஒவ்வொருவனும் தன் துன்பமும் பிறர் துன்பமும் ஒன்றே என்று உணர வேண்டும். இதனால்தான் புத்த பகவான் முதல் ஆரிய சத்தியத்தில், எல்லாருக்கும் பொதுவான துன்பத்தை அடக்கியிருக்கிறார்.

எல்லாருக்கும் பொதுவான பிறவி மூப்பு இறப்பு முதலிய துன்பங்கள் சிரமணர்களுக்கும் உடன்பாடானவையே; இது மட்டுமின்றி, அந்தத் துன்பத்தை அழிப்பதற்காகவே அவர்கள் கடுந்தவம் இயற்றி வந்தார்கள். ஆனால், துன்பத்துக்குக் காரணம் யாது என்பதுபற்றி அவர்களுக்குள் கருத்து வேற்றுமை இருந்தது. துன்பத்தை உயிர்தானே உண்டாக்கியது (ஸயங்கதம் துக்கம்) என்று சிலர் சொன்னார்கள். துன்பத்தைப் பிறன் விளைவிக்கிறான் (பரங்கதம் துக்கம்) என்று இரண்டாமவர்கள் சொன்னார்கள். ஓரளவு தானும், ஓரளவு பிறனும் துன்பத்தை உண்டாக்குகின்றனர் (ஸயங்கதம் ச பரங்கதம் ச துக்கம்) என்று மூன்றாமவர்கள் சொன்னார்கள். துன்பம் தானோ பிறனோ விளைவிப்பதன்று; அது எதிர்பாராமல் திடீரென்று நேருவது (ஆகஸ்மிகம்; அஸயங்காரம் அபரங்காரம் அதிச்சஸமுப்பன்னம் துக்கம்) என்று நான்காமவர்கள் சொன்னார்கள்.[1]

இவர்களுள் முதல் வகையான சிரமணர்கள் நிக்கந்தர் (நைஜனர்) முதலியோர் ஆவர். முற்பிறப்பில் ஆன்மா பாவம் செய்ததனால் துன்பம் உண்டாகிறது என்று அவர்கள் கருதினார்கள். அதற்குப் பரிகாரமாக அவர்கள் உடலை வருத்தி ஆன்மாவைத் துன்புறுத்தினார்கள். இரண்டாவது வகையான சிரமணர்கள் சாக்கியர் போன்றவர்கள் அவர்கள் சடப்பிரகிருதியினால் துன்பம் விளைகிறது என்று கருதினார்கள். ஆன்மாவைப் பிரகிருதியின் பிடிப்பிலிருந்து விடுவிப்பதற்காக அவர்கள் கடுமையான தவம் செய்தார்கள். மூன்றாவது வகையான சிரமணர்கள், ஆன்மாவும் பிரகிருதியும் சேர்ந்து துன்பத்தை உண்டாக்குகின்றன என்று கூறி, ஆன்மாவை அதிலிருந்து விடுவிப்பதற்காக உடலை வருத்தினார்கள். நான்காவது வகையான சிரமணர்கள், துன்பம் எதிர்பாராமல் நேருவது என்று கருதினார்கள். ஆதலால் அவர்கள் செயலற்ற தன்மையை (அக்கிரியவாதத்தை) நாடினார்கள். சிரமணர்கள் இவ்வாறு வீண்தவம் செய்துவந்தார்கள், அல்லது செயலற்று இருந்தார்கள். அவர்களால் மக்கட்கூட்டத்துக்கு மிகக் குறைந்த பயனே

1. நிதானவக்கஸுயுத்தம், வர்க்கம் 2, ஸுத்தம் 7 பார்க்க.

உண்டாயிற்று.

துன்பத்துக்கு உண்மையான காரணம் ஆன்மாவோ பிரகிருதியோ அன்று; மனிதனுடைய வேட்கையே அதற்குக் காரணம் என்பதை முதல் முதலில் புத்தர் எடுத்துக் கூறினார். முற்பிறப்புக்களிலும் இப்பிறப்பிலும் உண்டாகும் வேட்கைகளே துன்பமனைத்தையும் தருகின்றன. இந்த வேட்கை எங்கிருந்து வந்தது என்ற கேள்வி வீண். வேட்கை இருக்கும் வரைக்கும் துன்பமும் வந்துகொண்டே இருக்கும். இது இரண்டாவது ஆரியசத்தியமாம்.

வேட்கையை அழிப்பதனால்தான் மனிதன் துன்பத்திலிருந்து விடுபடுகிறான் என்பது மூன்றாவது ஆரிய சத்தியமாம்.

இரு முனைகளுக்கும் இடையே செல்லும் ஆரிய அஷ்டாங்க மார்க்கமே வேட்கையை அழிக்கும் வழி. இது நான்காவது ஆரிய சத்தியமாம்.

## அஷ்டாங்க மார்க்கத்தைப் பற்றிய விளக்கம்

இந்த ஆரிய அஷ்டாங்க மார்க்கத்தின் முதற்படி, நற்காட்சி என்பது. நற்காட்சி என்றால், நான்கு ஆரிய சத்தியங்களை உள்ளபடி அறிவது. உலகில் துன்பம் நிறைந்துள்ளது. மனித இனத்தின் தீவிர வேட்கையினால் அந்தத் துன்பம் விளைந்திருக்கிறது. அந்த வேட்கையை அழித்தால் எல்லாருக்கும் அமைதி கிடைக்க முடியும். ஒருவரோடு ஒருவர் மனம்மொழி மெய்யால் நல்லொழுக்கத்தோடும் வாய்மையோடும் அன்போடும் பரிவோடும் நடந்துகொள்வதாகிய ஆரிய அஷ்டாங்க மார்க்கமே அந்த அமைதிக்கு வழியாம். இந்த நற்காட்சி மக்களுக்கு ஏற்படவில்லையென்றால், அகங்காரமடியாகவும் தன்னலமடியாகவும் தோன்றும் சண்டை சச்சரவுகள் நிற்கப்போவதில்லை; உலகுக்கு அமைதியும் கிடைக்கப் போவதில்லை.

தன் செல்வத்தையும் ஆதிக்கத்தையும் வளர்க்க வேண்டும் என்று ஒவ்வொருவனும் தீர்மானித்துக்கொண்டால், அதனால் அவனுக்கும் பிறருக்கும் ஓயாத தீங்கே விளையும். ஆதலால், காம நுகர்ச்சியில் கட்டுப்படாமல் வாழவும், பிறரோடு முழு நட்புடன் பழகவும், பிறருடைய இன்பத்தையும் அமைதியையும் வளர்க்கவும் தூய சங்கற்பம் செய்து கொள்வதே சாலச் சிறந்தது. இதுவே நல்லூற்றம்.

பொய் பேசுதல், புறங்கூறுதல், இன்னா கூறுதல், பயனில சொல்லுதல் முதலிய தீய வாக்கினால் சமூகக் கட்டுப்பாடு சிதறுகிறது. சண்டை சச்சரவுகள் உண்டாகி, அவை ஹிம்சைக்குக் காரணமாகின்றன. ஆதலால் வாய்மையோடு, ஒருவருக்கு ஒருவர் நட்பை ஏற்படுத்தும்படி, அன்பாகவும் மிதமாகவும் பேசுவது நல்லது. இதையே நல்வாய்மை

என்பர்.

உயிர்க்கொலை, திருட்டு, பிறன்மனை விழைதல் முதலிய செயல்களை உடல் செய்யுமானால், அதனால் சமூகத்தில் பெருந்தீங்குகள் உண்டாகின்றன. ஆதலால் கொலை திருட்டு விபசாரம் முதலிய செயல்களினின்று அறவே விலகி, மக்களுக்கு நன்மை விளைக்கும் உடற் செயல்களையே செய்ய வேண்டும். இதையே நற்செய்கை என்பர்.

நல்வாழ்க்கை என்றால், சமூகத்துக்குத் தீங்கு நேராதபடி, நேர்மையாகத் தன் பிழைப்பை நடத்துவது. உதாரணமாக, இல்லறத்தான் கள் விற்றல், விலங்குகளைச் கொடுத்தல் வாங்குதல் முதலிய வியாபாரங் களைச் செய்யலாகாது. இதனால் சமூகத்துக்குப் பெருத்த தொந்தரவு நேருகிறது என்பது வெளிப்படை. இத்தகைய தொழில்களை விலக்கி, நேர்மையான நடத்தையோடு தன் பிழைப்பை அமைத்துக் கொள்ள வேண்டும். இதையே நல்வாழ்க்கை என்பர்.

மனத்தில் தோன்றாத கெட்ட கருத்துக்களை அறவே வரவொட்டாமல் செய்வது, மனத்தில் தோன்றிய கெட்ட கருத்துக்களை அழிப்பது, மனத்தில் தோன்றாத நற்கருத்துக்களை உண்டாக்க முயலுவது, மனத்தில் தோன்றிய நற்கருத்துக்களை வளர்த்து அவற்றைப் பூரணமாக்க முயலுவது ஆக இந் நான்கு அக முயற்சிகளை ஸம்யக் வியாயாமம் (நன்முயற்சி) என்பர். உடற் பயிற்சியாகிய வியாயாமத்துக்கும் இதற்கும் சம்பந்தமில்லை.

உடல் தூய்மையற்ற பொருள்களால் ஆனது என்னும் அறிவை ஓங்கச் செய்வது, உடலில் நேரும் இன்பம் முதலிய உணர்வுகளை அடிக்கடி கவனிப்பது, தன் சித்தத்தை ஆராய்வது, பொறிபுலன்களினின்று எத்தகைய பந்தனங்கள் உண்டாகின்றன, அவற்றை எப்படி நீக்குவது என்பவை போன்ற மனத்தன்மைகளைப்பற்றி நன்றாகச் சிந்திப்பது ஆகிய செயல்களையே ஸம்யக் ஸ்மிருதி என்பர்.

தன் உடலிலோ மரித்த உடலிலோ நட்பு கருணை முதலிய மனத் தொழில்களிலோ மண் நீர் தீ முதலிய பொருள்களிலோ சித்தத்தை ஒன்றை வைத்து நான்கு தியானங்களைப் பெறுதலே ஸம்யக் சமாதியம்.[1]

இருமுனைகளுக்கும் செல்லாமல் இந்த நடுவழியைப் பாவனை செய்ய வேண்டும். காமநுகர்ச்சியில் இன்பத்தைக் காண்பது முதல் முனை. இழிவானது, அருவருப்பானது, சாமானிய மக்கள் மேற்கொள்வது, சிறுமையுடையது, அநர்த்தம் விளைவிப்பது (ஹீனோ கம்மோ போதுஜ்ஜனிகோ அநரியோ அநத்தஸம்ஹிதோ) என்னும் ஐந்து அடைமொழிகள் அதனோடு வருகின்றன. மானிட இனம் வறுமையிலும் அறியாமையிலும் மூழ்கிக் கிடக்கும்போது தான் ஒருவன் மட்டும்

---

1. இந்தப் பொருள்கள் அனைத்தையும் கொண்டு தியானங்களை எப்படிப் பெறுவது என்பது பற்றியய விரிவை, 'சமாதி மார்க்கம்' என்னும் நூலில் காண்க.

சுகபோகங்களை நுகர்வதைப் போன்ற இழிவான செயல்வேறு என்ன இருக்கிறது? இது அருவருப்பானது; இழிசினரின் செயல். சாமானிய மக்கள் இதை மேற்கொள்கிறார்கள். மேலோருக்கு (தீரவீரர்களுக்கு) இது தக்கதன்று. மேலும், இது அநர்த்தம் விளைவிப்பது. உடலை வருத்துவது மற்றொரு முனை. இழிவானது, அருவருப்பானது என்ற அடைமொழிகள் இதனோடு வரவில்லை. ஆனால் இது துன்பம் பயப்பது; தீரவீரர்களுக்கு ஏற்றதன்று (சிறுமையுடையது); அநர்த்தம் விளைவிப்பது. (துக்கோ அநரியோ அநத்தஸம் ஹிதோ.) அஷ்டாங்க மார்க்கத்தைச் சார்ந்த பகுதிகள்யாவும் இந்த இரண்டு முனைகளை விலக்குகின்றன.

உதாரணமாக, உண்டு குடித்து இன்பம் நுகர்வது என்பது கேளிக்கையாளர்களின் நோக்கு. உபவாசம் முதலிய விரதங்களினால் உடம்பை வாடச் செய்வது தவசிகளின் நோக்கு. இவை இரண்டுக்கும் இடைப்பட்ட நோக்குத்தான் ஆரிய சத்தியங்களைப்பற்றிய ஞானம். இப்படியே மற்றப் பகுதிகளும் இடைப்பட்டிருப்பதைத் தெரிந்து கொள்க.[1]



1. நான்கு ஆரிய சத்தியங்களைப்பற்றிய விரிவை, 'புத்தரும் தர்மமும் சங்கமும்' என்ற நூலின் மூன்றாவது அநுபந்தத்தில் பக். 94-99-இல் காண்க. அஷ்டாங்க மார்க்கத்தில் ஒவ்வோர் அங்கமும் இடைப்பட்டிருப்பதை அங்கே விளக்கியிருக்கிறேன்.

# 6. சிராவகர்* சங்கம்

## பஞ்சவர்க்கத்துப் பிட்சுக்களைப் பற்றிய செய்தி

புத்தரிடம் முதல் தருமோபதேசத்தைப் பெற்ற பஞ்சவர்க்கத்துப் பிட்சுக்களைப்பற்றி ஸுத்தபிடகத்தில் கிடைக்கும் செய்தி மிகக் குறைவாகவே இருக்கிறது. முதல் முதலில் பௌத்த தருமத்துத் தத்துவங்களை அறிந்து கொண்டவனான ஆஞ்ஞாத கௌண்டின்யன் நீண்ட நாள் கழித்து ராஜகிருகத்துக்கு வந்து புத்தரைச் சாஷ்டாங்கமாக வணங்கினான் என்று ஸம்யுத்த நிகாயத்திலுள்ள வங்கீஸ ஸம்யுத்தம் (9-ஆவது) குறிப்பிடுகிறது. பஞ்சவர்க்கத்துப் பிட்சுக்களில் இன்னொருவனான அஸ்ஸஜி (அசுவஜித்), ராஜகிருகத்தில் நோய்வாய் பட்டிருந்ததாகவும், அவனுக்குப் பெருமான் உபதேசித்ததாகவும் கந்தஸம்யுத்தத்தின் 88-ஆவது ஸுத்தம் தெரிவிக்கிறது. இவர்கள் இருவரைத் தவிர மற்ற மூவரின் பெயர்கள் ஸுத்தபிடகத்தில் அடியோடு கிடைக்கவில்லை.

ஜாதகத்து நிதானகதையிலும் வேறு அட்டகதைகளிலும் இந்தப் பஞ்சவர்க்கத்துப் பிட்சுக்களைப்பற்றி ஓரளவு செய்தி கிடைக்கிறது. அதன் சாரமாவது- "ராமன், துவஜன், லக்கணன் (லட்சுமணன்), மந்தி (மந்திரி), கோண்டஞ்ஞன் (கௌண்டின்யன்), போஜன், ஸுயாமன், ஸுதத்தன் ஆகிய எண்மரும் ஆறங்கத்தோடு மறை பயின்ற அந்தணர்கள். அவர்கள் போதிசத்துவருடைய எதிர்காலத்தைப் பற்றிக் கூறினார்கள்."

இவர்களில் எழுவர், "போதிசத்துவர் இல்லறத்தில் இருந்தால் சக்கரவர்த்தி ஆவார்; இல்லறத்தைத் துறந்து சந்நியாசியானால் நல்லறிவு சான்ற புத்தர் (ஸம்யக் ஸம்புத்தர்) ஆவார் என்று இருவகையான ஜோசியம் சொன்னார்கள். இந்த எண்மரில் கௌண்டின்யன் எல்லாரிலும் இளைஞனாக இருந்தவன். அவன், "போதிசத்துவர் கட்டயாம் நல்லறிவு சான்ற புத்தராவார்" என்று ஒரே ஜோசியம் சொன்னான். இருவகையாக ஜோசியம் கூறிய ஏழு அந்தணர்களும் வீட்டுக்குச் சென்று தம் மக்களிடம், "நாங்கள் இப்போது முதியவர்கள் ஆகிவிட்டோம். சித்தார்த்த ராஜகுமாரன் புத்தனானால் அவனைப் பார்க்கும் பேறு எங்களுக்கு இல்லை. அவன் புத்தனாகிவிட்டால் நீங்கள் அவனுடைய சங்கத்தில் சேருங்கள்" என்று சொன்னார்கள்.

---

★. சிராவகன் என்றால் (தர்மத்தை) கேட்பவன். ஆதலால் பௌத்த துறவிகளுக்கு சிராவகன் என்று பெயர். (மொ-ர்)

போதிசத்துவர் வீட்டைத் துறந்தகாலையில் கௌண்டின்யன் மட்டுமே உயிரோடு இருந்தான். அவன் மற்ற ஏழு அந்தணர்களின் புதல்வரிடம் சென்று, "சித்தார்த்த குமாரன் பரிவிராஜகன் ஆகியிருக்கிறான். அவன் கட்டாயம் புத்தனாவான். ஆதலால் அவனைப் பின்பற்றி நாமும் பரிவிராஜகர் ஆவோம்" என்றான். அந்த இளைஞர்களில் நால்வர், கௌண்டின்யனுடைய பேச்சை ஒப்புக்கொண்டு அவனுடன் துறவு பூண்டு போதிசத்துவரைப் பின்பற்றினார்கள். இந்த ஐவரும் பிற்காலத்தில் பஞ்சவர்க்கத்தவர் என்று புகழ் பெற்றார்கள். மகாவக்கத்திலும் லலிதவிஸ்தரத்திலும் அவர்களின் பெயர்கள், கோண்டஞ்ஞன் (கௌண்டியன்), வப்பன் (வாஷ்பன்), பத்தியன் (பத்திரிகன்), மகாநாமன், அஸ்ஸஜி (அசுவஜித்) என்று வருகின்றன.

ஆனால் பஞ்சவர்க்கத்தவர்களைப்பற்றிய இந்தச் செய்தி கட்டுக்கதை என்று தோன்றுகிறது. கோதம குமாரர் புத்தராகப் போகிறார் என்ற நம்பிக்கை கௌண்டின்யனுக்கு இருந்திருக்குமானால், அவன் அவரை உருவேலாவில் விட்டு வாராணசிக்கு ஏன் போனான்? போதிசத்துவர் உடலுக்குத் தேவையான உணவை ஏற்றுக்கொள்ளத் தொடங்கியதுமே, கௌண்டன்யனுடைய முழுச் சிரத்தையும் எப்படிப் போய்விட்டது? எனக்குத் தோன்றுவது என்னவென்றால், இந்தப் பஞ்சவர்க்கத்துப் பிட்சுக்கள் முதலில் ஆளார காலாமனுடைய சம்பிரதாயத்தைச் சார்ந்தவர்களாக, சாக்கிய நாட்டிலோ அதற்கு அக்கம்பக்கத்திலோ வாழ்ந்தார்கள். அங்கு அவர்களுக்கும் போதிசத்துவருக்கும் நட்பு ஏற்பட்டது. அவர்கள் அனைவருமே அந்தணர்கள் என்றும் சொல்ல முடியாது. ஆளார காலாமனுடைய சம்பிரதாயத்திலும் உத்தக ராமசுத்தனுடைய சம்பிரதாயத்திலும் உண்மை ஏதும் புலப்படாமையினால் போதிசத்துவர் முன்னேறும் அடுத்த வழியைக் கண்டு பிடிப்பதற்காக ராஜகிருகத்துக்கு வந்தபோது, இந்தப் பஞ்சவர்க்கத்துப் பிட்சுக்களும் அவரோடு வந்திருத்தல் வேண்டும். போதிசத்துவருக்குப் புதிய சமயபோதம் கிடைத்தால் அவ்வழியில் தாங்களும் செல்லலாம் என்று அவர்கள் கருதினார்கள். ஆனால் போதிசத்துவர் தவத்தையும் உபவாசங்களையும் விடுத்தவுடனே அவர்களின் நம்பிக்கை சிதைந்தது. அவர்கள் வாராணசிக்குப் போய்விட்டார்கள்.

## பஞ்சவர்க்கத்துப் பிட்சு சங்கம்

கோதம போதிசத்துவர் புத்தராகி வாராணசியில் ரிஷிபத்தனத்துக்கு வந்தபோது, பஞ்சவர்க்கத்துப் பிட்சுக்கள் அவரை வரவேற்று வழிபடக் கூடாது என்று தீர்மானித்து அதன்படி நடந்துகொண்ட செய்திகளை ஐந்தாம் அத்தியாயத்திலேயே சொல்லியிருக்கிறேன். இறுதியில் இந்தப்

பஞ்சவர்க்கத்தவர்கள் போதிசத்துவருடைய சமயக் கருத்தைச் செவியுற்றார்கள். அப்பொழுது கௌண்டின்யன் ஒருவன் மட்டுமே அதை ஒப்புக் கொண்டான். எனவே புத்தர்பெருமான். "கௌண்டின்யன் அறிந்தான்" (அஞ்ஞாஸி வத போகோண்டஞ்ஞோ) என்று அருளினார். அதனால் அவன் பெயரே ஆஞ்ஞாத கௌண்டியன் (அஞ்ஞாசி கோண்டஞ்ஞன்) என்று ஆயிற்று; இந்த ஒரே வரலாற்றினால் கௌண்டியன்னுக்குப் பௌத்த இலக்கியத்தில் பெருநிலை வாய்த்தது. இதற்குப் பிறகு அவன் ஏதும் பெருஞ்செயல் ஆற்றியதாக எங்கும் எவ்வகைக் குறிப்பும் இல்லை. முதலில் அவன் ஒருவனே புத்தருடைய புதிய சமயக் கருத்தைப் போற்றினான் என்பதே அவனுடைய பெருமையாம்.

பின்பு புத்தர்பெருமான் வப்பனுக்கும் பத்தியனுக்கும் பேரறிவைப் புகட்டினார். சில காலம் பொறுத்து அவர்களுக்கும் இந்தப் புதிய சமயக் கருத்து விளங்கியது. பிறகு சிறிது காலத்துக்கெல்லாம் மகாநாமனும் அஸ்ஸஜியும் இந்தப் புதிய சமயவழியை அறிந்துகொண்டார்கள். இவ்வாறு இந்தப் பஞ்சவர்க்கத்துப் பிட்சுக்கள் புத்தரையன்றிப் புறந்தொழாப் பக்தரானார்கள். இந்தச் செயலில் எவ்வளவு காலம் பிடித்தது என்ற செய்தி எங்குமே இல்லை. ஆனால் பஞ்சவர்க்கத்துப் பிட்சுக்களே முதல் முதலில் புத்தருக்குச் சீடரானார்கள்; இந்த ஐவர் சேர்ந்து பிட்சு சங்கம் உருவெடுத்தது என்ற திறத்தில் ஸுத்த பிடகமும் விநயபிடகமும் ஒரே மாதிரியாகப் பேசுகின்றன.

## யசனும் அவன் தோழர்களும்

பஞ்சவர்க்கத்தவரோடு புத்தர்பெருமான் ரிஷிபத்தனத்தில் தங்கிய பொழுது பின்னும் ஐம்பத்தைந்து பிட்சுக்கள் அவரிடம் வந்து சேர்ந்த செய்தியையும், அந்தச் சாதுர்மாசத்துக்குப் பிறகு அவர் ராஜகிருகம் வரையில் யாத்திரை செய்து பிட்சு சங்கத்தை எந்த அளவுக்கு வளர்த்தார் என்பதையும் மகாவக்கம் வருணிக்கின்றது. அதிலுள்ள சாரமான பகுதியை இங்குக் கூறுகிறேன்.

வாராணசியில் பெருஞ்செல்வனான யசன் என்ற இளைஞன் இருந்தான். திடீரென்று அவனுக்கு இல்லறத்தில் வெறுப்பு உண்டாகிவிட்டது. அவன் அமைதியான இடத்தைத் தேடிக்கொண்டு ரிஷிபத்தனத்துக்கு வந்தான். புத்தர் தருமோபதேசம் செய்து அவனைத் தமது சங்கத்தில் சேர்த்துக்கொண்டார். அவனைத் தேடிக்கொண்டு அவனுடைய பெற்றோர்கள் வந்தார்கள். அவர்களுக்கும் புத்தர் உபதேசித்தார். அதன் பயனாக அவர்கள் புத்தருடைய உபாசகரானார்கள்.

யசன் பிட்சுவாகிப் புத்தருடைய சங்கத்தில் சேர்ந்த செய்தி, வாராணசி நகரில் வாழ்ந்த அவனுடைய நண்பர்களான விமலன், சுபாகு, புண்ணஜி

(புண்ணயஜித்), கவம்பதி (கவாம்பதி) என்ற நால்வருக்கும் தெரிந்தது. அப்போது அவர்களும் ரிஷிபத்தனத்துக்கு வந்து புத்தருடைய பிட்சு சங்கத்தில் சேர்ந்தார்கள். அவர்கள் யாவருக்கும் ஐம்பது இளைஞர்களான நண்பர்கள் இருந்தார்கள். அவர்களும் ரிஷிபத்தனத்துக்கு வந்து புத்தரின் உபதேசத்தைக் கேட்டுத் தங்கள் நண்பர்களைப் போலவே சங்கத்தில் சேர்ந்தார்கள்; இவ்வாறு அறுபது பிட்சுக்கள் அடங்கிய சங்கம் ரிஷிபத்தனத்தில் தோன்றியது.

## பெருமக்களின் நன்மைக்காக அறத்தைப் பரப்புதல்

சாதுர்மாசத்தின் இறுதியில் புத்தர்பெருமான் தமது இந்தப் பிட்சு சங்கத்தை நோக்கிப் பின்வருமாறு கூறினார்- “பிட்சுக்களே, இல்லறக் கட்டினின்றும் சொர்க்கக் கட்டினின்றும் நான் விடுபட்டிருக்கிறேன்; நீங்களும் இந்தக் கட்டுக்களினின்றும் விடுதலை பெற்றிருக்கிறீர்கள். எனவே, பிட்சுக்களே, இப்பொழுது நீங்கள் பெரும்பாலான மக்களின் நன்மைக்காக, இன்பத்துக்காக, உலகத்தினரிடம் இரக்கம் கொள்வதற்காக, தேவர் மனிதர் ஆகியவர்களின் நற்பயனுக்காகத் தருமோபதேசம் செய்ய முனையுங்கள். ஒரே வழியில் இருவர் போகாதீர்கள். தொடக்கத்தில் நலந்தருவதும், இடையில் நலந்தருவதும், இறுதியில் நலந்தருவதுமான இந்த அறவழியை மக்களுக்குக் கூறுங்கள்.”

இங்ஙனம் பெருமானர் தம்மைச் சார்ந்த அறுபது பிட்சுக்களை நான்கு திசைகளிலும் அனுப்பினார். அவர்கள் வேறு பல இளைஞர்களைப் பெருமானிடம் அழைத்து வருவார்கள். பகவான் அவர்களைத் துறவிகளாக்கித் தமது பிட்சு சங்கத்தில் சேர்த்துக் கொள்வார். ஆனால் இந்த முறையினால் அறுபது பிட்சுக்களுக்கும் துறவறத்தை விரும்பி வந்த இளைஞர்களுக்கும் தொல்லை உண்டாயிற்று. எனவே பிட்சுக்கள் தாங்களாகவே பிறருக்குத் துறவறம் தந்து அவர்களைத் தமது சங்கத்தில் சேர்த்துக் கொள்ளலாம் என்று பெருமான் அநுமதியளித்தார். பின்பு அவர் உருவேலாவை நோக்கிப் புறப்பட்டார்.

## பத்திரவர்க்கத்துப் பிட்சுக்கள்

பெருமான் சென்றுகொண்டிருந்த வழியில் பத்திரவர்க்கத்தவர் என்ற முப்பது இளைஞர்கள் தங்கள் மனைவியரோடு ஓர் பூங்காவில் விளையாட வந்திருந்தார்கள். அவர்களில் ஒருவனுக்கு மனைவி இல்லை; ஆதலால் அவனுக்காக ஒரு பொதுமகளை அழைத்து வந்திருந்தார்கள். இந்த முப்பது இளைஞர்களும் இருபத்தொன்பது மனைவியரும் கேளிக்கையில் ஆழ்ந்து தம்மை மறந்திருந்த பொழுது அந்தப் பொதுமகள்

தன்னால் இயன்ற அளவு பொருள்களை எடுத்துக்கொண்டு ஓடிவிட்டாள். அந்தச் சமயத்தில் புத்தர்பிரான் அந்தச் சோலையில் ஒரு மர நிழலில் களைப்பாற அமர்ந்திருந்தார். மதிப்பு மிகுந்த பொருள்களை எடுத்துக்கொண்டு பொது மகள் ஓடிவிட்டாள் என்ற செய்தி தெரிந்ததும் முப்பது இளைஞர்களும் அவளைத் தேடிக்கொண்டு, பெருமான் அமர்ந்திருந்த இடத்துக்கு வந்தார்கள்; "பதந்தரே, இந்தப் பக்கமாக ஓர் இளம்பெண் போனதை நீங்கள் பார்த்தீர்களா?" என்று கேட்டார்கள்.

"இளைஞர்களான இல்லறத்தவர்களே, இளம்பெண் ஒருத்தியைத் தேடிக்கொண்டு அலைவதும் ஆன்மபோதம் பெறுவதும் ஆகியவற்றுள் உங்களுக்கு எது நல்லதென்று தோன்றுகிறது?" என்றார் பெருமான்.

புத்தருடைய இந்தப் பேச்சைக் கேட்டதும் அவர்கள் அவரருகில் உட்கார்ந்தார்கள். நீண்டநேரம் அவருடைய உபதேசத்தைச் செவியுற்றதும் அவர்கள் இல்லறத்தைத் துறந்து பிட்சு சங்கத்தில் சேர்ந்தார்கள்.

## காசியப சகோதரர்கள்

அந்தச் சோலையினின்றும் பெருமான் உருவேலாவுக்கு வந்தார். அங்கே சடைமுடியர்களான உருவேல காசியபன், நதி காசியபன், கயா காசியபன் என்ற மூன்று சகோதரர்கள், சடை தரித்த தம் சீடர்களோடு மறை விதிப்படி தீ வளர்த்துத் தவம் செய்துவந்தார்கள். அவர்களுக்கு முறையே ஐந்நூறும் முந்நூறும் இருநூறுமான சீடர்கள் இருந்தனர். அம்மூவரில் பெரியவருடைய ஆசிரமத்தில் புத்தர்பெருமான் தங்கினார். அவர் பல அற்புத நிகழ்ச்சிகளைக் காண்பித்து உருவேல காசியபனையும் அவனுடைய ஐந்நூறு மாணவர்களையும் தமது பிட்சு சங்கத்தில் இணைத்துக்கொண்டார். உருவேல காசியபனைப் பின்பற்றி அவனுடைய தம்பியரும் அவர்களின் மாணவர்கள் அனைவரும் புத்தருக்குச் சீடரானார்கள்.

## பிரம்மாண்டமான பிட்சு சங்கத்துடன் ராஜகிருகம் வருகை

இவ்வாறு ஆயிரத்துமூன்று பிட்சுக்களோடு புத்தர் பெருமான் ராஜகிருகத்துக்கு எழுந்தருளினார். இவ்வளவு பிரம்மாண்டமான பிட்சு சங்கத்தைக் கண்டதும் நகர வாசிகளுக்கு ஒரே கோலாகலமாக இருந்தது. பிம்பிசார மன்னனும் அவனுடைய வீரர்கள் அனைவரும் புத்தரை வரவேற்று வாழ்த்த முன்வந்தார்கள். பிம்பிசாரன் புத்தரையும் பிட்சுசங்கத்தையும் மறுநாள் அரண்மனையில் பிட்சையேற்க அழைத்தான். விருந்து முடிந்ததும் அவன் வேணுவன உய்யானத்தைப் பிட்சு சங்கத்துக்கு நன்கொடையாக அளித்தான்.

## ஸாரிபுத்தனும் மோக்கல்லானனும்

ராஜகிருகத்தின் அருகில் ஸஞ்சயன் என்ற புகழ்பெற்ற துறவி ஒருவன், தன் கணக்கிறந்த சீடர்களோடு இருந்து வந்தான். ஸாரிபுத்தனும் மோக்கல்லானனும் ஸஞ்சயனுடைய முக்கிய மாணவர்கள். ஆனால் அந்தச் சம்பிரதாயத்தில் இவ்விருவருக்கும் ஈடுபாடு இல்லை. 'நம் இருவரில் எவனாவது ஒருவனுக்கு நல்லற வழியைக் காண்பிக்கும் ஆசிரியன் கிடைத்தால் அவன் மற்றவனுக்கு அந்தச் செய்தியைத் தெரிவிக்க வேண்டும்; பிறகு இருவரும் சேர்ந்து அந்தச் சமயத்தை ஏற்றுக்கொள்ள வேண்டும்' என்று அவர்கள் தமக்குள் முடிவு செய்து கொண்டார்கள்.

ஒருநாள் அஸ்ஸஜி என்னும் பிட்சு ராஜகிருகத்தில் பிட்சாடனம் செய்துகொண்டிருந்தான். சாந்தமும் கம்பீரமுமான அவனது முகமண்டலத்தைக் கண்டதும், 'இவன் நிர்வாண மார்க்கத்தில் செல்லும் துறவியாக இருக்க வேண்டும்' என்று ஸாரிபுத்தனுக்குத் தோன்றிற்று. அஸ்ஸஜியோடு அவன் பேசினான். அந்தப் பிட்சு புத்தருடைய சீடன் என்பதும், புத்தருடைய சமயமே உண்மையானது என்பதும் அவனுக்குத் தெரிந்தன. இந்தச் செய்தியை அவன் மோக்கல்லான்னுக்குத் தெரிவித்தான். பிறகு அவர்கள் இருவருமே, ஸஞ்சயனுடைய சம்பிரதாயத்தில் இருந்தவர்களான இருநூற்று ஐம்பது துறவிகளோடு புத்தரை அனுகி பிட்சு சங்கத்தில் சேர்ந்து கொண்டார்கள்.

## சரித்திர உரைகல்

யசனும் மற்ற ஐம்பத்துநான்கு இளைஞர்களும் பிட்சுவான கதையிலிருந்து தொடங்கி இதுவரைக்கும் கூறிய செய்தி அனைத்தும் மகாவக்கத்திலிருந்து எடுத்த சாரமாம்.[1] இனி இந்தக் கதையைச் சரித்திர உரைகல்லில் உரைத்துப் பார்க்க வேண்டும். போதிசத்துவர் தவம் செய்து தத்துவபோதம் பெற்ற இடம் உருவேலா. ஆதலால் அவருக்கு உருவேலா வட்டாரத்தைப் பற்றி நன்றாகத் தெரிந்திருக்க வேண்டும். உருவேல காசியபனும் அவனுடைய இரு தம்பியரும் சடை தரித்தவர்களான ஆயிரம் சீடர்களுடன் அதே வட்டாரத்தில் இருந்தார்கள். அற்புத நிகழ்ச்சிகளைச் செய்து காட்டி அவர்களைத் தம் சிஷ்யர்களாக்கப் புத்தர் பெருமான் விரும்பியிருந்தால், அவர்களை விட்டு அவர் காசி வரைக்கும் ஏன் போக வேண்டும்? தமது சமயத்தைப் பஞ்சவர்க்கத்தவர் தவிரப் பிறர் அறிந்துகொள்ளமாட்டார்கள் என்று அவர் கருதியது ஏன்? அந்தச் சமயத்தில் அவருக்கு அற்புதம் நிகழ்த்தும் சக்தி இல்லை; காசிக்குப்

1. இதன் விரிவை புத்தலீலா சார ஸங்கிரஹம் பக். 160-165-இலும் பௌத்த சங்க வரலாறு, பக். 7-8-இலும் காணலாம்.

போய்ப் பஞ்சவர்க்கத்தவருக்கு உபதேசம் செய்த பின்பே அந்தச் சக்தி வந்தது என்று நாம் கொள்ளலாமா?

ரிஷிபத்தனத்தில் பஞ்சவர்க்கத்தவரைத் தவிர வேறு ஐம்பத்தைந்த பிட்சுக்கள் புத்தரோடு சேர்ந்ததாக வரலாறு கூறுகின்றதே; அவர்களுள் ஐவருடைய பெயர்கள் மட்டுமே மகாவக்கத்தில் வருகின்றன; மற்ற ஐம்பதின்மரில் ஒருவருடைய பெயர்கூட இல்லை. ஆதலால், பிட்சுக்களின் எண்ணிக்கையைப் பெருக்கிக் காண்பிப்பதற்காக ஐம்பது என்ற எண்ணைக் கூட்டியிருப்பார்கள் என்று தோன்றுகிறது.

வழியில் முப்பது இளைஞர்கள் மனைவியருடன் விளையாடிக் கொண்டிருந்தபொழுது, ஒரு நொடியில் புத்தர் பெருமான் அவர்களைப் பிட்சுவாக்கிவிட்டார் என்பதும் பொருத்தமற்ற செய்தி. அப்படிச் செய்ய வேண்டியிருந்தால் புத்தர் உருவேலாவிலிருந்து காசிக்குப் பயணம் போவானேன்? உருவேலாவுக்கு அக்கம்பக்கத்திலேயே கேளிக்கையில் ஆழ்ந்த யாரேனும் இளைஞர்கள் அவருக்குக் கிடைத்திருக்க மாட்டார்களா என்ன? இந்த முப்பது இளைஞர்களைப் பற்றிய கதையை இடையே புகுத்திய காரணம் என்னவென்று தெரியவில்லை.

புத்தர் ஆயிரத்துமூன்று சடைமுடியர்களைப் பிட்சுக்களாக்கித் தம்முடன் அழைத்துக்கொண்டு ராஜகிருகத்துக்கு எழுந்தருளியபோது அந்த நகரம் முழுவதும் கோலாகலமாக அவரை வரவேற்ற சமயத்தில், ஸாரிபுத்தனுக்குப் புத்தர் யார் என்பதுபற்றி ஒன்றுமே தெரியாது என்றால் இது எப்படிப் பொருந்தும்? அஸ்ஸஜி பஞ்சவர்க்கத்தவரில் ஒருவன், அவனை மற்றுமுள்ள பஞ்சவர்க்கத்தவரோடு காசிக்கு அக்கம்பக்கத்தில் தருமோபதேசம் செய்ய அனுப்பிவிட்டு, புத்தர்பெருமான் உருவேலாவுக்கும் அங்கிருந்து ராஜகிருகத்துக்கும் வந்தார். இப்படி இருக்கையில் இந்த அஸ்ஸஜி திடீரென்று ராஜகிருகத்துக்கு எப்படி வந்து சேர்ந்தான்? இங்ஙனம் ஆராயுமளவில், பஞ்சவர்க்கத்தவரையும் யசனையும் அவனுடைய நான்கு தோழர்களையும் பிட்சு சங்கத்தில் சேர்த்துக்கொண்ட பிறகு பெருமான் காசியிலிருந்து ராஜகிருகம் வரைக்கும் யாத்திரை செய்ததாக மகாவக்கத்தில் வந்துள்ள செய்தி பெரும்பாலும் கட்டுக் கதை என்றே கூறவேண்டியிருக்கிறது.

## லலிதவிஸ்தரத்திலுள்ள பட்டியல்

அப்படியானால் உண்மையாக நிகழ்ந்ததுதான் என்ன என்ற கேள்விக்கு உறுதியான விடை கூற முடியாதாயினும், லலிதவிஸ்தரத்தின் தொடக்கத்தில் இருக்கும் பட்டியலிலிருந்து பிட்சு சங்கத்தைப் பற்றிய ஆரம்ப வரலாற்றை ஒருவாறு பொருத்திப் பார்த்து அறியக்கூடும். அந்தப் பட்டியல் வருமாறு-

1. ஞான கௌண்டின்யன் (அஞ்ஞாகோண்டஞ்ஞன்), 2. அசுவஜித்

(அஸ்ஸஜி), 3. வாஷ்பன் (வப்பன்), 4. மகாநாமன், 5. பத்திரிகன் (பத்தியன்), 6. யசோதேவன் (யசன்), 7. விமலன், 8.சுபாகு, 9. பூர்ணன் (புண்ணஜி), 10. கவாம்பதி (கவம்பதி), 11. உருவேல காசியபன் (உருவேல கஸ்ஸபன்), 12. நதி காசியபன், 13. கயா காசியபன், 14. சாரிபுத்திரன் (ஸாரிபுத்தன்), 15.மகா மௌத்கல்யாயனன் (மகா மோக்கல்லானன்) 16. மகா காசியபன் (மகா கஸ்ஸபன்), 17. மகா காத்தியாயனன் (மகாகச்சானன்), 18. கபிலன் (?), 19. கௌண்டின்யன் (?) 20. சுனந்தன் (சுந்தன்), 21. பூர்ண மைத்திராயணி புத்திரன் (புண்ண மந்தாணி புத்தன்), 22. அநிருத்தன் (அநுருத்தன்), 23. நந்திகன் (நந்தகன்), 24. கஸ்பிலன் (கப்பின்), 25. சுபூதி, 26, ரேவதன், 27.கதிரவனிகன், 28.அமோகராஜன் (மோகராஜன்), 29. மகாபாரணிகன்(?), 30.வக்குலன் (பக்குலன்), 31. நந்தன், 32. ராகுலன், 33. சுவாகதன் (ஸாகதன்), 34.ஆனந்தன்.

மகாவக்கத்தில் பெயர் வராத பிட்சுக்களை இந்தப் பட்டியலிலிருந்து நீக்கினால், இங்குள்ள பதினைந்து பிட்சுக்களின் வரிசையும் மகாவக்கத்து வரலாறும் இணைந்து பொருந்துகின்றன. இதிலிருந்து நாம் ஊகிக்கக் கூடியது யாது? பஞ்சவர்க்கத்தவருக்குப் பிறகு யசனும் அவனுடைய நான்கு தோழர்களும் பெருமானுக்குக் கிடைத்தனர். இந்தப் பதின்மருடன் அவர் உருவேோவுக்குச் சென்றார். அங்கே காசியபச் சோதரர்கள் மூவரும் அவரது சங்கத்தில் சேர்ந்தார்கள். இந்தப் பதின்மூன்று சீடர்களோடு பெருமான் ராஜகிருகத்துக்கு எழுந்தருளினார். அங்கே ஸஞ்சயனுடைய சீடர்களுள் ஸாரி புத்தனும் மோக்கல்லானனும் ஸஞ்சயனது சம்பிரதாயத்தை விடுத்துப் பெருமானின் சீடராயினர். இவ்விருவரும் வந்து சேர்ந்ததனால் பிட்சு சங்கத்தின் பெருமை வளர்ந்தது. ஏனெனில் ராஜகிருகத்தில் அவர்களுக்குப் பெரும் புகழ் இருந்தது. புத்தருடைய தத்துவஞானத்தை இவ்விருவரும் எப்படி வளர்த்தார்கள் என்பதற்கு, ஸுத்தமும் விநயபிடகமும் சாட்சி கூறுகின்றன. ஏறக்குறைய அபிதம்ம பிடகம் அனைத்தையும் உபதேசித்தவன் ஸாரிபுத்தனே என்று கருதப்படுகிறது.

இதற்குப் பிறகு வந்துள்ள பத்தொன்பது பிட்சுக்களைப் பற்றிய வரிசை மட்டும் சரித்திர ஆதாரமுடையதாகத் தோன்றவில்லை. ஆனந்தனும் அநுருத்தனும் ஒரே சமயத்தில் பிட்சுக்களானார்கள் என்று சுல்லவக்கம் (பாகம்7) கூறுகையில், இந்தப் பட்டியலில் அநுருத்தனுடைய எண்ணிக்கை 22 என்றும், ஆனந்தனுடைய எண்ணிக்கை 34 என்றும் வருகின்றன. இவர்களுடன் உபாலி என்ற நாவிதன் துறவு பூண்டான்; பிறகு அவன் பெயர், விநயதரன் என்று ஆயிற்று. இப்படி இருக்க அவனுடைய பெயர் இந்தப் பட்டியலில் இல்லவே இல்லை. இங்கே குறித்துள்ள பிட்சுக்களில் பெரும்பாலானவர்களின் சரித்திரத்தை,

'பௌத்த சங்க வரலாறு' என்னும் நூலின் மூன்றாம் பாகத்தில் எழுதியிருக்கிறேன். ஆவலுள்ள வாசகர்கள் அதைப் படிப்பார்களாக.

## பிட்சுக்களின் எண்ணிக்கை

ராஜகிருகம் செல்லும்வரைக்கும் புத்தருக்குக் கிடைத்த பிட்சுக்களின் எண்ணிக்கை இந்தப் பதினைந்துக்கு மேலே இருந்ததா என்பது பற்றி இப்போது சுருக்கமாக ஆராய்வோம். வாராணசியில் பெருமானுக்கு அறுபது பிட்சுக்கள் கிடைத்தனர்; உருவேலாவுக்குச் செல்லும் வழியில் முப்பதின்மரும், உருவேலாவில் ஆயிரத்து மூன்று பேரும் ஆக மொத்தம் 1093 பிட்சுக்களின் சங்கம் சேர்ந்ததும் பகவான் ராஜகிருகத்தில் புகுந்தார். அங்கே ஸாரிபுத்தன், மோக்கல்லானன் என்னும் இருவருடன், துறவி ஸஞ்சயனுடைய இரு நூற்றைம்பது சீடர்களும் வந்து பௌத்த சங்கத்தில் கலந்தார்கள். அதாவது அப்பொழுது பிட்சு சங்கத்தின் எண்ணிக்கை 1345 ஆயிற்று. ஆனால் இவ்வளவு பெரிய பிட்சு சங்கம் புத்தரிடம் இருந்ததற்கு ஸுத்தபிடகத்தில் எங்குமே சான்று இல்லை. பரிநிர்வாணத்துக்கு இரண்டோர் ஆண்டுகளுக்கு முன்பு அவர் ராஜகிருகத்துக்கு வந்தபொழுது அவருடன் 1250 பிட்சுக்கள் இருந்ததாக ஸாமஞ்ஞபல ஸுத்தம் கூறுகிறது. ஆயினும் தீகநிகாயத்தில் இரண்டாவது எட்டு ஸுத்தங்களில் பிட்சு சங்கத்தின் எண்ணிக்கை 500 என்று குறிக்கப்பெறுகிறது. எனவே பெருமானுடைய இறுதி யாத்திரையிலும் அவருடன் ஐந்நூறு பிட்சுக்களே இருந்தனர் என்று தெரிகிறது. பெருமான் பரிநிர்வாணம் அடைந்தபின்பு ராஜகிருகத்தில் கூடிய பிட்சுக்களின் முதல் மகாநாட்டிலும் ஐந்நூறு பிட்சுக்களே இருந்தார்கள். ஆதலால் பகவான் பரிநிர்வாணம் எய்தியவரையில் பிட்சுக்களின் எண்ணிக்கை ஐந்நூற்றுக்குமேல் போகவில்லை என்று கருத முடிகிறது.

பெருமானுடைய பரிநிர்வாணத்துக்குப் பிறகு, இந்த எண்ணிக்கையை வளர்த்துச் சொல்லும் செயல் தொடங்கியிருக்குமென்று தோன்றுகிறது. லலிதவிஸ்தரத்தின் ஆரம்பத்திலேயே, சிராவஸ்தியில் புத்தர் பெருமானோடு பன்னீராயிரம் பிட்சுக்களும் முப்பத்தீராயிரம் போதிசத்துவர்களும் குழுமியிருந்தார்கள் என்ற வருணனை வருகிறது. இவ்வாறு தமது சம்பிரதாயத்தின் பெருமையை வளர்ப்பதற்காக அந்தக் காலத்துப் பிட்சுக்கள் பழங்காலத்துப் பிட்சுக்களின் எண்ணிக்கையைப் பெருக்கலாயினர். மகாயானப் பிரிவைச் சார்ந்த நூலாசிரியர்களோ, தமக்குத் தோன்றிய அளவு போதிசத்துவர்களைக் கூட்டிக்கொண்டார்கள். பௌத்த மதத்தின் இறக்கத்துக்கு இதுவே முக்கியமான காரணம். தமது தருமத்தின் பெருமையையும் சங்கத்தின் பெருமையையும் புகழ்ந்து மிதமிஞ்சிப் பாராட்டுவதற்காக, இந்தப் பௌத்த பிட்சுக்கள் தலைகால்

இல்லாத கட்டுக்கதைகளை உற்பத்தி செய்யலானார்கள். அந்தணர்களோ இவர்களைக் காட்டிலும் ஒரு படி முன்சென்று விந்தை விந்தையான கட்டுக்கதைகளை இயற்றிப் பிட்சுக்களை முற்றும் தோல்வியுறச் செய்தார்கள்.

## புகழோங்கிய ஆறு சிரமண சங்கங்கள்

புத்தருடைய காலத்தில் புத்த சங்கங்களைவிடப் பெரியவையும் புகழோங்கியவையுமான ஆறு சிரமண சங்கங்கள் நிலவின. பூரண கஸ்ஸபன், மக்கலிகோஸாலன், அஜித கேஸகம்பலன், பகுத கச்சாயனன், ஸஞ்சய பேலட்டபுத்தன், நிகண்ட நாதபுத்தன் என்ற ஆறு சங்கத் தலைவர்களுக்கு மக்களிடம் மிகுந்த செல்வாக்கு இருந்தது. இதைப் பற்றி மஜ்ஜிமநிகாயத்திலுள்ள சூளஸாரோபம ஸுத்தம் குறிப்பிடுவதாவது-

(பிங்கல கௌத்ஸன் பகவானிடம் கூறுகிறான்:) "கோதமரே, சங்கத் தலைவரும், குழுத் தலைவரும், குழுக்களுக்கு ஆசிரியரும், புகழோங்கியவரும், மேன்மையுற்றவரும், தீர்த்தங்கரரும், பெரும்பாலான மக்களின் மதிப்புக்கு உரியவருமாக இந்தச் சமண அந்தணர்கள் (அறுவர்) நிலவுகிறார்கள். அவர்கள் யாரெனில், பூரண கஸ்ஸபன், மக்கலி கோஸாலன், அஜித கேஸகம்பலன், பகுத கச்சாயனன், ஸஞ்சய பேலட்டபுத்தன், நிகண்ட நாதபுத்தன் ஆகியவர்களாம்."

## பௌத்த சங்கத்தின் கடமையுணர்ச்சி

மேற்கூறிய ஆறு ஆசிரியர்களும் புத்தரைவிடப் பிராயத்தில் பெரியவர்கள்; அவர்களைச் சார்ந்த பிட்சுக்களின் எண்ணிக்கையும் ஏராளமாக இருந்தது. புத்தர் இந்த ஆசிரியர்கள் அனைவரினும் பிராயத்தில் சிறியவர்; அவருடைய பிட்சு சங்கத்தின் எண்ணிக்கையும் குறைவு. இப்படி இருக்க இந்தச் சின்னஞ் சிறு புதிய பிட்சு சங்கம் எவ்வாறு மற்றவை அனைத்தையும்விட முன்னேறியது? பாரத நாட்டில் மட்டுமின்றி ஆசியாக்கண்டம் முழுவதிலும் அது எவ்வாறு தன் ஆதிக்கத்தை நிலை நாட்டியது?

இந்த வினாவுக்கு விடையை இப்பொழுது காண்போம். மேற்கூறிய ஆறு சிரமண சங்கங்கள் எண்ணிக்கையில் பெரியவையாயினும், அவை பொது மக்களின் நன்மையைப் பற்றி அவ்வளவாகக் கவலைப் படவில்லை. அவற்றைச் சார்ந்த பெரும்பாலானவர்களின் நோக்கம், தவ வழியினால் மோட்சம் பெறுவதேயாம். ஊரிலோ நகரிலோ சென்று அவர்கள் இல்லறத்தாரிடம் பிட்சை ஏற்பார்கள்; அவ்வப்பொழுது

இயன்றளவு தங்கள் சம்பிரதாயத்துத் தத்துவஞானத்தை அந்த மக்களுக்கு எடுத்துரைப்பார்கள். ஆயினும் இல்லறத்தோரின் இதத்துக்காகவோ இன்பத்துக்காகவோ அவர்கள் மிகுதியாகப் பாடுபடவில்லை.

பௌத்த சங்கமோ இதற்கு நேர்மாறான திசையில் செயலாற்றியது. "மக்களின் நன்மைக்காகவும் இன்பத்துக்காகவும் நீங்கள் நான்கு திசைகளிலும் செல்லுங்கள். ஒரே வழியில் இருவர் போகாதீர்கள்" என்று புத்தர் பிரான் உபதேசித்ததை முன்பே கூறியிருக்கிறேன். இந்த உபதேசம் மகாவக்கத்திலும் மாரஸம்யுத்தத்திலும் வருகிறது; இதே கருத்துள்ள உபதேசங்கள் ஸுத்தபிடகத்தில் பல இடங்களில் புலப்படுகின்றன. பெருமானுடைய இந்த உபதேசத்தைப் பின்பற்றி நடந்து கொண்டதனால் பிட்சு சங்கத்தைப் பெரும்பாலான பொது மக்கள் விரும்பி ஆதரித்தார்கள்; மக்கள் அனைவரிடமும் அதன் செல்வாக்கு ஓங்கியது.

ஒருவரோடு ஒருவர் போராடும் மக்களைக் கண்டே போதிப் பெருமானுக்கு வைராக்கியம் பிறந்தது என்பதை நான்காவது அத்தியாயத்தில் கூறியிருக்கிறேன். இந்தப் போராட்டங்களை அரசியல் வலிமையைக் கொண்டு தீர்த்து வைப்பது முடியாத செயல். மக்களிடம் ஹிம்சை மயமான புத்தி இருக்கும் வரைக்கும் சமூகத்தில் சண்டை சச்சரவுகளை ஒழிக்க முடியாது. ஆதலால் அரசியல் ஆதிக்கத்தினின்றும் நீங்கி, போதிப்பெருமான் மானிட இனத்தின் விடுதலைக்கு வழி தேடலானார். ஏழு ஆண்டுகள் பல வகையான தவ அநுபவங்களைப் பெற்றபிறகு, முன் அத்தியாயத்தில் கூறிய மத்தியம மார்க்கம் அவருக்குப் புலப்பட்டது. அவர் அதை எல்லா மக்களிடத்தும் பரப்பத் தீர்மானித்தார். இந்தச் செயலுக்காகவே பெருமான் சங்கத்தை நிறுவினார். ஆகவே, மற்றச் சங்கங்களைச் சார்ந்த சிரமணர்களைக் காட்டிலும் பௌத்தச் சிரமணர்கள் பொது மக்களின் இதத்திலும் இன்பத்திலும் பெருங்கவலை கொண்டதில் வியப்பு இல்லை.

## தத்துவப் பயிர் தேவை

சமூகத்தில் வேளாண்மை, வர்த்தகம் முதலிய தொழில்கள் நடக்கின்றன. ஆனால் சமூகத்தில் ஒற்றுமை இல்லையென்றால் இந்தத் தொழில்களால் பயன் இராது. அந்த நிலையில் ஒருவன் பயிராக்கிய நெல்லை மற்றவன் அறுத்துக் கொண்டு போவான்; ஒரு வியாபாரியின் பொருளை மற்றவன் கவர்வான். இங்ஙனம் சமூகத்தில் குழப்பம் ஏற்பட்டால், அந்தச் சமூகத்தைச் சார்ந்த தனி மனிதர்களும் மிகத் துன்புற வேண்டியிருக்கும். படைக் கல வலிமையைக் கொண்டு இந்த ஒற்றுமையை உண்டாக்கலாம்; ஆனால் அது நிலைத்திராது. பரஸ்பரம் நல்லதனத்தினாலும் தியாகத்தினாலும் உண்டாகும் ஒற்றுமையே உண்மையான ஒற்றுமையாம். பொதுமக்களிடம் இத்தகைய

ஒற்றுமையை ஏற்படுத்துவதே புத்தருடைய நோக்கமாக இருந்தது என்பதை ஸுத்த நிபாதத்தில் வரும் காஸிபாரத்துவாஜ ஸுத்தம் விளக்குகிறது. அதன் சாரமாவது-

ஒரு நாள் புத்த பகவான் பிட்சாடனம் செய்கையில், பாரத்துவாஜன் என்ற அந்தணனுடைய வயலுக்குப் போனார். அங்கே பாரத்துவாஜன் தன் ஆட்களுக்கு உணவு கொடுத்துக் கொண்டிருந்தான். பகவான் பிட்சைக்காக நிற்பதைக் கண்ட அவன், "நீயும் என்னைப் போல வயலை உழுது விதைத்து அறுவடை செய்து உண்பதற்கென்ன? நீ ஏன் பிச்சை எடுக்கிறாய்?" என்று கேட்டான்.

"நானும் உழவன்தான். நான் சிரத்தை என்னும் விதையை விதைக்கிறேன். அதன்மீது தவம் (முயற்சி) என்ற மழை பெய்கிறது. அறிவே என் கலப்பை. பாவத்திற்கு நாணுவது கலப்பையின் பிடியாம். சித்தம் என்பது கயிறு. நினைவு (விழிப்பு) என்பது கலப்பையின் கொழுவும் தாற்றுக்கோலுமாம். உடலையும் வாக்கையும் அடக்கி நான் வாழ்கிறேன். உணவில் திட்டம் வைத்துக் கொண்டு, வாய்மையினால் (மனக்குற்றங்களைக்) களைகிறேன். மகிழ்ச்சியே எனக்கு விடுமுறை. உற்சாகமே என் எருது. வருத்தமுறுவதற்கே இடமில்லாத திசையில் என் ஊர்தி செல்கிறது" என்றார் பெருமான்.

இந்த அறிவுரையின் பொருளை உடனே அறிந்து கொண்ட பாரத்துவாஜன் புத்தரின் சீடனானான்.

இந்த உபதேசத்தில் புத்தர் உழவுத் தொழிலை மறுத்து விலக்கவில்லை. ஆனால் நீதியைப் பக்கபலமாகக் கொள்ளாத பயிர்த் தொழிலினால் சமூகத்துக்கு இன்பம் உண்டாகாது துன்பமேஉண்டாகும் என்பதே இந்த உபதேசத்தின் தீர்ப்பு. ஒருவன் விளைத்த நெல்லை அறுவடைக் காலத்தில் மற்றவன் பறித்துச் சென்றால் உழவுத் தொழிலில் எவனும் முனையமாட்டான்; அதனால் சமூகத்தில் பயங்கரக் குழப்பம் தாண்டவமாடும். ஆதலால் எல்லாருடைய இதத் தொடர்பும் அஹிம்சையை அடிப்படையாகக் கொண்டிருக்க வேண்டும். மானசிகமான அத்தகைய உழவைச் செய்தாலன்றி, இந்தப் பௌதிகமான உழவினால் எத்தகைய பயனும் இல்லை என்பதை அறிந்தே, பெருமான் தமது சங்கத்தைச் சமூகத்தில் நீதி விழிப்பை உண்டாக்குமாறு தூண்டினார். ஆகவே பௌத்த சங்கம் குறைவான பேர்களையே கொண்டிருப்பினும் குறுகிய காலத்திற்குள் பொது மக்களின் அன்பைப் பெற்றுத் தன் செயலாற்றும் திறமையினால் மற்றச் சிரமண சங்கங்களைக் காட்டிலும் பெரிதும் முன்னேறியது.

## சங்கத்தின் கட்டுப்பாடு

தமது சங்கத்துக்குச் செயலாற்றும் வல்லமையை உண்டாக்குவதில்

புத்தர் மிகுந்த அக்கறை கொண்டார். தம் காலத்துக்குப் பிறகும் அதில் ஒற்றுமை நிலவவும், அது இடைவிடாது மக்களுக்குத் தொண்டு செய்யவும் ஏற்றபடி அவர் சங்கத்தின் கட்டுப்பாட்டை அமைத்தார். வஜ்ஜிகளின் குழு ஆட்சியில் அந்நாட்டுத் தலைவர்கள் கூடித் தமக்குள் ஆலோசித்து யாவருக்கும் நன்மையான வரையறைகளை ஏற்படுத்துவது வழக்கம். இந்த முறையையே சிறிதளவு மாற்றிப் புத்தர் தமது பிட்சு சங்கத்தில் பயன்படுத்தினார் என்பது, மகாபரிநிப்பான ஸுத்தத்தின் தொடக்கத்தில் குறிப்பிட்டுள்ள செய்தியிலிருந்து தெரிகிறது.

வஸ்ஸகாரன் என்ற அந்தணன் புத்தரிடம் வந்து, தன் எசமானனான அஜாதசத்துரு வஜ்ஜிகளைத் தாக்கத் திட்டமிடுவதாகக் கூறுகிறான். "நான் கூறிய ஏழு நியமங்களின்படி வஜ்ஜிகள் நடந்து கொள்ளும் வரையில் அவர்களை யாரும் வெல்ல முடியாது" என்று பெருமான் வஸ்ஸகாரனுக்கு விடை கூறுகிறார். பின்பு அவன் புறப்பட்டுச் சென்றதும் பிட்சு சங்கத்தை நோக்கி அவர் மொழிகிறார்- "பிட்சுக்களே, உங்கள் முன்னேற்றத்திற்குரிய ஏழு நியமங்களை நான் சொல்கிறேன். 1. பிட்சுக்கள் பல தடவை ஒன்று கூடும் வரையில் அவர்களுக்கு முன்னேற்றமே உண்டாகும்; தீங்கு நேராது. 2. பிட்சுக்கள் ஒரே கருத்தோடு கூடி, தங்கள் சங்கச் செயல்களை ஒரு மனத்தோடு சிந்தித்து எழும் வரையில் அவர்களுக்கு முன்னேற்றமே உண்டாகும்; தீங்கு நேராது. 3.சங்கம் ஏற்படுத்திய நியமங்களைப்பற்றி 'இவை சங்கம் ஏற்படுத்தியவை அல்ல' என்று பிட்சுக்கள் பேசாத வரையில், சங்கம் ஏற்படுத்திய கட்டளைகளை அவர்கள் மீறாத வரையில், கட்டளைகளின் உட்கருத்தை அறிந்து அதன்படி அவர்கள் நடந்துகொள்ளும் வரையில் அவர்களுக்கு முன்னேற்றமே உண்டாகும்; தீங்கு நேராது. 4. முதியோர்களும் ஒழுக்கமுள்ளவர்களுமான தலைவர்களிடம் பிட்சுக்கள் மதிப்பு வைக்கும் வரையில், 5. மீண்டும் மீண்டும் எழும் அவாவுக்குப் பிட்சுக்கள் வசமாகாத வரையில், 6. பிட்சுக்கள் தனிமை வாழ்வை விரும்பும் வரையில், 7.வராத அறிவாளிகளான உடன்படித்தவர்களை வரவேற்கவும், வந்த அறிவாளிகளான உடன்படித்தவர்களைச் சுகமாக இருக்கச் செய்வதற்கும் பிட்சுக்கள் எப்போதும் விழிப்போடு முனைந்திருக்கும் வரையில் அவர்களுக்கு முன்னேற்றமே உண்டாகும்; தீங்கு நேராது."

சங்கம் ஓர் இடத்தில் குழுமுவது, ஒரே மனத்தோடு சங்கச் செயல்களை ஆற்றுவது, முதியோர்களும் ஒழுக்க முள்ளவர்களுமான பிட்சுக்களை மதித்து ஆதரிப்பது முதலியவையான, விநயபிடகத்தில் காண்கிற நியமங்களைப் புத்தர்பெருமான், வஜ்ஜிகளின் சுதந்திரக் குழு ஆட்சியில் பழக்கத்திலிருந்த முறையினின்றும் ஏற்றுக் கொண்டார் என்பது இதிலிருந்து தெரிகிறது.

## சங்கத்து நியமங்கள் சில, உலக வழக்கிலிருந்து ஏற்பட்டன

ஆயினும் அரசாட்சிக்கு உரிய நியமங்கள் அனைத்தையும் சங்கத்துக்கு உரியனவாகச் செய்ய முடியாது. சங்கத்தில் எவனாவது ஒரு பிட்சு குற்றமிழைத்தால் அவனுக்கு விதிக்கக்கூடிய மிகப்பெரிய தண்டனை, அவனைச் சங்கத்தினின்றும் வெளியேற்றுவதுதான். இதைக் காட்டிலும் கடுமையான தண்டனை வேறு கிடையாது. ஏனெனில், சங்கத்தின் விதிகள் யாவும் அஹிம்சையை அடிப்படையாகக் கொண்டவை. அவற்றுள் பெரும்பாலான கட்டளைகள் உலக வழக்கத்திலிருந்தே எடுத்துக் கொண்டவையாம். உதாரணமாக, இதோ ஒரு நியமத்தைப் பாருங்கள்-

புத்தர்பெருமான் ஆளவி என்ற ஊரில் அக்காளவ சேதியத்தில் இருந்து வந்தார். அந்தக் காலத்தில் ஆளவகர் என்ற அவ்வூர்ப் பிட்சுக்கள் வீடு கட்டுவதற்காக நிலத்தைத் தோண்டச் செய்தனர். மக்கள் அவர்களைப் பற்றிக் கடுமையாகப் பேசினார்கள். பெருமானுக்கு இந்தச் செய்தி எட்டியது. அப்பொழுது அவர் அந்தப் பிட்சுக்களைத் தடுத்து, எல்லாப் பிட்சுக்களுக்குமே பொதுவாக இந்தக் கட்டளையை நியமித்தார். - "எவனாயினும் ஒரு பிட்சு நிலத்தைத் தோண்டினாலும் சரி, தோண்டுவித்தாலும் சரி, அவனுக்குப் பாசித்தியம் (பாவம்) உண்டாகிறது."[1]

பிட்சுக்கள் சிறு குடிசையோ சாதாரணமான விஹாரமோ கட்டிக்கொண்டு அதில் வசிக்கலாம் என்று மட்டும் பெருமான் அநுமதி தந்திருந்தார். அதற்காக ஒரு பிட்சு தானே நிலத்தைத் தோண்டுவதோ தோண்டுவிப்பதோ குற்றமாகிவிடாது. ஆயினும் பெருமான் இந்தக் கட்டளையை மக்களின் ஆறுதலுக்காக விதித்தார். பெரும்பாலும் எல்லாச் சிரமணர்களுமே சின்னஞ்சிறிய உயிர்களும் அழியலாகாது என்று ஜாக்கிரதையாக இருப்பார்கள். அவர்கள் இரவில் விளக்குக்கூட ஏற்றமாட்டார்கள். ஏனெனில் விளக்கில் விட்டில்கள் முதலிய பூச்சிகள் வந்து விழக்கூடும். அவர்களுடைய இந்தப் பழக்க வழக்கங்களைப் பொது மக்களும் பின்பற்றினார்கள். இத்தகைய நிலையில் ஒரு சிரமணன் தானே மண்வெட்டியை எடுத்துக் கொண்டு நிலத்தைத் தோண்ட ஆரம்பித்ததால் அதனால் மக்களின் மனம் அதிர்ச்சியுறுவது இயல்பாக இருந்தது. அந்த மக்களோடு விவாதம் செய்து அவர்களின் கருத்தை மாற்றுவது அநாவசியம் என்று புத்தர் கருதினார். தவத்தில் வீண்பொழுது போக்காமல் பிட்சுக்கள் மக்களுக்குத் தருமோபதேசம் செய்வதிலும் தியானசமாதி வாயிலாகத் தமது சித்தத்தை அடக்குவதிலும் பொழுதைப்

1. பௌத்த சங்கவரலாறு பக்கம் 97 பார்க்க

பயன்படுத்தினால் அதனால் சங்கத்தின் செயல் எளிதாகும் என்பதை அவர் அறிந்திருந்தார். ஆதலினால்தான், தொந்தரவு இல்லாத எந்தப் பழக்க வழக்கத்தையும் சங்கத்தில் ஏற்றுக்கொள்ள அவர் தயங்கியதில்லை.

## பிட்சு சங்கத்தின் எளிமை

மற்றச் சங்கங்களில் நடைமுறையிலிருந்த தவத்தைப் புத்தர்பிரான் அடியோடு விரும்பவில்லை; ஆயினும் தமது சங்கத்தைச் சார்ந்த பிட்சுக்கள் எளிய வாழ்வு வாழ வேண்டும் என்பதில் அவர் மிகுந்த அக்கறை கொண்டார். பிட்சுக்கள் உடைமையை விரும்பும் பற்றுடையவர்கள் ஆகிவிட்டால் அவர்கள் தங்கள் உடைமைகளோடு நான்கு திசைகளிலும் சென்று எப்படிப் பிரசாரம் செய்ய முடியும்? ஸாமஞ்ஞபல ஸுத்தத்தில் புத்த பகவான், மன்னன் அஜாதசத்துருவிடம் கூறுகிறார்-

"மன்னனே, பறவை எந்தத் திசையில் பறந்தாலும் அந்தத் திசையில் தன் இறகுகளுடனே பறக்கிறது. அதுபோலவே, மன்னனே, பிட்சுவும் தன் உடலுக்குத் தேவையான துவராடையிலும், வயிற்றுக்குத் தேவையான பிட்சையுணவிலும் திருப்தி கொள்கிறான். அவன் எந்தத் திசையில் சென்றாலும் அந்தத் திசையில் இவற்றுடனே செல்கிறான்."

இத்தகைய பிட்சுவிடம் மிஞ்சிப்போனால் கீழ்க்கண்ட காதையின்படி எட்டுப் பொருள்கள் இருக்கும்-

முத்துவ ராடையும்[1] பிச்சைப் பாண்டமும்
சிறிய மழுவும் தைக்கும் ஊசியும்
இடையிற் கச்சையும் நீர்வடி துண்டும்
என்னும் எட்டுப் பொருளே போதும்
யோகம் பயிலும் பிட்சுவினுக்கே.

## ஒழுக்க விதிகள்

இவ்வண்ணம் பிட்சுக்கள் எளிய வாழ்வு வாழ வேண்டும் என்பது புத்தரின் உபதேசமாம். ஆயினும் மனித இயல்புக்கு ஏற்பச் சில பிட்சுக்கள் இவற்றை ஏற்றுக் கொள்வதிலும் எல்லையை மீறுவது உண்டு. அதாவது, மூன்று துவராடைகளினும் மிகுதியாக ஆடைகளை ஏற்றுக்கொள்வர்; மண்பாண்டம் அல்லது இரும்பு பாண்டங்களுக்குப் பதிலாக செம்பு அல்லது பித்தளைப் பாண்டங்களைக் கொள்வர்; ஆடைகளை அளவுக்கு மேல் பெரியனவாகச் செய்துகொள்வர். இதனால் உடைமைப் பற்றுக்கு இடம் உண்டாகும். ஆதலால் இத்தகைய

1. அந்தரவாஸகம் (உள்ளாடை), ஸங்காடி (இடுப்பில் அணியும் ஆடை), உத்தராஸங்கம் (மேற்போர்வை) என்னும் மூன்று துவராடைகள். (மொ-ர்.)

செயலைத் தடுக்கப் பல நியமங்களை விதிக்க வேண்டிய தாயிற்று. இவ்வாறான நியமங்களின் எண்ணிக்கை மிகப் பெரிதாகவே உள்ளது.

விநயபிடகத்தில் பிட்சு சங்கத்துக்கு மொத்தம் 227 விலக்குக் கட்டளைகள் விதிக்கப்பட்டுள்ளன. இவற்றுக்குப் 'பாதிமோக்கம்' என்று பெயர். இவற்றுள் இரண்டு, அநியதமானவை (எப்பொழுதுமே பயன்படும் வகையில் அடங்காதவை); இறுதியில் 75 கட்டளைகள் ஸேகியங்கள் (சேடியங்கள்); அதாவது உண்டி உடை பேச்சு பழக்கவழக்கம் முதலியவற்றில் நெறிப்பட நடந்து கொள்வதுபற்றிய விதிகளைக் கூறுபவை. இவைபோக எஞ்சிய 150 கட்டளைகளைத்தான் அசோகன் காலத்தில் பாதிமோக்கம் என்று வழங்கியதாகத் தெரிகிறது. அதற்கு முன்பு இந்த விதிகள் யாவும் ஏற்படவில்லை; ஏற்கனவே ஏற்பட்டிருந்த விதிகளிலும், அடிப்படையான நியமங்களைத் தவிர மற்றக் கட்டளைகளில் ஏற்றவாறு மாறுதல் செய்யும் முழு உரிமை சங்கத்துக்கு இருந்தது. பரிநிர்வாணம் எய்துவதற்கு முன்பு பகவான் ஆனந்தனிடம் கூறுகிறார்- "ஆனந்தனே, சங்கம் விரும்பினால் என் காலத்துக்குப் பிறகு அற்ப சொற்பமான விதிகளை அது நீக்கிவிடலாம்."

அற்ப சொற்பமான விதிகளை நீக்கவோ, இடத்துக்கும் காலத்துக்கும் ஏற்றவாறு பொது விதிகளில் மாறுதல் செய்யவோ சங்கத்துக்கு முழு அநுமதியைப் புத்தர் பிரான் அருளியிருந்தார் என்பது இதிலிருந்து தெளிவாகிறது.

## உடலுக்குத் தேவையான பொருள்களை உபயோகிப்பதில் கவனிப்பு

பிட்சுவுக்கு வேண்டிய பொருள்களில் துவராடை, பிண்டபாதம் (உணவு), சயநாஸனம் (தங்குவதற்கு விடுதி), மருந்து ஆகிய நான்கும் இன்றியமையாதவையாம். பாதிமோக்க விதிகளின்படி இவற்றை உபயோகிக்கும் போதும் சிந்தனையோடு நடந்து கொள்ள வேண்டும் என்று பெருமான் பணித்தார்.

துவராடை அணியும்போது பிட்சு கூறவேண்டியதாவது- "நன்றாகச் சிந்தித்த பின்பே இந்த ஆடையை நான் அணிகிறேன். குளிர், வெப்பம், கொசு, ஈ, காற்று, வெயில், பாம்பு முதலியவற்றினால் நேரும் தொந்தரவைத் தவிர்க்கவும், அற்றம் (ரகசிய அங்கங்களை) மறைக்கவுமே நான் இதை அணிகிறேன்."

உணவு உண்ணும்போது அவன் கூற வேண்டியதாவது- "நன்றாகச் சிந்தித்த பின்பே இந்த உணவை நான் உண்கிறேன். என் உடல் விளையாடவோ வெறிகொள்ளவோ குலுக்கலும் பிலுக்கலுமாக விளங்கவோ இதை உண்ணவில்லை. இந்த உடலைக் காக்க வேண்டும்,

தொந்தரவுகள் நீங்க வேண்டும், பிரம்மசரியத்துக்கு உதவி கிடைக்க வேண்டும் என்ற நோக்கத்துடனேயே நான் உண்கிறேன். இப்படி நான் (பசி என்னும்) பழைய வேதனையை அழிப்பேன். (மிகுதியாக உண்டு) புதிய வேதனையை உண்டாக்க மாட்டேன். இதனால் என் பிழைப்பு நடக்கும்; உலக அவதூறு இராது; வாழ்க்கை இன்பமாக இருக்கும்."

இருப்பிடத்தை உபயோகிக்கையில் அவன் கூறவேண்டியதாவது- "நன்றாகச் சிந்தித்தே இந்தச் சய நாஸனத்தை நான் பயன்படுத்துகிறேன். குளிர், வெப்பம், கொசு, ஈ, காற்று, வெயில், பாம்பு இவற்றின் தொந்தரவு நேராமலிருக்கவும் தனிமையில் இளைப்பாறவுமே இதை உபயோகிக்கிறேன்."

மருந்தை உட்கொள்ளும்போது அவன் சொல்ல வேண்டியதாவது- "நன்றாகச் சிந்தித்தபின்பே இந்த மருந்துப் பொருளை நான் பயன்படுத்துகிறேன். உண்டான நோயை நீக்கவே இதை உபயோகிக்கிறேன்; உடல்நலம் பெறும் வரைக்குமே இதனைச் செய்வேன்."[1]

## தேவதத்தன் சங்கத்தில் பிளவு உண்டாக்கியது

சங்கத்தில் எளிமையும் நட்பும் நிலவ வேண்டுமென்று பகவான் எவ்வளவோ கண்ணும் கருத்துமாக இருந்தார். ஆனால் மனிதனுடைய இயல்பே விந்தையானது; அவன் வாழும் சமூகத்தில் கருத்து வேற்றுமை உண்டாகிக் கட்சிகள் தோன்றுவது இயல்புதான். அகந்தையும் அதைப் பின்பற்றி வரும் அறியாமையுமே இதற்கு முக்கியக் காரணங்கள். மனிதன் எவ்வளவுதான் எளிமையோடு நடந்துகொண்டாலும் அவன் தலைவனாகும் எண்ணம் கொண்டானானால், பிறருடைய குணங்களைக் குற்றங்களாக்கித் தன் பெருமையைப் பெரிதாக்க முயலாமல் இருக்க மாட்டான். அவனுடைய வலையில் அறிவிலிகள் அகப்பட்டுக் கொள்வதால் அவன் எளிதில் தன் விந்தையான கொள்கையை நிறுவமுடிகிறது.

பௌத்த சங்கத்தில் இத்தகைய முதல் பிட்சுதான் தேவதத்தன். இவன் சாக்கியர்களில் ஒருவன்; புத்தருக்கு உறவினன். இவன் சங்கத் தலைமையைத் தன்னிடம் ஒப்படைக்க வேண்டுமென்று பெருமானைக் கேட்டுக் கொண்டான். பெருமான் அதற்கு இணங்கவில்லை. எனவே தேவதத்தன், மன்னன் அஜாதசத்துருவின் வாயிலாகப் புத்தரைக் கொல்விக்கக் கொலையாளர்களை அனுப்பினான். ஆனால் அவர்கள்

1. இங்ஙனம் உடலுக்கு இன்றியமையாத நான்கு பொருள்களைக் கருத்துடன் பயன்படுத்துவதைப் 'பச்சவேக்கணம்' (பிரத்திய வேட்சணம்) என்பர். இன்றும் இது நடைமுறையில் இருக்கிறது.

புத்தரைக் கொல்வதற்கு மாறாக அவருக்குச் சீடராயினர். அப்பொழுது தேவதத்தன் கிருத்திரகூட மலையைச் சார்ந்த ஒரு குன்றிலிருந்து பெரும் பாறையொன்றைத் தூக்கி எறிந்தான். அதன் ஒரு துணுக்குப் புத்தரின் காலில் பட்டுக் காயம் உண்டாயிற்று. அந்தக் காயம் ஆறியதும் பெருமான் பிட்சாடனத்துக்காக ராஜகிருகம் சென்றபோது, தேவதத்தன் அவர்மேல் நாலகிரி என்ற வெறிபிடித்தகளிற்றை ஏவி விட்டான். அது பகவானின் திருவடித் தூளியை மத்தகத்தில் ஏற்றுக் கொட்டமடங்கித் தன் கொட்டிலுக்குத் திரும்பியது. இப்படி எல்லாச் சதிகளும் வீணான பின்னர், தேவதத்தன் பெருமானை அணுகி, "சங்கத்தில் கடுமையான தவ விதிகளை ஏற்படுத்த வேண்டும்" என்று கோரினான். ஆனால் புத்தர்பிரான் அதற்கு ஒப்புக்கொள்ளவில்லை. ஆகவே அவன் சங்கத்தில் பிளவு ஏற்படுத்திச் சில பிட்சுக்களைத் தன்னோடு அழைத்துக் கொண்டு கயைக்குப் போய் விட்டான்.

தேவதத்தனுடைய இந்தக் கதை விரிவாகச் சுல்ல வக்கத்தில் வந்துள்ளது.[1] ஆனால் இதில் வரலாற்றுண்மை குறைவென்றே தோன்றுகிறது. ஏனெனில் தேவதத்தன் பெருமானைக் கொலை செய்ய முயலும் அளவுக்குத் தீயவனாக இருந்திருந்தால் சங்கத்தில் பிளவை உண்டாக்க அவனால் முடிந்திராது; சில பிட்சுக்கள் அவனுக்குப் பக்தராவதும் இயலாது.

அஜாதசத்துரு இளவரசனாக இருந்தபொழுதே அவனுக்கும் தேவதத்தனுக்கும் நட்பு அமைந்தது; அப்போதிலிருந்தே தேவதத்தன் தலைவனாவதற்கு முயன்று வந்தான் என்பது லாபஸத்காரஸம்யுத்தத்தின் 36-ஆவது ஸூத்தத்தினால் விளங்குகிறது. அந்த ஸூத்தத்தின் சாரமாவது-

"புத்த பகவான் ராஜகிருகத்தில் வேணுவனத்தில் இருந்து வந்தார். அக்காலத்தில் இளவரசனான அஜாத சத்துரு ஐந்நூறு தேர்களை உடன்கொண்டு காலையும் மாலையும் தேவதத்தனைக் காணச் செல்வான்; ஐந்நூறு பேர் உண்ணக்கூடிய உணவையும் அவனுக்கு அனுப்புவான். சில பிட்சுக்கள் இந்தச் செய்தியைப் பெருமானிடம் அறிவித்தார்கள். அப்பொழுது பெருமான், 'பிட்சுக்களே, தேவதத்தனுடைய லாபத்திலோ சம்மானத்திலோ ஆசை கொள்ளாதீர்கள். இந்த லாபத்தினால் தேவதத்தனுக்குத் தீமையே விளையும்; வளம் விளையாது' என்றார்."

இதைத் தவிர, தேவதத்தனைக் குறித்துப் பெருமான் கூறிய பின்வரும் காதை இரண்டு இடங்களில் வருகின்றது-

"பழம் வாழையை அழிக்கும். முதிர்ந்து பழுத்ததுமே மூங்கிலும் நாணலும் அழியும். கோவேறு கழுதையை அதன் கருவே கொல்லும்.

1. புத்தலீலா ஸார ஸங்கிரகம், பக். 179-188 பார்க்க.

இவ்வண்ணமே பெருமதிப்பு அற்பனை அழித்துவிடும்.[1]

அதிகாரத்தில் ஆசைகொண்டு அதைப் பெறுவதற்காகத் தேவதத்தன அஜாதசத்துருவின் உதவியினால் எப்படியெல்லாம் வேலை செய்தான் என்பதை இதிலிருந்து அறியலாம். அஜாதசத்துரு தன் தந்தையைக் கொன்று அரியணையில் அமர்ந்த பிறகும் தேவதத்தன் அவனோடு உறவாடுவதை விடவில்லை. மேலும் அவனுடைய உதவியைக் கொண்டே சங்கத்தில் பிளவை உண்டாக்கிப் பல பிட்சுக்களைத் தன் கட்சியில் இழுத்துக் கொள்ளவும் தேவதத்தன் பின்வாங்கவில்லை. அவனுடைய இந்தச் செயல்கள் பெருமானுக்குப் பிடிக்காததில் வியப்பு என்ன இருக்கிறது? ஆனால் தேவதத்தன் உண்டாக்கிய பிளவு, சங்கத்துக்குத் தீமை யாதும் விளைக்கவில்லை. சங்கம் இந்தத் தொல்லையிலிருந்து நல்லபடியாகத் தப்பியது.[2]

---

1. ஸம்யுத்த நிகாயம் (P.T.S.) பாகம் 2, பக். 241; அங்குத்தரநிகாயம் (P.T.S.) பாகம் 2, பக்.73

2. தேவதத்தன் - புத்தர்பெருமானைக் கொல்வதற்குச் செய்த சூழ்ச்சிகள் யாவும் வீணுகவே, தேவதத்தன் சங்கத்தில் பிளவை உண்டாக்க ஓர் உபாயம் தேடினான். அவன் தன் தோழனான சமுத்திர தத்தனோடு பெருமானிடம் சென்று வணங்கி, "எம்பிரானே, பிட்சுக்கள் இம்மையின்பத்தில் முற்றும் அடையாமலிருக்க, நான் இந்த ஐந்து நியமங்களைச் செய்திருக்கிறேன். பிட்சுக்கள் யாவரும் இவற்றைக் கடைப்பிடிக்கத் தாங்கள் உத்திரவிட வேண்டும். 1. பிட்சுக்கள் எப்போதும் காடுகளிலேயே இருக்க வேண்டும். 2. அவர்கள் வாழ்நாள் முழுவதும் பிட்சையைக் கொண்டே பிழைக்க வேண்டும்; யார் அழைத்தாலும் அவர்கள் வீட்டுக்கு உண்ணச் செல்லக்கூடாது. 3. தெருவில் கிடக்கும் கந்தைகளையே ஆடைகளாக்கி வாழ்நாள் முழுவதும் உடுத்துக்கொள்ள வேண்டும்; இல்லறத்தாரிடம் ஆடைகளைப் பெற்றுக் கொள்ளலாகாது. 4. வாழ்நாள் முழுவதும் மரத்தடியிலேயே இருக்க வேண்டும்; குடிசையிலோ வீட்டிலோ இருக்கலாகாது. 5. மீன் மாமிசத்தை ஏற்றுக்கொள்ளலாகாது. இந்த ஐந்து விதிகளைக் காப்பதில் தவறு செய்பவன் குற்றவாளியாவான்" என்று சொன்னான்.

பகவான் பகர்ந்த விடையாவது - "இந்த ஐந்து நியமங்கள் ஆன்மிக முன்னேற்றத்துக்கு உதவும் என்று எனக்குத் தோன்றவில்லை. ஆனால் இவற்றில் விருப்பமுள்ளவன் இவற்றைக் கடைப்பிடிப்பதில் எனக்கு ஏதும் தடை இல்லை."

பெருமான் இந்த நியமங்களைச் சங்கத்துக்கு விதிக்க உடன்படவில்லை என்ற செய்தியைப் பறையறைவித்து, தேவதத்தன் சில பிட்சுக்களைத் தன் கட்சியில் சேர்த்துக் கொண்டான். அவர்களோடு அவன் ராஜகிருகத்தை விட்டுப் போனான். அப்போது பெருமான் ஸாரிபுத்தனையும் மோக்கல்லானனையும் கயைக்கு அனுப்பினார். அவர்கள் அந்தப் பிட்சுக்களுக்கு அறிவுரை கூறி அவர்களைத் திருப்பி அழைத்து வந்தார்கள். -புத்தலீலா ஸார ஸங்கிரகம், பக். 187 - 188.

## பிட்சு சங்கத்தில் மற்றுமொரு கலாம்

பிட்சு சங்கத்தில் மற்றொரு சாதாரணக் கலாம் கௌசாம்பியில் நிகழ்ந்ததாக மகாவக்கம் விரிவாக வருணிக்கிறது. மகாவக்கத்தை இயற்றியவர் அல்லது இயற்றியவர்கள், இம்மாதிரியான வேறு சந்தர்ப்பங்களிலும் சங்கத்துக்குப் பயன்படும்படி அந்தக் கதையை அமைத்திருக்கிறார்கள். அந்தக் கதையின் சாரம் இது- புலவர்களான இரண்டு பிட்சுக்களுள் விநய நியமங்களில் ஓர் அற்ப விஷயமாகக் கருத்து வேற்றுமை ஏற்பட்டுக் கலாம் தோன்றியது. அப்போது பகவான் அவர்களுக்குத் தீர்க்காயுவின் கதையைச் சொன்னார். ஆயினும் அவர்கள் கேட்கவில்லை. அவர்களில் ஒரு பிட்சு, "பதந்தரே, நீங்கள் சும்மா இருங்கள். எங்களுடைய இந்தச் சச்சரவு எப்படி ஆகிறது என்பதை நாங்கள் பார்த்துக்கொள்கிறோம்" என்றான். எல்லாருடைய மனமும் கலங்கியிருப்பதைக் கண்ட பெருமான், கௌசாம்பியிலிருந்து பழமையான வம்ஸதாவ உவவனத்துக்குச் சென்றார். அங்கே அநுருத்தன், நந்தியன், கிம்பிலன் என்ற மூன்று பிட்சுக்கள் இருந்து வந்தனர். அவர்களின் ஒற்றுமையைக் கண்ட பெருமான் அவர்களைப் போற்றினார். பிறகு அவர் அங்கிருந்து பாரிலேய்யகவனத்துக்குச் சென்றார். அதே சமயத்தில் ஒரு யானைக் கூட்டத்துக்குத் தலைமை தாங்கிய களிறு தன் கூட்டத்தினிடம் வெறுப்புக் கொண்டு அந்தக் காட்டில் தனியே வாழ்ந்து வந்தது. அது பெருமானை வரவேற்றது. பெருமான் சில காலம் அங்கே இருந்தபின் சிராவஸ்திக்குச் சென்றார்.

இந்தப் புறம் கௌசாம்பியில் உபாசகர்கள், கலாம் விளைத்த அந்தப் பிட்சுக்களை வழிக்குக் கொண்டுவருவதற்காக, யாரும் அவர்களுக்கு எவ்வகையிலும் மரியாதை செலுத்தக்கூடாது, பிட்சையிடக் கூடாது என்று திட்டமிட்டார்கள். அதனால் அந்தப் பிட்சுக்கள் தாமாக வழிக்கு வந்து சிராவஸ்திக்குப் போனார்கள். அப்பொழுது பெருமான், சச்சரவுகளை எவ்வாறு தீர்ப்பது என்பதுபற்றிச் சில நியமங்களை விதித்து, உபாலி முதலிய பிட்சுக்கள் வாயிலாக அந்தச் சண்டையைத் தீர்த்து வைத்தார்.[1]

மஜ்ஜிமநிகாயத்தின் உபக்கிலேஸ ஸுத்தத்தில் (128), மகாவக்கத்திலுள்ள செய்திகளில் பெரும் பகுதி வந்திருக்கிறது. ஆனால்

1. சங்க சாமக்கிரி- புத்தர்பெருமானுக்கு இந்த விஷயத்தைத் தெரிவித்தபோது அவர் கூறினார்: "இத்தகைய சந்தர்ப்பங்களில் சங்க சாமக்கிரி செய்ய வேண்டும். இந்தச் சங்க சாமக்கிரியாவது, எல்லாரும் ஒன்றுகூட வேண்டும். பிட்சு நோய்வாய்ப் பட்டிருப்பினும் வர வேண்டும். அப்பொழுது, வல்லமையுள்ள பிட்சுசங்கத்தினிடம் குற்றவாளி, 'பதந்த சங்கம் என் பேச்சைக் கவனிக்குமாக. எந்த விஷயத்துக்காகச் சங்கத்தில் கலாம் நிகழ்ந்ததோ அதை இந்தப் பிட்சு ஒப்புக்கொள்கிறான். இவன் தன்

அதில் தீர்க்காயுவின் கதை இல்லை. மேலும் அந்த ஸுத்தம், பழமையான வம்ஸதாவனத்திலேயே முடிந்துவிடுகிறது. பாரிலேய்யக வனத்துக்குப் புத்தர்பிரான் சென்ற பகுதி அந்த ஸுத்தத்தில் இல்லை. அது உதானவக்கத்தில் கிடைக்கிறது.

கோஸம்பிய ஸுத்தத்தில் இதனின்று வேறுபட்ட செய்திகள் கிடைக்கின்றன. அவற்றின் சாரமாவது-

புத்தர் பெருமான் கௌசாம்பியில் கோஷிதாராமத்தில் இருந்தார். அப்பொழுது கௌசாம்பி பிட்சுக்கள் தமக்குள் சச்சரவிட்டார்கள். பெருமானுக்கு இந்தச் செய்தி தெரிந்தது. அப்பொழுது அவர் அந்தப் பிட்சுக்களை வருவித்து, "பிட்சுக்களே, நீங்கள் உங்களுக்குள் சண்டையிடும் சமயத்தில் நீங்கள் உங்களுக்குள் மெய்வாய் மனத்தினால் செய்யும் செயல்கள் மைத்திரிமயமாக (நட்பு நிரம்பியதாக) இருப்பது சாத்தியமா?" என்று கேட்டார்.

"சாத்தியம் இல்லை" என்று அவர்கள் சொன்னார்கள்.

"அது சாத்தியமில்லை என்றால் நீங்கள் ஏன் சண்டை போட்டுக்கொள்கிறீர்கள்? பயனற்ற மனிதர்களே, இத்தகைய சண்டை உங்களுக்கு நீண்ட காலம் தீமையையும் துன்பத்தையும் விளைவிக்கும்" என்றார் பெருமான்.

மேலும் அவர் விளக்கலானார்: "பிட்சுக்களே, சண்டை சச்சரவுகளை நிறுத்துவதற்கும் கட்டுப்பாட்டுக்கும் ஒற்றுமைக்கும் காரணமான இந்த ஆறு விஷயங்கள் நினைவில் வைக்கத் தக்கவை. அவை யாவை? 1.மைத்திரிமயமான உடற்செயல்கள், 2. மைத்திரிமயமான வாக்கினால் செய்யும் செயல்கள், 3. மைத்திரிமயமான மனச்செயல்கள், 4. உபாசகர்களிடமிருந்து கிடைத்த தானதருமப் பொருள்களைச் சங்கமனைத்துக்கும் சமமாகப் பங்கிட்டு அநுபவிப்பது, 5.தன் சீலத்தில் (ஒழுக்கத்தில்) சிறிதும் குறையில்லாமல் வாழ்வது, 6. ,ஆரியச் சிராவகனுக்கு ஏற்ற நற்காட்சியுடன் இருப்பது."

---

குற்றத்துக்குப் பிராயச் சித்தம் செய்திருக்கிறான். சங்கம் சாமக்கரி செய்யுமாக' என்று வேண்டுவான். இது வேண்டுகோள் ஆயிற்று. இதன் பிறகு மூன்று முறை வெளியிட்ட பின்னும் யாரும் தடை எழுப்பவில்லை என்றால் சங்க சாமக்கரி ஆகிவிட்டது என்று அறிக.

"சங்க சாமக்கரி எத்தனை வகையானது?" என்று உபாலிகேட்டான். அப்பொழுது பகவான் பகர்ந்தார்: "சங்க சாமக்கிரி இருவகையானது- பொருளற்றது, பொருளுடையது என. எந்த விஷயத்தில் சச்சரவு நேர்ந்ததோ அதன் மூல காரணத்தை ஆராயாமல் செய்யும் சாமக்கிரி பொருளற்றது; ஆனால் எதைப்பற்றிச் சச்சரவு நேர்ந்ததோ அதன் மூல காரணத்தை ஆராய்ந்து செய்யும் சாமக்கிரி பொருளுடையது என்று அறிக." -பௌத்த சங்க வரலாறு, பக்.37-43.

இந்த நற்காட்சியைப் பற்றிப் பெருமான் மிக நன்றாக ஆராய்ந்து கூறியிருக்கிறார். அதை இங்கு விவரிக்க வேண்டிய தேவை இல்லை. இறுதியில், அந்தப் பிட்சுக்கள் பெருமானுடைய இந்த உபதேசத்தைப் போற்றினார்கள்.

இதனோடு அந்தச் சச்சரவு அந்த இடத்திலேயே தீர்ந்துவிட்டது என்பதுதான் இதற்குப் பொருள். இல்லாவிட்டால் அந்தப் பிட்சுக்கள் பெருமானுடைய வாக்கைப் போற்றுவது எங்ஙனம்? மகாவக்கத்திலும் உபக்கிலேஸ ஸுத்தத்திலும் அவர்கள் பெருமானைப் போற்றிய செய்தி இல்லை; அவர்கள் சண்டையிட்டுக் கொண்டே இருந்ததாகவும், பெருமான் சலிப்படைந்தவராக அங்கிருந்து புறப்பட்டுப் பழமையான வம்ஸதாவனத்துக்குச் சென்றதாகவும் அவை கூறுகின்றன. ஆதலால், ஒன்றுக்கு ஒன்று முரணான இந்தச் செய்திகளை எப்படிப் பொருந்த வைப்பது?

அங்குத்தர நிகாயத்தில் சதுக்க நிபாதத்தில் 241-ஆம் ஸுத்தத்தில் வரும் செய்தியை இப்போது காண்போம்-

ஒரு முறை புத்தர்பெருமான் கௌசாம்பியில் கோஷிதாராமத்தில் தங்கியிருந்தார். அப்போது ஆயுஷ்மான் (தீர்க்காயுளுடைய) ஆனந்தன் அவரை அணுகி வணங்கி ஒரு பக்கமாக அமர்ந்தான். "ஆனந்தா, அந்தச் சச்சரவு தீர்ந்ததா இல்லையா?" என்று பெருமான் அவனைக் கேட்டார்.

"பதந்தரே, சச்சரவு எப்படித் தீரும்? அநுருத்தனுடைய சீடன் பாகியன் சங்கத்தில் பிளவு ஏற்படுத்தவே முனைந்தவன் போலக் காண்கிறான். அநுருத்தனோ அவனிடம் ஒரு வார்த்தையும் பேசுவதில்லை" என்றான் ஆனந்தன்.

"ஆனால், ஆனந்தா, சங்கச் சச்சரவுகளைத் தீர்க்கும் செயலில் அநுருத்தன் எப்போதும் தலையிடுவதில்லையே? நீயும் ஸாரிபுத்தனும் மோக்கல்லானனுமே இந்தச் சச்சரவுகளைத் தீர்ப்பதில்லையா?" என்றார் பெருமான்.

பாகியன் காரணமாகவே இந்தச் சண்டை உண்டாகி முற்றியது என்பதும், இதைத் தீர்க்கும் செயலில் பெருமானே முனைந்தார் என்பதும் இதிலிருந்து தெரியவருகின்றன. அந்தப் பிட்சுக்களின் அவையிலிருந்து பெருமான் சிறிது காலம் வேறிடம் சென்றிருக்கலாம்; ஆயினும் அந்தச் சண்டை கௌசாம்பியிலேயே தீர்ந்து போயிற்று என்பதே முடிந்த முடிபாம்.

இத்தகைய சந்தர்ப்பங்களில் சண்டைக்காரப் பிட்சுக்களை வழிக்குக் கொண்டுவருவதற்காக உபாசகர்கள் அவர்களை விலக்கிவைக்க, அதனால் அவர்கள் வழிக்கு வந்தார்கள் என்று மகாவக்க ஆசிரியர் கதை கட்டியதன் நோக்கம், எந்த வகையிலாவது இந்தச் சண்டை தீர வேண்டும் என்பதேயாம். இத்தகைய சிறு சண்டை சச்சரவுகளினால் சங்கத்தில்

விபரீதமான மாறுதல் ஏற்பட எவ்வகையிலும் இடம் இல்லை.

## பிட்சுணிகளின் சங்கம் நிறுவியது

பிட்சுணி சங்கம் நிறுவியதைப் பற்றிய செய்தி கல்லவக்கத்தில் வருகிறது. அதன் சாரமாவது-

புத்த பகவான் கபிலவஸ்துவில் நிக்குரோதாராமத்தில் இருந்து வந்தார். அப்பொழுது மகாப்பிரஜாபதி கோதமி பெருமானிடம் வந்து, "பதந்தரே, பெண்களை உங்கள் சம்பிரசாயத்தில் துறவேற்க அநுமதியுங்கள்" என்று வேண்டினாள். பெருமான் அந்த வேண்டுகோளை மூன்று முறை மறுத்தார். அவர் அங்கிருந்து வைசாலிக்குப் போனார். மகாப்பிரஜாபதி கோதமி தன் கூந்தலைமழித்து, மற்றும் பல சாக்கியப் பெண்களை அழைத்துக் கொண்டு பெருமானின் பின்னாலேயே வைசாலிக்கு வந்தாள். இந்த யாத்திரையினால் அவள் கால்கள் வீங்கியிருந்தன; உடல் புழுதி படிந்திருந்தது; அவள் முகத்தில் சோர்வு படர்ந்திருந்தது. ஆனந்தன் அவளைக் கண்டு அவளுடைய சோர்வுக்கு என்ன காரணம் என்று கேட்டான். "பெண்களைப் பௌத்த மதத்தில் துறவு கொள்ளப் பெருமான் இணங்கவில்லை; ஆதலால் நான் சோர்வுற்றிருக்கிறேன்" என்று கோதமி கூறினாள். அவளை அங்கேயே இருக்கச் சொல்லிவிட்டு, ஆனந்தன் பெருமானிடம் சென்றான்; பெண்கள் துறவேற்க இசைவு அளிக்க வேண்டும் என்று அவரைப் பிரார்த்தித்தான். பெருமான் அதை ஒப்புக்கொள்ளவில்லை. அப்பொழுது ஆனந்தன், "பதந்தரே, ததாகதர் கூறியுள்ள மதசம்பிரதாயத்தில் பிட்சுணியாகி ஒரு பெண் ஸ்ரோதாபத்தி பலனையும் ஸகிருதாகாமி பலனையும் அநாகாமி பலனையும் அருகத் பலனையும்[1] அடைவது சாத்தியமா இல்லையா?" என்று கேட்டான். "சாத்தியந்தான்" என்று பெருமான் கூறியதும் அவன், "அப்படியானால், எந்தச் சிற்றன்னை பெருமான் தாயற்றிருந்த நிலையில் அவருக்குப் பாலூட்டி வளர்த்தாளோ அவளுடைய வேண்டுகோளினால் பெருமான் பெண்களுக்குப் பிரவிரஜ்யை அளிக்க வேண்டும்" என்றான்.

பகவான் கூறினார்: "மகாப்பிரஜாபதி கோதமி எட்டுப் பொறுப்பான நியமங்களை (அட்ட கருதம்மங்களை) ஏற்றுக் கொண்டால், பெண்கள் துறவேற்க நான் அநுமதி அளிக்கிறேன். (அஷ்ட குரு தருமங்களாவன-) 1. பிட்சுணி, சங்கத்தில் எத்தனை ஆண்டுகள் இருந்தாலும், சிறியவர்களும் பெரியவர்களுமான எல்லாப் பிட்சுக்களையும் வணங்க வேண்டும். 2. பிட்சுக்கள் இல்லாத ஊரில் பிட்சுணி இருக்கலாகாது. 3. பதினைந்து நாட்களுக்கு ஒரு முறை உபோஸதம் என்றைக்கு, தருமோபதேசம் கேட்க

---

1. இந்த நான்கு பலன்களைப்பற்றிய விளக்கம் இதே அத்தியாயத்தில் பின்னால் வருகிறது.

எப்போது வருவது என்ற இரண்டு விஷயங்களையும் பிட்சுணி, பிட்சு சங்கத்தினிடம் கேட்டுத் தெரிந்துகொள்ள வேண்டும். 4. சாதுர்மாசத்துக்குப் பின்பு பிட்சுணி, பிட்சு சங்கத்தினிடமும் பிட்சுணி சங்கத்தினிடமும் பிரவாரணை[1] (தன் குற்றத்தைக் கூறும்படி அனைவரையும் வேண்டுதல்) செய்ய வேண்டும். 5. எவளாவது பிட்சுணி சங்காதி சேஷம் முதலிய குற்றங்களைச் செய்திருந்தால், அவள் இரண்டு சங்கங்களிடமும் பதினைந்து நாளைக்கு மானத்தம்[2] (சங்கத்தின் திருப்திக்காக விஹாரத்துக்கு வெளியே இரவுகளைக் கழித்தல்) ஏற்றுக்கொள்ள வேண்டும். 6. இரண்டு ஆண்டுகள் தருமத்தைப் பயின்ற

1. பிரவாரணை - அப்பொழுது பகவான் கூறினார்: "பிட்சுக்களே, மற்றத் துறவிகளைப்போல நீங்கள் மௌன விரதம் எடுத்துக்கொள்ளலாகாது. மழைக்காலம் முடிந்ததும், பார்த்த கேட்ட அல்லது சந்தேகித்த குற்றங்களுக்குப் பிரவாரணை செய்ய வேண்டும். அதுதான் உங்களுக்கு ஏற்றது. அந்தப் பிரவாரணை இத்தகையது- வல்லமையுள்ள பிட்சுசங்கத்தினிடம், 'பதந்த சங்கம் என் பேச்சைக் கவனிக்குமாக. இன்று பிரவாரணை நாள். சங்கம் உசிதமென்று கருதினால் இன்று பிரவாரணை செய்க' என்று கோர வேண்டும். பிறகு எல்லாரிலும் முதிய பிட்சு ஒரு தோளில் மேற்போர்வையைப் போட்டுக் கொண்டு, மண்டியிட்டு அமர்ந்து, 'ஆயுஷ்மான் சங்கம் என் குற்றங்கள் எவற்றையாவது பார்த்திருந்தாலோ கேட்டிருந்தாலோ அல்லது அவற்றைப் பற்றிச் சந்தேகம் தோன்றியிருந்தாலோ அவற்றைக்காண்பிக்குமாறு நான் பிரார்த்தனை (பிரவாரணை) செய்கிறேன். என்னிடம் இரக்கம் கொண்டு, சங்கம் எனக்கு அந்தக் குற்றங்களைக் காண்பிக்குமாக. அவை உசிதமானவை என்று தோன்றினால் நான் அவற்றுக்கு ஏற்ற பிராயச்சித்தம் செய்வேன்' என்று கூற வேண்டும். இப்படி அவன் மூன்று முறை சொல்ல வேண்டும். இளைஞனான பிட்சு, 'ஆயுஷ்மான் சங்கம்' என்பதற்குப் பதிலாக, 'பதந்த சங்கம்' என்று சொல்ல வேண்டும். அப்பொழுது ஒருவர் மற்றவருடைய குற்றங்களைக் கூறினால் அதை நேர்மையாக ஒப்புக்கொண்டு சங்கத்தினிடம் மன்னிப்புக் கேட்டுக்கொள்ள வேண்டும். இங்ஙனம் மழைக் காலத்தின் முடிவில் சங்கத்தில் ஒற்றுமை நிலவுமாக."

பெருமான் மேலும் கூறினார்: "சங்க நிறுவி நீண்ட நாள் ஆகாத வரையில், சங்கத்தின் பரப்புப் பெரிதாகாதவரையில், சங்கத்தின் லாபம் வளராத வரையில், சங்கத்தில் புலமை பரவாத வரையில் அதில் பாவத்தன்மை நுழைவதில்லை. இப்போது சங்கம் பாவத்தன்மையிலிருந்து விடுபட்டு இருக்கிறது; தூயதாக இருக்கிறது.-" பௌத்த சங்க வரலாறு, பக். 24-26.

2. மானத்தம் - இப்படிப் பரிவாசம் முடிந்ததும், பிட்சு தன் பரிவாசம் முடிந்த செய்தியைச் சங்கத்துக்கு அறிவிக்க வேண்டும். பிறகு சங்கம் அவனுக்கு ஆறு இரவுகளுக்கு மானத்தம் கொடுக்கும்; அதாவது அந்தப் பிட்சு, சங்கம் திருப்தியுறும்படி பரிவாச இரவுகளைப் போலவே பின்னும் ஆறு இரவுகளை (குறைந்த பட்சம் அருணோதய வேளையையாவது) விஹாரத்துக்கு வெளியே கழிக்க வேண்டும்.- பௌத்த சங்க வரலாறு, பக்.47.

சிராமணேரிக்கு இரு சங்கங்களும் உபசம்பதை அளிக்க வேண்டும். 7.எந்தக் காரணத்தாலும் பிட்சுணி, பிட்சுவை வைவதோ கடுமொழி கூறுவதோ கூடாது. 8. பிட்சுணி, பிட்சுவுக்கு உபதேசம் செய்யலாகாது; பிட்சு, பிட்சுணிக்கு உபதேசம் செய்ய வேண்டும்."

ஆனந்தன் இந்த எட்டு நியமங்களையும் மகாப்பிரஜாபதி கோதமிக்குத் தெரிவித்தான். அவற்றை அவள் விருப்பத்தோடு ஏற்றுக் கொண்டாள். இது வரைக்குமுள்ள இந்தக் கதை, அங்குத்தர நிகாயத்தில் அட்டகநிபாதத்திலும் கிடைக்கிறது. அதற்குப் பிறகு பெருமான் ஆனந்தனிடம் கூறுகிறார்: "ஆனந்தா, பெண்ணுக்கு இந்தத் தருமவிநயத்தில் துறவு கிடைக்காமல் இருந்திருக்குமானால் இந்தத் தருமம் (பிரம்ம சரியம்) ஓராயிரம் ஆண்டுகள் நிலைத்து இருந்திருக்கும். ஆனால் இப்போது பெண்ணுக்குத் துறவற உரிமை கொடுத்துவிட்டதனால் இந்த நல்லறம் (ஸத்தர்மம்) ஐந்நூறு ஆண்டுகளே நிலைத்திருக்கும்."

இப்படி விநயமும் அங்குத்தர நிகாயமும் ஒற்றுமையாகப் பேசுகின்றன. ஆயினும் இந்த எட்டுக் குருதருமங்கள் பின்னால் ஏற்பட்டவை என்றே சொல்ல வேண்டியிருக்கிறது. ஏனெனில், விநய நியமங்களை ஏற்படுத்துவதில் பெருமான் ஒரு முறையைப் பின்பற்றினார்; இந்த நியமங்கள் அந்த முறைக்கு மாறாக இருக்கின்றன. அந்த முறையாது என்பதைப் பாருங்கள்.

புத்தர்பெருமான் வேரஞ்சா என்ற ஊருக்கு அருகில் இருந்தார். அப்பொழுது அவ்வூரின் மருங்கில் கொடும் பஞ்சமாக இருந்ததனால் பிட்சுக்கள் மிகவும் துன்பப் பட்டார்கள். அப்பொழுது ஸாரிபுத்தன் பகவானை அணுகி, "பிட்சுக்களின் ஒழுங்கு முறை, சிந்தனை ஆகியவைபற்றி நியமங்கள் ஏற்படுத்த வேண்டும்" என்று கேட்டுக் கொண்டான். அதற்குப் பெருமான் கூறினார்: "ஸாரிபுத்தா, பொறுமையோடு இரு. நியமங்கள் விதிக்க வேண்டிய சந்தர்ப்பம் எது என்பது ததாகதனுக்குத்தான் தெரியும். சங்கத்திற்குள் பாவச்செயல்கள் நுழையாத வரைக்கும் அவற்றைத் தடுக்கும் நியமங்களைத் ததாகதன் விதிப்பதில்லை.[1]"

இந்த வாக்கின்படியே புத்தர் எல்லா நியமங்களையும் ஏற்படுத்தினார். முதலில் ஒரு பிட்சு ஏதாவது குற்றமோ தவறோ செய்வான். அந்தச் செய்தி பெருமானின் காதில் விழுந்ததும் அவர் பிட்சு சங்கத்தைக் கூட்டி ஏதாவது நியமம் விதிப்பார். அந்த நியமத்தின் கருத்தைப் பிட்சுக்கள் சரியாக உணரவில்லை என்று தெரியவருமானால் அப்பொழுது அவர் அதில் பின்னும் மாறுதல்கள் செய்வார்.

ஆனால் மகாப்பிரஜாபதி கோதமியின் விஷயத்தில் இந்த முறை

1. பௌத்த சங்க வரலாறு, பக். 52 - 53 பார்க்க.

பின்பற்றப்படவில்லை. பிட்சுணி சங்கத்தில் எவ்வகையான குற்றமும் நேராததிருக்கையில், ஆரம்பத்திலேயே இந்த எட்டு நியமங்களைப் பிட்சுணிகளின் மேல் சுமத்தியது விந்தையாகத்தான் தோன்றுகிறது. ஆதலால், பிட்சு சங்கம் எல்லா ஆதிக்கத்தையும் தன் கையில் வைத்துக்கொள்ள வேண்டும் என்ற கருத்துடன், இந்த நியமங்களைப் பிற்காலத்தில் உண்டாக்கி, விநயத்திலும் அங்குத்தர நிகாயத்திலும் சேர்த்து விட்டது என்று கொள்வதே பொருத்தமாகும்.

விநயபிடகத்தைவிட ஸுத்தபிடகம் பழமையானது. ஆயினும் அதில் சில ஸுத்தங்கள் பிற்சேர்க்கைகளாக உள்ளன. இந்த ஸுத்தமும் அவற்றுள் ஒன்றாக இருக்கலாம். கி.மு. முதல் அல்லது இரண்டாவது நூற்றாண்டில் மகாயான சம்பிரதாயம் வேகமாக பரவியபோது இந்த ஸுத்தம் உருப்பெற்றிருக்கலாம். இதில் வரும் நல்லறம் (ஸத் தர்மம்) என்ற சொல்லுக்கு, ஸ்தவிரவாதிகளின் சம்பிரதாயம் என்று பொருள் கொள்க. பிட்சுணிகளின் சங்கத்தை நிறுவியதனால் அந்த அறம் ஐந்நூறு ஆண்டுகளே நிலைத்திருக்கும்; அதற்குப் பின்பு எங்கும் மகாயான சம்பிரதாயம் பரவும் என்பதே, இந்த ஸுத்தம் இயற்றியவரின் ஜோசியமாம். இந்த ஸுத்தம் புத்தர் பிரானுடைய பரிநிர்வாணத்துக்குப் பிறகு ஐந்நூறு ஆண்டுகள் கழித்துப் பிறந்தது என்பது இந்த ஜோசியத்திலிருந்தே தெளிவாகிறது.

பாரத நாட்டில் முதல் முதலில் பிட்சுணி சங்கத்தைப் புத்தரே நிறுவியிருந்தாரானால், இந்த எட்டுக் குரு தருமங்களை ஓரளவாவது சரித்திரத்தில் சேர்க்கவேண்டியிருந்திருக்கும். ஆனால் உண்மைநிலை அவ்வாறு இல்லை. ஜைனமும் வேறு சில சம்பிரதாயங்களும் பௌத்த சமயத்துக்கு இரண்டொரு நூற்றாண்டுகள் முன்னரே நிலவி இருந்தன அந்த சம்பிரதாயங்களில் பிட்சுணிகளின் மிகப் பெருஞ் சங்கங்கள் இருந்தன. அந்தப் பிட்சுணிகளில் சிலர், சாதுரியமும் புலமையும் வாய்ந்தவர்களாக இருந்தனர். பாலி இலக்கியத்தில் பல இடங்களில் இந்தச் செய்திகளைக் காணலாம். இந்தப் பழைய அடிப்படையில்தான் புத்தருடைய பிட்சுணி சங்கம் அமைந்தது. குழு ஆட்சியுள்ள ராஜ்யங்களில்- அவ்வளவேன், ஏகாதிபத்திய ஆட்சி தலையெடுத்துக் கொண்டிருந்த ராஜ்யங்களிலுங்கூட- பெண்களை நன்கு மதித்து வந்தார்கள். ஆதலால் பிட்சுணி சங்கத்தைக் காப்பதற்கு விந்தையான நியமங்களை ஏற்படுத்த வேண்டிய தேவையே இல்லை. அசோகனுடைய காலத்துக்குப் பிறகு இந்த நிலை மாறியது. யவனர்களும் சகர்களும் இந்த நாட்டைப் படையெடுக்கலானார்கள். அதனால் பெண்களின் நிலை வரவரத் தாழ்ந்து, சமூகத்தில் அவர்களுக்கு மதிப்பே இல்லாது போயிற்று. அத்தகைய காலத்தில் பிட்சுணிகளுக்காக இந்த நியமங்கள் நடைமுறைக்கு வந்திருந்தால் அதில் ஏதும் வியப்பு இல்லை.

## ராகுலன் சிராமணேர் ஆனது.

பிட்சு சங்கமும் பிட்சுணி சங்கமும் நிறுவியான பின்பு, அவற்றில் சிராமணேர்களையும் சிராமணேரிகளையும் சேர்த்துக்கொள்ள வேண்டியதாயிற்று. முதலில் புத்தர் பெருமான் ராகுலனைச் சிராமணேர் ஆக்கி ஏற்றுக் கொண்ட வரலாற்றை மகாவக்கம் கூறுகிறது. அந்தக் கதை வருமாறு-

பெருமான் சில காலம் ராஜகிருகத்தில் இருந்து விட்டுக் கபிலவஸ்துவுக்கு வந்தார். அங்கே அவர் நிக்குரோதாரமத்தில் தங்கினார். ஒரு நாள் அவர் சுத்தோதனனுடைய வீட்டின் மருங்கில் பிட்சாடனம் செய்துகொண்டிருந்தபோது ராகுலமாதா அவரைப் பார்த்தாள். அப்போது அவள் ராகுலனிடம், "குழந்தாய் ராகுலா, இவர் உன் தந்தை. இவரிடம் சென்று உன் உரிமைப் பங்கைக் கேள்" என்றாள். தாயின் பேச்சைக் கேட்டு, ராகுலன் பெருமானெதிரில் போய் நின்று, "சிரமணரே, உங்கள் நிழல் இன்பம் தருகிறது" என்றான். பெருமான் அங்கிருந்து போய்விட்டார். ராகுலன், "என் உரிமைப் பங்கைக் கொடுங்கள்" என்று சொல்லிக்கொண்டு அவருக்குப் பின்னாலேயே சென்றான். விஹாரத்துக்குப் போனதும் பெருமான் தன் செல்வத்தை ராகுலனுக்குக் கொடுக்கும் நோக்கத்தோடு ஸாரிபுத்தனை அழைத்து ராகுலனைச் சிராமணேர் ஆக்குவித்தார். இந்தச் செயல் சுத்தோதனனுக்குப் பிடிக்கவில்லை. சிறு குழந்தைகளுக்குப் பிரவிரஜ்யை தருவதனால் அவர்களை வளர்த்தவர்களுக்கு எவ்வளவு துயரம் உண்டாகிறது என்பதைச் சுத்தோதனன் பகவானுக்கு அறிவித்தான்; சிறுபிராயத்தவனுக்குப் பிரவிரஜ்யை தரக்கூடாது என்ற நியமத்தையும் அவர் வாயிலாகச் செய்வித்தான்.

இந்தக் கதை சரித்திர உரைகல்லில் மாற்றுப் பெறாது. முதலாவதாக, சுத்தோதன சாக்கியன் கபில வஸ்துவை உறைவிடமாகக் கொண்டவன் அல்லன். இரண்டாவதாக, நிக்குரோதாராமம் புத்தருடைய முதுமையில் கட்டப்பெற்றது; அப்பொழுது ராகுலன் சிறுபிராயத்தவன் அல்லன். ஆதலால் இந்தக் கதை பல நூற்றாண்டுகளுக்குப் பின்பு உருவாகி மகாவக்கத்தில் செருகப்பெற்றது என்று தோன்றுகிறது.

புத்தர்பெருமான் ராகுலனுக்குச் சிராமணேர் தீட்சை அளித்தபொழுது அவன் ஏழாட்டைப் பிராயத்தவனாக இருந்தான் என்று அம்பலட்டிக ராஹுலோவாத ஸுத்தத்தின் அட்டகதை கூறுகிறது. இன்றும் பௌத்தர்களிடையே இந்தக் கருத்தே நிலவுகிறது. போதிசத்துவர் வீட்டைத் துறந்த அன்றே ராகுலன் பிறந்ததாக வைத்துக் கொண்டாலுங் கூட, சிராமணேர் தீட்சையின்போது அவன் ஏழு வயசுடையவனாக இருப்பது சாத்தியமன்று. ஏனெனில், வீட்டைத் துறந்த பின்

போதிசத்துவர் ஏழு ஆண்டுகள் தவம் செய்தார்; தத்துவ போதம் பெற்றதும் முதல் சாதுர்மாசத்தை வாராணசியில் கழித்தார்; அதற்குப் பிறகு அவர் சங்கத்தை நிறுவ ஓர் ஆண்டாயினும் பிடித்திருக்கும். ஆகவே ராகுலகுமாரன் சிராமணேர் தீட்சையின்போது ஏழட்டைப் பிராயத்தவனாக இருப்பது எவ்வகையிலும் சாத்தியமில்லை.

ராகுலனை எவ்வாறு சிராமணேர் ஆக்கியிருப்பார்கள் என்பதை, ஸுத்தநிபாதத்து ராஹுலஸுத்தத்திலிருந்து ஊகித்து அறியலாம். எனவே அந்த ஸுத்தத்தின் மொழிபெயர்ப்பை இங்கே தருகிறேன்-

(பகவான் கூறுகிறார்:) 1. ஓயாது பழகுவதனால் நீ புலவனை அவமதிக்கிறாயா. மாந்தருக்கு அறிவு விளக்கைக் காண்பிக்கும் புலவனுக்கு நீ தக்க தொண்டு செய்கிறாயா?

(ராகுலன் கூறுகிறார்:) 2. ஓயாது பழகுவதனால் புலவனை நான் அவமதிப்பதில்லை. மாந்தருக்கு அறிவு விளக்கைக் காண்பிக்கும் அவனுக்கு நான் எப்போதும் தக்க தொண்டு செய்கிறேன்.

(இவை தொடக்கத்திலுள்ள காதைகள்.)

(பகவான் கூறுகிறார்:) 3. சுவையான, மனங்கவரும் (ஐம்பொறிகளின்) ஐந்து காமபோகங்களைத் துறந்து நீ சிரத்தையோடு இல்லத்தினின்றும் வெளியேறு. துன்பத்தின் இறுதியைக் காண்பவனாகிவிடு.

4. நலம் வாய்ந்த நண்பர்களுடன் பழகு. அதிக இரைச்சல் இல்லாத தனிமையான இடத்தை உன் உறைவிடமாகக் கொள். மிதமான உணவைப் புசி.

5. துவராடை, உணவு, மருந்து, இருப்பிடம் ஆகியவற்றில் அவாக் கொள்ளாதே. மறுபிறப்பை எய்தாதே.

6. விநய நியமங்களிலும் ஐம்பொறிகளிலும் அடக்கம் கொள்; உடலைச் சார்ந்த நினைவு இருக்கட்டும்; வைராக்கியம் நிறைந்தவனாக இரு.

7. காமவிகாரங்கள் கலந்த விஷயங்களாகிய சுபநிமித்தங்களை விலக்கு; ஏகாக்கிரதையும் சமாதியும் அடைவிக்கும் அசுப நிமித்தங்களைப் பாவனை[1] செய்.

8. அநிமித்தத்தை (நிர்வாணத்தை)ப் பாவனை செய். அகந்தையை

---

1. அசுப பாவனை- உத்துமாதகம் அதாவது ஊதிய பிணம், விநீலகம் அதாவது நீலம் பாரித்த பிணம், விபுப்பகம் அதாவது சீழ் நிரம்பிய சவம், விச்சித்தகம் அதாவது துளைகள் விழுந்த சவம், விக்காயிதகம் அதாவது பலவகை உயிர்கள் சிறிது சிறிது தின்று எஞ்சிய பிணம், விக்கித்தகம் அதாவது அங்கங்கள் இங்குமங்கும் சிதறியசவம், ஹதவிக்கித்தகம் அதாவது உயிர்கள் வாயலாகவோ ஆயுதத்தினாலோ அறுபட்டு அங்கங்கள் இங்கும் அங்கும் சிதறிய சவம் லோகிதம் அதாவது குருதி பெருகும் பிணம், புலவகம் அதாவது புழுக்கள் நெளியும் பிணம், அட்டிகம் அதாவது

விட்டுவிடு. அகந்தை அழித்ததும் நீ அமைதியாக இருப்பாய்.

இங்ஙனம் பெருமான் இந்தக் காதைகளை ராகுலனுக்கு மீட்டும் மீட்டும் உபதேசம் செய்தார்.

இந்த ஸுத்தத்தில் மொத்தம் எட்டுக் காதைகள் இருக்கின்றன. இவற்றுள் இரண்டாவது, ராகுலன் கூறியது; மற்றவை பெருமான் கூறியவை என்று அட்டகதைக்காரர் சொல்கிறார். முதல் காதையில் பெருமான், 'புலவன்' என்று மொழிந்தது ஸாரிபுத்தனைக் குறிக்கும் என்றும் அட்டகதைக்காரர் சொல்கிறார். இது பொருத்தமென்றே தோன்றுகிறது. ராகுலன் சிறுபிராயத்தவனாக இருந்தபோதே பெருமான் அவனைக் கல்விப் பயிற்சிக்காக ஸாரிபுத்தனிடம் ஒப்படைத்துவிட்டார். அதற்குப் பிறகு இரண்டோர் ஆண்டுகள் கழித்து ராகுலனுக்கு வயசு வந்ததும் பெருமான் இந்த உபதேசத்தை அவனுக்குச் செய்திருத்தல் வேண்டும். ஏனெனில், இந்த ஸுத்தத்தில் கூறியுள்ள விஷயங்கள் இளம்பருவமுள்ள பாலகனுக்கு விளங்கக் கூடியவை அல்ல. ராகுலன் முன்னரே சிராமணேர் ஆகியிருந்தானாயின், 'நீ இல்லத்தினின்றும் வெளியேறித் துன்பத்தின் இறுதியைக் காண்பவனாகிவிடு' என்று உபதேசிக்கத் தேவையே இல்லை.

அந்தண இளைஞர்கள் குருகிருகம் சென்று பிரம்ம சரியம் மேற்கொண்டு வேதம் பயிலுவார்கள்; அதற்குப் பின்பு அவரவர் விருப்பத்துக்கு ஏற்ப இல்லறத்தையோ தவ வழியையோ மேற்கொள்வார்கள். ராகுலன் விஷயத்திலும் இதுதான் நிகழ்ந்திருக்க வேண்டும். அவனுக்குப் பொது அறிவு கிடைக்க வேண்டும் என்ற நோக்கத்தோடு பெருமான் அவனை ஸாரிபுத்தனிடம் ஒப்படைத்தார். அவன் ஸாரிபுத்தனோடு வாழ்ந்தமையால் பிரம்ம சரியத்தைக் காப்பது இன்றியமையாததாகவே இருந்தது. வயசு வந்ததும் அவன் இல்லறத்தில் புகுந்துவிடலாகாது என்று கருதியே பெருமான் அவனுக்கு மேற்கூறியபடி உபதேசித்தார். இந்த ராகுலன் கதையை அடிப்படையாகக் கொண்டே, மகாவக்க ஆசிரியர், சிராமணேர்களின் கதையை விரிவாக இயற்றினார்.

---

எலும்புக்கூடு அல்லது அதன் பகுதி- ஆகிய இவை பத்து அசுபங்களாம். இவற்றில் தியானத்தைச் செலுத்துவதே அசுபபாவனையாம். இத்தகைய பிணங்களில் ஏதாவது ஒன்று கண்ணுக்குப் புலப்பட்டால் அதை ஒருவன் தன் உடலாகவே பாவித்து, அதையே கண்முன் வைத்துக்கொண்டு சிந்தனை செய்வதனால் இந்தத் தியானம் சாத்தியமாகிறது. பெண் ஆணின் பிணத்தையும், ஆண் பெண்ணின் பிணத்தையும் கண்டு இத்தகைய தியானம் செய்ய இயலாது. ஆதலால் இத்தகைய பிணங்கள் விலக்கத்தக்கனவாம். ஒருவர் தமது இனத்தைச் சார்ந்த பிணத்தைத் தியானத்தில் கொண்டதும் அது கண்முன் தோன்றாவிட்டால், அதன் முக்கியமான எந்த அம்சம் கண்முன் தோன்றுகிறதோ அதை மட்டுமே தியானம் செய்து இந்தச் சமாதி நிலையைப் பயில முடியும். - சமாதி மார்க்கம், பக். 49 -58.

## மற்றச் சிராமணேர்கள்

புத்தர்பெருமான் வாழ்ந்திருந்த காலத்தில், சிறு பிராயத்தில் சங்கத்தில் சேர்ந்த சிராமணேர்களின் தொகை மிகக் குறைவாகவே இருந்தது. ஆனால் மற்றச் சம்பிரதாயங்களிலிருந்து வரும் துறவிகள் சிராமணேர் ஆகுமுன்பு நான்கு மாதகாலம் பயிற்சி பெறவேண்டியிருந்தது; இத்தகைய சிராமணேர்களின் தொகையே மிகுதியாக இருந்ததென்று தோன்றுகிறது. தீகநிகாயத்தில் மஹாஸீஹநாத ஸுத்தத்தின் இறுதியில் வரும் செய்தியாவது - காசியபன் என்ற துறவி புத்தருடைய பிட்சு சங்கத்தில் சேர விரும்புகிறான். அப்போது பகவான், "காசியபனே, இந்தச் சம்பிரதாயத்தில் ஒருவன் துறவு பூண்டு சங்கத்தில் சேர விரும்பினால் அவன் நான்கு மாதம் பயிற்சி பெற வேண்டும். நான்கு மாதங்களுக்குப் பின் பிட்சுக்களுக்கு அவனிடம் நம்பிக்கை பிறந்தால் அவர்கள் அவனுக்குப் பிரவிரஜ்யை தந்து, சங்கத்தில் சேர்த்துக் கொள்வார்கள். இவ்விஷயத்தில் சில விலக்குகளும் உண்டு என்பது எனக்குத் தெரியும்" என்றார்.

இதன்படியே காசியபன் நான்கு மாதம் பயிற்சி பெற்றான்; பிட்சுக்களுக்கு நம்பிக்கை உண்டானதும் அவனைச் சங்கத்தில் சேர்த்துக் கொண்டார்கள்.

## சிராமணேர் ஸ்தாபனத்தின் வளர்ச்சி

சிராமணேர்களின் ஸ்தாபனம் புத்தர்பிரானுடைய பரிநிர்வாணத்துக் குப் பின்பு வளர்ந்து கொண்டே போயிற்று. நாளடைவில் சிறு பிராயத்தில் சிராமணேர்களாகிப் பிட்சுநிலை அடைபவர்களின் எண்ணிக்கையே மிகப் பெரிதாயிற்று. இதனால் சங்கத்தில் பல குற்றங்கள் நுழைந்தன. பெருமானும் அவருடைய பிட்சு சங்கத்தைச் சார்ந்தோரும் இல்லற வாழ்வில் நன்கு அநுபவப் பட்டவர்கள்; அவர்களின் மனம் மீண்டும் இல்லறத்தை நாடுவது சாத்தியமன்று. ஆனால் சிறுபிராயத்திலேயே சந்நியாச தீட்சை கொடுத்து இல்லத்திலிருந்து வெளியேற்றப் பட்டவர்கள், இல்லற வாழ்வில் கவர்ச்சி கொள்வது இயல்புதானே! ஆயினும் உலக வழக்கு அவர்களுக்குத் தடையாக இருந்தது; ஆதலால் அவர்கள் மனத்தினால் பல குற்றங்களைச் செய்தார்கள். சங்கத்துக்கு அழிவை விளைத்த பல காரணங்களுள் இதுவும் முக்கியமானதொன்று.

சிராமணேர்கள் வாழ்ந்த முறையிலேயே சிராமணேரிகளின் ஸ்தாபனம் அமைந்தது. சிராமணேர்கள் பிட்சுக்களின் ஆதீனத்திலும், சிராமணேரிகள் பிட்சுணிகளின் ஆதீனத்திலும் இருந்தார்கள். இதுதான் இரண்டுக்குமுள்ள வேறுபாடு.

## சிராவகர் சங்கத்தின் நான்கு பகுதிகள்

ஆனால் சிராமணேர்களும் சிராமணேரிகளும் சங்கத்தின் நான்கு பகுதிகளுள் இடம் பெறவில்லை. ஆதலால் பெருமான் வாழ்ந்த காலத்தில் அவர்களுக்கு அடியோடு முக்கியத்துவம் இருந்ததில்லை என்று தெரிகிறது. பிட்சுக்கள், பிட்சுணிகள், உபாசகர், உபாசகைகள் ஆகிய இவர்கள் மட்டுமே புத்தருடைய சிராவக சங்கத்தின் பகுதியினராம்.

பிட்சு சங்கம் பெருஞ்செயல் ஆற்றியது என்பதில் ஐயமில்லை. ஆயினும் பிட்சுணிகளும் உபாசகர்களும் உபாசிகைகளுங்கூட, சங்கத்தின் வளர்ச்சிக்குப் பாடுபட்டார்கள். இத்தகைய வரலாறுகள் பல, திரிபிடக இலக்கியத்தில் கிடைக்கின்றன.

## பெண்களின் நிலை

புத்தருடைய தருமவழியில் ஆண்களைப் போலவே பெண்களுக்கும் சம நிலை இருந்தது என்பது, சோமாபிட்சுணிக்கும் மாரனுக்கும் நிகழ்ந்த பின்வரும் உரையாடலிலிருந்து தெரிகிறது.

சோமா என்னும் பிட்சுணி, சிராவஸ்தியின் மருங்கிலிருந்த அந்தவனத்தில் நடுப்பகலில் தியானம் செய்ய உட்கார்ந்தாள். அப்பொழுது மாரன் அவளிடம் வந்து, "ரிஷிகளுக்கும் கிடைத்தற்கரிய அந்த இடம் (நிர்வாணம்), (சோற்றைப் பதம் பார்க்கும்) இரண்டு விரல்களிலேயே எல்லா அறிவும் அடங்கிவிட்ட பெண்ணுக்குக் கிடைப்பது சாத்தியமன்று" என்றான்.

இதற்குச் சோமா பிட்சுணி விடை பகர்ந்தாள்: "மனம் நன்கு திருப்தியுற்று, ஞானம் பெற்று, செம்மையாகத் தருமத்தை அறிந்துள்ளவருக்கு, (நிர்வாண வழியில்) பெண்மை எப்படித் தடையாக முடியும்? 'நான் பெண், நான் ஆண், நான் ஏதோ ஒன்று' என்ற அகந்தை[1] கொண்டவரிடம் மாரன் இந்தக் கதைகளைக் கதைப்பானாக!" (பிக்குணிஸம்யுத்தம், ஸுத்தம் 2.)

சோமா பிட்சுணி தன்னை அடையாளம் கண்டு கொண்டதை மாரன் உணர்ந்தான். அவன் துன்புற்ற உள்ளத்தோடு அங்கேயே மறைந்தான்.

இந்த உரையாடல் காவியமாக இருக்கிறது. ஆயினும் இதிலிருந்து, பௌத்த சங்கத்தில் பெண்களின் நிலை எவ்வாறு இருந்தது என்பது தெளிவாகிறது.

---

1. அகந்தை மூன்று வகையானது-1. நான் உயர்ந்தவன் என்ற எண்ணம், 2. நான் இணையானவன் என்ற எண்ணம், 3. நான் தாழ்ந்தவன் என்ற எண்ணம். விபங்கம் (P.T.S.) பக். 346, 353.

## நிர்வாண மார்க்கதில் சிராவர்களின் நான்கு பிரிவுகள்

நிர்வாண மார்க்கத்தில் சிராவகர் நால்வகைப்படுவர். ஸோதாபன்னன், ஸகதாகாமி, அநாகாமி, அருகன் என்பது அவர்களின் பெயர். ஸக்காய திட்டி (ஆன்மாவேறு பொருள், அது நித்தியம் என்ற நோக்கம்). விசிகிச்சை (புத்தர் தருமம் சங்கம் என்ற விஷயங்களில் ஐயம் அல்லது அவநம்பிக்கை), ஸீலப்பதபராமாஸம் (நீராடல் முதலிய விரதங்களினாலும் உபவாசங்களினாலும் முத்தி கிடைக்கும் என்ற நம்பிக்கை- இந்த மூன்று சம்யோஜனங்களை (பந்தங்களை) அழித்தால், சிராவகன் ஸோதாபன்னன் ஆகிறான். அந்த வழியில் அவன் நிலைத்தால் அவன் ஸோதாபத்தி பலட்டோ (பலஸ்தன்) என்று பெயர் பெறுகிறான். இதற்குப் பின்பு காமவாசனை, படிகம் (சினம்) என்னும் இரண்டு சம்யோஜனங்கள் தளர்ந்து, அறியாமை குறைந்தால், அவன் ஸகதாகாமி ஆகிறான். அந்த வழியில் அவன் நிலைத்தால் அவனுக்கு ஸகதாகாமிபலட்டோ என்ற பெயர் அமைகிறது. இந்த ஐந்து சம்யோஜனங்களையும் முற்றும் நீக்கியபிறகு, சிராவகன் அநாகாமி ஆகிறான். அந்த வழியில் நிலைத்தால் அவனை அநாகாமிபலட்டோ என்பர். இதன் பிறகு ரூபராகம் (பிரமலோகம் முதலியவற்றைப் பெறும் விருப்பம்), அரூபராகம் (உருவற்ற தேவருலகைப் பெறும் விருப்பம்), மானம் (அகங்காரம்), உத்தச்சம் (மனமயக்கம்), அவிச்சை (அறியாமை) என்னும் ஐந்து சம்யோஜனங்களை நீக்கி அவன் அரஹா (அருகன்) ஆவான். அந்த வழியில் நிலைத்தால் அவனை அரஹப்பலட்டோ (அருகத் பலஸ்தன்) என்பர். இங்ஙனம் சிராவகர்கள் நான்கு அல்லது எட்டு வகையாகப் பிரிக்கப்பெறுவர்.

சித்திரன், விசாகன் என்ற இருவரும் இல்லறத்தவர்களாயினும் அநாகாமியாக இருந்தவர்கள். ஆனந்தன் பிட்சுவாயினும் புத்தர்பெருமானின் வாழ்நாளில் வெறும் ஸோதாபன்னனாகவே இருந்தான். க்ஷேமா, உத்பல வர்ணா முதலிய பிட்சுணிகள் அருகத் பதத்தைப் பெற்றிருந்தார்கள். எனவே நிர்வாண மார்க்கத்தில் முன்னேறுவதற்குப் பெண்மையோ இல்லறமோ அறவே தடையாகாது.

## சங்கத்தின் புகழ்

புத்தம் ஸரணம் கச்சாமி.
தம்மம் ஸரணம் கச்சாமி.
ஸங்கம் ஸரணம் கச்சாமி.

இதைச் சரணகமனம் என்பர். இன்றும் பௌத்த மக்கள் இந்தத் திரிசரணத்தை ஓதுகிறார்கள். இந்தப் பழக்கம் புத்தரின் வாழ்நாளிலேயே

தொடங்கிவிட்டது எனலாம். புத்தர்பிரான் தமது தருமத்துக்கு எவ்வளவு பெருமை தந்தாரோ அவ்வளவு பெருமை சங்கத்துக்கும் தந்தார் என்பது நினைவில் கொள்ளத் தக்கது. வேறு எந்த மதத்திலும் இத்தகைய பெருமையைக் காண முடியாது. ஏசு கிறிஸ்து, "துன்புற்றுச் சுமை தாங்கும் மக்களே, நீங்கள் அனைவரும் என்னிடம் வந்தால் நான் உங்களுக்கு அமைதி அளிப்பேன்[1]" என்கிறார்.

கண்ணபிரான், "எல்லாத் தருமங்களையும் விடுத்து என் ஒருவனையே நீ சரணாகப் பற்று. நான் உன்னை எல்லாப் பாவங்களினின்றும் விடுவிக்கிறேன். நீ கவலைப்படாதே[2]" என்கிறான்.

ஆனால் புத்தர்பெருமானோ, "நீங்கள் புத்தன் தருமம் சங்கம் ஆகியவற்றைச் சார்பாகக் கொண்டு உங்கள் சொந்த உழைப்பினால் உங்கள் துன்பங்களையும் பிறர் துன்பங்களையும் அழியுங்கள்; உலகத்துத் துன்பத்தைக் குறையுங்கள்" என்கிறார்.

உலகிலுள்ள பேரறிவாளிகளும் ஒழுக்கமுடையவர்களுமான ஆண்பெண்களைப் பெருஞ் சங்கமாக்கி அதை நாம் புகலடைந்தால், துன்பத்தை நீக்கும் வழி எளிதாகி விடாதா?

## சங்கமே அனைவருக்கும் தலைமையானது

புத்தர்பெருமான் தமக்குப் பிறகு யாரையும் சங்கத்தலைவராக நியமிக்கவில்லை. சங்கம் அனைத்தும் சேர்ந்தே சங்கச் செயல்களை ஆற்ற வேண்டும் என்று அவர் கட்டளையிட்டார். ஏகாதிபத்திய ஆட்சி முறையில் பழகியவர்களுக்குப் புத்தரின் இந்த முறை விந்தையாகத் தோன்றுவதில் வியப்பு இல்லை.

பகவான் பரிநிர்வாணமெய்தி நீண்ட நாள் ஆகவில்லை. அப்பொழுது ஆனந்தன் ராஜகிருகத்தில் இருந்தான். பிரத்தியோதனுக்கு அஞ்சிய மன்னன் அஜாத சத்துரு ராஜகிருகத்தைச் செப்பனிடலானான். கோபக மோக்கல்லானன் என்ற அந்தணனை அவன் இந்த வேலையில் அமர்த்தினான். ஆயுஷ்மான் ஆனந்தன் ராஜகிருகத்தில் பிட்சையேற்கப் புறப்பட்டான். ஆனால் அதற்கு இன்னும் நேரமாகவில்லை யாதலால் அவன், கோபக மோக்கல்லானன் வேலை செய்யும் இடத்துக்குச் சென்றான். அந்தணன் அவனுக்கு ஆசனம் தந்து, தான் தாழ்ந்த ஆசனத்தில் அமர்ந்து, "பெருமானைப் போன்ற பண்புள்ள பிட்சு வேறு யாராயினும் உண்டா?" என்று கேட்டான்.

"இல்லை" என்று ஆனந்தன் விடை பகர்ந்தான்.

இந்தப் பேச்சு நடந்துகொண்டிருக்கையில் மகத நாட்டு முதலமைச்சனான வஸ்ஸகாரன் என்ற அந்தணன் அங்கே வந்தான்.

---

1. Mathew, 11,28.

2. பகவத்கீதை, அத். 18, சுலோ, 66.

ஆனந்தனுடைய பேச்சைச் செவியுற்ற அவன், "பெருமான் இல்லாமையால் சங்கம் சரணடையும்படியாக எந்தப் பிட்சுவையாவது அவர் நியமித்திருக்கிறாரா?" என்று வினவினான்.

"இல்லை" என்றான் ஆனந்தன்.

"பெருமான் வீற்றிருந்த இடத்துக்குச் சங்கம் எந்தப் பிட்சுவையாவது தேர்ந்தெடுத்திருக்கிறதோ?" என்று வஸ்ஸகாரன் கேட்டான்.

"இல்லை" என்றான் ஆனந்தன்.

"அப்படியானால் உங்களுடைய இந்தப் பிட்சு சங்கத்துக்கு யாரும் தலைவர் அல்ல. இந்த நிலையில் சங்கத்தில் கட்டுப்பாடு எப்படி இருக்கும்?" என்று கேட்டான் வஸ்ஸகாரன்.

ஆனந்தன் கூறினான்: "எங்களுக்குத் தலைவன் இல்லை என்று கருத வேண்டாம். பெருமான் விநய நியமங்களை ஏற்படுத்தியிருக்கிறார். ஓர் ஊரில் நாங்கள் எத்தனை பிட்சுக்கள் இருக்கிறோமோ அவ்வளவு பேரும் ஓர் இடத்தில் ஒன்றுகூடி அந்த நியமங்களைத் திருப்பிக் கூறுகிறோம். எவனாவது குற்றம் செய்திருந்தால் அவன் தன் குற்றத்தை வெளியிட்டுப் பிராயச்சித்தம் செய்கிறான். ஒழுக்கம் முதலிய நற்பண்புகள் நிரம்பிய பிட்சுவை நாங்கள் மதித்து அவனுடைய கருத்துக்களைக் கேட்டுக்கொள்கிறோம்."[1]

அந்தணனான வஸ்ஸகாரன், அஜாதசத்துருவின் அமைச்சன். சர்வாதிகாரியான ஒருவன் இருந்தாலன்றி அரசியல் நேர்மையாக நடக்க முடியாது என்பது அவனுடைய உறுதியான கொள்கை. புத்தர் தமது பீடத்தில் யாரையும் அமர்த்தவில்லை என்றாலும், சங்கமாவது ஒரு பிட்சுவைத் தேர்ந்தெடுத்து அந்தப் பீடத்தில் உட்கார வைக்க வேண்டும் என்பதே வஸ்ஸகாரனுடைய கருத்து. ஆனால் இத்தகைய சர்வாதிகாரி இல்லாமலே புத்தருக்குப் பிறகும் சங்கச் செயல்கள் ஒழுங்காகவே நடந்து வந்தன. ஆதலால் புத்தர் நிறுய சங்கத்தின் அமைப்பு ஒழுங்காகவே இருந்தது என்பது தேற்றம்.

1. மஜ்ஜிமநிகாயம், கோபகமோக்கல்லான ஸுத்தம் (108) காண்க.

# 7. ஆன்மவாதம்

## ஆன்மவாதிகளான சிரமணர்கள்

புத்தர் காலத்தில் இருந்த சிரமண அந்தணர்களைப் பொதுவாக நான்கு வகைப்படுத்திக் கூறுகிறது நிவாப ஸுத்தம். அவர்களுள் முதல் வகுப்பில், வேள்விகளை நிகழ்த்திச் சோமபானம் செய்யும் அந்தணர்கள் அடங்குவர். இத்தகைய உல்லாச வாழ்வினால்தான் மோட்சம் கிடைக்கும் என்று அவர்கள் கருதினார்கள். வேள்வியிலும் சோமபானத்திலும் அலுத்துப்போய்க் காட்டில் புகுந்து கடுந்தவம் செய்த ரிஷிகளும் முனிவரும் இரண்டாம் வகுப்பினர். அவர்களால் நீண்ட காலம் காட்டில் நிலைத்திருக்க முடியவில்லை. அவர்கள் மீண்டும் இல்லறத்தில் புகுந்து உல்லாசக் கேளிக்கைகளில் இன்பம் கண்டார்கள். பராசரர், ரிச்யசிருங்கர் (கலைக் கோட்டு முனிவர்) முதலியவர்கள் இதற்கு உதாரணமாவர். மூன்றாவது வகையினர், மக்கள் குடியிருக்கும் ஊர்களின் மருங்கில் வாழ்ந்து அளவான உணவு கொள்ளும் சிரமண அந்தணர்கள். அவர்கள் ஆன்மவாதத்தில் புகுந்தார்கள். ஆன்மா நிலையானது என்று சிலரும் கருதினார்கள். இத்தகைய வாதத்தில் ஈடுபட்டதனால் அவர்களும் மாரனின் வலையில் சிக்கினார்கள். புத்தர் பெருமான் இந்த ஆன்மவாதத்தை விட்டுத் தீர்த்துத் தமது சமயத்தைச் சத்தியமென்னும் அடிப்படையில் நிறுவினார். ஆதலால் அவரைச் சார்ந்த சிராவகர்கள் மாரனுடைய வலையில் சிக்கவில்லை. எனவே அவர்கள் நான்காவது வகையினரான சிரமண அந்தணர்கள் ஆயினர்.[1]

புத்தர்பெருமான் இந்த ஆன்மவாதத்தை ஏன்விட்டார் என்பதுபற்றி ஆராயுமுன்பு, அந்தக் காலத்துச் சிரமண அந்தணர்களின் ஆன்மவாதங்கள் எத்தகையனவாக இருந்தன என்பதைப் பார்க்க வேண்டும். அக்காலத்தில் மொத்தம் அறுபத்திரண்டு சிரமண மதங்கள் இருந்தன[2] என்பதை மூன்றாம் அத்தியாயத்திலேயே கூறியிருக்கிறேன். அவற்றில் எந்த மதமும் ஆன்மவாதத்திலிருந்து விடுபட்டிருக்கவில்லை. ஆனால் அந்த மதங்கள் அனைத்தின் தத்துவ தரிசனமும் இன்று நமக்குக் கிடைக்கவில்லை. அவற்றுள் ஆறு பெருஞ் சங்கங்களின் தத்துவ தரிசனத்தில் பெரும்பாலான பகுதி பாலி இலக்கியத்தில் எஞ்சியிருக்கிறது. அதிலிருந்து மற்றச் சிரமண அந்தணர்களின்

1. பக். 97-98 காண்க.
2. பக். 78-79 காண்க.

ஆன்மவாதத்தைப் பற்றி அறிய முடிகிறது. ஆதலால் முதலில் அவர்களுடைய தத்துவ தரிசனத்தைக் கவனிப்போம்.

## அக்கிரியவாதம்

மேற்கூறிய அறுவருள் முதல்வனான பூரண கஸ்ஸபன், 'ஒருவன் ஒன்று செய்வதால் பாவமோ புண்ணியமோ விளைவதில்லை' என்ற அக்கிரியவாதத்தை ஆதரித்தவன். அவன் சொல்கிறான் -"ஒருவன் எதையாவது செய்தாலும் செய்வித்தாலும், அறுத்தாலும் அறுக்க வைத்தாலும், துன்புறுத்தினாலும் துன்புறும்படி செய்வித்தாலும், சோகமுற்றாலும் உறும்படி செய்தாலும், ஒருவனுக்குத் தொந்தரவு ஆனாலும் மற்றவனுக்குத் தொந்தரவு கொடுத்தாலும், பயம் உண்டானாலும் பயமுறுத்தினாலும், உயிர்களைக் கொன்றாலும், திருடினாலும், வீட்டை உடைத்தாலும், கொள்ளையடித்தாலும், ஒரே வீட்டில் கன்னம் வைத்தாலும், வழிப்பறி செய்தாலும், பிறன் மனைவியை அடைந்தாலும், பொய் சொன்னாலும் அவற்றால் அவனுக்குப் பாவம் உண்டாவதில்லை. கூரிய முனையுள்ள சக்கரத்தினால் ஒருவன் இந்தப் புவியிலுள்ள உயிர்களின் மாமிசத்தை ஒரே மொத்தமாக ஒரே குவியலாகச் செய்தாலும், அவனுக்குச் சிறிதும் பாவம் வராது. அதில் எவ்வகைக் குற்றமும் இல்லை. கங்கையாற்றின் தென்கரைக்குச் சென்று ஒருவன் அடிதடிச் சண்டை செய்தாலும், அறுத்தாலும் அறுக்கவைத்தாலும் தொந்தரவு கொடுத்தாலும் கொடுக்க வைத்தாலும் அதில் துளியும் பாவம் இல்லை. கங்கையாற்றின் வடகரைக்குச் சென்று ஒருவன் ஏராளமான தானங்களைக் கொடுத்தாலும் கொடுப்பித்தாலும், வேள்விகள் செய்தாலும் செய்வித்தாலும் அதனால் அடியோடு புண்ணியமே வராது. தானம், தருமம், அடக்கம், வாய்மை ஆகியவற்றினால் புண்ணியம் வருவதில்லை."

## நியதிவாதம்

மக்கலி கோஸாலன் சம்சாரசுத்திவாதி, அதாவது நியதிவாதி.[1] அவன் சொல்கிறான் -"உயிர் தூய்மையற்று இருப்பதற்கு ஏதும் ஏது இல்லை, காரணம் இல்லை. ஏது இல்லாமலே, காரணம் இல்லாமலே உயிர்கள் தூய்மையற்றவை ஆகின்றன. உயிர்களின் தூய்மைக்கு ஏதும் ஏது இல்லை, காரணம் இல்லை. ஏது இல்லாமலே, காரணம் இல்லாமலே உயிர்கள் தூயவை ஆகின்றன. தன் அறிவுத்திறமையால் ஒன்றும் உண்டாவதில்லை. பிறனுடைய அறிவுத்திறமையால் ஒன்றும்

1. உலகில் ஒவ்வொருவரும் கட்டாயம் துன்பம் அநுபவித்தே தீர வேண்டும் என்பது இவன் கொள்கை. (மொ-ர்.)

உண்டாவதில்லை. மனிதனுடைய அறிவாற்றலால் ஒன்றும் உண்டாவதில்லை. (எவனிடமும்) வல்லமை இல்லை, வீரியம் இல்லை, மனித ஆற்றல் இல்லை, மனிதப் பராக்கிரமம் இல்லை. எல்லாப் பொருள்களும், எல்லாப் பிராணிகளும், எல்லா பூதங்களும், எல்லா உயிர்களும் வசமற்று வலிமையற்று வீரியமற்று இருக்கின்றன. அவை நியதி (ஊழ்), சேர்க்கை, இயல்பு ஆகியவற்றினால் நிலைமாறி, ஆறனுள் ஏதாவது ஒரு சாதியில் (கூட்டத்தில்) இருந்து இன்ப துன்பங்களை நுகர்கின்றன. அறிவாளிகளும் சரி, அறிவிலிகளும் சரி, இருவருமே எண்பத்து நான்கு லட்சம் மகாகற்பங்களாகிய வளையத்தில் சுற்றிச் சுழன்று செல்லத்தான் வேண்டும்; அதன் பிறகுதான் அவர்களின் துன்பம் அழியும். இன்ன சீலத்தினாலே, இன்ன விரத்தினாலே, இன்ன தவத்தினாலே அல்லது பிரம்மசரியத்தினாலே நான் முதிராத கருமங்களை முதிரச் செய்துவிடுவேன், அல்லது முதிர்ந்த கருமங்களின் பயனை நுகர்ந்து அவற்றை அழித்துவிடுவேன் என்று ஒருவன் பேசினால், அது அவனால் ஆகும் செயலன்று. இந்தச் சம்சாரத்தில் (உலகில்) இன்பதுன்பங்கள், படிகொண்டு அளக்கும் படியாக இவ்வளவு என்று நிச்சயமாக விதிக்கப்பட்டுள்ளன. அவற்றைக் குறைக்கவோ ஏற்றவோ முற்றும் தள்ளுபடி செய்யவோ முடியாது. நூற்கண்டை எறிந்தால் நூல் முழுவதும் பிரியும் வரைக்கும் அது உருளுவதுபோல, அறிவாளிகளும் அறிவிலிகளும் சம்சாரச் சக்கரம் முழுவதையும் சுழன்று முடித்தால் தான் அவர்களின் துன்பம் அழியும்."

## உச்சேதவாதம்[1]

அஜித கேஸகம்பலன் உச்சேதவாதி. அவன் சொல்கிறான்.- "தானத்திலும் வேள்வியிலும் ஹோமத்திலும் ஒன்றும் இல்லை. நற்செயலுக்கும் தீச்செயலுக்கும் பயனோ பரிணாமமோ இல்லை. இவ்வுலகம், மறுவுலகம், தாய்தந்தை, அல்லது ஒளபபாதிகர் (தேவர் நரகர்) என்னும் உயிர்கள் இல்லை. இம்மையையும் மறுமையையும் கண்டு அறிந்து பிறருக்குச் சொல்லும் தத்துவ ஞானிகளும் நேர்வழியில் செல்கிறவர்களுமான சிரமண அந்தணர்கள் இவ்வுலகில் இல்லை. மனிதன் நான்கு பூதங்களால் ஆனவன். அவன் சாகும்போது அவனிடமுள்ள மண் மண்ணோடும், நீர், நீரோடும், தீ தீயோடும், காற்றுக் காற்றோடும் கலக்கின்றன. இந்திரியங்கள் வானத்தில் செல்கின்றன. செத்தவனைப் பாடையில் கட்டி நான்கு பேர் மயானத்துக்குக் கொண்டு

1. இது ஒரு வகையான பௌதிகவாதம். கேசத்தினாலான கம்பளத்தை உடுத்தியதனால் 'கேசகம்பளன்' என்ற பெயர் வந்தது. உலகில் எதுவும் நிலைத்திருப்பதில்லை; யாவும் சிதைந்து அழிகின்றன என்பது கேஸகம்பலனுடைய வாதம். உச்சேதம் என்றால் சிதைவு. (மொ-ர்.)

போகிறார்கள். அவனுடைய குணங்களையும் குறைகளையும் பற்றிப் பேச்சு நடக்கிறது; ஆனால் அவன் எலும்புகள் வெளுத்து, உடல் சாம்பலாகிறது. தானம் என்ற புரளியை அறிவிலிகள் கிளப்பி விட்டிருக்கிறார்கள். ஆஸ்திகம் பேசுகிறவர்களின் பேச்சு வெறும் பொய்; வீண் பிதற்றல். உடல் வீழ்ந்ததும் அறிவாளிகளும் அறிவிலிகளும் சிதைவடைந்து அழிகிறார்கள். செத்தபிறகு அவர்களுடைய மிச்சம் ஏதும் இருப்பதில்லை."

## அந்நியோந்நியவாதம்

பகுத கச்சாயனன் அந்நியோந்நியவாதி. அவன் சொல்கிறான்- "ஏழு பொருள்கள் யாரும் செய்தவையல்ல, செய்விக்கப்பட்டவை அல்ல, படைக்கப்பட்டவையல்ல படைக்கும்படி செய்விக்கப்பட்டவை அல்ல. அவை கட்டுப்பாடாக (வந்த்யமாக), நிர்விகாரமாக (கூடஸ்தமாக), நகர வாசலிலுள்ள கம்பத்தைப்போல[1] அசைவற்றனவாக இருக்கின்றன. அவை நகருவதில்லை, மாறுவதில்லை, தமக்குள் ஒன்றையொன்று தடைப்படுத்துவதில்லை; தமக்குள் இன்பமோ துன்பமோ உண்டாக்க வல்லமையற்றவை. அவை யாவை? மண், நீர், தீ, காற்று, இன்பம், துன்பம், உயிர் ஆகியவையே அவை. இவற்றைக் கொல்பவனோ கொல்விப்பவனோ, கேட்பவனோ கேட்கும்படி சொல்பவனோ, அறிபவனோ அல்லது வருணிப்பவனோ எவனும் இல்லை. ஒருவன் கூரிய படைக்கலத்தினால் இன்னொருவனுடைய தலையை வெட்டினால் அவன் மற்றவனுடைய உயிரை வாங்குவதில்லை. இந்த ஏழு பொருள்களுக்கு இடையிலுள்ள வெளியில் படைக்கலம் நுழைந்துவிட்டது என்று மட்டுமே அதனால் அறிய வேண்டும்."

## விட்சேபவாதம்[2]

ஸஞ்சய பேலட்டபுத்தன் விட்சேபவாதி. அவன் சொல்கிறான்- " 'பரலோகம் என்பது உண்டா?' என்று ஒருவன் என்னைக் கேட்டால், எனக்கு அப்படித் தோன்றினால், நான் 'பரலோகம் உண்டு' என்பேன். ஆனால் அப்படி எனக்குத் தோன்றவில்லை. பரலோகம் இல்லை என்றும் எனக்குத் தோன்றவில்லை. 'தேவர், நரகர் என்ற (ஔபபாதிக) உயிர்கள்

1.போரில் எதிரியின் யானை நகரவாசலை நேரே தாக்காமல் தடுப்பதற்கு, அந்த வாயிலின் முன்னால் உறுதியான பெருங்கம்பமொன்றை நடுவார்கள். இதைப் பாலி மொழியில் 'ஏஸிகா' அல்லது 'இந்தகீலம்' என்பர்.

2. விட்சேபம் என்றால் கலக்கம். விட்சேபவாதிகள் எந்த வினாவுக்கும் திட்டமான விடை பகருவதில்லை. பத்து வினாக்களுக்கு இவர்கள் நிச்சயமான விடை ஏதும் கூறவில்லை. (மொ-ர்.)

உண்டா, இல்லையா? நற்செயலுக்கும் தீய செயலுக்கும் பயன் உண்டா, இல்லையா? ததாகதன் (புத்தன்) மரணத்துக்குப் பின்பு இருக்கிறானா, இல்லையா?' இவற்றுள் எதைப் பற்றியும் எனக்கு நிச்சயமாக ஒன்றும் தோன்றவில்லை."[1]

## சாதுர்யாமசம்வரவாதம்

நிகண்ட நாதபுத்தன் சாதுர்யாமசம்வரவாதி. இந்த நான்கு யாமங்களைப்பற்றி ஸாமஞ்ஞபல ஸுத்தத்தில் கிடைக்கும் செய்தி போதுமானதன்று. கொல்லாமை (அஹிம்சை), வாய்மை (சத்தியம்), கள்ளாமை (அஸ்தேயம்), அவாவின்மை (அபரிக்கிரகம்) என்ற நான்கு யாமங்களைப் பார்சுவ முனிவர் உபதேசித்ததாக ஜைன நூல்கள் அறிவிக்கின்றன. மகாவீரர் பிரம்மசரியத்தையும் இவற்றோடு சேர்த்துக்கொண்டார். ஆயினும் புத்தர் காலத்தில் இருந்த நிக்கந்தர்கள் (ஜைனர்கள்) மேற்கூறிய நான்கு யாமங்களையே கொண்டாடினர். இந்த நான்கு யாமங்களினாலும் தவத்தினாலும் முற்பிறப்பில் செய்த பாவங்களை நீக்கிக் கைவல்யம் (மோட்சம்) பெற வேண்டும் என்பதே ஜைன சமயத்தின் முடிவு.

## அக்கிரியவாதமும் சாங்கிய மதமும்

பூரண கஸ்ஸபனுடைய அக்கிரியவாதம் சாங்கிய தரிசனத்தைப் போலவே தோன்றுகிறது. ஆன்மா பிரகிருதியினின்றும் வேறுபட்டது; கொல்லுதல் கொல்வித்தல் முதலிய செயல்களால் அது எவ்வகை மாறுதலும் அடைவதில்லை என்று சாங்கியர் கருதுகின்றனர். இதன் எதிரொலிதான் பகவத்கீதையில் பலவேறு இடங்களில் எழுகிறது. உதாரணமாக, இவ்விடங்களைப் பாருங்கள்-

"பிரகிருதியின் குணங்களால் எல்லாத் தொழில்களும் செய்யப்படுகையில், அகங்காரத்தால் மயங்கிய ஆன்மா 'நானே செய்வோன்' என்று கருதுகிறான்." (அத். 3, சுலோ. 27:)

"இவன் (ஆன்மா) கொல்பவன் என்று கருதுகிறவனும், இவன் கொல்லப்படுபவன் என்று கருதுகிறவனும் ஆகிய இருவருமே உண்மையை அறியாதவர்கள். ஏனெனில், இந்த ஆன்மா கொல்வதில்லை, பிறனால் கொல்லப்படுவதும் இல்லை." (அத்.2, சுலோ.19.)

---

1. ஸாமஞ்ஞபலஸுத்தத்தில் நிகண்ட நாதபுத்தனுடைய சாதுர்யாமஸம்வரவாதம், விட்சேபவாதத்துக்கு முன்பே வருகிறது. ஆயினும் மஜ்ஜிமநிகாயத்தில் சூளஸாரோபம ஸுத்தத்திலும் மற்றும் பல ஸுத்தங்களிலும் நாதபுத்தன் பெயர் இறுதயில் வருகிறது.

"அகம்பாவம் இல்லாதவனும், பற்றற்ற புத்தி யுடையவனுமான ஒருவன் உலக மக்களைக் கொன்ற போதிலும் அவன் அவர்களைக் கொன்றவனாகமாட்டான்; அந்தச் செயலில் அவன் கட்டுப் படுவதில்லை." *(அத்.18, சுலோ.17)*

## அக்கிரியவாதமும் சம்சாரசுத்திவாதமும்

மக்கலி கோஸாலனுடைய சம்சாரசுத்திவாதம், மேற்சொன்ன அக்கிரியவாதத்திலிருந்து மிகத் தொலைவில் இருப்பதன்று. ஆன்மா பிரகிருதியோடு சாராமல் இருக்கிறது; ஆயினும் அது இத்தனையென்று தீர்மானமாகக் குறிப்பிட்ட பிறப்புக்களை எடுத்துக்கொள்ள வேண்டியிருக்கிறது; அதற்குப் பிறகு அது தானாக முத்தியடைகிறது என்பது கோஸாலனுடைய கொள்கை என்று தெரிகிறது. எண்பத்து நான்கு லட்சம் பிறவிகள் எடுத்து உயிர் மேல் நிலையை அடைகிறது என்ற கருத்து இன்னமும் ஹிந்து சமூகத்தில் நிலவுகிறது. மக்கலி கோஸாலனுடைய காலத்தில் இந்தக் கருத்து மிகுதியாகப் பரவியிருந்திருக்கும் என்று தோன்றுகிறது.

சில காலத்துக்குப் பிறகு பூரண கஸ்ஸபனுடைய சம்பிரதாயம், மக்கலி கோஸாலனுடைய ஆசீவக மதத்தில் கலந்ததாக அங்குத்தரநிகாயத்தில் சக்க நிபாதத்திலுள்ள ஒரு ஸுத்தம் (57) கூறுகிறது. அந்த ஸுத்தத்தில் ஆனந்தன் புத்தர்பெருமானிடம் கூறுகிறான்- "பதந்தரே, பூரண கஸ்ஸபன் கறுப்பு, நீலம், சிவப்பு, மஞ்சள், வெண்மை, மிக வெண்மை என்ற ஆறு சாதிகளைக் கூறியிருக்கிறான். கொலையாளர், வேடர் முதலியவர்கள் கறுப்புச் சாதியைச் சேர்ந்தவர். பிட்சு முதலிய கர்மவாதிகள் நீலச் சாதியினர். ஒரே ஆடை உடுத்தும் நிக்கந்தர்கள் சிவப்புச்சாதியினர். வெள்ளாடை அணியும் அசேலகச் சிராவகர்கள் (ஆசீவகர்கள்) மஞ்சள் சாதியினர். ஆசீவகர்களும் ஆசீவக பிட்சுணிகளும் வெள்ளைச் சாதியினர். நந்த வச்சன், கிஸ ஸங்கிச்சன், மக்கலி கோஸாலன் ஆகியவர்கள் மிக வெண்மை (பரம சுக்ல)ச் சாதியினர்."

இந்த மேற்கோளிலிருந்து, பூரண கஸ்ஸபனுடைய சம்பிரதாயமும் ஆசீவக மதமும் ஒன்றாகிவிட்டன என்பது தெளிவாகிறது. நந்த வச்சன் முதலிய மூன்று ஆசாரியர்கள் ஆசீவக பரம்பரையின் தலைவர்கள். கஸ்ஸபனுடைய ஆன்மவாதத்துக்கும் அவர்களின் ஆன்மவாதத்துக்கும் வேறுபாடு இல்லை; உடலை வருத்தும் அவர்களின் மார்க்கம் அவனுக்கும் உடன்பாடுதான் என்ற உண்மையும் இதிலிருந்து புலனாகிறது.

## அஜித கேஸகம்பலனுடைய நாஸ்திகவாதம்

அஜித கேஸகம்பலனுடைய உச்சேதவாதத்தைப் பார்த்தாலே அவன் முழு நாஸ்திகன் என்பது தெரியவரும். 'சர்வதரிசன சங்கிரகம்' என்ற நூலில்[1] காணும் சார்வாக மதத்தின் ஸ்தாபகன் அவன் அல்லனாயினும், அந்த மதத்தின் பிரசித்த ஆதரவாளனாக அவன் கட்டாயம் இருந்திருக்க வேண்டும். அவன் அந்தணர்களின் யாகயக்ஞங்களை விரும்பாதது போலவே, ஆசீவகர் முதலிய சிரமணர்களின் தவமுறையையும் ஒப்புக் கொள்ளவில்லை. சர்வதரிசன சங்கிரகத்தில், "தீ வளர்த்து அவி சொரிதல், மூன்று வேதங்கள், முக்கோல் தரித்தல், விபூதியிடுதல் ஆகியவை, அறிவும் ஆண்மையுமற்றவர்களின் பிழைப்புக்காகப் பிரமதேவன் உண்டாக்கி யவையாம்" என்று சார்வாகன் கூறுவதாக வந்துள்ளது.

இவ்வளவும் இருந்தும் அஜிதன் சிரமணர்களில் ஒருவனாக மதிக்கப்பெற்றான். அதற்குக் காரணம், அவன் வைதிக ஹிம்சையை அடியோடு வெறுத்தான் என்பதுதான். அவன் தவம் செய்யவில்லை யாயினும் சிரமணர்களின் பழக்கங்களைப் பின்பற்றினான். சிரமணர்களின் ஆன்மவாதத்திலும் அவன் சாராமலில்லை. ஆன்மாவைப் பற்றி அவனுடைய கொள்கை, 'நான்கு பெரும்பூதங்களினின்று ஆன்மா உண்டாகிறது; செத்ததும் அது மீண்டும் நான்கு பெரும்பூதங்களில் போய்க் கலக்கிறது' என்பதாம். ஆதலால் அவன், "உயிரோடு இருக்கும் வரையில் சுகமாக வாழவேண்டும்; ஏனெனில், சாவின் பிடிக்குத் தப்பிய உயிர் இல்லை. உடல் சாம்பலான பிறகு அது மீண்டும் திரும்பி வருவது ஏது?" என்ற கருத்தைக் கொண்டிருந்தது இயல்பேயாம்.

இந்தக் கேஸகம்பலனுடைய தத்துவ தரிசனத்திலிருந்துதான் உலோகாயதப் பொருளாதார நூல் தோன்றியது. கௌடில்யன் முதலிய பேராசிரியர்கள் அதைப் பேணி வளர்த்தார்கள்.

## அந்நியோந்நியவாதமும் வைசேடிக தரிசனமும்

பகுத கச்சாயனனுடைய அந்நியோந்நியவாதம், வைசேடிக தரிசனத்தோடு ஒப்புமையுடையது. ஆனால் அவனுடைய ஏழு பொருள்களுக்கும் வைசேடிகர்கள் கூறும் பொருள்களுக்கும் ஒற்றுமை மிகக் குறைவு. கச்சாயனனுடைய சிரமண சங்கம் மிகப் பெரியதாக இருந்தது; ஆயினும் அவனுடைய பரம்பரை நிலைக்க வில்லை. பிற்காலத்திய வைசேடிக தரிசனம் அவனது தத்துவ ஞானத்திலிருந்து தோன்றியதாக இருக்க வேண்டும். ஆனால் இந்தத் தத்தவத்தை ஒப்புக்

1. இந்த அரிய நூல் வித்தியாரணிய மாதவர் இயற்றியது. கோ. வடிவேலு செட்டியாரவர்கள் இதனைத் தமிழில் மொழிபெயர்த்து உதவியிருக்கிறார்கள். (மொ-ர்.)

கொள்ளும் சிரமண சம்பிரதாயம் புத்தர் காலத்துக்குப் பிறகு நிலவவில்லை என்று தோன்றுகிறது.

## விட்சேபவாதமும் ஸ்யாத்வாதமும்

ஸஞ்சய பேலட்டபுத்தனுடைய விட்சேபவாதம், ஜைனர்களின் ஸ்யாத்வாதத்தைப் போன்றது. சிலகாலத்துக்குப் பிறகு ஜைனர்கள் தங்கள் தத்துவஞானத்தோடு அதைச் சேர்த்துக்கொண்டார்கள். 'இப்படி இருக்கலாம், இப்படி இல்லாமலிருக்கலாம்' (ஸ்யாதஸ்தி, ஸ்யாந் நாஸ்தி) என்பது முதலிய ஸ்யாத்வாதத்துக்கும், முன்னால் விவரித்த பேலட்ட புத்தனுடைய விட்சேபவாதத்துக்கும் அதிக வேறுபாடு இல்லை. ஆதலால், ஜைனசமயம் விட்சேபவாதத்தையே தனது முக்கியத் தத்துவமாகக் கொண்டுவிட்டது என்று கூறத் தடை இல்லை.

## நிக்கந்தர்களும் ஆசீவகர்களும்

புத்தர் காலத்தில் வாழ்ந்த இருபத்து நான்காவது ஜைன தீர்த்தங்கரரான மகாவீரரும் (இவரை நிகண்ட நாதபுத்தன் என்பர்), மக்கலி கோஸாலனும் ஆறு ஆண்டுகள் ஒன்றாக இருந்து தவம் செய்ததாக ஜைன நூல்களிலிருந்து தெரிகின்றது. ஆசீவகர்களையும் நிக்கந்தர்களையும் ஒரே சம்பிரதாயத்தினராக்க அவ்விருவரும் முயன்றிருப்பார்கள் என்று தோன்றுகிறது. பார்சுவ முனிவரைச் சார்ந்த துறவிகள் ஒன்று அல்லது மூன்று ஆடைகள் வைத்துக்கொள்வர். ஆனால் மகாவீரர், மக்கலி கோஸாலனுடைய திகம்பர விரதத்தை ஏற்றுக் கொண்டார். ஆயினும் நிக்கந்தர்களின் கொள்கையும் ஆசீவகர்களின் கொள்கையும் ஒன்றுபட முடியவில்லை. எண்பத்து நான்கு லட்சம் பிறவிகளில் சுழலும் கொள்கையை மகாவீரர் ஒப்புக்கொண்டு இருந்தாராயின், நிக்கந்தர் களுடைய பரம்பரையில் வந்துள்ள சாதுர்யாமத்துக்கு மதிப்பு இல்லாமற் போயிருக்கும். நியதி (ஊழ்), ஸங்கதி (சூழ்நிலை), ஸ்வபாவம் (இயல்பு) ஆகியவற்றினால் உயிர்கள் நிலைமாறிக்கொண்டே இருக்கின்றன என்பதை ஒப்புக்கொள்ளும் இடத்தில், கொல்லாமை, வாய்மை, கள்ளாமை, அவாவின்மை என்னும் நான்கு யாமங்களால் பயன் என்ன? எனவே இவ்விரண்டு ஆசிரியர்களும் ஓரிடத்தில் ஒத்துப்போக முடியவில்லை.

ஆசீவகர்களுடைய எண்பத்து நான்கு லட்சம் பிறவிச்சுழற் கொள்கையைக் காட்டிலும் நிக்கந்தர்களுடைய சாதுர்யாமசம்வரவாதம் மக்களுக்கு மிகவும் பிடித்தது. இதில் வியப்பு ஏதும் இல்லை. ஏனெனில், நான்கு யாமங்களைக் கடைப்பிடிப்பதனாலும் தவத்தினாலும் முற்பிறவியிலும் செய்த பாவங்களை அழித்து இந்த ஒரே பிறவியில் முத்தி

பெற முடியும்.

## நிக்கந்தர்களைப்பற்றிய செய்தி

நிக்கந்த மதத்தைப்பற்றி ஸுத்தபிடகத்தில் நிறைச் செய்திகள் இருக்கின்றன. மஜ்ஜிமநிகாயத்தில் சூளதுக்கக்கந்த ஸுத்தத்தில் புத்தருக்கும் நிக்கந்தர்களுக்கும் நிகழ்ந்த உரையாடலின் வரலாறு வருமாறு-

ராஜகிருகத்தில் சில நிக்கந்தர்கள் நின்றபடியே தவம் செய்து கொண்டிருக்கையில் புத்தர்பெருமான் அவர்களிடம் சென்று, "தம்பிமார்களே, ஏன் இப்படி உங்கள் உடலை வருத்துகிறீர்கள்?" என்று கேட்டார்.

அவர்கள் சொன்னதாவது, "நிக்கந்த நாதபுத்தர் எல்லாம் அறிந்தவர். நடக்கையிலும் நிற்கையிலும் தூங்கையிலும் விழித்திருக்கையிலும் தமது அறிவுக்கண் நிலைத்திருப்பதாக அவர் கூறுகிறார். அவர் எங்களுக்கு, 'நிக்கந்தர்களே, நீங்கள் முற்பிறவியில் செய்த பாவத்தை இத்தகைய தேக தண்டனையினால் கரையுங்கள். இந்தப் பிறவியில் மெய் வாய் மனங்களினால் எவ்வகைப் பாவமும் செய்யாதீர்கள். இதனால் முற்பிறவியின் பாவம் தவத்தினால் அழிந்து, புதிய பாவம் செய்யாமையால் மறுபிறப்பில் வினை நீங்கி, எல்லாத் துன்பமும் அழியும்' என்று உபதேசிக்கிறார். அவருடைய மொழியை நாங்கள் போற்றுகிறோம்."

இதைக் கேட்ட பெருமான், "நிக்கந்தர்களே, முற்பிறவியில் நீங்கள் இருந்தீர்களா இல்லையா என்பது உங்களுக்குத் தெரியுமா?" என வினவினார்.

"எமக்குத் தெரியாது" என அவர்கள் உரைத்தனர்.

"சரி, முற்பிறவியில் நீங்கள் பாவம் செய்தீர்களா இல்லையா என்பதாவது உங்களுக்குத் தெரியுமா?"

"அதுவும் எமக்குத் தெரியாது."

"இன்ன இன்ன வகையான பாவம் அவை என்பதாவது உங்களுக்குத் தெரியுமா?"

"அதுவும் எமக்குத் தெரியாது."

"உங்களுடைய துன்பத்தில் எவ்வளவு தீர்ந்திருக்கிறது, இன்னும் எவ்வளவு எஞ்சியிருக்கிறது என்பதாவது தெரியுமா?"

"அதுவும் தெரியாது."

"இந்த விஷயங்கள் உங்களுக்குத் தெரியாதவை என்றால், முற்பிறவியில் நீங்கள் வேடர்களைப்போல் கொடுவினையராக இருந்து இந்தப் பிறவியில் அந்தப் பாவங்களை நீக்கத் தவம் புரிகிறீர்கள் என்றுதானே பொருள்படும்?" என்று கேட்டார் பெருமான்.

"நெடிய ஆயுள் வாய்ந்த கோதமரே, இன்பத்தினால் இன்பம் கிடைப்பதில்லை; துன்பத்தினாலேயே இன்பம் கிடைக்கும். இன்பத்தினால் இன்பம் கிடைப்பதாக இருந்தால் மன்னன் பிம்பிசாரனுக்கு ஆயுஷ்மான் கோதமரைவிட மிகுதியான இன்பம் கிடைத்திருக்குமே" என்று அவர்கள் விடை பகர்ந்தனர்.

"நிக்கந்தர்களே, நீங்கள் ஆராயாமல் பேசுகிறீர்கள். நான் உங்களிடம் ஒரே கேள்வி கேட்கிறேன்: ஏழு நாட்கள் வரைக்கும் நேராக உட்கார்ந்து ஒரு சொல்கூடப் பேசாமல் தனிமையின்பத்தை அநுபவிக்க மன்னன் பிம்பிசாரனால் முடியுமா? ஏழு நாள் வேண்டாம் ஐயா, ஒரு நாளாவது இத்தகைய இன்பத்தை அவன் அநுபவிக்க முடியுமா?" என்றார் பெருமான்.

"நெடிய ஆயுள் வாய்ந்தவரே, அவனால் இது முடியாது" என்று நிக்கந்தர்கள் கூறினர்.

அப்பொழுது பெருமான், "நான் ஒரு நாள் மட்டுமன்று; ஏழு நாட்கள் வரையில் இத்தகைய இன்பத்தை உணர முடியும். நான் உங்களைக் கேட்கிறேன்: மன்னன் பிம்பிசாரன் (தன் செல்வத்தினால்) மிகுந்த இன்பமுடையவனா, அல்லது நான் இன்பமுடையவனா?" என்று வினவினார்.

"அப்படியானால் ஆயுஷ்மான் கோதமரே பிம்பிசார மன்னனைவிட மிகுந்த இன்பமுடையவர்" என்று நிக்கந்தர்கள் நவின்றார்கள்.

பௌத்த மதத்தின் பெருமையைக் காட்ட இந்த உரையாடல் அமைந்தது என்றாலும் ஜைனக் கொள்கையை இங்கு மாற்றிக் கூறவில்லை. தவமும் சாதுர்யாமமும் பயிலுவதால் முன்னைவினைகள் கழிகின்றன என்பது அவர்களின் கொள்கை. அந்தக் கொள்கை வழிவழியாக வந்து இன்றும் நிலைத்திருக்கிறது.

## ஆன்மாவைப்பற்றிய கருத்துக்கள்

இந்த ஆசிரியர்களும் இவர்களின் காலத்தில் இருந்த வேறு சிரமணர்களும் ஆன்மாவைப்பற்றி எவ்வளவு விந்தையான கருத்துக்கள் கொண்டிருந்தார்கள் என்பதுபற்றிச் சில உதாரணங்கள் உபநிடதங்களில் கிடைக்கின்றன. ஆன்மா அரிசியைவிட, வால் கோதுமையைவிட நுண்ணியது; அது உள்ளத்துள் இருக்கிறது என்பது ஒரு கருத்து. "இந்த என் ஆன்மா உள்ளத்துள் இருக்கிறது. அது அரிசியைவிட, வால்கோதுமையைவிட, கடுகைவிட, சம்பா நெல்லையோ சம்பா அரிசியையோ விடச் சிறியதாக இருக்கிறது" என்பது சாந்தோக்கிய உபநிடதம். *(3-14-3.)*

பிறகு அந்த ஆன்மா அவற்றின் அளவாகவே இருக்கிறது! "புருடனான இந்த ஆன்மா மனோமயன், ஒளியாகவும் வாய்மையாகவும் இருப்பவன். அவன் உள்ளத்துள் அரிசிபோல அல்லது வாற்கோதுமை போல

இருக்கிறான்" என்கிறது பிருகதாரணியக உபநிடதம். (5-6-1.)

இதற்குப் பின்பு, ஆன்மா பெருவிரலளவு உள்ளவன் என்ற கருத்து உலவியது. "அங்குட்ட அளவுள்ள அந்தப் புருடன் ஆன்மாவினிடையில் உறைகின்றான்" என்கிறது கடோபநிடதம். (2-4-12.)

மேலும், மனிதன் தூங்குகையில் ஆன்மா அவனுடைய உடலிலிருந்து வெளியே உலாவச் செல்கிறது. "ஸோம்யனே, கயிற்றில் பிணைத்த பறவை திசைக்குத் திசை பறந்து அங்கே இருக்க முடியாமையால் கட்டுக்குள்ளேயே வருவதுபோல, அவன் (ஆன்மா) மனத்தின் வாயிலாகத் திசைக்குத் திசை பறந்து அங்கு இடங்கிடைக்காமையால் உயிரைப் புகலாகக் கொள்கிறான்; ஏனெனில் உயிர்தான் மனத்தின் கட்டுக்கயிறு' என்கிறது சாந்தோக்கிய உபநிடதம். (6-8-2.)

## சாசுவதவாதமும் உச்சேதவாதமும்

ஆன்மாவைப்பற்றி இங்ஙனம் விந்தையான பல வகைக் கருத்துக்கள் புத்தர் காலத்தில் இருந்த சிரமண அந்தணர்களிடையே பரவியிருந்தன. அவை யாவும் இரண்டே வகுப்புக்களில் அடங்கும். அவர்களில் ஒரு சாராரின் கூற்று, "ஆன்மாவும் உலகமும் நிலையானவை (சாசுவதம்). அவன் (ஆன்மா) கட்டுப்பாடாக, நிர்விகாரமாக, நகரவாசலிலுள்ள கம்பத்தைப்போல உறுதியாக இருக்கிறான்[1]" என்பது.

பூரண கஸ்ஸபன், மக்கலி கோஸாலன், பகுத கச்சாயனன், நிகண்ட நாதபுத்தன் ஆகியவர்களின் மதங்கள் இந்த வாதத்துள் அடங்கியவை.

மற்றச் சிரமண அந்தணர்கள் உச்சேதவாதத்தைக் கடைப்பிடித்தார்கள். "இந்த ஆன்மா சடப்பொருள், நான்கு பெரும்பூதங்களால் ஆகியது, தாய்தந்தையரிடமிருந்து பிறந்தது; உடல் மரித்ததும் இது சிதைகிறது, அழிகிறது. சாவுக்குப் பின் இது இருப்பதில்லை" என்று அவர்கள் சொன்னார்கள்.

இந்தக் கருத்தை ஆதரித்த சிரமணர்களில் அஜித கேஸகம்பலன் முதன்மையானவன். இந்த இரு சாராருக்கும் இடையில், ஆன்மா ஓரளவு நிலையானது, ஓரளவு நிலையற்றது என்று கூறும் சிரமண அந்தணர்களும் இருந்தார்கள். ஸஞ்சய பேலட்ட புத்தனுடைய வாதம் அத்தகையதென்றே தோன்றுகிறது. இந்தத் தத்துவதரிசனத்தைத்தான் பிற்காலத்தில் ஜைனர்கள் ஏற்றுக் கொண்டார்கள்.

---

1. இதுவும் வேறு பல ஆன்மவாதங்களும் தீகநிகாயத்தில் பிரம்ம ஜாலஸுத்தத்தில் வருகின்றன. வேறு நிகாயங்களிலும் வகை வகையான ஆன்மவாதங்களைப் பற்றிய செய்தியைக் காணலாம்.

## ஆன்மவாதங்களின் பயன்

இந்த ஆன்மவாதங்கள் யாவற்றினாலும் இருவகைப் பயன்கள் ஏற்பட்டன. ஒன்று, கேளிக்கையில் இன்புறுவது; மற்றொன்று, தவம் செய்து உடலை வருத்துவது. பூரண கஸ்ஸபனுடைய கொள்கைப்படி ஆன்மா யாரையும் கொல்வதில்லை அல்லது கொல்விப்பதில்லை என்றால், மனிதன் தன் கேளிக்கைக்காகப் பிறரைக் கொல்வதற்குத் தடை என்ன? ஜைனர்களின் கொள்கைப்படி அதே ஆன்மா முற்பிறவியின் வினைகளால் கட்டுண்டிருக்கிறது என்று கூறினால், இந்த வினைகளின்றும் நீங்கக் கடுமையான தவம் செய்ய வேண்டும் என்ற தத்துவம் தோன்றுவது இயல்பேயாம். ஆன்மா நிலையற்றது, செத்தபிறகு அது இருப்பதில்லை என்ற கொள்கையை ஏற்றுக்கொண்டால், 'வாழ்நாள் முழுவதும் ஆனந்தமாக வாழ வேண்டும்' என்றும், 'இந்தச் சுகபோகங்கள் நிலையில்லாமையால் தவம் செய்ய வேண்டும்' என்றும் இரு வகையான கருத்துக்கள் உதிக்கக்கூடும்.

## ஆன்மவாதத்தை விட்டொழித்தல்

ஆன்மவாதங்களின் பயனாகக் கேளிக்கை, தவம் என்ற இரண்டு வழிகள் ஏற்பட்டிருந்தன. ஆனால் புத்தர்பெருமானுக்கு, இவ்விரு வழிகளுமே விலக்கத் தக்கவை என்று தோன்றிற்று. ஏனெனில் இவற்றினால் மாந்தரின் துன்பம் குறைவதில்லை. ஒருவரோடு ஒருவர் சண்டையிடும் மக்களுக்கு இவ்விரு முனைகளாலும் அமைதி வழி கிடைப்பது சாத்தியமன்று. இந்த முனைகளுக்குக் காரணமாக இருப்பது ஆன்மவாதமே என்ற உறுதி போதிசத்துவருக்கு உண்டாயிற்று. அவர் இவை இரண்டையுமே ஒதுக்கிவிட்டுப் புதிய வழியொன்றைக் கண்டுபிடித்தார். ஆன்மா நிலையானதாயினும் சரி, நிலையற்றதாயினும் சரி, இந்த உலகில் துன்பம் இருந்துகொண்டே இருக்கிறது. அது மாந்தருடைய வேட்கை (திருஷ்ணை)யின் பயன். ஆரிய அஷ்டாங்க மார்க்கத்தின் வாயிலாக அந்த வேட்கையை நீக்கினால்தான் மனிதனுக்கும் மனித இனத்துக்கும் அமைதியும் நிறைவும் கிடைக்கும். ஆன்மவாதத்தை விட்டாலன்றி இந்தப் புதிய மார்க்கம் விளங்கக் கூடியதன்று. ஆதலினால்தான் புத்தர்பெருமான். பஞ்சவர்க்கத்துப் பிட்சுக்களுக்கு நான்கு ஆரிய சத்தியங்களுக்கு அடுத்தபடி அநாத்மவாதத்தை உபதேசித்ததாகக் கந்தஸம்யுத்தம் கூறுகிறது.[1] அந்த வரலாறு வருமாறு-

பெருமான் வாரணாசியில் ரிஷிபத்தனத்தில் மிருகதாவத்தில் இருந்தார். .அங்கே பெருமான் பஞ்சவர்க்கத்துப் பிட்சுக்களை நோக்கிச்

1. இதே ஸுத்தம் மகாவக்கத்திலும் இருக்கிறது.

கூறியதாவது- "பிட்சுக்களே, சடப்பொருளான உடல் அநாத்மா (ஆன்மா அன்று). உடல் ஆன்மாவாக இருந்திருக்குமாயின், அது (நோய் முதலிய) தொந்தரவுகளைத் தருவதாக இராது; என் உடல் இன்னவாறு ஆகட்டும், என் உடல் இன்னவாறு ஆகாமலிருக்கட்டும் என்று சொல்ல முடிந்திருக்கும். ஆனால் உடல் அநாத்மாவாக இருக்கிறது; ஆதலினால் தான் அது தொந்தரவு தருகிறது; அது இவ்வாறு இருக்கட்டும் என்றும், இவ்வாறு இல்லாமலிருக்கட்டும் என்றும் பேச முடிவதில்லை.

"பிட்சுக்களே, வேதனை அநாத்மா. அது ஆன்மாவாக இருந்திருக்குமாயின், தொந்தரவுகளைத் தந்திராது; என் வேதனை இன்னவாறு இருக்கட்டும், இன்னவாற இருக்க வேண்டாம் என்று பேச முடிந்திருக்கும். ஆனால் வேதனை அநாத்மாவாக இருக்கிறது; ஆதலினால் தான் அது தொந்தரவு தருகிறது; அது இன்னவாறு இருக்கட்டும் என்றும், இன்னவாறு இல்லாமலிருக்கட்டும் என்றும் பேச முடிவதில்லை. இதுபோலவே, சம்ஞை (ஸம்ஜ்ஞை), சம்ஸ்காரம், விஞ்ஞானம் ஆகியவையும் அநாத்மாவாம். விஞ்ஞானம் ஆத்மாவாக இருந்தால் அது தொந்தரவுகளைத் தந்திராது; என் விஞ்ஞானம் இவ்வாறு இருக்க வேண்டும், இவ்வாறு இல்லாதிருக்க வேண்டும் என்று பேச முடிந்திருக்கும். ஆனால் விஞ்ஞானம் அநாத்மாவாக இருக்கிறது; ஆதலினால் தான் விஞ்ஞானம் தொந்தரவைத் தருகிறது; என் விஞ்ஞானம் இன்னபடி இருக்க வேண்டும் என்றும், இன்னபடி இல்லாதிருக்க வேண்டும் என்றும் சொல்ல முடிவதில்லை."

"பிட்சுக்களே, சடமான உடல், வேதனை, சம்ஞை, சம்ஸ்காரம், விஞ்ஞானம் ஆகியவை நிலையுள்ளவையா (நித்தியமா) அல்லது நிலையற்றவையா (அநித்தியமா)?" என்று பெருமான் கேட்டார்.

"பதந்தரே, அவை நிலையற்றவை" என்று பிட்சுக்கள் விடை தந்தனர்.

"நிலையற்ற பொருள் துன்பத்தைத் தருமா, இன்பத்தைத் தருமா?"

"பதந்தரே, அது துன்பத்தைத் தரும்."

"துன்பம் தருவதும், மாறுதலுக்கு உட்பட்டதுமான பொருளை ஒருவன், 'அது என்னுடையது, அது நான், அது என் ஆன்மா' என்று கருதுவது சரியா?"

"சரியன்று, பதந்தரே."

அப்பொழுது பெருமான் கூறினார்- "ஆதலால், பிட்சுக்களே, கடந்ததும், (இதுவரை) வராததும், மீண்டும் உண்டானதும், நம் உடலின் அகத்திலோ புறத்திலோ இருப்பதும், தூலமும் சூக்குமமும், தாழ்ந்ததும் உயர்ந்ததும், சேய்மையில் உள்ளதும் அணிமையில் உள்ளதுமான சடப்பொருள் அனைத்தும் என்னுடையன அல்ல, அவை நானல்ல, அவை என் ஆன்மா அல்ல என்று உள்ளபடி நல்லறிவால் (ஸம்யக் ஞானத்தால்) அறிய வேண்டும். இவ்வண்ணமே கடந்ததும் வராததும்

மீண்டும் உண்டானதும், நம் உடலின் அகத்திலோ புறத்திலோ இருப்பதும், தூலமும் சூக்குமமும், தாழ்ந்ததும், உயர்ந்ததும், சேய்மையிலுள்ளதும் அணிமையில் உள்ளதுமான வேதனை அனைத்தும், சம்ஞை அனைத்தும், சம்ஸ்காரம் அனைத்தும், விஞ்ஞானம் அனைத்தும் என்னுடையனவல்ல, அவை நானல்ல, அவை என் ஆன்மா அல்ல என்று உள்ளபடி நல்லறிவால் அறிய வேண்டும். பிட்சுக்களே, இப்படி அறியும் புலவனான ஆரிய சிராவகன் சடப்பொருள், வேதனை, சம்ஞை, சம்ஸ்காரம், விஞ்ஞானம் ஆகியவற்றில் விரத்தனாகி, வைராக்கியத்தினால் முத்தியைப் பெறுகிறான்.

## ஆன்மாவின் ஐந்து பகுதிகள்

'ஆன்மா நிலையுள்ளதா, நிலையற்றதா?' என்ற வினாவுக்கு நேரான விடை தந்தால் (முன்பே விவரித்தபடி) கலக்கத்துக்கு இடம் ஏற்படுகிறது. ஆதலால் புத்தர் பிரான், 'ஆன்மா என்பது என்ன?' என்பதை நன்றாகத் தெரிந்துகொள்ளும் பொருட்டு, இந்த ஐந்து ஸ்கந்தங்களில் அதைப் பிரித்துக் காண்பித்திருக்கிறார். சடப்பொருள், வேதனை, சம்ஞை, சம்ஸ்காரம், விஞ்ஞானம்- என ஆன்மாவை ஐந்து பகுதிகளாகப் பிரிக்க முடியும்.[1] இப்படிப் பிரித்ததுமே ஆன்மா நிலையுள்ளதா அல்லது நிலையற்றதா என்பது தெளிவாகப் புலப்படுகிறது. எப்படியென்றால், இந்த ஐந்து ஸ்கந்தங்களும் எப்போதும் மாறிக்கொண்டு இருப்பவை அதாவது நிலையற்றவை, துன்பம் தருபவை; ஆதலால், 'அவை என்னுடையவை' என்றோ, 'அது என் ஆன்மா' என்றோ பேசுவது பொருந்தாது. இதுதான் புத்தரின் அநாத்மவாதம். சாசுவதவாதம், அசாசுவதவாதம் என்னும் இரு முனைகளுக்கும் இது செல்வதில்லை. காத்தியாயன கோத்திரக்காரனான பிட்சுவை நோக்கிப் பெருமான் கூறுகிறார்- "காத்தியாயனனே, மக்கள் பெரும்பாலும் உண்டு (அஸ்தி), இல்லை (நாஸ்தி) என்னும் இரு முனைகளுக்குச் செல்கிறார்கள். ததாகதர் இந்த இரு முனைகளையும் விட்டு, மத்தியம மார்க்கத்தினால் தருமோபதேசம் செய்கிறார்."[2]

## பயனற்ற வாதம்

இவ்வளவு விளக்கியுங்கூட எவனாவது பிடிவாதத்தோடு, "உடலும் ஆன்மாவும் ஒன்றா அல்லது வேறுபட்டவையா?" என்று கேட்டானானால், அதற்குப் பெருமான் இவ்வாறு விடை கூறுவது வழக்கம். "இந்த அநுமான ஆராய்ச்சியில் நான் ஈடுபடுவதில்லை.

1. "உருவு நுகர்ச்சி குறியே பாவனை, உள்ள வறிவிவை ஐங்கந்தமாவன." -மணிமேகலை, 30, 189-90. (மொ-ர்.)

2. நிதான ஸம்யுத்தம், வக்கம் 2, ஸுத்தம் 5.

ஏனென்றால், அதனால் மனித இனத்துக்கு நன்மை உண்டாகாது." இதற்கு ஓரளவு உதாரணம், சூளமாலுங்கியபுத்த ஸுத்தத்தில்[1] கிடைக்கிறது. அந்த ஸுத்தத்தின் சாரமாவது-

புத்தர்பிரான் சிரவாஸ்தியில் அநாதபிண்டிகனுடைய ஆராமத்தில் இருந்தபொழுது, மாலுங்கிய புத்தன் என்ற பிட்சு அவரை அணுகி வணங்கி ஒரு புறமாக அமர்ந்தான். பிறகு அவன் பகவானிடம் விண்ணப்பம் செய்தான் - "பதந்தரே, தனிமையில் நான் உட்கார்ந்திருக்கையில் எனக்கு இந்த எண்ணம் தோன்றியது; அதாவது, 'உலகம் நிலையுள்ளதா நிலையற்றதா?', 'உடலும் ஆன்மாவும் ஒன்றா அல்லது வேறுபட்டவையா?', 'மரணத்துக்குப் பிறகு ததாகதருக்கு மறுபிறவி உண்டா, இல்லையா?'-இவை முதலிய வினாக்களுக்குப் பெருமான் விளக்கமான விடை கூறவில்லையே. எனவே நான் அவரிடம் இந்த வினாக்களை வினவ வேண்டும். பெருமான் இந்தப் பிரச்னைகளை விடுத்தால்தான் அவருடைய மாணவர் குழுவில் இருப்பேன்; அவர் இவற்றை விடுவிக்காவிட்டால் என் எண்ணத்தை அவரிடம் நேரே சொல்வேன் என்று கருதினேன்."

"மாலுங்கியபுத்தா, நீ என் சீடனாக இருந்தால் தான் இந்த வினாக்களுக்கு விளக்கம் கூறுவேன் என்று நான் உன்னிடம் எப்போதாவது சொன்னதுண்டா?" என்றார் பெருமான்.

"இல்லை, பதந்தரே."

"சரி, நீயாவது என்னிடம், 'பகவான் இந்த வினாக்கள் அனைத்துக்கும் விளக்கம் கூறினால்தான் நான் அவருடைய பிட்சு சங்கத்தில் சேருவேன்' என்று சொன்னதுண்டா?"

"இல்லை, பதந்தரே."

அப்பொழுது பெருமான் பகர்ந்தார் -"அப்படியானால், இந்தக் கேள்விகளுக்கு விளக்கம் கூறினாலன்றி நான் பகவானின் சீடனாக இருக்கமாட்டேன் என்று இப்போது சொல்லிப் பயன் என்ன? மாலுங்கியபுத்தா, ஒருவனுடைய உடலில் அம்பின் விஷ முனைதைத்து அவன் துடிதுடிக்கும்போது அவனுடைய நெருங்கிய நண்பர்கள் சத்திரசிகிச்சை செய்யும் மருத்துவனை அழைத்து வருவார்கள். ஆனால் அந்த நோயாளி மருத்துவனிடம், 'இந்த அம்பை எய்தவன் யாவன்? அவன் அந்தணனா, க்ஷத்திரியனா? வியாபாரியா, வேளாளனா? கறுப்பனா, சிவப்பனா? அவன் வில் எத்தகையது? வில்லின் நாண் எந்தப் பொருளால் ஆகியது? இவற்றுக்கெல்லாம் விளக்கம் தந்தாலன்றி, நான் என் புண்ணைத் தொடவிடமாட்டேன்' என்று சொல்வானாயின், மாலுங்கியபுத்தா, அந்த நிலையில் அவன் இவற்றின் விவரத்தை அறியாமலே செத்துப் போவான். அதுபோலவே, 'உலகம் நிலையுள்ளதா,

1. மஜ்ஜிமநிகாயம், 63.

நிலையற்றதா என்பது முதலிய விஷயங்களை விளக்கினாலன்றி நான் பிரம்மசரியத்தைக் காக்க மாட்டேன்' என்று ஒருவன் பிடிவாதம் கொண்டால், அவன் இந்த விஷயங்களை அறியாமலே மரண மெய்துவான்.

"மாலுங்கியபுத்தா, உலகம் நிலையுள்ளது என்றோ நிலையற்றது என்றோ ஒருவன் நோக்கமும் நம்பிக்கையும் கொண்டிருந்தாலும் அதனால் அவன் அறவழியில் செல்ல உதவி ஏற்படும் என்பதில்லை. உலகம் நிலையுள்ளது என்று ஒருவன் நம்பினாலும் அதனால் மூப்பு இறப்பு துயரம் புலம்பல் ஆகியவற்றிலிருந்து விடுதலை கிடைக்காது. அதுபோலவே, உலகம் நிலையற்றதன்று, உடலும் ஆன்மாவும் ஒன்று, உடலும் ஆன்மாவும் வேறுபட்டவை, செத்த பிறகு ததாகதனுக்கு மறுபிறவி உண்டு, அல்லது இல்லை என்னும் விஷயங்களை ஒருவன் நம்பினாலும் நம்பாவிட்டாலும், பிறப்பும் முதுமையும் சாவும் புலம்பலும் இருக்கத்தான் இருக்கின்றன. ஆதலால், மாலுங்கிய புத்தா, இந்த விஷயங்களைத் தோண்டி ஆராய்வதில் நான் ஈடுபடுவதில்லை. ஏனென்றால், அந்த வாதத்தினால் பிரம்மசரியம் எவ்வகையிலும் நிலைப்படுவது சாத்தியமன்று. அந்த வாதத்தினால் வைராக்கியம் விளையாது; பாவம் தடைப்படாது; அமைதியும் பூரண ஞானமும் தத்துவபோதமும் நிர்வாணமும் கிடைக்க மாட்டா.

"ஆனால், மாலுங்கியபுத்தனே, 'இன்னது துன்பம், இன்னது துன்பத்தின் காரணம், இன்னது துன்ப நீக்கம், இன்னது துன்ப நீக்க வழி' என்பவற்றை நான் விளக்கமாகக் கூறியிருக்கிறேன். ஏனெனில், இந்த நான்கு ஆரிய சத்தியங்கள் பிரம்மசரியத்தை நிலைப்படுத்தக் கூடியவை. இவற்றினால் வைராக்கியம் விளையும்; பாவம் தடைப்படும்; அமைதி, பூரண ஞானம் தத்துவபோதம், நிர்வாணம் ஆகியவை கிடைக்கின்றன. ஆதலால், மாலுங்கியபுத்தா, நான் ஆராயாத விஷயங்களைப்பற்றி ஆராயாதீர்கள். நான் எவற்றை விளக்கியிருக்கிறேனோ அவையே விளக்கத்துக்கு ஏற்றவை என்று தெரிந்து கொள்ளுங்கள்."

இந்த வரலாற்றின் கருத்து யாதெனில், ஆன்மா ஐந்து ஸ்கந்தங்களால் ஆனது எனினும், 'அதன் வடிவு முதலியவை யாவை, அது அந்த வடிவுடனே மறுவுலகத்துக்குப் போகிறதா, அல்லவா?' என்பது போன்ற விஷயங்களை நுணுகி ஆராய்வதனால் பெருங்கலக்கமே உண்டாகும் என்பதாம். உலகில் துன்பம் நிறைந்திருக்கிறது. அது மனிதச் சாதியின் வேட்கையினால் உண்டாகியிருப்பதனால், அஷ்டாங்க மார்க்கத்தின் வாயிலாக அந்த வேட்கையை நீக்கி, உலகில் இன்பத்தையும் அமைதியையும் நிறுவுவது ஒவ்வொருவனுக்கும் கடமையாம். இதுவே நேரியவழி; இதுவே புத்தரின் தத்துவதரிசனம்.

# கடவுள் வாதம்

புத்தர் கடவுளை ஒப்புக்கொள்ளவில்லை; ஆதலால் அவர் நாஸ்திகர் என்று சிலர் கருதுகிறார்கள். ஆனால் பௌத்த இலக்கியத்தையோ பழமையான உபநிடதங்களையோ படித்துப் பார்த்தால், இந்தக் கருத்து உண்மையற்றது என்பது தெளிவாகும். ஆயினும், மக்களின் இந்த மயக்கத்தை நீக்க, புத்தர் காலத்தில் வழக்காற்றில் இருந்த கடவுள் வாதத்தைக் கோடி காண்பிப்பது பொருத்தமாக இருக்கும்.

'கடவுள் (ஈசுவரன்)' என்ற அதே சொல், அங்குத்தரநிகாயத்தில் திகநிபாதத்திலும் (ஸுத்தம் 61), மஜ்ஜிமநிகாயத்தில் தேவதஹ ஸுத்தத்திலும் (101) வருகிறது. இவற்றுள் முந்திய ஸுத்தத்தில் கடவுளைப் பற்றிக் கூறும் வரலாறு இது-

பகவான் கூறுகிறார்-"பிட்சுக்களே, மனிதன் அநுபவிக்கும் இன்பமோ துன்பமோ அசட்டையோ இவையாவும் கடவுள் உண்டாக்கியவை என்று உரைக்கிறவர்களையும் கருதுகிறவர்களையும் நான் கேட்கிறேன், 'இது உங்கள் கொள்கையா?' என்று. அவர்கள் 'ஆம்' என்று கூறியதும் நான் சொல்கிறேன், 'கொலையாளிகளும் திருடர்களும் பிரம்மசரியத்தைக் கடைப்பிடிக்காதவர்களும் பொய்யர்களும் கோள் சொல்கிறவர்களும் திட்டுகிறவர்களும் பிதற்றுகிறவர்களும் பிறர் செல்வத்தை விரும்புகிறவர்களும் பகைப்பவர்களும் பொய் நோக்கமுடையவர் களுமான நீங்கள் கடவுள் படைத்தமையால்தான், இப்படி ஆகிவிட்டீர் களா?' என்று கேட்கிறேன். பிட்சுக்களே, இவற்றையெல்லாம் கடவுள் படைத்தார் என்பதை உண்மையாகக் கொண்டால், நற் செய்கையில் விருப்பமும் உற்சாகமும் உண்டாகமாட்டா; இன்னதைச் செய்ய வேண்டும், இன்னதைச் செய்யக் கூடாது என்பதும் விளங்காது."

கடவுள் படைப்பைப்பற்றிய இந்தக் குறிப்பு தேவத ஹ ஸுத்தத்திலும் வந்துள்ளது. ஆனால் இது பிற்சேர்க்கையாக இருக்குமோ என்ற வலிமையான ஐயம் எழுகிறது. ஏனெனில், வேறு எந்த ஸுத்தத்திலும் இந்தக் கருத்து இல்லை. புத்தர் காலத்தில் பெரிய தெய்வம் எது என்றால், பிரம்மா. ஆனால் அவன் வேறுவகையான படைப்பைச் செய்பவன்; பைபிளில் வரும் கடவுளைப் போன்றவன் அல்லன். உலகம் தோன்று முன்பு அவன் இல்லை. உலகம் உண்டானதும் முதலில் அவன் அவதரித்தான்; அவனுக்குப் பின்பு வேறு உயிர்கள் தோன்றின. ஆதலால் அவனை, நிகழ்ந்ததற்கும் நிகழப் போவதற்கும் கர்த்தா (பூத பவ்வியங்களின் கர்த்தா) என்று கூறினார்கள். பிரம்மஜால ஸுத்தத்தில் வந்துள்ள அவனைப்பற்றிய வருணனையின் சாரம் இது-

"நெடுங்காலத்துக்குப் பிறகு இந்த உலகம் அழிகிறது. அதில் இருந்த பெரும்பாலான உயிர்கள் ஒளிமயமான தேவலோகத்துக்குச் செல்கின்றன. பின்பு நெடுங்காலம் கழித்து இந்த உலகம் மலர்கிறது. அப்பொழுது

முதல்முதலில், வெறும் பிரம்மவிமானம் தோன்றுகிறது. பின்பு ஒளிமயமான தேவலோகத்துப் பிராணி ஒருவன் அங்கிருந்து நழுவிவந்து, இந்த விமானத்தில் பிறக்கிறான். அவன் மனோமயனாக, விரும்பியதை உண்பவனாக, தன்னொளி வாய்ந்தவனாக, அந்தரத்தில் செல்பவனாக, நன்மையில் நிலைத்தவனாக, நெடுங்காலம் வாழ்பவனாக இருக்கிறான். இதற்குப் பிறகு மற்றும் பல உயிர்கள் ஒளிமயமான தேவலோகத்தி லிருந்து நழுவி, அந்த விமானத்தில் பிறக்கின்றன. 'மகாப் பிரம்மாவான இந்தப் பிரம்ம பகவான் ஒப்பற்றவன், அனைத்தையும் காண்பவன், அனைத்தையும் தன் வசம் கொண்டவன், கடவுள், கர்த்தா, படைப்போன், உயர்ந்தவன், படைக்கச் செய்பவன், புலன்களை அடக்கியவன், நிகழ்ந்தனவற்றுக்கும் நிகழப் போனவற்றுக்கும் தந்தை' என்று அவை கருதுகின்றன."

"பிரம்மா தேவர்களுக்கெல்லாம் முதல்வனாக உண்டானான்; அவன் உலகத்தைப் படைத்தவன்; புவனத்தைக் காப்பவன்" என்ற முண்டக உபநிடதத்து *(1-1)* வாக்கியத்தில், மேற்கூறிய கருத்துச் சுருக்கமாக வந்துள்ளது. ஆதலால், பிரம்மதேவனை உலகக் கர்த்தனாக்க அந்தணர்கள் முயன்றார்கள் என்பது தெளிவு. ஆனால் அந்தக் காலத்திய சிரமணப் பண்பாட்டுக்கு முன்னால் அவர்களுடைய இந்த முயற்சி நிலைபெற வில்லை. அந்தணர்களே இந்த முயற்சியை விடுத்து, பிரம்மம் என்ற நபுஞ்சக லிங்கமான சொல்லை ஏற்றுக்கொள்ள வேண்டிவந்தது. பெரும்பாலும் எல்லா உபநிடதங்களிலும் இந்தப் பிரம்மம் என்ற சொல்லுக்கே பெருமை தந்திருக்கிறார்கள்.

பிரம்மத்தினின்று அல்லது ஆன்மாவினின்று உலகம் எப்படித் தோன்றியது என்பதுபற்றிய ஒரு கருத்து, பிருகதாரணியாக உபநிடதத்தில் வருகிறது. அதாவது, "எல்லாவற்றுக்கும் முன்னால், புருட வடிவமான ஆன்மா மட்டுமே இருந்தான். அவன் மகிழவில்லை. ஆதலால் மனிதன் தன்னந்தனியே மகிழ்வதில்லை. அவன் வேறொன்றை விரும்பினான். ஆணும் பெண்ணும் ஒருவரை ஒருவர் அனைத்துக் கொள்வதுபோல அவன் ஆகியிருந்தான். அவன் தன்னை இரு பிளவாக்கினான். அதனால் கணவனும் மனைவியும் ஆயினர். ஆதலால் இந்த உடல் இரு பிளவுடைய தானியத்தின் பாதியைப் போல இருக்கிறது." *(பிருகதாரணியகம், 1, 4, 1-3.)*

இனி, பைபிளில் வரும் உற்பத்திக் கதையைக் காண்போம். "பிறகு சர்வவல்லமையுள்ள கடவுள் பூமியின் மண்ணினால் மனிதனைப் படைத்தார்... பின்பு கடவுள் ஆதாமை (அந்த மனிதனை) ஆழ்ந்த துயில் ஆழ்த்தினார்; அவனுடைய மார்பெலும்பை எடுத்து அதனால் பெண்ணைப் படைத்தார்... ஆதலால் ஆண்மகன் தன் தாய் தந்தையரை விட்டு, தன் மனைவியோடு ஒட்டியிருப்பான்; அவர்கள் இருவரும்

ஓருடல் ஆவர்." (பைபிள், உற்பத்தி, அத்.2.)

இந்த உற்பத்திக்கும் மேற்சொன்ன உற்பத்திக்கும் எவ்வளவு வேறுபாடு காண்கிறது! இங்கே, கடவுள் உலகம் முழுவதையும் படைத்த பின்பு மனிதனையும் அவனுடைய மார்பெலும்பிலிருந்து பெண்ணையும் உண்டாக்குகிறார்; கடவுள் உலகத்தினின்று முற்றும் வேறானவர். அங்கே, புருட வடிவமான ஆன்மா தானே இருபிரிவாகிப் பெண்ணும் ஆணும் ஆகின்றான்.

## பிரஜாபதியின் உற்பத்தி

பிரஜாபதி என்றால் உலககர்த்தனான பிரம்மா. அவனது உற்பத்தி பிருகதாரணியகத்தில் (5-5-1) சொல்லப்பெறுகிறது. அதாவது, "எல்லாவற்றுக்கும் முன்னால் நீர் மட்டுமே இருந்தது. அந்த நீரிலிருந்து வாய்மை (சத்தியம்) தோன்றியது. வாய்மையிலிருந்து பிரம்மம் தோன்றியது; பிரம்மத்திலிருந்து பிரஜாபதி தோன்றினான். பிரஜாபதி தேவர்களை உண்டாக்கினான். ஆதலால் தேவர்கள் வாய்மையையே வழிபடுகிறார்கள்."

பைபிளிலும் நீர்ப்பிரளயத்துக்குப் பின்பு மீண்டும் படைப்புத் தோன்றிய கதை வருகிறது. ஆனால் கடவுள் முன்னமே நோவாவின் குடும்பத்தையும், விலங்கு பறவை முதலியவற்றின் ஆண்களையும் பேடைகளையும் கப்பலில் நிரப்பிவைக்கச் செய்து, பின்னர் நீர்ப்பிரளயத்தை உண்டாக்கினார். (பைபிள், உற்பத்தி, அத்.7.) உபநிடதங்களிலோ, நீரூழிக்கு முன்பு என்ன நடக்கிறது என்று ஒன்றுமே சொல்லவில்லை. அது மட்டுமின்றி, வாய்மையைப் பிரம்மதேவனுக்கும் பிரம்ம தத்துவத்துக்கும் மேலான படியில் வைத்திருக்கிறார்கள். பிரம்ம ஜால ஸுத்தத்தில் வந்துள்ள பிரம்மாவின் உற்பத்திக் கதை, இந்தக் கதைக்கு மிக அணிமையில் இருக்கிறது.

இறைவன் உலகினின்றும் வேறானவன்; அவன் உலகைப் படைத்தான் என்ற கருத்து, இந்தியாவில் சகர்கள் கொண்டுவந்ததாக இருக்க வேண்டும். ஏனெனில், அதற்கு முந்திய காலத்து இலக்கியத்தில் இந்தக் கருத்து இந்த வடிவில் கிடைப்பதில்லை. ஆகவே, இறைவனை ஒப்புக் கொள்ளாமையால் புத்தர் நாத்திகராவார் என்று அவர்மீது குற்றம் சாட்ட இடமே இல்லை. அவர் வேதங்களைப் பழித்ததனால் நாத்திகராவார் என்று அந்தணர்கள் அவர்மீது குற்றம் சாட்டி வந்தனர். ஆனால், புத்தர் வேதங்களைப் பழித்ததாக எங்குமே சான்று இல்லை. மேலும், அந்தணர்கள் மதிக்கின்ற சாங்கிய காரிகை முதலான நூல்களில் வேதநிந்தை குறைவாகவா இருக்கிறது? "உலகில் காணும் வழியைப் போலவே, கேட்கும் வேதவழியும் பயனற்றதே. ஏனெனில், அது தூய்மையின்மை, அழிவு, உயர்வு நவிற்சி என்னும் குற்றங்களோடு

கூடியதாம்" என்கிறது சாங்கிய காரிகை.

மேலும், "முக்குணங்களுக்கு உட்பட்டனவற்றை விஷயமாகக் கொண்டவை வேதங்கள்" என்பது முதலான வேதநிந்தனை பகவத் கீதையில் இல்லையா? ஆனால் சாங்கியம், அந்தணர்களின் சாதி வேற்றுமையைத் தாக்கவில்லை. பகவத் கீதையோ, அந்தச் சாதி வேற்றுமையை வெளிப்படையாகத் தாங்கிப் போற்றுகிறது. எனவே அவை செய்த வேத நிந்தனைகள் ஜீரணமாயின. இதற்கு மாறாக, புத்தர்பெருமான் வேதங்களைப் பழிக்கவே இல்லை என்றாலும், சாதிவேற்றுமையை மிகவும் தீவிரமாகத் தாக்கினார். ஆதலால் அவர் வேதநிந்தனை செய்தவர் என்று தீர்ப்பாயிற்று. வேதம் என்றால் சாதி வேற்றுமை; சாதி வேற்றுமை என்றால் வேதம்- இப்படி இரண்டும் ஒருருவானவை. சாதி வேற்றுமை இல்லை என்றால் வேதம் எப்படி இருக்கும்? மேலும், சாதி வேற்றுமை நடைமுறையில் இருந்து, வேதம் ஓர் எழுத்துக்கூட எவனுக்கும் தெரியாமற் போனாலும், 'வேதம் பிரமாணம்' என்ற புத்தி நிலைத்திருக்கும் வரையில் வேதம் நிலவும் என்றே கூறவேண்டும்.

புத்தர் காலத்தில் இருந்த சிரமண அந்தணர்கள் கடவுள் வாதத்துக்கு அறவே மதிப்புத் தரவில்லை என்பது, மேற்கண்ட ஆராய்ச்சியிலிருந்து தெற்றென விளங்கும். அவர்களில் சிலர், இறைவனுக்கு ஈடாகக் கன்மத்தை மதித்தார்கள். இவர்கள், 'புத்தர் கன்மவாதி அல்லர்; ஆதலால் நாத்திகர்' என்று அவர்மீது சில சமயம் குற்றம் சாட்டி வந்தார்கள். இந்தக் குற்றச் சாட்டை அடுத்த அத்தியாயத்தில் நிராகரிப்போம்.

# 8. கர்ம யோகம்

## புத்தர் நாத்திகரா ஆத்திகரா?

ஒரு முறை புத்தர்பெருமான் வைசாலியின் மருங்கில் மகாவனத்தில் இருந்தார். அந்தச் சமயத்தில், புகழ்பெற்ற சில லிச்சவி ராஜாக்கள் தங்கள் நகர மாளிகையில் ஏதோ காரணமாகக் கூடியிருந்தபொழுது புத்தரைப்பற்றிய பேச்சு வந்தது. அவர்களில் பெரும்பாலோர் புத்தரையும் தருமத்தையும் சங்கத்தையும் போற்றினார்கள். அதைக் கேட்ட சிம்மன் என்ற படைத் தலைவனுக்குப் பெருமானைக் காண வேண்டும் என்ற விருப்பம் உண்டாயிற்று. அவன் நிக்கந்தர்களின் அடியானாதலால், அவர்களின் முக்கிய குருவான நாதபுத்தனைச் சந்தித்து, "பதந்தரே, நான் சிரமண கோதமரைக் காண விரும்புகிறேன்" என்றான்.

நாதபுத்தன், "சிம்மா, நீ கர்மவாதியாக இருக்க, அக்கிரியவாதியான கோதமனை ஏன் காண விரும்புகிறாய்?" என்றான். குருவின் இந்த விடையைக் கேட்ட சேனாதிபதியான சிம்மன், புத்தரைக் காணச் செல்லும் எண்ணத்தை விடுத்தான்.

மறுபடி இரண்டொரு தடவை லிச்சவிகளின் நகர மாளிகையில் அவன் புத்தரையும் தருமத்தையும் சங்கத்தையும் மக்கள் போற்றுவதைக் கேட்டான். ஆயினும் நாதபுத்தன் சொன்னதனால், அவன் புத்தரைக் காணச் செல்லும் எண்ணத்தை மீண்டும் ஒத்திப்போட்டான். இறுதியில் அவன் நாதபுத்தனைக் கேட்காமலே புத்தரைத் தரிசிக்கத் தீர்மானித்தான். அவன் தன் பெருஞ்சேனையோடு மகாவனத்துக்கு வந்து, பெருமானை வணங்கி, ஒரு புறமாக அமர்ந்தான். "பதந்தரே, நீங்கள் அக்கிரியவாதி என்பதும், சிராவகர்களுக்கு அக்கிரியவாதத்தைக் கற்பிக்கிறீர்கள் என்பதும் உண்மையா?" என்று அவன் பெருமானைக் கேட்டான்.

பகவான் கூறினார் - "சிரமண கோதமன் அக்கிரியவாதி என்று உண்மையுள்ளவன் கூறக்கூடிய ஒரு வகை உண்டு. அந்த வகை யாது? சிம்மா, நான் மன மொழி மெய்களால் நிகழும் தீய நடத்தைகளின் அக்கிரியையை (செய்யலாகாது என்பதை) உபதேசிக்கிறேன்.

"சிம்மா, சிரமண கோதமன் கிரியாவாதி என்று உண்மையுள்ளவன் கூறக்கூடிய இரண்டாவது வகையும் உண்டு. அது யாது? நான் மன மொழி மெய்களால் நிகழும் நன்னடத்தைகளின் கிரியையை உபதேசிக்கிறேன்.

"உண்மையுள்ளவன் என்னை உச்சேதவாதி என்று சொல்லக்கூடிய இன்னொரு வகையும் உண்டு. அது யாது? சிம்மா, நான் பேராசை,

பகைமை, மோகம் முதலிய பாவகரமான மனப்பான்மைகள் அனைத்தையும் சிதைக்க வேண்டும் என்று உபதேசிக்கிறேன்.

உண்மையுள்ளவன் என்னை அருவருப்புக்காரன் என்று சொல்லக் கூடிய இன்னொரு வகையும் உண்டு. அது யாது? சிம்மா, நான் மன மொழி மெய்களால் நிகழும் தீய நடத்தைகளை அருவருக்கிறேன். பாவச் செயல்களைக் கண்டால் எனக்கு வெறுப்பு உண்டாகிறது.

"உண்மையுள்ளவன் என்னை அழிவுக்காரன் (விநாசகன்) என்று சொல்லக்கூடிய இன்னொரு வகையும் உண்டு. அது யாது? பேராசையையும் பகைமையையும் மோகத்தையும் அழிக்க வேண்டும் என்று நான் உபதேசிக்கிறேன்.

மேலும், சிம்மா, உண்மையுள்ளவன் என்னைத் தவசி என்று சொல்லக்கூடிய மற்றுமொரு வகையும் உண்டு. அது யாது? சிம்மா, பாவகரமான அகுசல தருமங்களைத் தபிக்கச் செய்ய வேண்டும் (காய்ச்சி உருக்கிவிட வேண்டும்) என்று நான் கூறுகிறேன். பாவகரமான அகுசல தருமங்கள் எவனிடம் உருகி விட்டனவோ, அழிந்துவிட்டனவோ, மீட்டும் தோன்றமாட்டாவோ, அவனை நான் தவசி என்கிறேன்."[1]

## நாத்திகர் என்ற குற்றச்சாட்டு

மேற்கூறிய ஸுத்தத்தில் புத்தர்மீது உள்ள முக்கியமான குற்றச்சாட்டு, அவர் அக்கிரியவாதி என்பது. மகாவீரரே நேராக இந்தக் குற்றத்தைச் சாட்டியிருந்தாலும் சரி, சாட்டாமல் இருந்திருந்தாலும் சரி; அந்தக் காலத்தில் புத்தர் மீது இத்தகைய குற்றச்சாட்டு இருந்தது என்பதில் மட்டும் ஐயமே இல்லை.

கோதமர் க்ஷத்திரிய குலத்தில் பிறந்தவர். சாக்கிய க்ஷத்திரியர்களுக்கு அண்மையில் இருந்த ஆப்தர்கள் கோலிய க்ஷத்திரியர்கள். இவர்கள் இருவரும் ரோகிணியாற்றுத் தண்ணீருக்காக அடிக்கடி சண்டையிடுவது உண்டு என்பதை முன்னமே சொல்லியிருக்கிறேன். ஒரு கூட்டத்தார் மற்றொரு கூட்டத்தில் உள்ளவர்களுக்கு நஷ்டம் விளைவித்தாலும் சரி, அவர்களைக் கொலை செய்தாலும் சரி, அதற்கு ஈடாக அந்தக் கூட்டத்தில் உள்ளவர்களுக்கு நஷ்டம் விளைவித்தோ அவர்களைக் கொன்றோ பழி தீர்த்துக் கொள்ளும் முறை இன்றும் வடமேற்கு எல்லையில் வாழும் பட்டாணிய மக்களிடம் இருக்கிறது. இதே பழக்கம் பழங்காலத்தில் பாரதநாட்டு க்ஷத்திரியர்களிடம் இருந்ததில் வியப்பு ஏதும் இல்லை. உண்மையான வியப்புக்கு உரிய விஷயம் யாதென்றால், இந்த க்ஷத்திரியர்களின் ஒரு கூட்டத்தில் தோன்றிய கோதமர், தமக்கு அணிமையில் வாழ்ந்த ஆப்தர்களிடம் பழி வாங்குவதை அறவே மறுத்து, ஒரேயடியாகத் தவசிகளோடு சேர்ந்து கொண்டதுதான்.

1. புத்தலீலா ஸார ஸங்கிரகம், பக். 279-281 பார்க்க.

இல்லறத்தில் வெறுப்புத் தோன்றினால் அந்தக் காலத்து அந்தணர்களும் க்ஷத்திரியர்களும் இல்லத்தைத் துறந்து பரிவிராஜகர்கள் ஆகிக் கடுந்தவம் இயற்றுவது வழக்கம். எனவே கோதமர் தவசியானதில் யாருக்கும் எவ்வகைச் சிறப்பும் தோன்றியிராது. மிஞ்சிப்போனால், 'இந்த இளைஞன் தன் அற்மான இல்லறத்துக்குப் பயனற்றவனாகப் போய்விட்டான்' என்று மக்கள் சொல்லியிருக்கக்கூடும். ஆனால் ஏழு ஆண்டுகள் தவமிருந்து கோதம போதிசத்துவர் புத்தராகி, இல்லற நுகர்ச்சியையும் துறவறத்துத் தவத்தையும் சமமாக மறுக்க ஆரம்பித்த போது, அவரைப்பற்றிக் கடுமையான ஆராய்ச்சிகள் நிகழ்ந்தன.

அந்தக் காலத்தில் பழக்கத்தில் இருந்த சமூகமுறை, அந்தணர்களுக்குத் தேவையாக இருந்தது. அவர்களுடைய கர்மயோகமாவது- அந்தணர்கள் யாகயக்ஞங்கள் செய்ய வேண்டும், க்ஷத்திரியர்கள் போர் நடத்த வேண்டும், வைசியர் வியாபாரமும், நாலாம் வருணத்தவர் தொண்டும் செய்ய வேண்டும் என்பது. இந்தக் கர்மயோகத்தை விரும்பாதவன் காட்டுக்குச் சென்று தவமியற்றி ஆன்மபோதம் பெற்று மரிக்க வேண்டும்; சமூக அமைப்புக் குலையும்படியான எந்தச் செயலையும் அவன் செய்யலாகாது.

வெவ்வேறு சிரமண சங்கங்கள் வெவ்வேறு வகையான தத்துவதரிசனங்களைக் கடைப்பிடித்தன. ஆயினும் தவத்தைப் பொறுத்தவரைக்கும் பெரும்பாலான சிரமணர்களின் கருத்து ஒன்றாகவே இருந்தது. அவர்களில் நிக்கந்தர்கள் கன்மத்துக்கு மிகுந்த சிறப்புத் தந்தார்கள். இந்தப் பிறவி துன்பம் தருவது; முற்பிறப்பின் பாவங்களடியாக இது வந்திருப்பதனால் அந்தப் பாவங்களை அழிக்கக் கடுந்தவம் இயற்ற வேண்டும் என்று அவர்களுடைய தலைவர்கள் கூறிவந்தார்கள். ஆனால் புத்தர்பெருமானோ தவத்தை மறுத்தார். ஆகவே நிக்கந்தர்கள் அவரை அக்கிரியவாதி (அகர்மவாதி) என்று கூறியது இயல்புதான். புத்தர் படைக்கலங்களைத் துறந்ததனால் அவர் அக்கிரியவாதி என்று அந்தணர்கள் முடிவு கட்டினார்கள்; தவத்தைத் துறந்ததனால் அவர் அக்கிரியவாதி என்று தவசிகள் முடிவு கட்டினார்கள்.

## புரட்சிகரமான தத்துவம்

கோதமர் வெறும் ஆன்மபோதத்தைப் பெற்று அதன் வாயிலாக முத்தியை அடைவதற்காக இல்லத்தைத் துறக்கவில்லை என்பதை நாம் கவனிக்கவேண்டும். தமது அண்மையில் இருப்பவர்கள்மீது படை எடுப்பது அவருக்குச் சரியென்று தோன்றவில்லை. படைக்கலங்களின்றி ஒருவருக்கு ஒருவர் நட்போடு நடக்கக்கூடிய சமூகமொன்றை அமைக்க முடியாதா என்பது பற்றி அவர் ஓயாமல் சிந்தித்து வந்தார். தவத்தினாலும் தவசிகளின் தத்துவஞானத்தினாலும் மனித இனத்துக்குப் பயன்படும்

எளிய வழியைக் கண்டுபிடிக்கலாம் என்று அவருக்குத் தோன்றியது. அதனால்தான் அவர் இல்லத்தைத் துறந்து தவமியற்றத் தொடங்கினார். பிறகு அதனால் ஏதும் பயன் இல்லை என்று அறிந்ததும் அவர் அதை விடுத்துப் புதுமையான ஒரு மத்தியம மார்க்கத்தைக் கண்டுபிடித்தார்.

இந்தக் காலத்துப் புரட்சிக்காரர்களை அரசியல் வாதிகளும் சமயவாதிகளும் நாசகாரிகள் (Nihilists) முதலிய சிறப்பான பட்டங்கள் கொடுத்து வருணித்து அவர்களின் பேதைமையை மக்களுக்கு எடுத்துச் சொல்வதுபோல, புத்தர் காலத்தில் இருந்த விமரிசகர்கள் அவரை அக்கிரியவாதி என்று கூறி, அவருடைய புதிய தத்துவம் பயனற்றது என்பதை மக்களுக்கு எடுத்துச் சொன்னார்கள் என்று நாம் கொள்வதில் தடை இல்லை.

## தீய ஒழுக்கமும் நல்லொழுக்கமும்

புத்தர் எவ்வெவற்றைத் தீய ஒழுக்கம் என்றும், எவ்வெவற்றை நல்லொழுக்கம் என்றும் கூறுகிறார் என்பதை இப்போது நாம் அறிய வேண்டும். ஸாலேய்யக அந்தணர்களை நோக்கிப் பெருமான் கூறுகிறார்-

"இல்லறத்தவர்களே, உடலினால் நிகழும் மூவகையான அதரும ஒழுக்கம் யாவை? ஒருவன் உயிர்க்கொலை செய்கிறான்; பயங்கரனாக, கொடியவனாக, செங்கையனாக அடிதடிகளில் ஈடுபட்டிருக்கிறான். அல்லது அவன் திருடுகிறான்; தனது அல்லாத பொருளை - அது ஊரில் இருந்தாலும் சரி, காட்டில் இருந்தாலும் சரி- உரிமையாளனைக் கேட்காமல் எடுத்துக் கொள்கிறான். அல்லது அவன் பிறன்மனை புகுகிறான்; தந்தை, தாய், அக்காள், கணவன் அல்லது உறவினர் காப்பாற்றுகிற பெண்ணிடம் விபசாரம் செய்கிறான். இவ்வண்ணம் உடலினால் மூவகை மற ஒழுக்கங்கள் நிகழ்கின்றன.

"இல்லறத்தவர்களே, வாக்கினால் நிகழும் நால்வகையான மற ஒழுக்கங்கள் யாவை? ஒருவன் பொய் சொல்கிறான். கூட்டத்திலோ மாநாட்டிலோ ஆப்தர்களின் குழுவிலோ அரசவையிலோ, 'நீ அறிந்ததைச் சொல்லு' என்று அவனைச் சாட்சியாக விசாரணை செய்கிறார்கள். அவன் தனக்குத் தெரியாததைத் தெரியும் என்கிறான்; தான் காணாததைக் கண்டேன் என்கிறான். இப்படித் தனக்காகவோ பிறருக்காகவோ ஏதோ சிறிது லாபத்துக்காகவோ, அறிந்திருந்தும் அவன் பொய் சொல்கிறான். அல்லது ஒருவன் புறங் கூறுகிறான். இவர்கள் பேச்சை அங்கும், அவர்கள் பேச்சை இங்கும் கூறிப்பகை மூட்டுகிறான். ஒற்றுமையாக இருப்பவர் களுக்குள்-இதனால்-பிளவு ஏற்படுகிறது. சண்டையிடுபவர்களுக்குத் தூண்டுதல் கிடைக்கிறது. சண்டையை வளர்ப்பதில் அவன் மகிழ்ச்சி கொள்கிறான். சண்டையை வளர்க்கும் சொற்களையே அவன் பேசுகிறான். அல்லது ஒருவன் வன்சொல் கூறுகிறான். தீமை நிறைந்த,

கொடுமையான, கசப்பான, நெஞ்சில் தைக்கும்படியான, சினம் கொதிக்கின்ற, அமைதியைக் குலைக்கின்ற சொற்களைப் பேசுகிறான். அல்லது ஒருவன் பயனில பேசுகிறான்; கண்ட வேளையிலும் பேசுகிறான். நடக்காத செய்திகளைப் புனைந்துரைக்கிறான்; அறத்துக்கு மாறான, நல்லோர்களின் ஒழுக்கத்துக்கு மாறான, அசட்டை செய்வதற்கு உரிய, சந்தர்ப்பத்துக்குப் பொருந்தாத, வீண் வளர்த்தலான, அநர்த்தமான சொற்களைப் பேசுகிறான். இவ்வண்ணம் வாக்கினால் நால்வகையான மற ஒழுக்கங்கள் நிகழ்கின்றன.

"இல்லறத்தவர்களே, மனத்தினால் நிகழும் மூவகை மற ஒழுக்கங்கள் யாவை? ஒருவன் பிறர் பொருளைப் பற்றிச் சிந்திக்கிறான். பிறர் செல்வத்துக்கு உரிய கருவிகள் தனக்குக் கிடைக்க வேண்டும் என்று விரும்புகிறான். அல்லது ஒருவன் பகையெண்ணம் கொண்டிருக்கிறான். இந்த உயிர்கள் கொல்லப்பட வேண்டும், அழிய வேண்டும் என்று கருதுகிறான். அல்லது அவன் பொய்நோக்கமுடையவனாக இருக்கிறான். 'தானமாவது. தருமமாவது! பாவமாவது, புண்ணியமாவது! இம்மையாவது, மறுமையாவது!' என்றெல்லாம் நாத்திகக் கொள்கைகளைக் கொண்டிருக்கிறான். இவ்வண்ணம் மனத்தினால் மூவகை மற ஒழுக்கங்கள் நிகழ்கின்றன.

"இல்லறத்தவர்களே, உடலினால் நிகழும் மூவகையான அற ஒழுக்கங்கள் யாவை? ஒருவன் உயிர்க்கொலை செய்வதில்லை; பிறர்மேல் படையெடுப்பதில்லை; கொலை செய்ய வெட்கப்படுகிறான்; உயிர்கள் அனைத்தினிடமும் இரக்கத்தோடு பழகுகிறான்; அவன் திருடுவதில்லை; ஊரிலோ காட்டிலோ இருக்கும் பிறர் பொருளை அவர்கள் கொடுத்தாலன்றி எடுத்துக் கொள்வதில்லை. அவன் பிறன்மனை புகுவதில்லை; தாய், தந்தை, தமக்கை, அண்ணன், கணவன், உறவினர் முதலியவர் காப்பாற்றும் பெண்களோடு தொடர்பு வைத்துக்கொள்வதில்லை. இவ்வண்ணம் உடலினால் மூவகையான அற ஒழுக்கங்கள் நிகழ்கின்றன.

"இல்லறத்தவர்களே, வாக்கினால் நிகழும் நால்வகையான அற ஒழுக்கங்கள் யாவை? ஒருவன் பொய் சொல்வதை அறவே விட்டு விடுகிறான்; கூட்டத்திலோ மாநாட்டிலோ அரசவையிலோ அவனைச் சாட்சியாக விசாரணை செய்தால், தனக்குத் தெரியாததைத் தெரியாது என்றும், தான் பார்க்காததைப் பார்க்கவில்லை என்றும் அவன் சொல்கிறான். அவன் புறங்கூறுதலை விட்டுவிடுகிறான்; இவர்களிடம் பிளவு ஏற்படுத்துவதற்காக அவர்கள் செய்தியையும், அவர்களிடம் பிளவு ஏற்படுத்துவதற்காக இவர்கள் செய்தியையும் அவன் சொல்வதில்லை. சண்டை போட்டுக்கொண்டவர்களை அவன் இந்த வழியினால் ஒற்றுமைப்படுத்துகிறான். ஒற்றுமையுள்ளவர்களுக்கு ஊக்கம் தருகிறான்.

ஒற்றுமையைக் கண்டு அவன் மகிழ்கிறான்; ஒற்றுமை உண்டாகும்படி பேசுகிறான். அவன் வன்சொல் பேசுவதைத் தவிர்க்கிறான். அவன் நேர்மையான, காதுக்கு இனிமையான, உள்ளத்துக்கு உவப்பான, நாகரிகர்களுக்கு ஏற்ற, பெரும்பாலான மக்கள் விரும்புகிற இன்சொற்களைப் பேசுகிறான். அவன் பயனில சொல்லாமையைக் கடைப்பிடிக்கிறான். சந்தர்ப்பத்துக்குப் பொருத்தமான, உண்மையான, பொருள் பொதிந்த, அறத்தொடு சார்ந்த, நல்லோர்களின் நடத்தைக்கு ஏற்ற, கவனத்தில் கொள்ளக்கூடிய, காலத்துக்குத் தக்க, காரணங்களோடு கூடிய, சான்றுகள் கொண்ட, பயனுள்ள சொற்களைப் பேசுகிறான். இவ்வண்ணம் வாக்கினால் நால்வகையான அற ஒழுக்கங்கள் நிகழ்கின்றன.

"இல்லறத்தவர்களே, மனத்தினால் நிகழும் மூவகையான அற ஒழுக்கங்கள் யாவை? ஒருவன் பிறர் பொருளுக்கு ஆசைப்படுவதில்லை; பிறர் செல்வத்துக்கு உரிய கருவிகள் தனக்குக் கிடைக்க வேண்டும் என்று கருதுவதில்லை. அவன் மனம் பகையினின்றும் நீங்கியிருக்கிறது. இந்த உயிர்கள் பகையின்றி, தொந்தரவின்றி, துன்பமின்றி இன்பத்தோடு வாழ வேண்டும் என்பதே அவனுடைய தூய எண்ணம். அவன் நற்காட்சியுடையவனாக இருக்கிறான். தான தருமங்கள் உண்டு, நன்மை தீமைகளுக்குப் பயன் உண்டு, இம்மை மறுமை உண்டு என்றெல்லாம் நம்பிக்கை கொள்கிறான். இவ்வண்ணம் மனத்தினால் மூவகையான அற ஒழுக்கங்கள் நிகழ்கின்றன."[1]

சுருங்கக் கூறினால், கொலை, திருட்டு, பிறன்மனை விழைதல் ஆகிய மூன்றும் உடலினால் நிகழும் பாவச்செயல்கள்; பொய், புறங்கூறுதல், இன்னாச்சொல், பயனில பேசுதல் ஆகிய நான்கும் மொழியினால் நிகழும் பாவச் செயல்கள்; பிறர் பொருளில் ஆசை, பிறர் அழிய வேண்டும் என்ற விருப்பம், நாத்திக நோக்கம் ஆகிய மூன்றும் மனத்தினால் நிகழும் பாவச் செயல்கள். இந்தப் பத்தையும் அகுசல கர்மப் பாதை என்பர். இவற்றினின்று நீங்குவது குசல கர்மப்பாதை. இவையும் மேலே வருணித்தவாறு பத்தாம். பத்து அகுசலங்களும் பத்துக் குசலங்களுமாகிய கர்மவழிகளைப் பற்றித் திரிபிடக இலக்கியம் பல இடங்களில் வருணிக்கிறது. இங்கே நாம் மேற்கோளாகத் தந்த புத்தர் வாக்கில், அகுசல கர்மப் பாதையை மற ஒழுக்கம் என்றும், குசல கர்மப் பாதையை அற ஒழுக்கம் என்றும் குறிப்பிட்டிருப்பது காண்க.

## குசல கர்மங்களும் அஷ்டாங்க மார்க்கமும்

மேற்கூறியவற்றுள் குசல கர்ம வழிகள் யாவும், ஆரிய அஷ்டாங்க

1. மஜ்ஜிம நிகாயம் (41), ஸாலேய்யக ஸுத்தம் காண்க.

மார்க்கத்தில் சேர்ந்துவிடுகின்றன. மூவகையான குசல உடற்கருமங்களே, நற்செய்கையாம்; நால்வகையான குசல மொழிக் கருமங்களே நல்வாய்மையாம்; மூவகையான குசல மனக் கருமங்களே நற்காட்சியும் நல்லூற்றமுமாம். இவை தவிர அஷ்டாங்க மார்க்கத்தில் எஞ்சியுள்ள நான்கு அங்கங்கள் இந்தக் குசல கர்ம வழிகளுக்கு வளமூட்டுவனவாகவே அமைந்துள்ளன. நல்வாழ்க்கை, நன்முயற்சி, நற்கடைப்பிடி, நல்லுளத்தோர்தலைப்பாடு ஆகிய நான்கு அங்கங்களை உள்ளபடி உணர்ந்தாலன்றிக் குசல கர்ம வழிகள் வளர்ச்சியடையா; முழுமை பெறவும் மாட்டா.

## அநாஸக்தியோகம்

நாம் குசல கர்மங்களை மட்டும் செய்துகொண்டிருக்கையில் அவற்றில் பற்றுக் கொண்டு விட்டோமானால், அந்தப் பற்றே அகுசலங்கள் தோன்றுவதற்கு இடம் தரும். எப்படி என்றால், "குசல எண்ணம் அகுசல எண்ணத்துக்குச் சார்பாக இருப்பதைக் கண்கூடாகக் காணலாம். ஒருவன் தானங்கள் செய்கிறான், நல்லொழுக்கத்தோடு இருக்கிறான், உபோஸத கர்மங்கள் செய்கிறான்; அவன் இவற்றிலுள்ள சுவையை அறிந்து போற்றுகிறான். இதனால் அவனுக்கு ஆசை எழுகிறது, நோக்கம் உண்டாகிறது, ஐயம் பிறக்கிறது, மயக்கம் தோன்றுகிறது, மனம் கெடுகிறது."-திகபட்டானம்.

இவ்வண்ணம் குசல எண்ணங்கள் அகுசலத்துக்குக் காரணமாவதனால் அவற்றில் பற்று வைக்கலாகாது. எவ்வகைப் பயனையும் எதிர்பாராமல் குசல கர்மங்களை ஒருவன் செய்ய வேண்டும். இதே கருத்தைத்தான் 'தம்மபத'த்தில் வரும் காதையும் சுருக்கமாகக் கூறுகிறது- "தீயவை அனைத்தையும் செய்யாதிருப்பது, நன்மை (குசலம்) அனைத்தையும் சேமிப்பது, தன் சித்தத்தை ஆராய்வது- இதுவே புத்தருடைய கட்டளை."

அதாவது, மேற்கூறிய அகுசல கர்ம வழிகளை முற்றும் விலக்க வேண்டும்; குசல கர்ம வழிகளை எப்போதும் கடைப்பிடித்து, அவற்றில் மனம் பற்றுக்கொள்ளாதபடி கவனிக்க வேண்டும். இவை யாவும் அஷ்டாங்க மார்க்கத்தைப் பயிலுவதனால் சாத்தியமாகின்றன.

## நற்செயல்களில் விழிப்பும் உற்சாகமும்

குசல கர்மங்களில் மிகுந்த விழிப்பும் உற்சாகமும் கொள்ள வேண்டும் என்று திரிபிடக இலக்கியம் பல இடங்களில் உபதேசிக்கின்றது. அவற்றை முழுவதும் இங்கே தொகுத்துக் கூற இயலாது. ஆயினும் மாதிரிக்காக, அவற்றுள் ஒரு சின்னஞ்சிறிய உபதேசத்தை இங்கு எடுத்துக் காட்டுகிறேன்.

புத்த பகவான் பகருகின்றார்- "பிட்சுக்களே, ஆண்களும் பெண்களும், இல்லறத்தாரும் துறவிகளும் இந்த ஐந்து விஷயங்களை எப்போதும் சிந்திக்க வேண்டும். 1. 'எனக்கு முதுமைத்தன்மை உண்டு' என்று அடிக்கடி எண்ண வேண்டும். ஏனெனில் எந்த இளமை மதங்கொண்டு மாந்தர் மன மொழி மெய்களால் தீச்செயல்கள் புரிகின்றனரோ அந்தச் செருக்கு இந்த நினைவினால் அழியும்; அல்லது குறையவாவது குறையும். 2. 'எனக்கு நோய்த்தன்மை உண்டு என்று அடிக்கடி எண்ண வேண்டும். ஏனெனில் எந்த ஆரோக்கிய மதங்கொண்டு மாந்தர் மன மொழி மெய்களால் தீச்செயல்கள் புரிகின்றனரோ அந்தச் செருக்கு இந்த நினைவினால் அழியும்; அல்லது குறையவாவது குறையும். 3.'எனக்குச் சாகுந்தன்மை உண்டு' என்று அடிக்கடி எண்ண வேண்டும். ஏனெனில் எந்த வாழ்வு மதங்கொண்டு மாந்தர் மன மொழி மெய்களால் தீச்செயல்கள் புரிகின்றனரோ அந்தச் செருக்கு இந்த நினைவினால் அழியும்; அல்லது குறைவாவது குறையும். 4. 'எனக்கு விருப்ப முள்ளவையும் வேண்டியவையுமான உயிர்களையும் பொருள்களையும் விட்டு நான் பிரியவேண்டியிருக்கும்' என்று அடிக்கடி எண்ண வேண்டும். ஏனெனில் விருப்ப முள்ளவற்றிடம் கொண்ட எந்த நேசத்தினால் மாந்தர் மன மொழி மெய்களால் தீச்செயல்கள் புரிகின்றனரோ அந்த நேசம் இந்த நினைவினால் அழியும்; அல்லது குறையவாவது குறையும். 5. 'கர்மமே என் உடைமை (கர்மஸ்வகீயம்), கர்மமே என் உரிமைப் பங்கு (கர்மதாயாதம்), கர்மமே என் பிறப்பு (கர்மயோனி), கர்மமே என் உறவு (கர்மபந்து), கர்மமே என் காப்பு (கர்மப் பிரதி சரணம்). நான் செய்யும் நற்செயல்களுக்கும் தீச்செயல்களுக்கும் நானே பங்காளியாவேன்' என்று அடிக்கடி எண்ண வேண்டும். ஏனெனில் இந்த நினைவினால், மாந்தர்களுடைய மன மொழி மெய்களின் குற்றங்கள் அழியும்; அல்லது குறையவாவது குறையும்.

"'நான் ஒருவன் மட்டுமின்றி, எல்லா உயிர்களுமே முதுமையுடையவை, நோயுடையவை, சாவு உடையவை, அவை யாவற்றுக்கும் அன்புடையவர்களின் பிரிவு நேருகிறது. அவையும் கர்மத்தில் உரிமைப் பங்கு கொண்டவை' என்று எப்போதும் சிந்திக்கும் ஆரியச் சிராவகனுக்கு வழி கிடைக்கிறது. இந்த வழியைப் பயிலுவதனால் அவனுடைய சம்யோஜனங்கள் அழிகின்றன."[1]

இந்த மேற்கோளில், கர்மஸ்வகீயம் என்பதற்கு, கர்மமே என் உடைமை; மற்றப் பொருள்கள் யாவும் எப்பொழுது என்னிடமிருந்து பிரியும் என்பது நிலையில்லை என்று பொருள். நான் கர்மதாயாதன் என்றால், நற்கருமங்களைச் செய்தால் இன்பத்தையும், தீய கருமங்களைச்

1. அங்குத்தர நிகாயம், பஞ்சக நிபாதம், ஸுத்தம் 57.

செய்தால் துன்பத்தையும் நான் அநுபவிக்க வேண்டியிருக்கும் என்று பொருள். நான் கர்மயோனி என்றால், கன்மத்தினின்றே நான் பிறந்திருக்கிறேன் என்று பொருள். நான் கர்மபந்து என்றால், உறவானவை என்று பொருள். கர்மபிரதி சரணம் என்றால் கர்மமே என்னைக் காக்க முடியும் என்று பொருள். புத்தர் பெருமான் கர்மத்தைப்பற்றி எவ்வளவு வலியுறுத்திக் கூறியிருக்கிறார் என்பது இதிலிருந்து நன்கு விளங்கும். இத்தகைய குருவை நாத்திகர் என்பது எப்படிப் பொருந்தும்?

நற்கருமங்களை உற்சாகமுள்ள மனத்தோடு செய்ய வேண்டும் என்று தம்மபதம் கூறுவதும் கவனிக்கத் தக்கது: "நன்மையான செயல்களை ஆற்றுவதில் வேகம் வேண்டும். தீச்செயலினின்றும் சித்தத்தைத் தடுக்க வேண்டும். ஏனெனில், புண்ணியம் செய்பவனின் மனம், சோம்பலினால் பாவத்தில் ஈடுபடும்."

## அந்தணர்களின் கர்மயோகம்

இதுவரையில் புத்தர் கூறிய கர்மயோகத்தைப் பற்றி ஆராய்ந்தோம். இனி அந்தக் காலத்து அந்தணர்களிடையே எத்தகைய கர்மயோகம் நடைமுறையில் இருந்தது என்பதைச் சுருக்கமாகக் கவனிப்போம். அந்தணர்களின் பிழைப்புக்குக் கருவியாக இருந்தவை வேள்விகள். அவற்றை விதிப்படி செய்வதைத்தான் அந்தணர்கள் தமது கர்மயோகம் என்று கருதினார்கள். அதற்குப் பின்பு அவர்கள், 'க்ஷத்திரியர்கள் போரும் வைசியர்கள் வாணிகமும் வேளாளர் தொண்டும் செய்ய வேண்டும்; இதுவே அவர்களின் கர்மயோகம்' என்று உரைத்தார்கள். எவனுக்காவது இதில் அலுப்புத் தோன்றினால் அவன் சர்வ சங்க பரித்தியாகம் செய்து, காட்டுக்குச் சென்று தவம்புரிய வேண்டும். இதைச் சந்நியாச யோகம் என்பர். இதில் அவனுடைய கர்மயோகம் முடிவெய்தும். சில அந்தணர்கள் சந்நியாசம் கொண்டபிறகும் அக்கினி ஹோத்திரம் முதலிய கர்மயோகத்தைப் பயின்று வந்ததோடு அதையே உயர்வாகவும் கருதினார்கள். இதைப் பற்றி, பகவத்கீதை மூன்றாம் அத்தியாயம் கூறுகிறது: "வேள்வியின் பொருட்டுச் செய்யும் கர்மத்தைத் தவிர மற்றக் கன்மங்கள் மக்களைக் கட்டுப்படுத்துகின்றன. ஆதலால், குந்தி மகனே, நீ பற்றை (ஸங்கத்தை) விட்டு வேள்விக்காகத் தொழில் செய்." (சுலோ.9.)

"முன்பு (சிருஷ்டியின் ஆரம்பத்தில்) பிரமதேவன் வேள்வியுடன் மக்களைப் படைத்து, 'நீங்கள் இந்த வேள்வியால் வளருவீர்கள்; உங்கள் விருப்பத்தை நிறைவேற்றும் காமதேனுவாக இது இருக்கும்' என்று கூறினான்." (சுலோ.10.)

ஆதலால், "பார்த்தனே, இங்ஙனம் தொடங்கிய (வேள்விச்) சக்கரத்தை இந்த உலகில் எவன் பின்பற்றி ஒழுகுவதில்லையோ அவன் பாவ

வாழ்க்கையனாக, புலன்களில் களிப்பவனாக, வீணே உயிர் வாழ்கிறான்." (சுலோ.16)

## அந்தணர்களின் லோகசங்கிரகம் (உலக நன்மைக்காகத் தொழில் புரிதல்)

ஆயினும் ஒருவனுக்கு, 'பிரமதேவன் தொடங்கிய இந்தச் சக்கரம் சரியன்று; ஏனெனில் இது ஹிம்சையை அடிப்படையாகக் கொண்டது' என்று தோன்றினால் அந்த எண்ணத்துக்கு அவன் இடம் கொடுக்கலாகாது; அதனால் அஞ்ஞானிகளுக்குப் புத்திக் கலக்கம் உண்டாகும். "அறிவுடையவன், கன்மத்தில் பற்றுள்ள அஞ்ஞானிகளுக்குப் புத்திபேதம் விளைவிக்கலாகாது; அவன் எல்லாக் கன்மங்களையும் செம்மையாகச் செய்து, பிறரும் செய்யுமாறு ஊக்குவிக்க வேண்டும்" என்கிறது பகவத்கீதை. (3-26.) கீதையின் இந்த அத்தியாயம் முழுவதுமே ஆராயத்தக்கது.

பகவத்கீதை எந்த நூற்றாண்டில் தோன்றியது என்ற வாதத்தில் இறங்க இது இடமன்று. ஆயினும் எந்த ஆராய்ச்சியாளனும் இது புத்தர் காலத்தியது என்று குறிப்பிடவில்லை. புத்தருக்குப் பிறகு ஐந்நூறு முதல் ஆயிரம் ஆண்டுகள் வரைக்குமுள்ள காலத்தினிடையே கீதை தோன்றியிருக்கலாம் என்று மேல் நாட்டுப் புலவர்கள் பல வகையாக அநுமானித்திருக்கிறார்கள். அது மிகவும் பிற்காலத்தது என்பதில் ஐயம் இல்லை. ஆயினும் இங்குக் குறிப்பிட்டுள்ள சிந்தனைகள், புத்தர்காலத்தில் வாழ்ந்த அந்தணர்களின் பழக்கத்தில் இருந்தவை. குசல தத்துவத்தை நாம் அறிந்தாலும், மக்களுக்கு அதை வெளியிடலாகாது என்று கோசல நாட்டினனான லோகித்தியன் என்ற பிரசித்த அந்தணன் கூறிவந்தான்.[1] அவனுடைய வரலாற்றுச் சுருக்கம் இது-

புத்தர்பெருமான் கோசல நாட்டில் யாத்திரைசெய்து கொண்டே சாலவதிகை என்ற ஊரின் மருங்கில் வந்தார். கோசலராஜனான பஸேனதி, அந்தணனான லோகித்தியனுக்கு இறையிலியாகக் கொடுத்திருந்த ஊர் அது. லோகித்தியன் பாவமுள்ள ஒரு கருத்தைப் பரப்பி வந்தான்; அதாவது, "எவனாயினும் ஒரு சிரமணனுக்கோ அந்தணனுக்கோ குசல தத்துவத்தைப்பற்றிய போதம் கிடைத்தால் அதை அவன் பிறருக்குச் சொல்லலாகாது. ஒருவன் மற்றவனுக்கு என்ன செய்ய முடியும்? அவன் மற்றவனுடைய பழைய கட்டை அறுத்துப் புதிய கட்டை உண்டாக்குவான்; ஆதலால் இது உலோபச் செயல் என்று நான் கூறுகிறேன்" என்று சொல்லி வந்தான்.

பெருமான் தன் ஊர்மருங்கில் வந்துள்ள செய்தி தெரிந்ததும்,

1 தீக நிகாயம், பாகம் 1, லோஹிச்ச ஸுத்தம் காண்க.

லோகித்திய அந்தணன், ரோஸிகா என்ற நாவிதனை அனுப்பிப் பெருமானை வரவேற்றான். மறுநாள் சமையல் ஆனதும் அவன் அந்த நாவிதன் வாயிலாகவே பெருமானுக்கும் பிட்சு சங்கத்துக்கும் செய்தி தெரிவித்தான். பெருமான் தமது பிட்சைப் பாத்திரத்தையும் துவராடையையும் எடுத்துக்கொண்டு, லோகித்திய அந்தணனுடைய வீட்டுக்குப் புறப்பட்டார். வழியில் ரோஸிகா அவரிடம் லோகித்தியனுடைய கொள்கையைத் தெரிவித்து, "பதந்தரே, பாவமுள்ள இந்தக் கருத்தினின்றும் லோகித்தியனை விடுவியுங்கள்" என்று வேண்டினான்.

லோகித்தியன் பெருமானுக்கும் பிட்சு சங்கத்துக்கும் அன்போடு உணவளித்தான். உண்டபிறகு பெருமான் அவனை நோக்கி, "லோகித்தியா, எவனாயினும் குசல தத்துவத்தை அறிந்தால் அதை அவன் பிறருக்குச் சொல்லலாகாது என்ற கருத்தை நீ பரப்பிவருகிறாயா?" என்று கேட்டார்.

"ஆம், கோதமரே" என்றான் அந்தணன்.

"லோகித்தியா, நீ சாலவதிகை என்ற இந்த ஊரில் இருக்கிறாய். இப்போது ஒருவன், 'இந்தச் சாலவதிகையில் விளையும் பண்டம் அனைத்தையும் லோகித்தியன் ஒருவனே ஆண்டு அநுபவிக்க வேண்டும்; வேறு யாருக்கும் அவற்றைக் கொடுக்கலாகாது' என்று சொன்னால், அவன் உன்னைச் சார்ந்திருக்கும் ஊர்மக்களுக்குத் தீமை செய்தவன் ஆகமாட்டானா?"

"ஆவான்" என்று லோகித்தியன் மறுமொழி தந்தான்.

அப்போது பெருமான், "பிறருக்குத் தடை விளைவிப்பவன் அவர்களுடைய இதத்தில் ஊற்றமுடையவனா, அகிதத்தில் ஊற்றமுடையவனா?" என்று கேட்டார்.

"அகிதத்தில் ஊற்றமுடையவன், கோதமரே" என்றான் லோகித்தியன்.

"இத்தகையவனுடைய மனம் நட்புமயமாக இருக்குமா, பகைமையாக இருக்குமா?"

"பகைமயமாக இருக்கும், கோதமரே."

"பகைமயமான மனமுள்ளவன் பொய்நோக்கு உடையவனாக இருப்பான, நற்பார்வையுடையவனாக இருப்பானா?"

"பொய்நோக்கு உடையவனாக இருப்பான், கோதமரே."

## குசல கர்மத்தினால் அகுசலத்தை வெல்ல வேண்டும்

லோஹிச்சஸு-ுத்தத்திலும் மற்றும் பல இடங்களிலும் புத்தர் கூறியதாவது- "நடைமுறையில் இருக்கும் அகுசலப் (தீய) பழக்கத்துக்கு மாறாகக் குசல சிந்தனை தோன்றினால் அதை மக்களிடம்

பழக்கப்படுத்துவது நல்லவனுடைய உயர்ந்த கடமை; தீய செயல் புரிபவனிடம் ஒன்றுமே பேசாமல், அவனைப்போலவே நாமும் நடந்துகொண்டு அந்த முறையையே பழக்கத்துக்குக் கொண்டுவருவது கடமையன்று."

அந்தணர்கள் கூறியதாவது-"வேள்வியும் நால்வருண முறையும் பிரமதேவன் உண்டாக்கியவை; ஆதலால் அவற்றுக்கேற்பச் செய்யும் கருமங்கள் தூயவை." ஆனால் பெருமான் இதை மறுத்து, "வேட்கையினால் தோன்றியவையான ஹிம்சை முதலிய கர்மங்கள் ஒருபோதும் தூயவையாக இருக்க முடியாது. அவற்றினால் மனிதன் கரடுமுரடான வழியில் கட்டுப்படுகிறான்; அந்தச் செயல்களுக்கு மாறாக அவன் குசல கர்மங்களைச் செய்தால்தான் இந்தக் கரடுமுரடான வழியிலிருந்து விடுபடுவான்" என்றார்.

மஜ்ஜிமநிகாயத்தில் ஸல்லேகஸுத்தத்தில் (8) பகவான் கூறுகிறார்- "சுந்தனே, பிறர் ஹிம்சைப்பான்மையோடு நடந்துகொள்ளும் இடத்தில் நாம் அஹிம்சையுள்ளவர்களாக இருப்போம் என்று துலக்கவேண்டும்.[1] பிறர் உயிர்க் கொலை செய்தால் நாம் உயிர்க்கொலையினின்று விலகி இருப்போம் என்று துலக்க வேண்டும். பிறர் திருடர்களானால் நாம் திருட்டினின்று விலகி இருப்போம் என்று துலக்க வேண்டும். பிறர் பிரம்மசரியமற்றவர்களாக இருந்தால் நாம் பிரம்மசரியத்தோடு இருப்போம் என்றும். பிறர் பொய் சொன்னால் நாம் பொய் பேசுவதினின்று விலகி இருப்போம் என்றும், பிறர் புறங்கூறினால் நாம் புறங்கூறுதலினின்று விலகி இருப்போம் என்றும், பிறர் வன் சொல் வழங்கினால் நாம் வன்சொல்லினின்று விலகி இருப்போம் என்றும், பிறர் பயனில பேசினால் நாம் பயனில பேசுவதினின்று விலகி இருப்போம் என்றும், பிறர் மற்றவர் பொருளுக்கு ஆசைப்பட்டால் நாம் மற்றவர் பொருளை விரும்பாமல் விலகி இருப்போம் என்றும், பிறர் பகைத்தால் நாம் பகையினின்று விடுபட்டு இருப்போம் என்றும், பிறர் பொய்நோக்க முடையவர்களாக இருந்தால் நாம் நற்பார்வையுடையவர்களாக இருப்போம் என்றும் துலக்க வேண்டும்.

"சுந்தனே, கரடுமுரடான வழியில் சிக்கியவனை அதனின்றும் வெளியேற்ற நேரிய வழி கிடைப்பது போல, ஹிம்சையுள்ளவனை அதனின்றும் வெளியேற்றும் வழி அஹிம்சையாம். உயிர்க் கொலையிலிருந்து விடுபட, மனிதன் அந்தச் செயலினின்று நீங்க வேண்டும். திருடன் விடுபட வேண்டுமானால் திருட்டுத்தொழிலினின்று நீங்க வேண்டும். பிரம்மசரியமற்றவன் விடுபட வேண்டுமானால் பிரம்மசரியமற்ற தன்மையினின்று நீங்க வேண்டும். பொய்யன் விடுபட

1. சங்கு முதலிய பொருள்களைத் தேய்த்துத் துலக்குவர். இதற்கு ஸல்லேகம் என்று பெயர். இங்குத் துலக்குதல் என்றால் ஆன்மசுத்தி செய்தல் என்று பொருள்.

வேண்டுமானால் பொய்யினின்று நீங்க வேண்டும். புறங்கூறுபவன் விடுபட வேண்டுமானால் புறங் கூறுதலினின்று நீங்க வேண்டும். கடுஞ்சொல் பேசுபவன் விடுபட வேண்டுமானால் கடுஞ் சொல்லினின்று நீங்க வேண்டும். பயனில பேசுபவன் விடுபட வேண்டுமானால் பயனற்ற சொல்லினின்று நீங்க வேண்டும். இதுவே வழியாம்.

"சுந்தனே, தானே ஆழ்ந்த சேற்றில் சிக்கியவன் பிறரை அந்தச் சேற்றிலிருந்து மேலே தூக்க முடியாது. இது போலவே தன் புலன்களை அடக்காதவன், தான் ஒழுங்கு முறையோடு இல்லாதவன், தான் அமைதியாக இல்லாதவன், பிறர் புலனை அடக்கவோ, பிறரை ஒழுங்கு முறையில் நடத்தவோ, பிறருக்கு அமைதி உண்டாக்கவோ இயலாது. ஆனால் தானே அடங்கி வணங்கி அமைதியோடு இருப்பவன் பிறருக்கு அடக்கத்தையும் வணக்கத்தையும் அமைதியையும் உண்டாக்க இயலும்."

இதே கருத்தைத் தம்மபதத்திலுள்ள காதையொன்று சுருக்கமாகக் கூறுகிறது- "பொறுமையினால் சினத்தை வெல்க. தீயவனை நன்மையினால் வெல்க. உலோபியைத் தானத்தினால் வெல்க. பொய்யனை வாய்மையினால் வெல்க." (தம்மபதம், 223.)

## பத்துக் குசல கர்மவழியில் அந்தணர் செய்த மாற்றம்

எவ்வளவோ முரண்டு பிடித்துங்கூட வைதிக நூலாசிரியர்கள் மேற்கூறிய குசல கர்ம வழிகளையும் அகுசல கர்ம வழிகளையும் ஒப்புக்கொள்ள வேண்டியதாயிற்று. ஆனால் அவர்கள் அதில் தங்கள் உரிமைக்குக் குந்தகம் இல்லாதபடி ஜாக்கிரதையாக நடந்து கொண்டார்கள். மனு ஸ்மிருதி இந்தப் பத்து அகுசல கர்ம வழிகளை எவ்வாறு ஒப்புக்கொண்டிருக்கிறது என்பதைப் பாருங்கள்-

"மனுகுலத்தில் உதித்த தர்மாத்மாவான பிருகு அந்த மகரிஷிகளிடம் கூறினார்- கர்மயோகம் அனைத்துக்கும் முடிவான இதைக் கேளுங்கள்.

"பிறர் பொருளை விரும்புவது, பிறருக்குத் தீங்கு நினைப்பது, தவறான வழியில் செல்வது (நாத்திகம்) ஆகிய மூன்றும் மனத்தினால் விளையும் பாவங்களாம்.

"இன்னாச்சொல், பொய், எங்கும் புறங்கூறுதல், பயனில கூறுதல் ஆகிய நான்கும் வாக்கினால் விளையும் பாவங்களாம்.

"கொடுக்காமல் எடுத்துக் கொள்வது (திருட்டு), வேதங்களில் விதிக்காத ஹிம்சைகளைச் செய்வது, பிறர்மனை புகுதல் ஆகிய மூன்றும் உடலினால் விளையும் பாவங்களாம்.

"இப்படி மெய்யினால் மூன்று வகையும் மொழியினால் நான்கு வகையும் மனத்தினால் மூன்று வகையும் ஆகப்பத்து வகையான (அகுசல)

கர்மவழிகளை விடவேண்டும்." (மனு ஸ்மிருதி, 12, 5-9.)

இவற்றுள் முதல் சுலோகத்தில் 'கர்மயோகம்' என்ற சொல் மிகப் பயனுள்ளது. புத்தர் உபதேசித்த கர்மயோகம் மனுஸ்மிருதிகாரருக்கும் உடன்பாடுதான்; ஆனால் அதில் அவர் ஒரு விலக்கு விதித்தார். அதாவது, 'வேதங்களில் விதிக்காத ஹிம்சைகளைச் செய்யக் கூடாது; வேதத்தை ஆதாரமாகக் கொண்ட ஹிம்சை, ஹிம்சையே அன்று' என்பதுதான்.

## யுத்தம் தருமம்; ஆதலால் அகுசல கர்மவழிகள் வேண்டியவை

வேள்விகளில், ஹிம்சை விலக்கத்தக்கது என்பதை ஒப்புக் கொண்டிருந்தார்களானால், வேள்விகள் செய்யக் காரணமே இராது. இந்த வேள்விகளை அவர்கள் எதற்காகச் செய்தார்கள்? போரில் வெற்றி கிடைக்க வேண்டும்; வெற்றி எய்திய பிறகு கிடைத்த அரசு நீண்ட நாள் நிலைத்திருக்க வேண்டும் என்றுதான். அதாவது, 'போரில் நிகழும் ஹிம்சை, தருமமானது' என்று ஒப்புக்கொள்ளாமற்போனால், வைதீக ஹிம்சைக்குக் காரணமே இராது; ஆதலால் யுத்தத்துக்குத் தூய்மை தர வேண்டியதாயிற்று.

கண்ணன் கூறுகிறான்- "உன் சுய தர்மத்தை நோக்கும்பொழுதும், நீ பின்வாங்குவது சரியன்று. ஏனெனில், க்ஷத்திரியனுக்கு அறப்போரைக் காட்டிலும் உயர்ந்த நன்மை வேறில்லை.

"பார்த்தனே, தற்செயலாக எளிதில் வந்து, திறந்துள்ள சொர்க்க வாயிலாக விளங்கும் இத்தகைய போர், நல்வினை வாய்ந்த க்ஷத்திரியர்களுக்கே கிடைக்கின்றது.

"இப்படி இருந்தும் இந்த அறப்போரை நீ நடத்தாவிட்டால் சுய தர்மத்தையும் புகழையும் இழந்து பாவத்தைப் பெறுவாய்." (பகவத்கீதை, அத். 2, சுலோ. 31-33.)

யுத்தம் அறச்செய்கை என்று முடிவான பிறகு, அகுசல கர்மவழிகள் யாவுமே அறச் செய்கையாவது இயல்புதானே. அதாவது போரைத் தவிர வேறு இடங்களில் ஹிம்சை செய்யலாகாது; போரின்றிக் கொள்ளை யடிக்கக்கூடாது; போரின்றிப் பிறன்மனை புகலாகாது; இது போலவே பொய், புறங்கூறுதல், கடுஞ்சொல் ஆகியவற்றைப் போருக்குப் பயனுறுபவையாக இருந்தாலன்றி, அதாவது அரசியலிலன்றி, எங்கும் வழங்கக் கூடாது. பிறர் பொருளுக்கு ஆசைப்படுவது போரில்தான் மிக்க பயனைத் தரும். தன் சேனையில் பிறரைப் பற்றிய பகையைப் பரப்பினாலன்றிப் படைஞர்கள் போருக்கு எழவே மாட்டார்கள். சுய தருமத்துக்காக, சுய நாட்டுக்காக, அல்லது இப்படி ஏதாவது ஒரு கற்பனையான தூய செயலுக்காக நாம் போராடுகிறோம் என்ற

பொய்நோக்கத்தை விளைவித்தாலன்றி போரில் வெற்றிகிடைப்பது சாத்தியமன்று. மொத்தத்தில், ஒரு போருக்காகக் குசல கர்மங்கள் அனைத்தையும் கை கழுவுவது தூய்மையாம்!

'அசுவத்தாமா இறந்தான்' என்று அப்பட்டமான பொய் சொல்ல யுதிட்டிரன் இசையாதபோது, கண்ணன் அவனை 'நரோ வா குஞ்சரோ வா' (இறந்தது, அசுவத்தாமா என்ற மனிதனோ களிறோ) என்று பேச வைத்தான். இக்காலத்திய அரசியல் இப்படித்தான் இருக்கிறது- அரை உண்மை, அரைப்பொய். மேலும், ஒருவன் தன் நாட்டை முன்னேற்றமடையச் செய்துவிட்டானானால், எத்தகைய தீச்செயலும் (அகுசல கர்மமும்) மிகவும் தூயதாகிவிடும்!

## அறப் போரின் வளர்ச்சி

ஜைன, பௌத்த சமயங்களின் ஆற்றலினால் வைதிக ஹிம்சை நின்றுவிட்டது; ஆயினும், க்ஷத்திரியர்களிடையில் அறப்போர் நிலைத்திருந்தது. இதனால் அவர்களின் சுற்றத்தவர்களுக்குத் தூண்டுதல் கிடைத்தது. சுய தர்மத்துக்காகப் போரிடும் இந்த முறையை முகம்மது நபி வளர்த்தார்; 'நமக்குள் போரிடுவது சரியன்று' என்று அவர் கூறினார். இதையும்தோல்வியுறச் செய்யுமாறு கிறித்துவ மதப் போர்கள் (Crusades) நிகழ்ந்தன. இவை யாவற்றையும் துடைக்க வந்தது நாட்டுப் பற்று. இன்று நாட்டுப்பற்றுப் பேரறமாகக் கருதப்பெறுகிறது. அதற்காக எந்தத் தீச் செயல் செய்தாலும் பொருந்தும் என்று முடிவாகிவிட்டது. ஆனால் அதனால்தான் மாந்தர் அனைவரும் கரடுமுரடான வழியில் சிக்கியிருக்கிறார்கள். அதிலிருந்து வெளிவருவதற்கு, புத்தருடைய கர்மயோகத்தைத் தவிர வேறு நேர்மையான வழி எது?

# 9. வேள்வி

## புராணங்களில் வரும் புத்தர்

ஹிந்துக்கள் புத்தரைத் திருமாலின் ஒன்பதாவது அவதாரமாகக் கருதுகிறார்கள். திருமால் புத்த அவதாரம் எடுத்து அசுரர்களை மயக்கி, தேவர்களின் வாயிலாக அவர்களை அழித்ததாக விஷ்ணுபுராணத்தில் கதை வருகிறது. "இதற்குப் பின்பு கலியுகம் வரும்பொழுது, அசுரர்களுக்கு மயக்கம் விளைவிப்பதற்காக, அஜனன் மகன் புத்தன் என்பவன் கீகட நாட்டில் தோன்றுவான்" என்று, அதே கதையின் சாரத்தைத்தான் பாகவதமும் கூறுகிறது.

சாமானிய ஹிந்து மக்களுக்குப் புத்த அவதாரத்தைப் பற்றிச் சிறப்பாக ஏதும் தெரியாது. சாத்திரம் பயின்ற புலவர்களுக்கும், புராணம் கேட்கும் பக்தர்களான ஹிந்துக்களுக்கும் புத்தரைப்பற்றித் தெரிந்தவை எல்லாம், விஷ்ணுபுராணத்தினின்றும் பாகவதத்தினின்றும் கிடைக்கும் செய்திகளேயாம்.

## விஷ்ணு சாஸ்திரி அவர்களின் கருத்து

மேலைநாடுகளில் முதல்முதலில் பௌத்த சமயம், மாக்ஸ்மூலரின் குருவும், புகழ்வாய்ந்த பிரெஞ்சுப் புலவருமான பர்னுப் என்பவரின் கவனத்தைக் கவர்ந்தது. ஆனால் போதிய கருவிகள் கிடைக்காமையால் அவர் இந்தச் சமயத்தின் முழு விவரங்களையும் மேல் நாட்டினருக்கு எடுத்துச் சொல்ல இயலவில்லை. ஆயினும், 'பௌத்த சமயம் விலக்கத் தக்கது; அது சிந்தனைக்கு உரியதன்று' என்று மேல்நாட்டினர் கருதிவந்த நிலை, பர்னுப்பின் முயற்சியினால் பெரிதும் மாறியது. இதன் பயனாக, டாக்டர் வில்ஸன் போன்ற கிறிஸ்து பக்தர்கள் கூடப் பௌத்த சமயத்தைப் பயிலலானார்கள். இவர்களோடு பழகியதனால் பௌத்த சமயத்தைப் பற்றி நம் நாட்டுக் கல்லூரி மாணவர்களின் கருத்தும் மாறியது.

புகழ்பெற்ற மராட்டி எழுத்தாளரான (காலஞ்சென்ற) விஷ்ணு சாஸ்திரி சிப்ளூண்கர், பாண கவியைப் பற்றிய தமது கட்டுரையில் கூறுகிறார்- "ஆரியர்களின் தலைமையான வைதிக மதத்தில் முதல் முதலில் கருத்து வேற்றுமையை விளைவித்தவர் புத்தர். நாளடைவில் பலர் அவருடைய சமயத்தைப் பின்பற்றியதனால் தருமத்தில் பிளவு ஏற்பட்டது. இந்தப் புதிய மதத்தவர் தங்களைப் பௌத்தர் என்று சொல்லிக்கொண்டார்கள். இவர்களின் புதிய கருத்துக்கள் யாவை, இவை

எப்பொழுது எவ்வாறு தோன்றி வளர்ந்து மறைந்தன என்ற விஷயங்கள் சரித்திர ஆசிரியர்களுக்கு மிகவும் சுவையூட்டுவனவாக இருந்தன; ஆனால் இப்போது அவற்றைச் சொல்லிப் பயன் என்ன? சரித்திர ஆதாரம் இல்லாமையால் உலகம் முழுவதும் இந்தப் பெரும்பயனை இழந்ததுபோலவே நாமும் இழந்தோம் என்ற பழமையான, வருத்தத்துக்குரிய விஷயத்தைத்தான் மீண்டும் இங்கே சொல்ல வேண்டும். நிற்க. புத்தரைப்பற்றி நமக்கு ஏதும் செய்தி தெரியவில்லையாயினும், அவருடைய அறிவு ஒப்பற்றதாக இருந்திருக்க வேண்டும். ஏனெனில் அவரை எதிர்த்தவர்களாகிய அந்தணர்களுங்கூட அவரை இறைவனுடைய சாட்சாத் ஒன்பதாவது அவதாரம் என்று எண்ணினார்கள். ஜயதேவர் கீத கோவிந்தத்தின் தொடக்கத்தில், 'அருளுள்ளம் வாய்ந்த கேசவா, உயிரைக் கொன்று யாகம் செய்வதை விதிக்கும் மறைகளைப் பழிக்கும் புத்தனாய் நீ தோன்றியிருக்கிறாய். வாழி உலக நாயகனே வாழி!' என்று கூறியிருக்கிறாய்.

"கி.பி. முதல் நூற்றாண்டின் தொடக்கத்தில் புத்தருக்கும் அந்தணர்களுக்கும் மிகப் பெரிய வாதங்கள் நிகழ்ந்தன. அவர்களுள் சங்கராசாரியார் பௌத்த சமயத்தைக் கண்டித்து, மீண்டும் வைதிக தருமத்தை நிறுவினார். இவ்வாறு தோல்வியுற்றதும், பௌத்தர்கள் தாங்களாக விரும்பியோ அல்லது அரசர்களின் கட்டளையினாலோ இந்த நாட்டைத் துறந்தார்கள்; சிலர் திபேத்துக்கும், சிலர் சீனத்துக்கும், சிலர் இலங்கைக்கும் சென்று குடியேறினார்கள்."

இந்த மேற்கோளிலிருந்து, ஆங்கிலமறிந்த அந்தக் காலத்திய ஹிந்துக்கள் பௌத்த சமயத்தைப்பற்றி என்ன நினைத்து வந்தார்கள் என்பதை அறியலாம்.

## 'ஆசிய ஜோதி' யினால் உண்டான பயன்

இதற்குப் பின்பு 1879-ஆம் ஆண்டில் எட்வர்டு ஆர்னால்டின் 'ஆசிய ஜோதி' (Light of Asia) என்ற காவியம் வெளிவந்தது. அதைப் படித்ததனால், ஆங்கில மறிந்த ஹிந்துக்களுக்குப் புத்தரிடம் ஆதரம் பெருகியது. ஆனால், 'வேள்விகளை அழித்து அஹிம்சையே பரம தர்மம் என்று நிறுவுவதற்காகவே புத்தர் அவதரித்தார்' என்ற கருத்து உறுதியாக ஊன்றியது. இந்தக் கருத்தில் எவ்வளவு உண்மை இருக்கிறது என்பதை அறிய, புத்தருடைய காலத்தில் இருந்த சிரமணர்களும், புத்தரும் வேள்விகளைப்பற்றி என்ன கூறினார்கள் என்பதை ஆராய்வது பொருத்தமாம்.

## ஹரிகேசிபலன் கதை

சிரமண சம்பிரதாயங்களுக்குள் ஜைனம், பௌத்தம் என்ற இரண்டு சம்பிரதாயங்களைச் சார்ந்த நூல்களே இன்று நமக்குக் கிடைக்கின்றன. அவற்றுள் ஜைனர்களின் உத்தராத்தியயன சூத்திரத்தில் ஹரிகேசி பலன் என்பவனுடைய கதை வருகிறது அதன் சாரம் வருமாறு-

ஹரிகேசிபலன் என்பவன் (நாய் சமைக்கும்) புலையனுடைய மகன். அவன் ஜைன பிட்சுவாகிப் பெருந்தவம் இயற்றினான். ஒரு தடவை அவன் ஒரு மாதம் வரையில் உபவாசம் இருந்து, பாரணையன்று பிட்சை எடுத்துக்கொண்டே, பெருவேள்வி நிகழும் ஓர் இடத்துக்குச் சென்றான். அழுக்குத் துணியைப் போர்த்துக் கொண்டு மெலிந்த உடலுடன் இருந்த அவனைக் கண்டு யாகம் செய்யும் அந்தணர்கள் பழித்தார்கள்; அவனை அங்கிருந்து போகச் சொன்னார்கள். அப்பொழுது அங்கே ஒரு தும்பிலி மரத்தில் இருந்துவந்த இயக்கன் மறைவாக ஹரிகேசிபலனுடைய குரலில், "அந்தணர்களே, நீங்கள் வெறும் சொற் சுமையைத் தாங்குகிறீர்கள்; வேதம் பயிலுகிறீர்களே தவிர, மறைப்பொருளை நீங்கள் அறிய மாட்டீர்கள்" என்றான். அந்தப் பிட்சு தங்களை அவமானப் படுத்தியதாக எண்ணிய வைதிக அந்தணர்கள், தங்கள் இளம் பிள்ளைகளிடம், "இவனை அடித்து உதையுங்கள்" என்றார்கள். அந்தப் பிள்ளைகள் தடியும் பிரம்பும் சாட்டையும் கொண்டு அவனை அடிக்கலானார்கள். அதைக் கண்ட கோசலிகராஜனுடைய பெண்ணும், புரோகிதன் மகளான பத்திரையும் அவர்களைத் தடுத்தார்கள். இதற்குள் பல இயக்கர்கள் வந்து அந்தப் பிள்ளைகளை ரத்தவளாராக அடித்து விட்டார்கள். அதனால் அந்தணர்கள் பயந்து போனார்கள். இறுதியில் அவர்கள் ஹரிகேசிபலனிடம் மன்னிப்பு வேண்டிக்கொண்டு, அவனுக்குப் பல சுவையான பண்டகங்களோடு உயர்ந்த சோற்றைப் படைத்தார்கள்.

அந்தச் சோற்றை ஏற்றுக்கொண்ட ஹரிகேசிபலன் அவர்களிடம், "அந்தணர்களே, நீங்கள் தீ மூட்டி நீரினால் புறத்தூய்மை பெற ஏன் முயலுகிறீர்கள்? உங்களுடைய இந்தப் புறத்தூய்மை தக்கதன்று என்று தத்துவ அறிஞர்கள் கூறுகிறார்கள்" என்றான்.

அப்பொழுது அந்தணர்கள், "பிட்சுவே, நாங்கள் எத்தகைய வேள்வி செய்வது? கன்மத்தை எப்படி அழிப்பது?" என்று கேட்டார்கள்.

ஹரிகேசிபலன், "ஆறு ஜீவகாயங்களுக்கு[1] ஹிம்சை செய்யாமலும்,

1. பிருதிவி காயம், அப்புக் காயம், வாயு காயம், அக்கினிக் காயம், வனஸ்பதி காயம், த்ரஸ காயம் என்று உயிர்கள் ஆறு வகையாம். மண் பரமாணு முதலியவற்றில் உயிர் உண்டு என்பது ஜைனர் கொள்கை. மரம் செடி கொடி புல் பூண்டு ஆகியவை வனஸ்பதி காயமாம். இயங்குவனவும் இயங்காதனவுமான பிராணிகள் யாவும் த்ரஸ காயத்துள் அடங்கும்.

பொய் பேசாமலும், திருடாமலும், உடைமை பெண்தற்பெருமை மாயை ஆகியவற்றை விடுத்தும் நல்லோர் புலனடக்கத்தோடு நடந்து கொள்கிறார்கள். அவர்கள் ஐந்து சம்வரங்களைக்[1] கொண்டவர்களாய், வாழ்வில் ஆவல் கொள்ளாமல், உடலில் விருப்பமின்றி, 'உடலைப் பற்றிய பொருள்களில் பற்றற்றவர்களாய் இருப்பார்கள். (இங்ஙனம்) அவர்கள் உயர்ந்த வேள்வியைச் செய்கிறார்கள்" என்றான்.

அந்தணர்கள், "உன் அக்கினி எது? அக்கினிக் குண்டம் எது? சுருவை யாது? வறட்டிகள் யாவை? சமிதை யாவை? சாந்தி எது? எந்த ஓமவிதியால் நீ வேள்வி செய்கிறாய்?" என்று கேட்டார்கள்.

"தவம் என் அக்கினி. சீவன் அக்கினிக் குண்டம். யோகமே சுருவை. உடல் வறட்டி. கன்மங்கள் சமிதை. அடக்கமே சாந்தி. இவ்வண்ணம் ரிஷிகள் வருணித்துள்ள வேள்வியை நான் செய்கிறேன்."

"உன் குளம் எது? உன் சாந்தி தீர்த்தம் யாது?" என்று அந்தணர்கள் வினவினார்கள்.

"தருமமே என் குளம்; பிரம்மசரியமே சாந்தி தீர்த்தம். இதில் நீராடி மாசற்ற, தூய்மை மிகுந்த மகரிஷிகள் பெரும்பதத்தைப் பெறுகிறார்கள்" என்று விடையளித்தான் ஹரிகேசிபலன்.

இதைத் தவிர, யாகயக்ஞங்களை மறுக்கும் மற்றொரு காதை இதே உத்தராத்தியயன சூத்திரத்தின் 25-ஆம் அத்தியாயத்தில் இருக்கிறது. "வேதங்கள் அனைத்திலும் பசுவதம் சொல்லப்பெறுகிறது. எனவே யாகம் என்பது பாவச்செயல் கலந்தது. யாகம் செய்பவர்களின் அந்தப் பாவச் செயல்கள் அவர்களைக் காக்க முடியாது" என்று அது கூறுகிறது.

ஹரிகேசிபலனுடைய கதை யாகத்தை மட்டுமே மறுக்கிறது; ஆனால் இந்தக் காதையோ, யாகத்தை மட்டுமன்றி வேதத்தையும் மறுக்கிறது என்பது தெளிவு.

## சிரமண மதங்களின் வேத எதிர்ப்பு

சர்வதரிசன சங்கிரகத்தில் வரும் சார்வாக மத வருணனையைப் பார்க்கும்பொழுது. அஜித கேஸகம்பலன் நாத்திகத்தைப் பரப்பினவனாதலால் யாகயக்ஞங்களை மட்டுமின்றி வேதங்களையும் மறுத்திருப்பான் என்று தோன்றுகிறது. சார்வாகக் கொள்கையைப் புலப்படுத்தும் சுலோகங்களுக்குள், பின்வரும் விஷயமும் சர்வ தரிசன சங்கிரகத்தில் வருகிறது-

"அக்கினிஷ்டோம யாகத்தில் கொலையுண்ட பசு சொர்க்கத்துக்குப் போகிறது என்றால், வேட்பவன் அந்த யாகத்தில் தன் தந்தையையே ஏன்

1.ஐந்து சம்வரங்களாவன - அஹிம்சை, வாய்மை, கள்ளாமை, பிரம்மசரியம், அவாவின்மை என்பன. இவற்றையே யோகநூலார் இயமம் என்பர். சாதனபாதம், சூத்திரம் 30 காண்க.

கொல்லலாகாது? ...வேதங்களை இயற்றியவர்கள் மூவர் - கோமாளி, மோசக்காரன், அரக்கன்."

இதிலிருந்து, பெரும்பாலான சிரமண சம்பிரதாயங்கள் ஏறவோ தாழவோ வேதங்களைத் தெளிவாக மறுத்தன என்று தெரிகிறது. எனவே அவை வேத நிந்தனை செய்தன என்று சொல்லத் தடை இல்லை. ஆனால் புத்தர் வேதங்களைப் பழித்ததாக எங்குமே சான்று இல்லை. இன்னும் கேட்டால் வேதம் பயில்வதை அவர் அங்கங்கே பெருமைப்படுத்துகிறார். புத்தருடைய பிட்சு சங்கத்தில் மகாகாத்தியாயனர் போன்ற வேத பாரங்கதர்களான அந்தணர்கள் இருந்தார்கள். ஆகவே புத்தர் வேதத்தைப் பழித்திருக்கவே முடியாது. ஆயினும் மற்றச் சிரமணர்களைப் போலவே அவரும் யாகயக்ஞங்களில் பசு, எருது முதலிய உயிர்கள் இம்சிக்கப்படுவதை வெறுத்தார்.

## யாகத்துக்கு மறுப்பு

கோஸலஸம்யுத்தத்தில் யாகயக்ஞங்களை மறுக்கும் ஸுத்தமொன்று வருகிறது. அது கூறுவதாவது-

புத்தர்பெருமான் சிராவஸ்தியில் இருந்தபொழுது, கோசல மன்னனான பஸேனதியின் பெருவேள்வி தொடங்கியது. அதில் ஐந்நூறு எருதுகளும், ஐந்நூறு சேங்கன்றுகளும், ஐந்நூறு கடாரிகளும், ஐந்நூறு வெள்ளாடுகளும், ஐந்நூறு செம்மறிகளும் பலி கொடுப்பதற்காக யூபத்தில் கட்டப்பெற்றிருந்தன. அரசனுடைய அடிமைகளும் தூதர்களும் காரியஸ்தரும் தண்டனைக்குப் பயந்தவர்களாக, கண்ணீர் வடித்து அழுது கொண்டே, வேள்விக்குரிய செயல்களைச் செய்து வந்தார்கள்.

இவை அனைத்தையும் கண்ட பிட்சுக்கள், பெருமானிடம் தெரிவித்தார்கள். அப்பொழுது பகவான் கூறினார்- "அசுவமேதம், புருஷமேதம், ஸம்யக்பாசம், வாஜபேயம், நிரர்க்கலம் என்ற யாகங்கள் மிகவும் செலவுள்ளவை; ஆனால் அவை பெரும்பயன் தருவன அல்ல. வெள்ளாடுகளும் செம்மறிகளும் பசுக்களுமாகப் பல்லுயிர்கள் கொல்லப்படும் யாகத்துக்கு நல்லொழுக்கம் வாய்ந்த மகரிஷிகள் போவதில்லை. ஆனால், ஜீவஹிம்சை யற்றதும், மக்களுக்கு விருப்பமானதும், வெள்ளாடு செம்மறி பசு முதலிய உயிர்கள் கொல்லப்படாததுமான யாகத்துக்கு நல்லொழுக்கம் வாய்ந்த மகரிஷிகள் வருவார்கள். ஆதலால் நல்லறிவு வாய்ந்தவன் இத்தகைய வேள்வியே செய்ய வேண்டும். இந்த வேள்வி பெரும்பயன் அளிப்பது; ஏனெனில் இந்த வேள்வியின் தலைவனுக்கு நன்மையே உண்டாகும்; தீமை உண்டாகாது. இந்த வேள்வி வளர்ச்சி பெறும். இதனால் தேவர்கள் களிப்பார்கள்."

## யாகத்தில் பாவம் ஏன்?

யாகத்தில் உயிர்க்கொலை செய்வதனால் வேள்வித் தலைவன் மெய் வாய் மனத்தினால் அகுசல கன்மங்களை (தீவினைகளை)ச் செய்தவனாகிறான்; ஆதலால் யாகம் அமங்கலமானது என்று புத்தர் மொழிந்தார். இதுபற்றிய ஸுத்தம் ஒன்று, அங்குத்தர நிகாயத்தில் ஸத்தகநிபாதத்தில் வருகிறது. அந்த வரலாறு கூறுவதாவது-

ஒருசமயம் பெருமான் சிராவஸ்தியில் ஜேதவனத்தில் அநாதபிண்டிகனுடைய ஆராமத்தில் இருந்தார். அப்பொழுது உத்கதசரீரன் (உக்கதஸரீர) என்ற அந்தணன் பெருவேள்விக்கு ஆயத்தம் செய்தான். ஐந்நூறு எருதுகளும், ஐந்நூறு சேங்கன்றுகளும், ஐந்நூறு கடாரிகளும், ஐந்நூறு வெள்ளாடுகளும், ஐந்நூறு செம்மறிகளும் பலி கொடுப்பதற்காக வேள்வித் தூணில் கட்டப்பெற்றிருந்தன. அப்போது உத்கதசரீரன் பெருமானிடம் வந்து, அவரது நலத்தைப்பற்றிக் கேட்ட பின் ஒரு புறமாக அமர்ந்தான்; "கோதமரே, யாகத்துக்காகத் தீக்கடைவதும் வேள்வித்தூணை நிறுவுவதும் பெரும்பயன் தருவன என்று நான் கேள்வியுற்றிருக்கிறேன்" என்றான்.

"அந்தணனே, யாகத்துக்காகத் தீக்கடைவதும் தூணை நிறுவுவதும் பெரும்பயன் தருவன என்று நானும் கேள்வியுற்றிருக்கிறேன்" என்றார் பெருமான்.

அந்தணன் இதே வாக்கியத்தைப் பின்னும் இரண்டு தடவை சொன்னான்; பெருமானும் அதே மறுமொழியை அளித்தார். அப்போது அந்தணன், "அப்படியானால் நம் இருவரின் கருத்தும் ஒன்றுதான்" என்றான்.

அதற்கு ஆனந்தன், "அந்தணனே, உன்னுடைய இந்தக் கேள்வி சரியன்று. 'நான் கேள்வியுற்றிருக்கிறேன்' என்று சொல்வதற்குப் பதிலாக, 'யாகத்துக்காகத் தீக் கடையவும் தூண் நிறுவவும் நான் முயலுகிறேன்; இதுபற்றிப் பெருமான் எனக்கு நீடூழி நன்மை உண்டாகும்படியாக உபதேசிக்க வேண்டும்' என்று நீ சொல்" என்றான்.

ஆனந்தன் கூறியவாறே அந்தணன் பெருமானைக் கேட்டான். அப்போது பெருமான் பணித்தார்- "வேள்விக்காகத் தீக்கடைந்து தூணை நிறுவுகிறவன், துன்பம் பயக்கும் மூன்று அகுசலப் (தீய) படைக்கலங்களை எடுத்தவனாகிறான். அவை யாவை? மெய்ப்படை, வாய்ப்படை, மனப்படை, வேள்வியைத் தொடங்குகிறவனுடைய மனத்தில், இத்தனை எருதுகளையும் இத்தனைச் சேங்கன்றுகளையும் இத்தனைக் கடாரிகளையும் இத்தனை வெள்ளாடுகளையும் இத்தனைச் செம்மறிகளையும் கொல்ல வேண்டும் என்ற தீய எண்ணம் எழுகிறது. இவ்வாறு முதல்முதலில் அவன், துன்பம் பயக்கும் அகுசல மனப்படையை எடுக்கிறான். பிறகு அவன் இந்த உயிர்களைக் கொல்லத்

தன் வாயினால் கட்டளையிடுகிறான்; எனவே, அவன் துன்பம் பயக்கும் அகுசல வாய்ப்படையை எடுக்கிறான். பிறகு அந்த உயிர்களை மாய்க்க, முதலில் தானே அவற்றைக் கொல்லத் தொடங்குகிறான்; எனவே, அவன் துன்பம் பயக்கும் அகுசல மெய்ப்படையை எடுக்கிறான்.

"அந்தணனே, இந்த மூன்று அக்கினிகள் தியாகம் செய்வதற்கும் புறக்கணிப்பதற்கும் உரியவை; இவற்றை வழிபடலாகாது. இவை யாவை? காம அக்கினி, துவேஷ அக்கினி, மோக அக்கினி. காமம் சூழ்ந்தவன் மெய் வாய் மனத்தினால் தீய செயல்களே புரிகிறான். ஆதலால் செத்த பின்பு தீய கதியை அடைகிறான். அதுபோலவே பகையும் மோகமும் சூழ்ந்தவனும் மெய்வாய் மனத்தினால் தீய செயல்களைப் புரிந்து துர்க்கதியையே அடைகிறான். ஆதலால் இந்த மூன்று அக்கினிகள் தியாகம் செய்வதற்கும் புறக்கணிப்பதற்கும் உரியவை; இவற்றை வழிபடலாகாது.

"அந்தணனே, இந்த மூன்று அக்கினிகளைப் போற்ற வேண்டும், மதிக்க வேண்டும்; இவற்றை வழிபட்டு, நன்றாக, சுகமாகப் பணிவிடை செய்ய வேண்டும். இந்த அக்கினிகள் யாவை? ஆகவனீய அக்கினி (ஆஹுனேய்யக்கி), காருகபத்திய அக்கினி (கஹபதக்கி), தட்சிணாக்கினி (தக்கிணேய்யக்கி)[1] என்பவை. தாய்தந்தையரை ஆகவனீய அக்கினியாகக் கருதி, அவர்களை மிக்க மதிப்போடு வழிபட வேண்டும். மனைவிமக்களையும் அடிமைகளையும் வேலையாட்களையும் காருகபத்திய அக்கினியாகக் கருதி அவர்களை ஆதரவோடு வழிபட வேண்டும். சிரமண அந்தணர்களைத் தட்சிணாக்கினியாகக் கருதி அவர்களைப் போற்றி வழிபட வேண்டும். அந்தணனே, மரத்தைக் கடைந்து உண்டாக்கிய தீயைச் சில சமயம் பற்றவைக்க வேண்டியிருக்கிறது; சில சமயம் அசட்டை செய்ய வேண்டியிருக்கிறது; சில சமயம் அணைக்க வேண்டியிருக்கிறது."

புத்தரின் இந்தப் பேச்சைக் கேட்டு உத்கதசரீரன் என்ற அந்தணன் அவருடைய அடியவன் ஆனான். அவன், "கோதமரே, ஐந்நூறு எருதுகள், ஐந்நூறு சேங்கன்றுகள், ஐந்நூறு கடாரிகள், ஐந்நூறு வெள்ளாடுகள், ஐந்நூறு செம்மறிகள் ஆகிய உயிர்கள் அனைத்தையும் நான் வேள்வித் தூண்களிலிருந்து விடுவிக்கிறேன். அவற்றுக்கு உயிர் அளிக்கிறேன். பசும்புல்லைத் தின்றும் தண்ணிய நீரைக் குடித்தும் அவை குளிர்ந்த நிழலில் ஆனந்தமாக வாழட்டும்" என்றான்.

---

1. பிராம்மணக் கிரந்தங்களில் இந்த முத்தீ, பிரசித்தமானது. அமர கோசத்தில் இம்மூன்றின் பெயர்கள் வருகின்றன. இவற்றை வழிபடும் வகை யாது, அதனால் பயன் என்ன என்ற விவரங்கள் கிருகிய சூத்திரம் முதலிய நூல்களில் இருக்கின்றன.

## யாகத்தில் தவத்தின் கலப்பு

புத்தர் காலத்தில் நிகழ்ந்துவந்த யாகயக்ஞங்களில் அந்தணர்கள் தவத்தைக் கலந்திருந்தார்கள். வைதிக முனிவர்கள் காட்டில் வாழ்ந்து தவம் செய்தபோதிலும், சௌகரியப்படி இடையிடையே சிறிய யாகமோ பெரிய யாகமோ நிகழ்த்திக்கொண்டுதான் இருந்தார்கள். இதற்கு இரண்டோர் உதாரணங்களை முன்னமே மூன்றாம் அத்தியாயத்தில் சொல்லியிருக்கிறேன். இவற்றைத் தவிர, யாக்ஞவல்கியரின் வரலாற்றைப் பாருங்கள். அவர் பெருந்தவத்தர், பிரம்மநிஷ்டர் என்று யாவரும் கருதினார்கள். அப்படி இருந்தும் அவர் ஜனக மன்னனுடைய வேள்வியில் பங்கு கொண்டு இறுதியில் ஓராயிரம் பசுக்களைப் பத்தாயிரம் பாதங்களவு[1] பொன்னோடு தட்சிணையாக ஏற்றார்.[2]

ஆனால், வேள்வியையும் தவத்தையும் கலப்பது இருமடங்கு துன்பத்தைத் தரும் என்று புத்தர்பெருமான் கூறினார். கந்தரக ஸுத்தத்தில்[3] பெருமான் நால்வகையான மாந்தரை வருணித்திருக்கிறார். அவர்கள் யாவர் எனில், 1. தன்னைத் துன்புறுத்துவோன் (ஆத்மந்தபன்), ஆனால் பிறரைத் துன்புறுத்தாதவன்; 2. பிறரைத் துன்புறுத்துவோன் (பரந்தபன்), ஆனால் தன்னைத் துன்புறுத்தாதவன்; 3. தன்னைத் துன்புறுத்து வோனாகவும் பிறரைத் துன்புறுத்துவோனாகவும் இருப்பவன்; 4.தன்னைத் துன்புறுத்தாமலும் பிறரைத் துன்புறுத்தாமலும் இருப்பவன்.

இந்த நால்வரில், முதல்வன் கடுந்தவம் இயற்றும் தவசி. அவன் தன்னைத் துன்புறுத்துகிறான்; ஆனால் பிறரைத் துன்புறுத்துவதில்லை. இரண்டாமவன், கொலையாளி, வேடன் முதலியவர்களில் ஒருவன். அவன் பிற உயிரைத் துன்புறுத்துகிறான்; ஆனால் தன்னைத் துன்புறுத்துவ தில்லை. மூன்றாமவன், யாகயக்ஞங்கள் செய்பவன். அவன் தன்னையும் துன்புறுத்துகிறான்; பிற உயிர்களையும் துன்புறுத்துகிறான். நான்காமவன் ததாகதருடைய (புத்தரின்) சிராவகன். அவன் தன்னையோ பிறரையோ துன்புறுத்துவதில்லை.

இந்த நால்வரைப் பற்றிய விரிவான வருணனை அந்த ஸுத்தத்தில் வருகிறது. அதில் மூன்றாமவனைப் பற்றிய விவரத்தின் சாரம் இது- பகவான் கூறுகிறார்: "பிட்சுக்களே, ஆத்மந்தபனாகவும் (தன்னைத் துன்புறுத்துவோனாகவும்) பரந்தபனாகவும் (பிறரைத் துன்புறுத்து வோனாகவும்) இருப்பவன் எவன்? ஒரு க்ஷத்திரிய அரசன் அல்லது ஒரு பணக்கார அந்தணன் புதிய பொது இல்லத்தை அமைக்கிறான். அவன் முண்டனம் செய்து, கழுதைத் தோலைப் போர்த்துக்கொண்டு, உடலில்

1. பாதமளவு பொன் என்பது, கால் பலம் நிறையுள்ளது. (மொ-ர்.)
2. பிருகதாரணியக உபநிடதம், 3-1-1,2 காண்க.
3. மஜ்ஜிமநிகாயம், 51.

நெய்யும் எண்ணெயும் தேய்த்து, மான் கொம்பால் முதுகைச் சொறிந்து கொண்டே தன் மனைவியுடனும் புரோகித அந்தணனுடனும் அந்த இல்லத்தில் பிரவேசிக்கிறான். அங்கே, சாணத்தால் மெழுகிய தரையில், விரிப்பு ஏதுமின்றி, அவன் தூங்குகிறான். நல்ல பசு ஒன்றின் ஒரு காம்பிலிருந்து சுரக்கும் பாலை அவன் அருந்துகிறான்; இரண்டாவது காம்பில் சுரக்கும் பாலை அவன் மனைவி அருந்துகிறான்; மூன்றாவது காம்பில் சுரக்கும் பாலைப் புரோகித அந்தணன் அருந்துகிறான். நான்காவது காம்பில் சுரக்கும் பாலை ஓமம் செய்கிறார்கள். நான்கு காம்புகளிலும் மீதி இருக்கும் பாலைக் கன்றுக்கு ஊட்டுகிறார்கள்.

"பிறகு அவன், 'இந்த என் யாகத்துக்காக இத்தனை எருதுகளைக் கொல்லுங்கள்; இத்தனை சேங்கன்றுகளைக் கொல்லுங்கள்; இத்தனைக் கடாரிகளைக் கொல்லுங்கள்; இத்தனை வெள்ளாடுகளைக் கொல்லுங்கள்; இத்தனைச் செம்மறிகளைக் கொல்லுங்கள். வேள்வித் தூண்களுக்காக இத்தனை மரங்களை வெட்டுங்கள். தருப்பையாசனத்துக் காக இவ்வளவு தருப்பைகளை அறுங்கள்' என்கிறான். அவனுடைய அடிமைகளும் தூதரும் காரியஸ்தரும் தண்டனைக்குப் பயந்து, கண்ணீர் வடித்து அழுதுகொண்டே அந்த வேலைகளைச் செய்கிறார்கள். இத்தகையவனைத்தான் ஆத்மந்தபனும் பரந்தபனுமாக இருப்பவன் என்பர்."

## மக்கள் பசுஹிம்சையை வெறுத்தனர்

மேற்கூறியபடி அடிமைகளும் தூதரும் காரியஸ்தரும் யாகத்துக்குரிய வேலைகளை அழுதுகொண்டே செய்ததற்குக் காரணம் என்ன? இந்த வேள்வியில் கொல்வதற்கு வேண்டிய விலங்குகளை ஏழைக் குடியானவர்களிடமிருந்து வலியப் பற்றிக்கொள்வார்கள். அதனால் குடியானவர்களுக்கு மிகவும் துன்பம் உண்டாயிற்று. ஸுத்தநிபாதத்தில் பிராஹ்மணதம்மிக ஸுத்தத்தில், மிகப் பழங்காலத்து அந்தணர்களின் ஒழுக்கத்தைப் பற்றிய விவரம் வருகிறது. அதில், "தாய் தந்தை, அண்ணன் தம்பி, மற்ற உறவினர் ஆகியவர்கள் போலவே பசுக்களும் நமக்கு உற்ற துணையாம். ஏனெனில், பயிர்த்தொழில் அவற்றைச் சார்ந்திருக்கிறது. அவை உணவும் ஆற்றலும் ஒளியும் இன்பமும் தருபவை. இந்தக் காரணத்தை அறிந்து, பழமையான அந்தணர்கள் பசுக்களைக் கொல்லாதிருந்தனர்" என்ற கருத்துள்ள கதைகள் இருக்கின்றன.

பொது மக்கள் பசுக்களைத் தம் உற்றார் உறவினரைப் போலவே மதித்தார்கள்; வேள்விகளில் அவற்றை மனம் போனபடி கொல்வதை அவர்கள் அடியோடு விரும்பவில்லை என்பது இதிலிருந்து தெளிவாகிறது. அரசர்களும் செல்வர்களும் தங்கள் சொந்தப் பசுக்களைக் கொன்றிருந்தால் அவர்களுடைய அடிமைகளும் காரியஸ்தர்களும்

அழுவது குறைவாக இருந்திருக்கும். ஆனால், தம்மைப் போலவே ஏழைகளான குடியானவர்களிடமிருந்து இந்த விலங்குகளை வலியப் பற்றியதனால் அவர்களுக்கு மிகுந்த துன்பம் உண்டாவது இயல்பு தானே? யாகத்துக்காக மக்களை எவ்வாறு கொடுமைப் படுத்தினார்கள் என்பதைப் பின்வரும் காதை விளக்குகிறது-

"கோணற் பாதையில் சென்று வதைத்தே
ஓவென மக்கள் கதற, அளிப்பர்;
கண்ணீர் நிரம்பிய தண்டனை யோடு
மண்ணில் அளிக்கும் இந்தத் தட்சிணை,
நடுநிலை நின்று கொடுக்கும் கொடைக்கே
கடுகள வேனும் ஈடெனப் பெறுமோ?"



அந்தக் காலத்தில் வேள்விகளுக்காக உயிர்க்கொலை செய்தது போலவே வயிற்றுப் பிழைப்புக்காகவும் பல்லுயிர்களையும் கொன்று வந்தனர். பசுவைக் கொன்று அதன் புலாலை நாற்சந்தியில் விற்கும் பழக்கம் மிகுதியாக இருந்தது.[1] ஆனால் புத்தர் வேள்விகளை மறுத்த அளவுக்கு இந்தத் தீச்செய்கையை மறுத்ததாகத் தெரியவில்லை. நாற்சந்தியில் புலால் விற்கும் பழக்கம் புத்தருக்குப் பிடித்திருந்தது என்று இதனால் கருதிவிட வேண்டாம். யாகத்தில் நடக்கும் கொலைக்கு முன்னால் இது ஒரு பொருட்டே இல்லை. கசாப்புக்காரன் கையில் கிடைக்கும் பசு மரத்துப்போனதாக இருக்கும்; எருது வயல் வேலைக்குப் பயனற்றதாக இருக்கும். ஆதலால் அவற்றுக்காக யாரும் கண்ணீர் விடவில்லை. ஆனால் வேள்விபற்றிய விஷயம் வேறு. ஐந்நூறு அல்லது எழுநூறு கடாரிகளையும் சேங்கன்றுகளையும் ஒரு வேள்விக்காகக் கொல்வதென்றால், அதனால் பயிர்த்தொழிலுக்கு எவ்வளவு நஷ்டம் உண்டாகியிருக்கும். குடியானவர்கள் எவ்வளவு துன்பப்பட்டிருப்பார்கள் என்பதைக் கற்பனைக்கண் கொண்டு தெரிந்து கொள்ளலாம். இத்தகைய கொடுமைகளைப் புத்தர் மறுத்தார் என்றால், வேத நிந்தனை செய்தவர் என்று அவரை ஏன் சொல்ல வேண்டும்?

## நல்வேள்வி எது?

அரசர்களும் பணக்கார அந்தணர்களும் எவ்வாறு வேள்வி செய்ய வேண்டும் என்பதுபற்றிப் புத்தர் பெருமான் தீகநிகாயத்தில் கூடதந்த ஸுத்தத்தில் குறிப்பிட்டிருக்கிறார். அந்த ஸுத்தத்தின் சாரமாவது-

ஒரு தடவை புத்தர்பிரான் மகதநாட்டில் சஞ்சாரம் செய்து கொண்டிருக்கையில் காணுமதம் என்ற அந்தணர் கிராமத்துக்கு வந்தார்.

1. ஸதிபட்டான ஸுத்தத்தில் இவ்வாறு புலால்விற்கும் பழக்கத்தைப் பற்றிய விவரம் இருக்கிறது.

இந்த ஊரை மகத மன்னனான பிம்பிசாரன், கூடதந்தன் என்ற அந்தணனுக்கு மானியமாகக் கொடுத்திருந்தான். அந்த அந்தணன் பெருவேள்விக்காக எழுநூறு எருதுகளும், எழுநூறு சேங்கன்றுகளும், எழுநூறு கடாரிகளும், எழுநூறு வெள்ளாடுகளும், எழுநூறு செம்மறிகளும் கொண்டு வந்திருந்தான்.

பெருமான் தமது ஊருக்கருகில் வந்துள்ள செய்தியைச் செவியுற்றதும் காணுமதக் கிராமத்து அந்தணர்கள் ஒரே கூட்டமாகப் பெருமானைத் தரிசிக்கக் கருதி, கூட தந்தனுடைய மாளிகை வழியே போனார்கள். அவர்கள் எங்கே போகிறார்கள் என்பதை அவன் கேட்டுத் தெரிந்து கொண்டு தன் வேலையாளிடம், "நானும் பகவானைத் தரிசிக்க விரும்புகிறேன்; ஆதலால் இந்த அந்தணர்களைச் சற்று நிற்கச் சொல்" என்றான்.

கூடதந்தனுடைய வேள்விக்காக ஏராளமான அந்தணர்கள் வந்து குழுமியிருந்தார்கள். அவன் பெருமானைக் காணப்போகிறேன் என்ற செய்தியைக் கேட்டதும் அவர்கள் அவனிடம் வந்து, "கூடதந்தரே, கோதமனைக் காண நீங்கள் போவது உண்மையா?" என்று வினவினார்கள்.

"ஆம், கோதமனைக் காணப் போக வேண்டும் என்று எனக்குத் தோன்றுகிறது" என்றான் கூடதந்தன்.

"கூடதந்தரே, கோதமனைக் காண நீர் போவது பொருத்தமன்று. நீர் அவனைப் பார்க்கப் போனால் அவன் புகழ் ஓங்கும்; உங்கள் புகழ் மங்கும். ஆதலால் கோதமன்தான் உம்மை வந்து காண வேண்டும்; நீர் அவனிடம் போகலாகாது. இதுதான் சிறந்தது. நீர் உயர்குலத்தில் பிறந்திருக்கிறீர். நீர் செல்வம் நிறைந்தவர், புலவர், நல்லொழுக்கம் வாய்ந்தவர், பெரும்பாலோருக்கு ஆசிரியர். உங்களிடம் வேதமந்திரம் பயில நான்கு திசையிலிருந்தும் அளவற்ற மாணவர்கள் வருகிறார்கள். கோதமனைவிட நீர் பிராயத்தில் முதியவர். மகதமன்னன் பெருமதிப் போடு இந்த ஊரை உமக்கு இறையிலியாகக் கொடுத்திருக்கிறான். எனவே கோதமன் உம்மைக் காண வர வேண்டும்; நீர் அவனைக் காணப் போகலாகாது; இதுதான் முறை" என்று அந்தணர்கள் உரைத்தார்கள்.

அப்போது கூடதந்தன், "என் பேச்சைக் கேளுங்கள். சிரமண கோதமர் உயர்குலத்தில் பிறந்து, பெருஞ் செல்வத்தைத் துறந்து சிரமணராகியிருக் கிறார். அவர் இளமையில் துறவு ஏற்றியிருக்கிறார். அவர் ஒளி வாய்ந்தவர்; நல்லொழுக்கமுடையவர். இனியதும் நன்மை தருவதுமான உரையை அவர் பேசுகிறார். பலருக்கு அவர் ஆசிரியராகவும் பேராசிரியராகவும் விளங்குகிறார். அவர் பற்று அற்றவராக அமைதியோடு இருக்கிறார். அவர் கன்மவாதி; செயல்வாதி. எல்லா நாடுகளிலுமுள்ள மக்கள் அவருடைய சமயக் கருத்தை அறிந்து கொள்ளவருகிறார்கள். அவர்

நல்லறிவு வாய்ந்தவர், கல்வியும் நல்லொழுக்கமும் நிரம்பியவர், உலகமறிந்தவர், அடக்குதற்குரிய ஆண்களின் சாரதி, தேவர்களுக்கும் மானிடர்க்கும் தலைவர் என்று அவர் புகழ் எங்கும் பரவியிருக்கிறது. பிம்பிசார மன்னனும், கோசலராஜனான பஸேனதியும் தங்கள் பரிவாரத்தோடு அவருடைய சிராவகர்கள் ஆனார்கள். இந்த மன்னர்கள் போற்றுவது போலவே, பௌஷ்கரஸாதி முதலிய அந்தணர்களும் அவரைப் போற்றுகிறார்கள். இவ்வளவு பெருமை வாய்ந்த அவர் இப்பொழுது நம் ஊருக்கு வந்திருக்கையில் அவரை நம் அதிதியாகக் கொள்ள வேண்டும். ஆதலால் நான் அவரைக் கண்டு வரவேற்று உபசரிப்பது பொருத்தமே" என்றான்.

"ஐயா கூடதந்தரே, நீங்கள் கோதமரைத் துதிப்பதைப் பார்த்தால், நூறு யோசனையளவு தொலைவு கடந்துங்கூட நல்லவர் அவரைப் பார்ப்பது தகும் என்று எங்களுக்குத் தோன்றுகிறது. புறப்படுங்கள். நாம் எல்லாருமே போய் அவரைக் காண்போம்" என்று அந்தணர்கள் கூறினர்.

பிறகு கூடதந்தன் இந்த அந்தணர் கூட்டத்துடன், பெருமான் தங்கியிருந்த ஆம்ரயஷ்டிவனத்துக்கு வந்தான். பெருமானிடம் உடல்நலம் முதலியவற்றைக் கேட்டபின்பு அவன் ஒரு புறமாக அமர்ந்தான். அந்த அந்தணர்களில் சிலர் பெருமானை அடிபணிந்தும், சிலர் தம் பெயர் கோத்திரம் ஆகியவற்றைத் தெரிவித்தும், சிலர் நலம் முதலியவற்றைக் கேட்டும் ஒரு புறமாக அமர்ந்தார்கள்.

அப்பொழுது கூடதந்தன், "தங்களுக்குச் சிறந்த யாக முறை தெரியும் என்று நான் கேள்வியுற்றிருக்கிறேன். அதை நாங்கள் அறியும்படி தெரிவித்தால் நலமாக இருக்கும்" என்று பெருமானிடம் சொன்னான்.

பெருமான் இந்தக் கதையைக் கூறலானார்-

பழங்காலத்தில் மகாவிஜிதன் என்ற பெரும்புகழ் பெற்ற அரசன் இருந்தான். ஒரு நாள் தனிமையில் அமர்ந்திருக்கையில் அவனுக்கு ஒரு சிந்தனை உதித்தது: 'நம்மிடமோ ஏராளமான செல்வம் இருக்கிறது. அதைப் பெருவேள்வியில் செலவிட்டால் அது நமக்கு நீடூழி நன்மையையும் இன்பத்தையும் தரும்' என்று நினைத்தான். இந்த நினைவை அவன் தன் புரோகிதனுக்குத் தெரிவித்து, "அந்தணரே, நான் பெருவேள்வி செய்ய விரும்புகிறேன். எவ்வகையாகச் செய்தால் எனக்கு நன்மையும் இன்பமும் விளையும் என்று கூறுங்கள்" என்றான்.

புரோகிதன் கூறலுற்றான்- "இப்பொழுது நமது நாட்டில் அமைதி இல்லை. ஊர்களும் நகரங்களும் சூறையாடப்படுகின்றன. வழிப்பறிகள் நடக்கின்றன. இந்த நிலையில் நீங்கள் மக்களின்மீது வரி சுமத்தினால், கடமையிலிருந்து வழுவியவராவீர்கள். தலைகளைச் சீவியோ, சிறையில் இட்டோ, தண்டனை கொடுத்தோ அல்லது நாடு கடத்தியோ திருடர்களைச் சமாளித்துவிடலாம் என்று நீங்கள் கருதுகிறீர்கள். ஆனால்

இந்த வழிகளால் குழப்பம் முற்றும் ஓயாது. ஏனெனில், மீதியுள்ள திருடர்கள் மீண்டும் குழப்பம் செய்வார்கள். அதை அறவே ஒழிக்க உண்மையான வழி இதுதான்- நம் நாட்டில் பயிர்த்தொழில் செய்ய விரும்புகிறவர்களுக்குப் போதுமான அளவு விதை முதலிய பண்டங்கள் கொடுக்க ஏற்பாடு செய்யுங்கள். வாணிகம் செய்ய விரும்புகிறவர்களுக்குக் குன்றாத மூலதனத்தை அளியுங்கள். அரசாங்க வேலை செய்ய விரும்புகிறவர்களுக்குத் தக்க ஊதியம் கொடுத்துத் தகுதிக்கு ஏற்ற வேலையில் அமர்த்துங்கள். இவ்வாறு அனைவரும் அவரவர் வேலையில் கவனம் செலுத்தினால் நாட்டில் கலகம் தோன்றுவதற்கே இடமில்லை. அவ்வப்பொழுது வரி வந்து குவிந்து, கருவூலம் வளரும். புரட்சிக்காரர்களின் தொந்தரவு இல்லாமையால் மக்கள் அச்சமின்றித் தங்கள் வீட்டுக் கதவுகளைத் திறந்துவைத்து, குழந்தை குட்டிகளோடு மிகவும் ஆனந்தமாக வாழ்வார்கள்."

குழப்பத்தை நீக்குவதற்குப் புரோகிதன் சொன்ன இந்த வழி மகாவிஜிதனுக்குப் பிடித்தது. அவன் தன் நாட்டில் பயிர்த்தொழில் செய்ய வல்லவர்களுக்கு விதை முதலியவற்றைக் கொடுத்து அவர்களைப் பயிரிடச் செய்தான்; வாணிகம் செய்ய வல்லவர்களுக்கு மூலதனம் கொடுத்து வியாபாரத்தை வளர்த்தான்; அரசாங்க வேலைக்குத் தகுதியுள்ளவர்களைத் தக்க இடங்களில் வேலைக்கு வைத்துக் கொண்டான். இந்த வழியைக் கடைப்பிடித்ததனால் மகாவிஜிதனுடைய நாடு சிறிது காலத்துக்குள் வளம் நிரம்பியதாயிற்று. கொள்ளையும் திருட்டும் ஒழிந்தமையால் வரி ஈட்டப்பெற்றுப் பொக்கிஷம் வளர்ந்தது. மக்கள் அச்சமின்றித் தங்கள் வீட்டுக் கதவுகளைத் திறந்து வைத்து, தங்கள் குழந்தை குட்டிகளோடு விளையாடி ஆனந்தமாக வாழ்ந்தார்கள்.

ஒரு நாள் மன்னன் மகாவிஜிதன் புரோகிதனிடம், "அந்தணரே, நீங்கள் சொன்ன வழியினால் நமது நாட்டில் குழப்பம் தீர்ந்துவிட்டது. என் பொக்கிஷம் இப்போது மிகவும் நல்ல நிலையில் இருக்கிறது. நாட்டிலுள்ள மக்கள் யாவரும் அச்சமொழிந்து ஆனந்தமாக வாழ்கிறார்கள். இப்போது நான் பெருவேள்வி செய்ய விரும்புகிறேன். அதற்குரிய முறையை எனக்குச் சொல்லுங்கள்" என்றான்.

"நீங்கள் பெருவேள்வி செய்ய வேண்டுமென்றால் மக்களிடம் அதற்கு இசைவு பெற வேண்டும். ஆதலால் முதலில் நாட்டில் அனைவருக்கும் உங்கள் விருப்பத்தை வெளிப்படையாகத் தெரிவித்து, அதற்கு அவர்களின் இசைவை வேண்டுங்கள்" என்று புரோகிதன் புகன்றான்.

மன்னனுடைய விருப்பப்படியே மக்கள் வேள்விக்கு இசைந்தார்கள். பிறகு புரோகிதன் வேள்விக்கு ஆயத்தம் செய்தான். அவன் மன்னனிடம், "இந்த வேள்விக்குப் பெருஞ்செல்வம் பிடிக்கப்போகிறது என்று வேள்வியின் ஆரம்பத்தில் நினைக்காதீர்கள். வேள்வி நடை

பெறும்பொழுது, 'நம் செல்வம் அழிகிறதே'என்றும் வேள்வி நிறைவேறிய பின்பு 'நம் செல்வம் அழிந்துவிட்டது, என்றும் நீங்கள் நினைக்கலாகாது. உங்கள் வேள்வியில் நல்லவர்களும் கெட்டவர்களும் வருவார்கள். ஆனால், அவர்களுள் நல்லவர்களை மட்டும் நோக்கத்தில் கொண்டு வேள்வி செய்து, உங்கள் மனத்தை ஆனந்தமாக வைத்துக் கொள்ள வேண்டும்" என்றான்.

மகாவிஜிதனுடைய அந்த வேள்வியில் பசுக்களும் எருதுகளும் வெள்ளாடுகளும் செம்மறிகளும் கொல்லப்படவில்லை; மரங்களை வெட்டித் தூண்கள் செய்யப்படவில்லை; தருப்பையாசனங்கள் அமையவில்லை; அடிமைகளையும் தூதர்களையும் தொழிலாளி களையும் வற்புறுத்தி வேலை வாங்கவில்லை விருப்பமுள்ளவர்கள் வேலை செய்தார்கள்; விரும்பமில்லாதவர்கள் ஏதும் செய்யவில்லை. நெய், எண்ணெய், வெண்ணெய், தேன், வெல்லப்பாகு ஆகிய பொருள்களைக் கொண்டே அந்த வேள்வி நிறைவேறியது.

இதன் பிறகு நாட்டில் இருந்த செல்வர்கள் மிகப் பெரும் காணிக்கைகளோடு மகாவிஜித மன்னனைக் காண வந்தார்கள். அரசன் அவர்களிடம், "அன்பர்களே, உங்கள் காணிக்கை ஏதும் எனக்குத் தேவை இல்லை. அற முறைப்படி கிடைத்த வரியினால் என்னிடம் மிக்க செல்வம் குவிந்திருக்கிறது. அதில் உங்களுக்கு ஏதாவது வேண்டியிருந் தால் தடையின்றி வாங்கிச் செல்லுங்கள்" என்றான்.

அரசன் இங்ஙனம் செல்வர்களின் காணிக்கைகளை ஏற்றுக்கொள்ள மறுக்கவே, அவர்கள் அந்தச் செல்வத்தை யாகசாலைக்கு நான்கு புறமும் அறச்சாலைகள் கட்டுவதில் செலவிட்டு, ஏழைகளுக்குத் தான தருமம் செய்தார்கள்.

பெருமான் கூறிய இந்த வேள்விக் கதையைக் கேட்டதும், கூடதந்தனோடு வந்திருந்த அந்தணர்கள், "மிகவும் நல்ல யாகம்! மிகவும் நல்ல யாகம்!" என்று போற்றினார்கள்.

பிறகு புத்தர்பிரான் கூடதந்தனுக்குத் தமது சமயத்தை விரிவாக உபதேசித்தார். அதைக் கேட்ட அந்தணன் கூடதந்தன் பெருமானின் அடியவனாகி, "கோதமரே, எழுநூறு எருதுகளும் எழுநூறு சேங்கன்று களும் எழுநூறு கடாறிகளும், எழுநூறு வெள்ளாடுகளும் எழுநூறு செம்மறிகளும் ஆகிய உயிர்களையெல்லாம் நான் வேள்வித் தூண்களிலிருந்து விடுவித்து, அவற்றுக்கு உயிர் அளிக்கிறேன். அவை பசும்புல்லைத் தின்று, தண்ணிய நீரைக் குடித்துக் குளிர்ந்த நிழலில் ஆனந்தமாக வாழட்டும்" என்றான்.

## வேலையில்லாமையை ஒழிப்பதே உண்மையான வேள்வி

மேற்கூறிய ஸுத்தத்தில் மகாவிஜிதன் என்ற சொல்லுக்கு, பரந்த நாட்டையுடையவன் என்று பொருள். அத்தகையவன்தான் பெருவேள்வி செய்ய முடியும். நாட்டில் மக்கள் வேலையற்று இருக்கலாகாது; யாவரும் நற்செயலில் முனைய வேண்டும் என்பதுதான் அந்தப் பெருவேள்வியின் முக்கியமான முறை. இதே முறையை வேறு வகையாகச் சக்கவத்திஸீஹநாத ஸுத்தம் கூறுகிறது. அதன் சாரமாவது-

திருடநேமி என்ற அரசன் சக்கரவர்த்தியாகத் திகழ்ந்தான். முதுமையில் அவன் தன் மகனுக்குப் பட்டம் கட்டிவிட்டு, யோகம் பயில விழைந்து உவவனத்தில் சென்று தங்கினான். ஏழாவது நாள், அரண்மனைக்கு எதிரே சுடர் வீசிக்கொண்டிருந்த சக்கரம் மறைந்தது. திருடநேமியின் புதல்வன் இதனால் மிகவும் பயந்து, ராஜ ரிஷியான தந்தையிடம் சென்று, நிகழ்ந்த செய்தியைத் தெரிவித்தான். அப்பொழுது ராஜரிஷி, "மகனே, அஞ்சாதே. இந்தச் சக்கரம் உன் நல்வினைகளால் தோன்றியதன்று. சக்கரவர்த்தியான அரசனுக்குரிய விரதங்களை நீ காத்தாயனால், அது மீண்டும் தன் இடத்தில் வந்து நிலைக்கும். நீ மக்களை நீதியுடனும் நடுநிலையுடனும் காப்பாயாக. உன் ஆட்சியில் அநியாயச் செயலுக்கு இடங்கொடாதே. வறுமையுற்றவர்களுக்கு (வேலை கொடுத்து), பணம் கிடைக்க ஏற்பாடு செய். உன்நாட்டில் நல்லோராக விளங்கும் சிரமண அந்தணர்ளிடம், அவ்வப்பொழுது செய்யத்தக்கவை இன்னவை, செய்யத்தகாதவை இன்னவை என்பதை அறிந்துகொள், அவர்களின் உபதேசத்தைக் கேட்டு, செய்யத் தகாதவற்றை விலக்கிக் கடமைகளை நிறைவேற்றுவதில் கண்ணும் கருத்துமாக இரு" என்றான்.

இளைஞனான அரசன் இந்த உபதேசத்தை ஏற்று இதன்படி நடந்து கொண்டதனால் அந்தச் சுடர் வீசும் சக்கரம் மீண்டும் தன் இடத்துக்கு வந்தது. அரசன் தன் இடக்கையில் தண்ணீர்ச்சாடியை வைத்துக்கொண்டு, வலக்கையால் அந்தச் சக்கரத்தைச் சுற்றினான். அது அவனுடைய சாம்ராஜ்யத்தில் நான்கு புறமும் சுற்றியது. அரசன் அதன் பின்னாலேயே போய், "உயிர்க்கொலை செய்யாதீர்கள், திருடாதீர்கள், பிறன்மனை விழையாதீர்கள், பொய் சொல்லாதீர்கள். உண்மையோடு நடந்து கொள்ளுங்கள்" என்று மக்களுக்கு உபதேசித்தான்.

அதன் பிறகு அந்தச் சக்கர ரத்தினம், சக்கரவர்த்தியான அரசனுடைய அரண்மனைக்கு எதிரில் மீண்டும் நின்றது. அரண்மனைக்கு அது எழிலூட்டியது.

இம்மாதிரியே இந்தச் சக்கரவர்த்தி விரதம் ஏழு தலைமுறைகள் நடந்தது. ஏழாவது சக்கரவர்த்தி துறவறமேற்றதும் அந்தச் சக்கரம்

மறைந்தது. இளைஞனான அரசன் அதனால் மிகவும் துன்புற்றான். ஆனால் அவன் தன் தந்தையான ராஜரிஷியிடம் சென்று, சக்கரவர்த்தி விரதத்தைத் தெரிந்துகொள்ளவில்லை. அவனுடைய அமைச்சர்களும் பிற சான்றோர்களும் அவனுக்கு அந்த விரதத்தைக் தெரிவித்தார்கள். அதைக் கேட்டு அவன் மக்களை நீதியுடன் காத்தான்; ஆனால் வறுமையுற்றவர் களுக்கு வேலை கிடைக்கும்படியான ஏற்பாடு செய்யவில்லை. அதனால் வறுமை கடுமையாக வளர்ந்தது. ஒருவன் திருட்டுத் தொழில் செய்தான். மக்கள் அவனை அரசன்முன் கொண்டுவந்து நிறுத்தினார்கள். "அடே, நீ திருடியது உண்மையா?" என்று மன்னன் கேட்டான்.

"ஆமாம், அரசே" என்றான் அவன்.

"ஏன் திருடினாய்?"

"வயிறு நிரம்பவில்லை; அதனால் திருடினேன்."

அரசன் அவனுக்கு வேண்டிய அளவு பொருள் கொடுத்து, "நீ இந்தப் பொருளை முதலாகக் கொண்டு வாழ்வாயாக. உன் குடும்பத்தைக் காப்பாற்று. வாணிகமும் உழைப்பும் தான தருமங்களும் செய்" என்றான்.

வேலையற்றிருந்த மற்றொருவனுக்கு இந்தச் செய்தி தெரிந்தது. அவனும் திருடினான். அரசன் அவனுக்கும் வேண்டிய பொருளைத் தந்தான். திருடனுக்கு அரசன் பரிசளிக்கிறான் என்று மக்களுக்குத் தெரிந்து விட்டது. எனவே, எவனும் திருடலானான். இப்படித் திருடியவர்களில் ஒருவனை அரசன்முன் கொண்டு நிறுத்தினார்கள். 'திருடுகிறவர்களுக்கு நான் பொருள் கொடுத்துக் கொண்டே வந்தால் நாடு முழுவதிலும் எண்ணற்ற திருட்டுக்கள் நடக்கும்! ஆதலால் இவன் தலையைச் சீவிவிடக் கட்டளையிடுவதே நலம்' என்று மன்னன் சிந்தித்தான். அதன்படி அவன் அந்தத் திருடனைக் கயிற்றினால் பிணைக்க வைத்து, அவனுக்கு முண்டனம் செய்வித்தான். பிறகு ஊர்வலமாகச் சுற்றச் செய்து, நகரத்துக்குத் தெற்கே அவன் தலையைச் சீவிடும்படி உத்தரவிட்டான்.

அந்த நிகழ்ச்சியைக் கண்டு திருடர்கள் நடுங்கினர். இனி நேரடியாகத் திருடுவது ஆபத்து என்று அறிந்து அவர்கள் கூரிய படைக்கலங்களைக் கொண்டு வெளிப்படையாகக் கன்னம் வைக்கலானார்கள்.

வறுமையுற்றவர்களுக்கு வேலை கிடைக்காமையால் இவ்வாறு வறுமை வளர்ந்துகொண்டே இருந்தது. வறுமை வளர்ந்தமையால் திருட்டுக்களும் கொள்ளைகளும் வளர்ந்தன. அவை வளர்ந்தமையாயால் படைக்கலங்கள் வளர்ந்தன. படைக்கலங்கள் வளர்ந்தமையால் கொலைகள் வளர்ந்தன. கொலைகள் வளர்ந்தமையால் பொய் வளர்ந்தது பொய் வளர்ந்தமையால் புறங்கூறுதல் வளர்ந்தது. புறங்கூறுதல் வளர்ந்தமையால் பிறன்மனை விழைதல் வளர்ந்தது; அதனால் வசைமொழிகளும் வீண் பிதற்றல்களும் வளர்ந்தன. அவற்றின் வளர்ச்சியினால் பேராசையும் பகையும் வளர்ந்தன. அவற்றினால்

பொய்நோக்கம் வளர்ந்து, மற்றத் தீய செயல்கள் அனைத்தும் பரவின.

இவ்வாறு சக்கவத்திஸீஹநாத ஸுத்தம் கூறுவதிலிருந்து, மகாவிஜிதனுக்குப் புரோகிதன் சொன்னவேள்விமுறை நன்கு விளக்கமுறுகிறது. மக்களிடமிருந்து விலங்குகளை வலியப் பற்றிக் கொண்டு அவற்றை வேள்வியில் கொல்வது உண்மையான யாகமன்று; நாட்டு மக்களைச் சமூகத்துக்குப் பயனுள்ள பணிகளில் ஈடுபடுத்தி வேலையில்லாமையை அழிப்பதே உண்மையான வேள்வி. உயிர்ப்பலி கொடுத்து யாகயக்ஞங்கள் நடத்தும் முறை நெடுநாளைக்கு முன்பே மறைந்து விட்டது. ஆயினும், உண்மையான வேள்வி நிகழ்த்தும் முயற்சி இன்றும் அரிதாகவே புலப்படுகிறது. வேலையில்லாத் திண்டாட்டத்தைக் குறைக்க, ஜெர்மனியும் இத்தாலியும் போர்த் தளவாடங்களை வளர்த்தன. ஆதலால் பிரான்ஸ், இங்கிலாந்து, அமெரிக்கா ஆகிய நாடுகளும் போர்த் தளவாடங்களை வளர்க்க வேண்டி வந்தது. இப்பொழுது போர் மூண்டுவிடும் என்று தோன்றுகிறது. இந்தப் புறம் ஜப்பான் முன்பே சீனத்தைத் தாக்கியிருந்தது. அந்தப் புறம் முஸோலினியும் ஹிட்லரும் நாளைக்கு என்ன செய்வார்கள் என்று யாரும் நம்பகமாகக் கூற முடியாது.[1] ஒன்று மட்டும் உண்மை- இவை எல்லாவற்றுக்கும் முடிவு, போர்வேள்விதான். அதில் மற்ற உயிர்களைவிட மனித உயிர்களின் ஓமமே மிகுதியாக இருக்கப் போகிறது. இந்தப் போர்வேள்வியை நிறுத்த வேண்டுமானால், மக்களைப் போர்த் தளவாடங்களில் ஈடுபடுத்துவதை விடுத்து, அவர்களைச் சமூக முன்னேற்றத்துக்கான செயல்களில் ஈடுபடுத்த வேண்டும். அப்பொழுதுதான் புத்தர்பிரான் உபதேசித்த வேள்விமுறை புழக்கத்துக்கு வரும். நிற்க.

விஷயம் சற்று மாறிவிட்டது. புத்தருடைய வேள்வி முறையை விளக்குவதற்கு அது பொருத்தமென்று தோன்றிற்று. மேற்கூறிய ஸுத்தங்கள் புத்தருடைய பரிநிர்வாணத்துக்குப் பிறகு சிறிது காலம் கழித்து இயற்றப்பெற்றவை என்றாலும், புத்தர்பெருமான் உபதேசித்த அடிப்படையான தத்துவங்களின் விளக்கம் அவற்றில் பொதிந்திருக்கிறது. இத்தகைய நல்வேள்வியை உபதேசித்த ஞானாசிரியரை வேதநிந்தனை செய்தவர் என்று கூறி இகழ்வது பொருத்தமா என்பதை அறிஞர்கள் சிந்திப்பார்களாக.

1. இரண்டாவது உலகப் போருக்கு முன்பு எழுதிய இந்த விஷயத்தை அப்படியே வெளியிடுகிறேன். - ஆசிரியர்.

# 10. சாதிப் பிரிவினை

## சாதிவேற்றுமையின் தொடக்கம்

இந்தியாவில் சாதிப் பிரிவினைக்கு மூலமாக இருப்பது, புருஷசூக்கத்திலுள்ள, "பிராஹ்மணோஸ்ய முகமாஸீத், பாஹூ ராஜன்ய: க்ருத:, ஊரூ ததஸ்ய யத்வைச்ய:, பத்ப்யாம் சூத்ரோ அஜாயத"[1] என்ற ரிக்காகும் என்று கருதுகிறார்கள். ஆனால் இது தவறான கொள்கை. வேத காலத்துக்கு முன்புங்கூட, சப்த சிந்துப் பிரதேசத்திலும் மத்திய இந்தியாவிலும் அஹிம்சா தருமத்தைப் போலவே சாதிப் பிரிவினைத் தருமமும் நடைமுறையில் இருந்தது. ஆரியர்களின் வருகையினாலும் வைதிகப்பண்பாடு பரவியதனாலும் அஹிம்சா தருமம் எவ்வாறு காட்டில் வாழ வேண்டிவந்தது என்பதை முதல் அத்தியாயத்திலேயே விளக்கியிருக்கிறேன். ஆனால் சாதிப் பிரிவினையின் நிலை அவ்வாறு இல்லை. சிறிது மாறுபாட்டுடன் அது அப்படியே நிலவி வந்தது.

## க்ஷத்திரியர்களின் பெருமை

சுமேரியாவில் பெரும்பாலும் பூசாரியே அரசனாவன்; சப்தசிந்துப் பிரதேசத்திலும் இதே முறை இருந்தது. இந்த வட்டாரத்தில் இருந்த சின்னஞ்சிறு சம்ஸ்தானங்களுக்குத் தலைவனான விருத்திரனை இந்திரன் கொன்றதாகவும், அதனால் அவனுக்குப் பிரம்மகத்தியின் பாவம் பிடித்ததாகவும் மகாபாரதம் கூறுகிறது.[2] ஆரியர்கள் வருமுன்பு இருந்த நிலையை மேற்கூறிய ரிக்கிலிருந்து அறியலாம். "ஒரு காலத்தில் விராட்புருஷனுடைய முகம் அந்தணனாக இருந்தது. தோள்கள் க்ஷத்திரியனாகவும், துடைகள் வைசியனாகவும் இருந்தன. அந்தப் புருஷனுடைய கால்களிலிருந்து சூத்திரன் தோன்றினான்" என்று ரிஷி கூறுகிறான். ஆரியர்கள் வந்ததனால் க்ஷத்திரியர்களுக்குப் பெருமை ஏற்பட்டு, அந்தணர்களின் ஆதிக்கம் அழிந்தது. ஆயினும் புரோகிதத் தொழில் அந்தணர்களிடம் இருந்தது. இந்த நிலை புத்தர் காலம் வரைக்கும் தொடர்ந்தது. பாலி இலக்கியத்தில் எங்கும் க்ஷத்திரியர்களுக்கு முதன்மை தந்திருப்பதைக் காணலாம். உபநிடதத்திலும் அதன் எதிரொலி கேட்கிறது. உதாரணமாக, பிருக தாரணியகம் (1-4-11) கூறுவதைப் பாருங்கள்-

1. ரிக்வேதம், புருஷசூக்தம், 10-90-12.

2. இந்தியப் பண்பாடும் அஹிம்சையும், பக். 15 காண்க.

"முதலில் பிரம்மம் மட்டுமே இருந்தது. ஆனால் அது ஒன்றாக இருந்ததனால் மலர்ச்சி பெறவில்லை. ஆதலால் அது உயர்ந்த வடிவமான க்ஷத்திரிய இனத்தை உண்டாக்கியது. தேவலோகத்து இந்திரன், வருணன், சோமன், உருத்திரன், பர்ஜன்யன், இயமன், மிருத்தியு, ஈசானன் ஆகியவர்களே அந்த க்ஷத்திரியர்கள். ஆதலால் க்ஷத்திரிய இனத்தைவிடச் சிறந்த இனம் வேறில்லை. அதனால்தான் அந்தணன் தன்னைக் குறைந்தவனாக மதித்து க்ஷத்திரியனை வழிபடுகிறான்."

## சாதிப் பிரிவினைக்கு மறுப்பு

இவ்வண்ணம் க்ஷத்திரிய இனம் மேன்மையுற்றிருந்த போதிலும், அதன் முக்கியக் கடமையான போரைப் புத்தர்பிரான் அறவே வெறுத்தார். ஆதலால் சாதிப் பிரிவினை அனைத்துமே பயனற்றது என்று அவருக்குத் தோன்றிற்று. அதை அவர் முற்றும் எதிர்த்தார். மற்றச் சிரமணத் தலைவர்கள் புத்தரைப்போலச் சாதிக்கொள்கையைமறுத்ததாக ஏதும் சான்று கிடைக்கவில்லை. அவர்களுடைய சங்கங்களில் சாதிப் பிரிவினைக்கு அடியோடு இடமில்லை. ஆயினும் தங்கள் உபாசகர் குழுவில் நிலவிவந்த சாதி வேற்றுமையை அவர்கள் எதிர்க்கவில்லை. புத்தரே அதை எதிர்த்தார். அவர் எதிர்த்த வகையை இப்போது காண்போம்.

சாதிக் கொள்கையை எதிர்த்துப் புத்தர் உபதேசித்த மிகப் பழமையான வாஸேட்ட ஸுத்தம், ஸுத்தநிபாதத்திலும் மஜ்ஜிம நிகாயத்திலும் இருக்கிறது. அதன் சாரமாவது-

ஒரு முறை புத்தர் பெருமான் இச்சாநங்கலம் என்ற ஊர்மருங்கில் இச்சாநங்கல உவவனத்திலும் தங்கியிருந்தார். அந்தக் காலத்தில் இச்சாநங்கலத்தில் புகழ்பெற்ற அந்தணர்கள் பலர் இருந்தனர். அவர்களுள் இளைஞர்களான வாஸிஷ்டன், பாரத்துவாஜன் என்ற இரண்டு அந்தணர்களிடையே, 'மனிதன் பிறப்பினால் உயர்கிறானா அல்லது செயலினாலா?' என்ற வாதம் எழுந்தது.

பாரத்துவாஜன் தன் நண்பனிடம், "வாசிஷ்டனே, தாய் வழியிலும் தந்தை வழியிலும் ஏழு தலைமுறைகள் தூய்மை உடையவன் எவனோ, எவனுடைய குலத்தில் ஏழு தலைமுறைகளாக வருணக்கலப்பு நிகழவில்லையோ, அத்தகைய அந்தணனே உயர்ந்தவன்" என்றான்.

"பாரத்துவாஜனே, ஒழுக்கம் நிரம்பியவனாய்க் கடமையில் சிறந்திருப்பவனையே அந்தணன் என்று கூற வேண்டும்" என்றான் வாஸிஷ்டன்.

நிறைய வாக்குவாதம் நடந்தது. ஆயினும் அவர்கள் இருவரும் தமக்குள் ஒப்புக்கொள்ளக் கூடிய விடையைக் கூறவில்லை. இறுதியில் வாஸிஷ்டன், "நமது இந்த வாதம் இங்கே தீராது. பாரத்துவாஜனே,

சிரமண கோதமர் நம் ஊர்மருங்கில் தங்கியிருக்கிறார். அவர் புத்தர், வழிபாட்டுக்கு உரியவர், அனைவருக்கும் ஆசிரியர் என்ற புகழ் எங்கும் பரவியிருக்கிறது. நாம் அவரிடம் சென்று நம் கருத்து வேற்றுமையைத் தெரிவிப்போம். அவர் கூறும் முடிவை ஒப்புக்கொள்வோம்" என்றான்.

அவர்கள் இருவரும் புத்தரிடம் சென்று குசலம் விசாரித்துவிட்டு ஒரு புறமாக அமர்ந்தனர். பின்பு வாஸிஷ்டன், "கோதமரே, நாங்கள் இருவரும் நன்கு படித்த அந்தண குமாரர்கள். இவன் தாருட்சியருடைய மாணவன்; நான் பௌஷ்கரஸாதியின் மாணவன். சாதிப்பிரிவினைபற்றி எங்களுக்குள் வாதம் நடக்கிறது. பிறப்பினால் ஒருவன் அந்தணனாகிறான் என்று இவன் சொல்கிறான். செயலினால் ஒருவன் அந்தணனாகிறான் என்று நான் சொல்கிறேன். தங்கள் புகழைச் செவியுற்று நாங்கள் இங்கு வந்திருக்கிறோம். எங்கள் வாதத்துக்குத் தாங்கள் தீர்ப்பு உரைக்க வேண்டும்" என்றான்.

அப்போது பெருமான் கூறினார்-"வாஸிஷ்டனே, புல் மரம் முதலிய வனஸ்பதிகளிடையே பல்வேறு இனங்கள் புலப்படுகின்றன. அவ்விதமே புழு, எறும்பு முதலிய சிற்றுயிர்களிடத்தும் இன வேறுபாடுகள் உள்ளன. பாம்புகளிலும், நாற்கால் விலங்குகளிலும், நீரில் வாழும் மீன்களிலும், வானத்தில் பறக்கும் பறவைகளிலும் இணங்கள் உண்டு அவற்றின் வேறுபாட்டுக்கு உரிய அடையாளங்கள் அந்த உயிர்க் கூட்டத்தில் புலப்படுகின்றன. ஆனால் மனிதர்களிடையே வேறுபாட்டுக் கான அடையாளங்கள் புலப்படுவதில்லை. கேசம், காது, கண், முகம், மூக்கு, உதடு, புருவம், கழுத்து, வயிறு, முதுகு, கை, கால் முதலிய உறுப்புக்களால் ஒரு மனிதன் மற்றொருவனைக் காட்டிலும் முற்றும் மாறுபட்டிருக்க முடியாது. அதாவது, விலங்கு பறவை முதலியவற்றில் வடிவம் முதலியவற்றினால் பல வேறு இனங்கள் புலப்படுவதுபோல மனிதப் பிராணியினிடத்தில் வேற்றுமை தோன்றுவதில்லை. எல்லா மனிதர்களின் உறுப்புக்களும் கிட்டத்தட்டச் சமமாகவே இருப்பதனால் மனிதர்களிடையே சாதிவேற்றுமையைத் தீர்மானிக்க இயலாது. ஆனால் தொழிலைக் கொண்டு மனிதனுடைய சாதியைத் தீர்மானிக்க முடியும்.

"ஓர் அந்தணன் பசுவைக் காத்துப் பிழைப்பு நடத்தினால் அவனை ஆயன் என்று சொல்லுங்கள்; அந்தணன் என வேண்டாம். சிற்பத்தைக் கொண்டு ஜீவிப்பவன் சிற்பி. வியாபாரம் செய்பவன் வாணிகன். தூதுத்தொழில் செய்பவன் தூதுவன். திருடிப் பிழைப்பவன் திருடன். போரைக் கொண்டு வாழ்பவன் வீரன். வேள்வியைக் கொண்டு பிழைப்பவன் புரோகிதன். நாட்டைக் கொண்டு பிழைப்பவன் அரசன். ஆனால் இவர்களில் யாரையும் பிறப்பினால் அந்தணன் என்று சொல்ல முடியாது.

"உலகக் கட்டுகளையெல்லாம் விடுத்து எந்தத் துன்பத்துக்கும்

அஞ்சாதவன், எதிலும் பற்றுக்கொள்ளாதவன் எவனோ அவனை நான் அந்தணன் என்கிறேன். பிறர் தனக்குத் தரும் வசைகளையும் கட்டுகளையும் இன்னல்களையும் எவன் பொறுத்துக்கொள்கிறானோ, பொறுமையே எவனுக்கு வலிமையோ அவனை நான் அந்தணன் என்கிறேன். தாமரையிலையில் நீர்போல இவ்வுலகத்து இன்பங்களோடு சாராதவன் எவனோ அவனை நான் அந்தணன் என்கிறேன்...

"பிறப்பினால் எவனும் பிராம்மணனோ அப்பிராம்மணனோ ஆவதில்லை. செயலினால்தான் ஒருவன் பிராம்மணனாகிறான்; இன்னொருவன் அப்பிராம்மணனாகிறான். செயலினால் குடியானவன் ஆகிறான், சிற்பி ஆகிறான், திருடன் ஆகிறான். போர்வீரன் ஆகிறான். புரோகிதன் ஆகிறான்; அரசனும் செயலினாலேயே ஆகிறான். செயலினால்தான் உலகம் முழுவதும் நடக்கிறது. அச்சைச் சார்ந்தே தேர் ஓடுவதுபோல, உயிர்கள் யாவும் தங்கள் செயலையே சார்ந்திருக்கின்றன."

புத்தருடைய இந்த உபதேசத்தைக் கேட்டு வாஸிஷ்டனும் பாரத்து வாஜனும் அவருக்கு அடியராயினர்.

## பிராம்மணனும் அப்பிராம்மணனும் சமமே

முன்பு கூறிய புருஷசூக்தத்து ரிக்கைச் சான்றாகக் கொண்டு, அந்தணர்கள் தாங்கள் பிரம்மதேவனுடைய முகத்திலிருந்து தோன்றியதனால் நால்வருணங்களில் சிறந்தவர்கள் என்று கூறுவர். மஜ்ஜிமநிகாயத்தில் அஸ்ஸலாயன ஸூத்தத்தில் இதுபற்றிப் புத்தர் பெருமான் அருளிய வாக்கு நல்லறிவு புகட்டுவதாகும். அந்த ஸூத்தத்தின் சாரமாவது-

ஒரு முறை புத்தர்பெருமான் சிராவஸ்தியில் அநாத பிண்டிகனுடைய ஆராமத்தில் தங்கியிருந்தார். அப்பொழுது பல நாடுகளிலிருந்து ஐந்நூறு அந்தணர்கள் ஏதோ காரணமாகச் சிராவஸ்திக்கு வந்திருந்தனர். அவர்களுக்குள்ளே ஒரு கேள்வி, 'இந்தச் சிரமண கோதமன் நான்கு வருணங்களுக்கும் மோட்சம் கிடைப்பதாகக் கூறுகிறானே; அவனோடு வாதம் செய்து, அவனுடைய இந்தக் கூற்றுப் பொய் என்பதை எவனாலாவது நிலைநிறுத்த முடியுமா?' என்று எழுந்தது. இறுதியில் ஆசுவலாயனன் என்ற அந்தண குமாரனிடம் இந்தச் செயலை ஒப்படைத்தார்கள்.

ஆசுவலாயனனுடைய அத்தியயனம் அப்பொழுது தான் முற்றுப் பெற்றிருந்தது. நிருக்தம், சந்தம் முதலிய வேத அங்கங்களோடு நான்கு வேதங்களும் அவனுக்கு மனப்பாடமாகியிருந்தன. ஆயினும் புத்தர்பெருமானோடு வாதம் செய்வது எளிதன்று என்பது அவனுக்குத் தெரியும். புத்தரோடு வாதம் செய்யத் தன்னைத் தேர்ந்தெடுத்தபொழுது அவன் அந்தணர்களிடம், "பெரியோர்களே, சிரமண கோதமன் தர்மவாதி.

தர்மவாதிகளோடு வாதிப்பது எளிதன்று. நான் வேதங்களைக் கரைகண்டவனாயினும் கோதமரோடு சொற்போர் செய்யும் திறமையுள்ளவன் அல்ல" என்றான்.

நீண்ட நேரம் ஆராய்ந்தபிறகு அந்தணர்கள் அவனிடம், "ஆசுவலாயனா, நீ பரிவிராஜக தருமத்தைப் பயின்றவன்; போரிடாமலே தோல்வியுறுவது உனக்கு ஏற்றதன்று" என்றார்கள்.

"கோதமரோடு வாதம் செய்வது அரிது; ஆயினும் உங்கள் வற்புறுத்தலுக்காக நான் உங்களோடு வருகிறேன்" என்றான் ஆசுவலாயனன்.

பிறகு அவன் அந்த அந்தணர் கூட்டத்தோடு புத்தர்பெருமானிடம் சென்றான். குசல வார்த்தை பேசியதும் அவர்கள் யாவரும் ஒரு புறமாக அமர்ந்தனர். அப்பொழுது ஆசுவலாயனன், "கோதமரே, பிராம்மண வருணமே உயர்ந்தது; மற்ற வருணங்கள் தாழ்ந்தவை. பிராம்மண வருணம் வெண்மையானது; மற்றவை கறுப்பானவை. பிராம்மணர் களுக்கே முத்தி கிடைக்கிறது; மற்றவர்களுக்கு அல்ல. பிராம்மணர்கள் பிரம்மதேவனுடைய முகத்திலிருந்து உண்டானவர்கள். அவர்கள் அவனுடைய சொந்தப் பிள்ளைகள். எனவே அவர்கள் தாம் அவனுடைய செல்வத்துக்கு உரிமையாளர்கள் என்று அந்தணர்கள் கூறுகிறார்களே; இதைப்பற்றி உங்கள் கருத்து யாது?" என்று கேட்டான்.

"ஆசுவலாயனா, அந்தணர்களின் மனைவியர் பூப்படைகிறார்கள், கருத்தரிக்கிறார்கள், மகவை ஈனுகிறார்கள், குழந்தைகளுக்குப் பாலூட்டுகிறார்கள். இங்ஙனம் அந்தணரின் சந்ததியார் பிற வருணத்த வரைப் போலவே தாய் வயிற்றிலிருந்து பிறந்திருக்க, அவர்கள் தாங்கள் பிரம்மதேவனுடைய முகத்திலிருந்து தோன்றியதாகக் கூறிக்கொள்வது வியப்பாக இல்லையா?" என்றார் பெருமான்.

"கோதமரே, தாங்கள் எப்படி வேண்டுமாயினும் சொல்லுங்கள். ஆனால் அந்தணர்கள் தாங்கள் பிரம்ம தேவனுடைய செல்வத்துக்கு உரியவர் என்பதில் முழுநம்பிக்கை கொண்டிருக்கிறார்கள்."

"ஆசுவலாயனா, யௌனம் காம்போஜம் முதலிய எல்லை நாடுகளில் ஆரியர் தாசர் என்ற இரண்டே வருணங்கள் உண்டு; சில சமயம் ஆரியன் தாசனாவான், தாசன் ஆரியனாவான்- இதை நீ கேள்வியுற்றிருக்கிறாயா?"

"ஆம், கோதமரே, கேள்வியுற்றிருக்கிறேன்."

"இப்படி இருக்கையில், பிரம்மதேவன் அந்தணர்களை முகத்திலிருந்து உண்டாக்கினான்; அவர்கள் வருணங்களனைத்திலும் உயர்ந்தவர்கள் என்னும் கூற்றுக்கு ஆதாரம் யாது?"

"தாங்கள் எப்படிச் சொன்னாலும், அந்தணர்கள் தங்கள் வருணமே சிறந்ததென்றும் மற்றவை தாழ்ந்தவை என்றும் உறுதியாகக் கொண்டிருக் கிறார்கள், கோதமரே."

"க்ஷத்திரியனோ வைசியனோ வேளாளனோ ஆன ஒருவன் உயிர்க்கொலை, திருட்டு, பிறன்மனை விழைதல், பொய் பேசுதல், புறங்கூறுதல், வசை மொழிதல், பயனில பேசுதல் ஆகியவற்றைச் செய்தால், மக்களின் செல்வத்தின்மீது பார்வையைச் செலுத்தினால், பகைமையறிவை வளர்த்தால், நாத்திகத்தன்மையை ஏற்றால், அவன் தான் மரித்தபிறகு நரகம் புகுவான்; ஆனால் அந்தணன் இந்தச் செயல்களைச் செய்தால் நரகம் புக மாட்டான் என்று உனக்குத் தோன்றுகிறதா?"

"கோதமரே, எந்த வருணத்தானாயினும் இந்தப் பாவங்களைச் செய்தால் மரித்தபின் நரகம் புகுவான். பிராம்மணராயினும் சரி, அப்பிராம்மணராயினும் சரி, யாவருமே தங்கள் பாவத்துக்குக் கழுவாய் செய்தே தீர வேண்டும்."

"ஓர் அந்தணன் உயிர்க்கொலை, திருட்டு, பிறன்மனை விழைதல், பொய்மை, புறங்கூறுதல், வசைமொழிதல், பயனில பேசுதல், பிறர் செல்வத்தை வெஃகுதல், பகைமை, நாத்திகம் என்னும் (பத்துப்) பாவங்களினின்று விலகினான் என்றால் அவன் மட்டுமே மரித்ததும் துறக்கம் அடைவான்; ஆனால் மற்ற வருணத்தவர் இந்தப் பாவங்களினின்று நீங்கினால் துறக்கத்தை அடையமாட்டார்கள் என்று உனக்குத்தோன்றுகிறதா?"

"கோதமரே, எந்த வருணத்தவனாயினும் இந்தப் பாவச் செயல்களினின்று விலகினால் சொர்க்கத்துக்குப் போவான். புண்ணியத்தின் பயன் அந்தணனுக்கும் சரி, அல்லாதவனுக்கும் சரி, சமமாகவே கிடைக்கும்."

"இந்த வட்டாரத்தில் அந்தணர்கள் மட்டுமே பகையும் வெறுப்புமின்றி நட்புப் பாராட்ட முடியும்; ஆனால் க்ஷத்திரியரும் வைசியரும் வேளாளரும் அதைக் கொண்டாட முடியாது என்று உனக்குத் தோன்றுகிறதா?"

"நான்கு வருணத்தினரும் நட்புப் பாராட்ட முடியும், கோதமரே."

"அப்படியானால் அந்தண வருணமே உயர்ந்தது, மற்ற வருணங்கள் தாழ்ந்தவை என்று பேசுவதன் பொருள் என்ன?"

"கோதமரே, தாங்கள் என்ன வேண்டுமாயினும் சொல்லுங்கள். அந்தணர்கள் தங்களை உயர்வாகவும் மற்ற வருணத்தவரைத் தாழ்வாகவும் கருதுகிறார்கள் என்பது உண்மை."

"ஆசுவலாயனா, முடி சூட்டிக்கொண்ட ஓர் அரசன், எல்லாச் சாதிகளிலுமுள்ள நூறு பேரை ஒன்றுதிரட்டி, அவர்களுள் க்ஷத்திரியர்களும் அந்தணர்களும் அரச குலத்தில் தோன்றியவர்களுமான மக்களைப் பார்த்து, 'ஐயா, இங்கே வாருங்கள். சாலமரம் அல்லது சந்தனமரம் போன்ற உயர்ந்த மரங்களைக் கடைகோலாகக் கொண்டு தீயை

உண்டாக்குங்கள்' என்றும், அவர்களுள் புலையர் வேடர் முதலிய இழிகுலமக்களைப் பார்த்து, 'ஐயா, இங்கே வாருங்கள். நாய்க்குத் தீனியிடும் பாண்டத்திலும், பன்றிக்குத் தீனி வைக்கும் பாண்டத்திலும், சாயம் தோய்க்கும் பாண்டத்திலும் ஆமணக்கைத் தீக்கடைகோலாகக் கொண்டு அக்கினியை உண்டாக்குங்கள்' என்றும் சொன்னானானால், ஆசுவலாயனா, அப்பொழுது அந்தணர் முதலிய உயர் வருணத்தவர் சிறந்த தீக்கடைகோலினால் உண்டாக்கிய அக்கினி மட்டுமே ஒளிவிட்டு எரியும் என்றும், புலையர் முதலிய இழிகுலத்தவர் ஆமணக்கு முதலிய தீக்கடை கோலினால் உண்டாக்கிய அக்கினி ஒளிவிட்டு எரியாது, அதனால் அக்கினி காரியங்கள் நடவா என்றும் உனக்குத் தோன்றுகிறதா?"

"கோதமரே, எந்த வருணத்தவனும் நல்லதோகெட்டதோ ஆன எந்த மரத்தையும் தீக்கடை கோலாகக் கொண்டு எந்த இடத்தில் அக்கினியை உண்டாக்கினாலும் அது ஒரே மாதிரியாக ஒளி விட்டு எரியும்; அதனால் எங்கும் ஒருபடித்தாகவே அக்கினி காரியம் நடக்கும்."

"ஒரு க்ஷத்திரியப்பிள்ளை பிராமணப் பெண்ணை மணந்துகொண்டால் அந்தத் தொடர்பினால் அவனுக்குப் பிறக்கும் மகன், தாய் தந்தையரைப் போலவே மனிதனாகத்தான் இருப்பான் என்று உனக்குத் தோன்றவில்லையா? இவ்வாறே அந்தணப்பிள்ளை ஒருவன் க்ஷத்திரியப் பெண்ணை மணந்து கொண்டால் அந்தத் தொடர்பினால் பிறக்கும் மகன், தாய் தந்தையரைப் போல அல்லாமல் வேறு வகையாக இருப்பான் என்று உனக்குத் தோன்றுகிறதா?"

"இத்தகைய கலப்பு மணத்தினால் பிறக்கும் மகன் தாய்தந்தையரைப் போலவே மனிதனாக இருப்பான், கோதமரே. அவனை அந்தணன் என்றும் சொல்லலாம்; க்ஷத்திரியன் என்றும் சொல்லலாம்."

"ஆனால் ஆசுவலாயனா, ஒரு பெண்குதிரைக்கும் ஆண்கழுதைக்கும் தொடர்பு ஏற்பட்டுக் கோவேறு கழுதைக் குட்டி பிறந்தால் அது தாயைப்போலவோ தகப்பனைப் போலவோ இருக்கிறது என்று சொல்ல முடியுமா? அதைக் குதிரை என்றும் கழுதை என்றும் கழுதை என்றும் சொல்ல முடியுமா?"

"கோதமரே, அதைக் குதிரை என்றோ கழுதை என்றோ சொல்ல முடியாது. அது மூன்றாவது இனமொன்றைச் சேர்ந்த பிராணி. நாம் அதைக் கோவேறு கழுதை என்கிறோம். ஆனால் அந்தணருக்கும் க்ஷத்திரியருக்கும் உண்டான கலப்பினால் பிறந்த குழந்தையினிடம் இத்தகைய மாறுதல் காண்பதில்லை."

"ஆசுவலாயானா, இரண்டு சகோதர அந்தணர்களுள், ஒருவன் வேதம் பயின்று நன்கு கற்றிருக்கிறான், மற்றவன் கல்வியறிவற்றவன் என்றால், எந்தச் சகோதரனைச் சிராத்தத்துக்கும் வேள்விக்கும் முதலில் அழைப்பார்கள்?"

"கற்றறிந்தவனைத்தான் முதலில் அழைப்பார்கள்."

"இப்பொழுது இப்படி நினைத்துக்கொள். -இவ்விரண்டு அண்ணன் தம்பியரில் ஒருவன் பெரும் புலவன், ஆனால் மிகுந்த தீயொழுக்கமுடையவன்; மற்றவன் புலவனல்லன், ஆனால் மிகவும் நல்லொழுக்கம் வாய்ந்தவன். இந்த நிலையில், இருவருள் எவனை முதலில் அழைப்பார்கள்?"

"கோதமரே, நல்லொழுக்கம் வாய்ந்தவனுக்குத் தான் முதல் அழைப்பு. தீயொழுக்கமுடையவனுக்குக் கொடுக்கும் தானம் பெரும்பயன் அளிப்பதேது?"

"ஆசுவலாயனா, முதலில் நீ சாதிக்குப் பெருமை கொடுத்தாய்; பிறகு வேதப் பயிற்சிக்குப் பெருமை தந்தாய்; இப்பொழுது நல்லொழுக்கத்துக் குப் பெருமை கூறுகிறாய். அதாவது நான் எந்தச் சதுர்வருணத்தூய்மையை விளக்குகிறேனோ அதையே நீ ஒப்புக்கொண்டாய்."

புத்தர்பெருமானின் இந்த அறிவுரையைக் கேட்டு ஆசுவலாயனன் தலைகுனிந்து மௌனமாக இருந்தான். மேலே என்ன பேசுவதென்று அவனுக்குத் தோன்றவில்லை. பிறகு பெருமான் அஸிததேவல ரிஷியின் கதையைக் கூறினார். இறுதியில் ஆசுவலாயனன் பெருமானுக்கு அடியனானான்.

## உரிமையை மக்கள் கொடுக்க வேண்டும்

அந்தண வருணமே சிறந்தது, மற்றவை இழிந்தவை என்று கூறியதோடு மட்டும் அந்தணத் தலைவர்கள் நின்று விடவில்லை. நான்கு வருணத்தவரும் செய்யவேண்டிய கடமைகள் இன்னவை, செய்யத் தகாதவை இன்னவை என்று வரையறுக்கும் உரிமையையும் அவர்கள் தாங்களாக ஏற்றுக்கொண்டார்கள் என்பது, மஜ்ஜிமநிகாயத்திலுள்ள (96-ஆவது) ஏஸுகாரி ஸுத்தத்திலிருந்து தெரிகிறது. அதன் சாரமாவது-

ஒரு முறை புத்தர்பெருமான் சிராவஸ்தியில் ஜேதவனத்தில் அநாதபிண்டிகனுடைய ஆராமத்தில் தங்கியிருந்தார். அப்பொழுது ஏஸுகாரி என்ற அந்தணன் அவரிடம் வந்து உடல்நலம் முதலியவற்றைக் கேட்டபின் ஒரு புறமாக அமர்ந்தான். பிறகு அவன், "கோதமரே, அந்தணர்கள் நால்வகைப் பணிவிடைகளைக் கூறுகிறார்கள். நான்கு வருணத்தவரும் அந்தணருக்குப் பணிவிடை செய்ய இயலும். க்ஷத்திரியர் வைசியர் வேளாளர் என்னும் மூவருணத்தவர் க்ஷத்திரியர்களுக்குப் பணிவிடை செய்யலாம். வைசியரும் வேளாளருமே வைசியருக்குப் பணிவிடை செய்யலாம். வேளாளனுக்கு வேளாளனே பணிவிடை செய்ய வேண்டும். மற்ற வருணத்தவன் அவனுக்கு எப்படிப் பணிவிடை செய்ய முடியும்? இந்தப் பணிவிடைகளைப் பற்றி உங்கள் கருத்து யாது?" என்று கேட்டான்.

"அந்தணனே, அந்தணர்களின் இந்தக் கூற்றை மக்கள் யாவரும் ஒப்புக்கொண்டிருக்கிறார்களா? இத்தகைய பணிவிடைகளை உபதேசிக்க, மக்கள் அவர்களுக்கு உரிமை கொடுத்திருக்கிறார்களா?" என்றார் பெருமான்.

"அப்படி ஏதுமில்லை, கோதமரே."

"அப்படியானால், புலால் உண்ண விரும்பாத ஓர் எளியவனிடம் அயலிலுள்ளவர்கள் புலாலின் ஒரு பகுதியைச் சுமத்தி, இந்தப் புலாலை நீ தின்ன வேண்டும்; அதற்கு உரிய விலையையும் கொடுக்க வேண்டும் என்று வற்புறுத்துவது போலத்தான் அந்தணர்கள் மக்களின் மீது இந்தப் பணிவிடைகளைச் சுமத்துகிறார்கள் என்று கூறு வேண்டும். எந்த வருணத்தவனாயினும் சரி, எவனுக்குப் பணிவிடை செய்வதனால் நன்மை உண்டாகிறதோ, தீமை உண்டாவதில்லையோ, அத்தகைய வனுக்கே பணிவிடை செய்வது பொருந்தும் என்று நான் சொல்லுகிறேன். நான்கு வருணங்களிலுமுள்ள அறிவாளிகளைக் கேட்டால் அவர்களும் இப்படித்தான் சொல்லுவார்கள். உயர்குலத்திலோ உயர்ந்த வருணத்திலோ செல்வர் வீட்டிலோ பிறப்பது நல்லதென்றோ கெட்டதென்றோ நான் சொல்லவில்லை. உயர்குலத்திலோ உயர்ந்த வருணத்திலோ செல்வர் வீட்டிலோ பிறந்தவன் உயிர்க்கொலை முதலிய பாவங்களைச் செய்தானாயின் அவனுடைய குலப்பெருமை நல்லதன்று; ஆனால் அவன் உயிர்க்கொலை முதலிய பாவங்களினின்று விலகினால் அவனுடைய குலப்பெருமை தீயதன்று. எவனுக்குப் பணிவிடை செய்வதனால் சிரத்தையும் ஒழுக்கமும் கேள்வியும் தியாகமும் அறிவும் வளர்கின்றனவோ அவனுக்குப் பணிவிடை செய்ய வேண்டும் என்று நான் கூறுகிறேன்."

"கோதமரே, அந்தணர்கள் நான்கு செல்வங்களைப் பற்றிக் கூறுகிறார்கள். பிட்சாடனம் அந்தணர்களின் சொந்தச் செல்வம். வில்லும் அம்பும் சத்திரியர்களின் செல்வம். உழவும் பசுக் காவலும் வைசியரின் செல்வம். அரிவாளும் கூடையும் நான்காம் வருணத்தவரின் செல்வம். நான்கு வருணத்தவரும் தத்தமக்கு உரிய செல்வத்தைக் கருத்தோடு காவாவிட்டால், அவர்கள் திருட்டுத் தொழில் புரியும் காவலாளரைப் போல, செய்யத்தகாதவற்றைச் செய்தவர்களாவர். இதுபற்றி உங்கள் கருத்து யாது?" என்று ஏஸுகாரி வினவினான்.

"அந்தணனே, இந்த நான்கு செல்வங்களைப்பற்றிக் கூற, மக்கள் அந்தணர்களுக்கு உரிமை கொடுத்திருக்கிறார்களா?"

"இல்லை, கோதமரே."

"அப்படியானால், புலால் உண்ண விரும்பாத எளியவனிடம் புலாலின் பகுதியைச் சுமத்தி விலை கேட்பது போலத்தான் அந்தணர்களின் இந்தச் செயலைக் கருதவேண்டும். அந்தணனே, உயர்ந்த

ஆரிய தருமமே அனைவருக்கும் உரிய செல்வம் என்று நான் கூறுகிறேன். க்ஷத்திரிய குலம், பிராம்மண குலம், வைசிய குலம், வேளாளர் குலம் என்னும் நான்கு குலங்களில் பிறந்தவர்களை முறையே க்ஷத்திரியர், அந்தணர், வைசியர், வேளாளர் என்கிறார்கள். விறகு, குச்சி, புல், வறட்டி என்னும் நான்கு பொருள்களிலிருந்து உண்டான நெருப்பை முறையே விறகுத் தீ, குச்சித் தீ, புல் தீ, வறட்டித் தீ என்று கூறுவதுபோல இவை நான்கு பெயர்களாம். ஆனால் இந்த நான்கு குலத்திலும் உள்ளவர்கள் உயிர்க்கொலை முதலிய பாவங்களினின்று நீங்கினால், அவர்களுள் அந்தணன் மட்டுமே நட்புப் பாவனையோடு இருப்பான்; மற்ற வருணத்தவர் நட்போடு இருக்க முடியாது என்று உனக்குத் தோன்றுகிறதா?"

"அப்படி ஏதுமில்லை, கோதமரே. எந்த வருணத்தவனும் நட்பு உணர்ச்சியோடு வாழ முடியும்."

"அந்தணன் மட்டுமே ஆற்றுக்குச் சென்று அரைப்பைத் தேய்த்துத் தன் உடலைத் தூயதாக்க முடியும். ஆனால் மற்ற வருணத்தவர்கள் தங்கள் உடலைத் தூயதாக்க முடியாது என்று உனக்குத் தோன்றுகிறதா?"

"கோதமரே, அப்படி ஏதுமில்லை. நான்கு வருணத்தவரும் ஆற்றுக்குச் சென்று அரைப்பைத் தேய்த்து நீராடித் தங்கள் உடலைத் தூயதாக்க முடியும்."

"அதுபோலவே, அந்தணனே, எல்லாக் குலத்தவரும் ததாகதனுடைய உபதேசப்படி நடந்து கொண்டு நியாயமான தருமத்தை வழிபட முடியும்" என்றார் பெருமான்.

## அந்தண வருணமே சிறந்தது என்பது வீண் கூச்சல்

புத்தர் பிரானுடைய பரிநிர்வாணத்துக்குப் பின்பும் அவருடைய முக்கியச் சீடர்கள் நால்வருண முறையை ஒப்புக்கொள்ளவில்லை. இந்தச் சதுர்வருணப் பாகுபாடு செயற்கையானதென்றே அவர்கள் கூறினார்கள். இதற்கு ஒரு நல்ல உதாரணமாக, மஜ்ஜிமநிகாயத்திலுள்ள (84) மதுர ஸுத்தத்தைக் கொள்ளலாம். அதன் சாரமாவது-

ஒருமுறை, நீண்ட ஆயுள் வாய்ந்த மகாகச்சானர் வடமதுரையருகில் குந்தாவனத்தில் இருந்து வந்தார். மதுரையரசனான அவந்திபுத்தரின் அவர் புகழைக் கேள்வியுற்றுத் தன் பெருங்குழுவோடு அவரைக் காணச் சென்றான். சேமம் விசாரித்ததும் அவன் ஒரு புறமாக அமர்ந்து, "காத்தியாயனரே,. அந்தண வருணந்தான் சிறந்தது, மற்றவை தாழ்ந்தவை; அந்தண வருணமே வெண்மையானது, மற்றவை கறுப்பானவை; அந்தணர்களுக்கே முத்தி கிடைக்கும், மற்றவருக்குக் கிடைக்காது;

அந்தணர்கள் பிரம்மாவின் முகத்திலிருந்து உண்டானவர்கள், அவனுடைய சொந்தப் பிள்ளைகள் என்று அந்தணர்கள் கூறுகிறார்களே; இதைப்பற்றி உங்கள் கருத்து யாது?" என்று வினவினான்.

"அரசே, இது வெறுங் கூச்சல்! ஒரு க்ஷத்திரியன் தனதானியமும் அரசும் வாய்ந்தவனாக இருக்கிறான் என்று வைத்துக்கொள்வோம்; அப்பொழுது நால்வருணத்தாரும் அவனுக்குப் பணிவிடை செய்வார்களா மாட்டார்களா?" என்று காத்தியாயனர் கேட்டார்.

"காத்தியாயனரே, நால்வருணத்தவரும் அவனுக்குப் பணிவிடை செய்வார்கள்."

"அது போலவே வேறு எந்த வருணத்தவனாவது தனதானியமும் அரசும் வாய்ந்தவனாக இருந்தால், அவனுக்கு நால்வருணத்தாரும் பணி செய்வார்களா, மாட்டார்களா?"

"நால்வருணத்தவரும் பணி செய்வார்கள்."

"அப்படியானால் நால்வருணத்தவரும் ஒத்தவர்கள் என்று தெளிவாகிறது அல்லவா?"

"இப்படிப் பார்க்கும்போது நான்கு வருணங்களும் சமமே என்று உறுதியாகத் தேறுகிறது. அவற்றுள் எவ்வகை வேறுபாடும் எனக்குப் புலப்படவில்லை."

"அதனால்தான் நான் சொல்கிறேன்: அந்தண வருணமே சிறந்தது என்பது முதலான அந்தணர்களின் பேச்சு, வெறுங்கூச்சல். க்ஷத்திரியன், அந்தணன், வைசியன், வேளாளன் என்னும் நால்வருணத்தவர் உயிர்க்கொலை முதலிய பாவங்களைச் செய்தால் சமமாகவே தாழ்நிலை எய்துவார்கள் என்று உங்களுக்குத் தோன்றவில்லையா, அரசே?"

"நால்வருணத்தவரில் எவன் பாவம் செய்தாலும் தாழ்நிலையையே எய்துவான்."

"அரசே, இப்படி இருக்க. நான்கு வருணங்களும் சமமே என்றுதானே முடிவாகிறது? இதைப்பற்றி நீங்கள் என்ன நினைக்கிறீர்கள்?"

"இப்படிப் பார்க்கும்போது நான்கு வருணங்களும் சமமே என்று உறுதியாகப் புலனாகிறது. அவற்றுள் எவ்வகை வேறுபாடும் எனக்குப் புலப்படவில்லை."

"அரசே, நால்வருணத்தவரில் ஒருவன் உயிர்க்கொலை முதலிய பாவங்களினின்று நீங்கினால் துறக்கம் எய்துவானா, மாட்டானா?"

"காத்தியாயனரே, அவன் துறக்கம் எய்துவான் என்றே கருதுகிறேன்."

"அதனால்தான் நான் சொல்கிறேன்: அந்தண வருணமே சிறந்தது என்பது வெறுங் கூச்சல். அரசே, உங்கள் இராச்சியத்தில் நால்வருணத்தவரில் எவனோ ஒருவன், வீட்டில் கன்னம் வைத்தல், கொள்ளையடித்தல், பிறர்மனை விழைதல் முதலிய குற்றங்களைச் செய்வதாக வைத்துக்கொள்வோம். அரசாங்க அதிகாரிகள் அவனை

உங்கள் முன்னிலையில் நிறுத்தினால் நீங்கள் (அவனுடைய சாதியைக் கருதாமல்) அவனுக்குத் தக்க தண்டனை அளிப்பீர்களா, மாட்டீர்களா?

"அவன் கொலைத் தண்டனைக்கு ஏற்றவனாக இருந்தால் நான் அவனுக்குக் கொலைத் தண்டனை அளிப்பேன்; வேறு தண்டனைக்கு உரியவனாக இருந்தால் அந்தத் தண்டனையைக் கொடுப்பேன்; நாடு கடத்தற்கு உரியவனாக இருந்தால் அவனை நாடு கடத்துவேன். ஏனெனில் க்ஷத்திரியன் அந்தணன் என்ற அவனுடைய முந்தையப் பெயர் மறைந்து, இப்போது அவன் குற்றவாளி என்று தீர்மானமாகியிருக்கிறது."

"அப்படியானால் இந்த நால்வருணங்களும் சமமே அல்லவா?"

"இப்படிப் பார்க்கும்போது நால்வருணங்களும் சமமே என்பது தேற்றம்."

"அரசே, நால்வருணத்தவரில் ஒருவன் துறவியாகி நன்னெறியில் வாழ்கிறான் என்று வைத்துக்கொள்ளுங்கள். அவனிடம் நீங்கள் எப்படி நடந்துகொள்வீர்கள்?"

"அவனை நான் போற்றி வழிபடுவேன்; அவனுக்குத் தக்க மதிப்புக் கொடுப்பேன்; உணவு உடை முதலிய இன்றியமையாத பொருள்களை வழங்குவேன். ஏனெனில் க்ஷத்திரியன் அந்தணன் வைசியன் வேளாளன் முதலிய அவன் பெயர்கள் அழிந்து, இப்போது அவன் சிரமணனாகக் கருதப் பெறுகிறான்."

"அப்படியானால் இந்த நால்வருணங்களும் சரி சமமே என்பதுதானே முடிவு?"

"இவ்வகையில் பார்க்கும்போது இந்த நால்வருணங்களும் சமமே என்பது உறுதி."

"அதனால்தான் நான் சொல்கிறேன்: அந்தண வருணமே சிறந்தது என்பது வெறுங் கூச்சல்."

இந்த உரையாடல் முடிந்ததும் அவந்திபுத்திரன், 'தங்கள் அறிவுரை மிகவும் அழகாக இருக்கிறது. காத்தியாயனரே. கவிழ்த்த பாண்டத்தை நிமிர்த்து வைப்பதுபோல, மறைந்த பொருளை வெளிப்படுத்துவது போல, வழி தவறியவனுக்கு வழி காட்டுவதுபோல, கண்ணுடையவனுக்குப் பொருள் தெரிவதற்காக இருளில் தீவட்டிக் கொளுத்துவதுபோல, பெரியார் காத்தியாயனர் பல வகையாக எனக்கு அறவுரை செய்தார். ஆதலால் நான் பெரியார் காத்தியாயனரையும் தருமத்தையும் பிட்சு சங்கத்தையும் சரணடைகிறேன். இன்று முதல் நான் மரிக்கும் வரைக்கும், தங்களைப் புகலடைந்த அடியனாக என்னைக் கருதுங்கள்" என்றான்.

அப்பொழுது மகாகாத்தியாயனர், "அரசே, நீங்கள் என்னைப் புகலடைய வேண்டாம். நான் புகலடைந்த பெருமானையே நீங்களும் புகலாகக் கொள்ளுங்கள்" என்றார்.

"காத்தியாயனரே, அந்தப் பெருமான் இப்பொழுது எங்கே

இருக்கிறார்?" என்றான் அரசன்.

"அந்தப் பெருமான் பரிநிர்வாணமெய்திவிட்டார்."

"பெருமான் உயிரோடு இருந்திருந்தால் அவரைக் காண நான் நூறு யோஜனைகள்[1] தொலைவுகூட யாத்திரை செய்திருப்பேன். ஆனால் இப்போது பெருமான் பரிநிர்வாணம் எய்தியிருந்தும், அவரையே சரணடைகிறேன்; அதுபோலவே அவருடைய தருமத்தையும் பிட்சு சங்கத்தையும் சரணடைகிறேன். இன்று முதல் நான் மரிக்கும்வரையில் மும்மணியைச் சரணடைந்த உபாசகன் என்று என்னைக் கருதுங்கள்" என்றான் மன்னன்.

புத்தருடைய வாழ்நாளில் வடமதுரையில் பௌத்த சமயம் மிகுதியாகப் பரவியிருக்கவில்லை என்பது, இரண்டாவது அத்தியாயத்தில் நான் எடுத்துக் காட்டிய அங்குத்தரநிகாயத்து ஸுத்தத்திலிருந்தே தெளிவாகும். அவந்திபுத்திரன் என்னும் மன்னன், புத்தருடைய பரிநிர்வாணத்துக்குப் பின்பு அரியணையில் அமர்ந்தவனாதல் வேண்டும். ஏனெனில் புத்தருடைய வாழ்நாளில் அவன் அரியணையேறியிருந்தால் அவரைப் பற்றிச் சிறிதளவாவது அவனுக்குத் தெரிந்திருக்கக் கூடும். மேலே கூறிய ஸுத்தத்தில் இறுதியாக வரும் செய்தியிலிருந்து, புத்தர் பரிநிர்வாணம் எய்தியதுகூட அவனுக்குத் தெரியாது என்று விளங்குகிறது. எனவே, 'புத்தரின் காலத்தில் அவனுடைய தந்தை அரசாண்டான். அவன் அந்தணரின் தருமத்தைப் பெரிதும் மதித்தவனாதலால் புத்தரை அசட்டை செய்தான். மகாகாத்தியாயனர் அவந்தியில் வாழ்ந்தவர்; முதலில் அந்தணராக இருந்தவர்; பெரும் புலவர்; ஆதலினால் இளைஞனான அவந்திபுத்திரன் மனத்தில் அவர் பேச்சு ஏறியது' என்று கொள்வதே பொருத்தமாகும்.

## சிரமணர்களால் சாதி வேற்றுமையைத் தகர்க்க முடியவில்லை

மேலே விவரித்த நான்கு ஸுத்தங்களுள், முதலில் வாஸிஷ்ட ஸுத்தத்தில், சாதி வேற்றுமை இயல்பானதன்று என்பதைப் புத்தர்பிரான் விளக்கியிருக்கிறார். இரண்டாவதான அஸ்ஸலாயன ஸுத்தத்தில், அந்தணர்கள் பிரமனின் முகத்திலிருந்து தோன்றியவர்கள் என்ற கருத்தை அவர் வெட்டிப் பேசியிருக்கிறார். மூன்றாவதான ஏஸுகாரி ஸுத்தத்தில், 'மற்ற வருணத்தவர் இன்னவை செய்ய வேண்டும், இன்னவை செய்யலாகாது என்று வரையறுக்கும் உரிமை அந்தணர்களுக்கு இல்லை' என்பதை ஆராய்ந்து உறுதிப்படுத்தியிருக்கிறார். நான்காவதான மாதுர

1. ஒரு யோஜனை என்பது நான்கு குரோசம் அல்லது எட்டு மைல் கொண்ட நீட்டலளவு. (மொ-ர்.)

ஸுத்தத்தில், பொருளாதார முறையிலும் நீதி முறையிலும் பார்க்கும் பொழுது சாதிவேற்றுமைக் கொள்கை பயனற்றதென்று தெளிவாகிறது' என்பதை மகாகாத்தியாயனர் விளக்கியிருக்கிறார். இந்த ஸுத்தங்கள் அனைத்தையும் நன்கு சிந்தித்து நோக்குமளவில், புத்தரோ அவருடைய சீடர்களோ சாதிப் பிரிவனையை அறவே விரும்பவில்லை; அதைத் தகர்க்க அவர்கள் ஆனமட்டும் முயன்றார்கள் என்பது தெளிவாகிறது. ஆனால் இந்தச் செயல் அவர்களுடைய கட்டுக்கு அடங்கியதாக இல்லை. ஏனெனில், அந்தணர்கள் சாதி வேற்றுமையை மத்திய இந்தியாவில் மட்டுமல்லாமல் கோதாவரிக் கரை வரைக்கும் வளர்த்து வைத்திருந்தார்கள். அதை அறவே நீக்கிவிட எந்தச் சிரமண சங்கத்தாலும் முடியவில்லை.

## சிரமணர்களுள் சாதிப் பிரிவினை இல்லை

ஆயினும், பழங்கால முனிவர்களின் பரம்பரையைப் போலவே, சிரமணர்கள் தமது சங்கத்தில் சாதி வேற்றுமைக்கு இடந்தரவில்லை. எந்தச் சாதியானும் சிரமணனாகி, சிரமண சங்கமொன்றில் சேர முடியும். ஹரிகேசிபலன் புலையனாக இருந்து, நிக்கந்தர்களின் (ஜைனர்களின்) சங்கத்தில் சேர்ந்த வரலாற்றை ஒன்பதாவது அத்தியாயத்தில் முன்பே கூறியிருக்கிறேன். புத்தருடைய பிட்சு சங்கத்திலோ தீண்டாத குலத்தில் பிறந்தவர்களான சுவபாகன் என்ற புலையனும், சுநீதன் என்ற தோட்டியும் பெருந்துறவிகளாக விளங்கினார்கள்.[1] தமது சங்கத்துக்கு உள்ள நற்பண்புகளில் ஒன்று, சாதி வேற்றுமைக்கு இடமில்லாமை என்று புத்தர்பெருமான் கூறுகிறார். அவர் வாக்கு இது- "பிட்சுக்களே, கங்கை யமுனை அசிரவதி சரயு மகி என்னும் பேராறுகள் பெருங்கடலில் கலந்ததும் தம் பெயரை இழந்து பெருங்கடல் என்ற ஒரே பெயரை அடைகின்றன. அதுபோலவே க்ஷத்திரியர் அந்தணர் வைசியர் வேளாளர் என்ற நால்வருணத்தவரும் ததாகதனுடைய சங்கத்தில் சேர்ந்ததும் பழைய பெயர்களையும் கோத்திரங்களையும் இழந்து, சாக்கியபுத்திரர்களான சிரமணர் என்ற ஒரே பெயரால் வழங்கப் பெறுகிறார்கள்." (உதானம், 5-5; அங்குத்தரநிகாயம், அட்டகநிபாதம்.)

## அசோகன் காலத்துப் பௌத்த சங்கத்தில் சாதி வேற்றுமை இல்லை

அசோகன் காலத்தில் நிலவிய பௌத்த சங்கம், சாதிப் பிரிவினையை அறவே கருத்தில் கொள்ளவில்லை என்பது, திவ்யாவதானத்தில் உள்ள யசன் என்னும் அமைச்சனின் கதையிலிருந்து தெரிகின்றது.

1. இதுபற்றிய விரிவை, பௌத்த சங்க வரலாறு, பக். 253- 256-இல் காண்க.

அசோகன் பௌத்தனான புதிது. அவன் பிட்சுக்கள் அனைவரையும் அடிவீழ்ந்து வணங்கி வந்தான். அதைக் கண்ட யசன் என்ற அவனுடைய அமைச்சன், "பேரரசே, இந்தச் சாக்கியச் சிரமணருள் எல்லாச் சாதியினரும் இருக்கிறார்கள். முடிபுனைந்த தங்கள் தலை அவர்கள் முன்பு வணங்குவது பொருத்தமன்று" என்றான்.

அசோகன் இதற்கு மறுமொழி ஏதும் உரைக்கவில்லை. சில நாள் கழித்து அவன் செம்மறி வெள்ளாடு முதலிய விலங்குகளின் தலைகளை வரவழைத்து விற்கச் சொன்னான்; யசனை மனிதன் தலையைக் கொண்டு வந்து விற்கச் சொன்னான். செம்மறி வெள்ளாடு முதலிய விலங்குகளின் தலைகளுக்கு ஏதோ விலை கிடைத்தது; ஆனால் மனிதனுடைய தலையை எவனும் வாங்கவில்லை. அப்பொழுது அசோகன் அதை எவனுக்காவது இலவசமாக கொடுக்கச் சொன்னான். ஆனால் அதை இலவசமாக வாங்கிக்கொள்பவன் கூட யசனுக்குக் கிடைக்கவில்லை. இந்தச் செய்தியை அவன் மன்னனுக்குத் தெரிவித்தான். அப்பொழுது அசோக மன்னன், "இந்த மனிதத் தலையை இலவசமாகக் கொடுத்தும் மக்கள் ஏன் வாங்கிக் கொள்ளவில்லை?" என்று கேட்டான்.

"ஏனெனில் இந்தத் தலையைப் பார்த்தால் அவர்களுக்கு அருவருப்பாக இருக்கிறது" என்றான் யசன்.

"இந்த மனிதத் தலையைப் பார்த்துத்தான் அவர்கள் அருவருக்கிறார்களா, அல்லது எல்லா மனிதர்களின் தலையைப் பார்த்தாலும் இப்படித்தான் அருவருப்பார்களா?" என்று மன்னன் கேட்டான்.

"பேரரசே, எவனுடைய தலையை மக்களிடம் அறுத்துச் சென்றாலும் அவர்கள் இப்படித்தான் அருவருப்புக் கொள்வார்கள்."

"என் தலையைக் கொண்டு சென்றாலும் அருவருப்பார்களா?"

"இந்த வினாவுக்கு விடைகூற யசன் துணியவில்லை; ஆனால் அசோகன் அபயம் தந்ததும், "பேரரசே, தங்கள் தலையைக் கண்டாலும் மக்கள் இப்படித்தான் அருவருப்பார்கள்" என்றான்.

அப்படியானால் நான் இத்தகைய தலையைப் பிட்சுக்களின் திருவடிகளில் வைத்து அவர்களைப் போற்றினால் உனக்கு ஏன் அது கெடுதலாகப் படுகிறது?" என்றான் மன்னன்.

இந்த உரையாடலுக்குப் பிறகு, சில சுலோகங்கள் உள்ளன. அவற்றுள் ஒன்றின் கருத்து இது- "ஒருவன் தன் மகனுக்கோ மகளுக்கோ மணம் செய்யும் பொழுது சாதியைக் கவனிப்பது பொருத்தமாகும். அறத்துறையில் சாதியைக் கவனிக்கக் காரணம் இல்லை. ஏனெனில், அறச் செயல்களில் நற்பண்புகளையே காணவேண்டும்; நற்பண்புகள் சாதியைப் பொறுத்தவை அல்ல."

## ஜைன சங்கம் சாதி வேற்றுமையை ஒப்புக்கொண்டது

மற்றச் சிரமண சங்கங்களுக்குள்ளே, நிக்கந்தர்களின் சங்கத்தைப் பற்றித்தான் ஓரளவு செய்திகள் இன்று நமக்குக் கிடைத்துள்ளன. இந்தச் சிரமண சங்கம், அசோகன் காலத்துக்கு முன்னமே, சாதி வேற்றுமைக்குப் பெருமை தரத் தொடங்கியதாக ஆசாராங்க சூத்திரத்தின் நிருக்தியினின்று தெரியவருகிறது. இந்த நிருக்தியை இயற்றியவர், பத்திரபாகு; அவர் சந்திரகுப்தரின் குரு என்று ஜைனர்கள் கருதி வருகிறார்கள். இந்த நிருக்தியின் தொடக்கத்திலேயே சாதிப் பிரிவினையைப் பற்றிய செய்தி வருகிறது. அதன் சாரமாவது-

"நான்கு வருணங்களின் சேர்க்கையினால் பதினாறு வருணங்கள் தோன்றியுள்ளன. அந்தணனும் க்ஷத்திரியப் பெண்ணும் சேருவதனால் பிரதான க்ஷத்திரியன் அல்லது ஸங்கர க்ஷத்திரியன் தோன்றுகிறான். க்ஷத்திரியனும் வைசியப் பெண்ணும் சேருவதனால் பிரதான வைசியன் அல்லது ஸங்கர வைசியன் உதிக்கிறான். வைசியனும் வேளாளப் பெண்ணும் சேருவதனால் பிரதான வேளாளன் அல்லது ஸ்ங்கர வேளாளன் உண்டாகிறான். இப்படி ஏழு வருணங்கள் ஆயின. இனி, ஒன்பது வருணாந்தரங்களாவன- 1. அந்தணனுக்கும் வைசியப் பெண்ணுக்கும் பிறக்கும் அம்பஷ்டன், 2. க்ஷத்திரியனுக்கும் வேளாளப் பெண்ணுக்கும் பிறக்கும் உக்கிரன், 3. அந்தணனுக்கும் வேளாளப் பெண்ணுக்கும் பிறக்கும் நிஷாதன், 4.வேளாளனுக்கும் வைசியப் பெண்ணுக்கும் பிறக்கும் அயோகவன், 5. வைசியனுக்கும் க்ஷத்திரியப் பெண்ணுக்கும் பிறக்கும் மாகதன், 6. க்ஷத்திரியனுக்கும் அந்தணப் பெண்ணுக்கும் பிறக்கும் ஸூதன், 7. வேளாளனுக்கும் க்ஷத்திரியப் பெண்ணுக்கும் பிறக்கும் க்ஷத்தா, 8. வைசியனுக்கும் அந்தணப் பெண்ணுக்கும் பிறக்கும் வைதேகன், 9. வேளாளனுக்கும் அந்தணப் பெண்ணுக்கும் பிறக்கும் சண்டாளன்." (ஆசாராங்க நிருக்தி, அத். 1, காதை 21-27.)

இன்று நாம் காணும் மனுஸ்மிருதி, இந்த நிருக்திக்கு மிகப் பிற்காலத்தியது. ஆயினும், இந்த நிருக்தி தோன்றிய காலத்தில், அந்தணர்கள் மனுஸ்மிருதியிலுள்ள அநுலோம, பிரதிலோம சாதிகளுக்கு இவ்வாறு மொழிப் பொருட் காரணம் காண முயன்றிருப்பார்கள் என்று ஊகிக்கத் தடையில்லை. ஜைனர்கள் அந்தணர்களிடத்திலிருந்தே இந்த வியுற்பத்தியை ஏற்றுக்கொண்டிருப்பார்கள் என்ற உறுதியான ஐயம் எழுகிறது. அது எப்படியாயினும் சரி; நிக்கந்தச் சிரமணர்கள் சாதி வேற்றுமைக்கு முழு இசைவு தந்தார்கள் என்பதற்கு இது உயர்ந்த எடுத்துக்காட்டாகும்.

# இழிவான சாதியினரை ஜைனச் சாது சங்கத்தில் ஏற்க மறுப்பு

1. பாலன், 2. முதியவன், 3. நபுஞ்சகன், 4. அலி, 5. அறிவிலி, 6. நோயாளி, 7. திருடன், 8. அரசனுக்கு குற்றமிழைத்தவன், 9. பைத்தியக்காரன், 10. காணத்தகாதவன் (அதரிசனன்), 11. அடிமை (தாசன்), 12. தீயவன், 13. மூடன், 14. கடன்பட்டவன், 15. ஜுங்கிதன் (விலக்கப் பட்டவன்), 16. சிறைப்பட்டவன், 17. பயங்கொள்ளி, 18. ஏமாற்றி இழுத்துவந்த, சீடன் ஆகிய பதினெண்மரை ஜைனச்சாது சங்கத்தில் ஏற்றுக்கொள்ள மறுத்திருக்கிறார்கள். இவர்களில் பெரும்பாலோரைப் பௌத்த பிட்சு சங்கத்திலும் ஏற்றுக்கொள்ள மாட்டார்கள். இந்த இரண்டு சங்கங்களிலுமுள்ள பிரவேச விதிகளை (உபசம்பதைகளை) ஒப்பிடுவது மிகப் பயனுள்ளது;[1] ஆனால் அது இந்த அத்தியாயத்துக்குரிய விஷயமன்று. மேற்கூறிய பதினெண்மரில், 'ஜுங்கிதன்' என்ற பதினைந்தாவது ஆளைப்பற்றிய ஆராய்ச்சிதான் இங்கு நமக்கு வேண்டியது. அந்தச் சொல்லின் விரிவுரையைப் பாருங்கள்-

"அதுபோலவே சாதி செயல் உடல் முதலியவற்றில் குறைகளுடைய வன் ஜுங்கிதனாம். வேடன், செம்படவன், கழைக்கூத்தாடி, தையற்காரன், சாயமிடுபவன் முதலிய தீண்டாதவர்கள், ஜாதி ஜுங்கிதராம். தீண்டத்தக்கவர்களாக இருந்தும், பெண், மயில், கோழி, கிளி முதலியவற்றை வைத்து வளர்ப்பது, கழையிலும் கயிற்றிலும் நின்று கூத்தாடுவது, நகங்களைச் சுத்தம் செய்வது, பன்றி வளர்ப்பது, வேட்டையாடுவது முதலிய இகழத்தக்க செயல்களைச் செய்பவர், கரும ஜுங்கிதராம். கைகால் இல்லாத முடவர், ஊமை, கூனர், குள்ளர், ஒற்றைக் கண்ணர் முதலியவர்கள் சரீர ஜுங்கிதராம். மக்கள் குறை சொல்லக்கூடுமாதலால், இவர்கள் அனைவரும் தீட்சைக்கு உரியவர்கள் அல்லர்." - பிரவசன சாரோத்தாரம், துவாரம் 107. இந்த மேற்கோளை எனக்கு எடுத்துத் தந்த ஸ்ரீ ஜினவிஜய முனிவருக்கு நான் கடமைப்பட்டிருக்கிறேன்.

பௌத்த பிட்சு சங்கத்தில் சேருவதற்கு, சாதி அறவே தடையாகாது. செயல்கள் இகழத் தக்கவையாயின் அவற்றை அவன் விட்டே தீரவேண்டும்; ஆனால் அவற்றினால் அவன் தீட்சைக்கு உரிமை பெறாதவன் ஆக மாட்டான்.

---

1. பௌத்த பிட்சு சங்த்தின் பிரவேச விதிகளைப்பற்றி, புத்தரும் தருமமும் சங்கமும், பக்.56-60-இலும், பௌத்த சங்க வரலாறு, பக். 17-19-இலும் விரிவாகக் காண்க.

## ஹிந்து சமூகத்தில் ஹிந்துக்களல்லாதார் வந்தமை

இப்படியெல்லாம் இருந்தும், பௌத்தர் ஜைனர் என இரு சம்பிரதாயத்தினரும் வெளிநாட்டினரை ஹிந்து சமூகத்தில் சேர்த்துக் கொள்ளும் பெருஞ்செயலை ஆற்றியிருக்கிறார்கள். கிரேக்கர், சகர், ஹூணர், மாலவர், குர்ஜரர் முதலிய புறச்சாதியினர் இந்தியாவுக்கு வந்து, இந்த இரண்டு சமயங்களாகிய பெருவாசல் வழியே ஹிந்து சமூகத்திற்குள் நுழைந்தனர். முதலில் இவர்கள் ஜைனராகவோ பௌத்தராகவோ இருப்பர்; பிறகு தங்கள் விருப்பப்படி அந்தணரோ க்ஷத்திரியரோ வைசியரோ ஆவர். ஒரே குடும்பத்தில் அண்ணனுடைய சந்ததியார் க்ஷத்திரியத் தன்மையையும், தம்பியின் சந்ததியார் பார்ப்பனத் தன்மையையும், ஏற்றுக்கொண்டதுண்டு என்பதற்குச் சான்றுகள் உள்ளன.[1]

## தீண்டாமையின் விளைவு

இப்படி வெற்றிகொண்ட வெளிநாட்டினர் ஹிந்து சமூகத்தில் கலந்தபோதிலும், தீண்டாதவர்களின் நிலை திருந்தவில்லை. ஜைன பௌத்த சிரமணர்கள் அவர்களைப் புறக்கணித்தார்கள்; ஆதலால் நாளுக்கு நாள் தீண்டாதவர்களிடம் மக்களுக்கு வெறுப்பு வளர்ந்தது; அவர்களை வீணே துன்புறுத்தினார்கள். அதன் விளைவை மெல்ல மெல்லச் சமூகம் அனைத்தும், ஜைனர்களும் பௌத்தர்களுங்கூட, அநுபவிக்க வேண்டியதாயிற்று.

சாதி வேற்றுமை உறுதிப்பட்டதும், 'ஜைனர்களும் பௌத்தர்களும் எல்லாச் சாதியரிடத்தும் பிட்சையேற்கிறார்கள்' என்று கூறி இகழலானார்கள். ஜைன சங்கத்தில் தீண்டாதவரை ஏற்க மறுத்தபோதிலும் வேளாளரைச் சேர்த்துக் கொள்வதுண்டு என்று தோன்றுகிறது. பௌத்த சங்கத்திலோ இறுதி வரைக்கும் சாதிப் பிரிவினைக்கு இடம் இருந்ததில்லை. ஆயினும் சமூகத்தில் சாதி வேறுபாடு வலிமை பெற்றது. அந்தணர்கள் சம்பூகன் கதை போன்றவற்றை இயற்றி மக்களுக்குப் பிரியமான புராணங்களில் அவற்றை நுழைத்துவிடுவது சாத்தியமாயிற்று. நாளடைவில் பௌத்த சிரமணர்கள் முற்றும் அழிந்தார்கள்; ஜைன சிரமணர்கள் ஏதோ ஒருவாறு உயிர் பிழைத்து இருந்தார்கள். ஆனால் சமூகச் சீர்திருத்தத்துக்கு ஏற்ற எந்தப் பெருஞ் செயலையும் அவர்களால் செய்ய முடியவில்லை.

1. இதுபற்றி டாக்டர் டி.ஆர். பண்டார்கர், Indian Antiquary, Vol. 40, ஜனவரி 1911, பக். 7-37-இல் எழுதிய 'The Foregin Elements in the India Population' என்ற கட்டுரையைப் படிக்க. சிறப்பாக. பக். 35-36-இலுள்ள விஷயத்தைப் பார்க்க.

## வெளிநாடுகளில் பிட்சு சங்கம் ஆற்றிய செயல்

பௌத்த பிட்சு சங்கம், சாதி வேற்றுமையை எதிர்த்து இந்தியாவில் நிலைநிற்க முடியவில்லை. ஆயினும், வெளிநாடுகளில் அது பெருஞ்செயல் ஆற்றியது. தெற்கே சிங்களத் தீவு, கிழக்கே பர்மா முதல் ஜப்பான் வரையிலுமுள்ள நாடுகள், வடக்கே திபேத்து, மங்கோலியா முதலிய நாடுகள் ஆகிய எல்லாத் தேசங்களிலும் பௌத்த சங்கம் பெரும்பாலான மக்கள் கூட்டத்தை ஒரு காலத்தில் மிகுந்த பண்பாடுடையவர்களாக்கியது. வடக்கே இமயத்தின் வாயிலாகவும், தெற்கிலும் கிழக்கிலும் கடல் வாயிலாகவும் பயணம் செய்து, எத்தனையோ பிட்சுக்கள் பௌத்தப் பண்பாட்டுக் கொடியை இந்த நாடுகள் அனைத்திலும் பறக்க விட்டார்கள். புத்தர் பிரானின் மேற்கூறிய உபதேசமே, இவ்வளவுக்கும் விதையாக விளங்கியது. புத்தர் சாதி வேறுபாட்டுக்குத் துளி இடமாவது கொடுத்திருந்தாரானால், அவருடைய அடியார்களான பிட்சுக்கள், மிலேச்சம் என்று கருதப் பெற்றுவந்த நாடுகளில் திரிந்து, பௌத்த தருமத்தைப் பரப்பியிருக்க மாட்டார்கள். ஆகவே, சாதி வேறு பாட்டினால் நமக்குத் தீங்கு நேர்ந்தது; ஆனால் கிழக்கு ஆசியாக் கண்டத்துக்கு நன்மை விளைந்தது எனலாம்.

# 11. புலால் உணவு

## புத்தர்பெருமான் கொண்ட புலால்

புத்தர்பிரான், பரிநிர்வாணத்தன்று சுந்தன் என்ற கொல்லன் வீட்டில் பன்றி மாமிசத்தை உண்டார். இன்றும் பௌத்த பிட்சுக்கள் குறைவாகவோ மிகுதியாகவோ புலால் உண்கிறார்கள். எனவே, 'அஹிம்சையைப் பேரறமாகக் கருதும் புத்தரும், அவர் கொள்கையைப் பின்பற்றுகிறவர்களும் இப்படிப் புலால் உண்டு ஒழுகுவது மன்னிக்கத் தக்கதா?' என்ற கேள்வி எழுகிறது. இதை இப்பொழுது ஆராய்வது பொருத்தமாகும்.

புத்தர் பரிநிர்வாணத்தன்று உண்ட பொருளுக்கு 'ஸூகரமத்தவம்' என்று பெயர். இதற்கு விளக்கமாகப் புத்தகோஷாசாரியர் வரைந்த உரையாவது- "ஸூகரமத்தவம் என்றால், மிக்க இளையதாகவோ மிக்க முதியதாகவோ இல்லாமல் சிறு குட்டிகளுக்குள்ளே பெரிதாக உள்ள பன்றியின் சமைத்த மாமிசம். அது மென்மையும் வழுவழுப்பும் உடையது. அதைச் சமைப்பது என்றால், அதை நன்கு பக்குவமாக வேக வைத்தலாம். 'கவபானம் என்ற சிறப்பான பக்குவ உணவைப்போலவே, இது ஐவகைக் கோ ரசத்தினாலான மிருதுவான உணவு' என்று சிலர் கூறுவர். மற்றும் சிலர், ஸூகரமத்தவம் என்பது ஓர் இரசாயனம் (காயசித்தி மருந்து). இரசாயனம் என்ற பொருளில் இந்தச் சொல் வழங்குகிறது. 'பெருமான் பரிநிர்வாணம் எய்திவிடலாகாதென்று கருதியே சுந்தன் இதை அவருக்குக் கொடுத்தான்' என்பர்."

இந்த உரையில், ஸூகரமத்தவம் என்ற சொல்லுக்குப் பன்றி மாமிசம் என்றே முக்கியப் பொருள் கொண்டிருக்கிறார் உரைகாரர். ஆயினும் அந்தப் பொருள் சரிதான் என்ற உறுதி புத்தகோஷாசாரியருக்கு இல்லை. ஏனெனில், அந்தக் காலத்தில் இந்தச் சொல்லுக்கு மற்றும் இரண்டு பொருள்கள் சொல்லிவந்தார்கள். இவற்றைத் தவிர, இதே சொல்லுக்கு இரண்டு மாறுபட்ட பொருள்கள் உதான அட்டகதையில் வருகின்றன- "ஸூகரத்தவம் என்பது பன்றி மாமிசமன்று; பன்றிகள் மிதித்து உழக்கிய மூங்கிலின் முளையாம் என்பர் சிலர். மற்றும் சிலர், பன்றிகள் மிதித்து உழக்கிய இடத்தில் முளைத்த நாயுருவியே அது என்பர்."

இப்படியாக, ஸூகரமத்தவம் என்ற சொல்லின் பொருளைப்பற்றிப் பல கருத்துவேற்றுமைகள் உண்டு. ஆயினும் புத்தர்பெருமான் பன்றி மாமிசம் உண்டு வந்தார் என்பதற்கு, அங்குத்தரநிகாயத்தில் பஞ்சக நிபாதத்தில் சான்று கிடைக்கிறது. உக்க கஹபதி என்பவன், "பதந்தரே,

உயர்ந்த பன்றியைச் சிறப்பான முறையில் பக்குவப்படுத்திச் சமைத்த மாமிசம் இது. என்மீது அருள் கூர்ந்து பெருமான் இதை ஏற்க வேண்டும்" என்றான். பெருமான் அருள் கூர்ந்து அந்தப் புலாலை ஏற்றார்.

## ஜைன சிரமணர்களின் புலால் உணவு

வேறு சிரமண சம்பிரதாயங்களுக்குள் கடுந்தவத்தவர்களாக விளங்கியவர்களில் ஜைனர் முதன்மையானவர் என்பர். அந்தச் சம்பிரதாயத்துச் சிரமணர்களும் புலால் உண்டுவந்தனர் என்பது, ஆசாராங்க சூத்திரத்திலிருந்து தெரியவருகிறது. அது கூறுவதாவது-

"அந்தப் பிட்சுவோ பிட்சுணியோ, மிகுந்த எலும்புள்ள மாமிசத்தையோ மிகுந்த முள்ளுள்ள மீனையோ பார்த்தால் அதில் உண்ணும் பண்டம் குறைவாகவும் எறியும் பண்டம் மிகுதியாகவும் இருப்பதை அறியலாம். ஆதலால் இப்படி மிகுந்த எலும்புள்ள மாமிசத்தையோ மிகுந்த முள்ளுள்ள மீனையோ அவர்கள் பெற்றுக் கொள்ளலாகாது. பிட்சுவோ பிட்சுணியோ இல்லறத்தவனின் வீட்டுக்குப் பிட்சைக்குச் சென்றதும், இல்லறத்தவன், 'பேராயுள் வாய்ந்த சிரமணரே, நிறைய எலும்புள்ள இந்த மாமிசத்தை ஏற்க உங்களுக்கு விருப்பமா?' என்று கேட்பான். இதைச் செவியுற்றதுமே, 'நெடிய ஆயுள் வாய்ந்தவனே, (அல்லது பெண்ணாக இருந்தால், சகோதரியே,) மிகுந்த எலும்புள்ள இந்தப் புலாலை நான் ஏற்பது தக்கதன்று. உனக்கு விருப்பம் இருந்தால், புலாலை மட்டும் கொடு, எலும்புகளைக் கொடுக்க வேண்டாம்' என்று சொல்லுக. இப்படிச் சொல்லியும் அந்த இல்லறத்தான் வற்புறுத்திக் கொடுத்தால், தகுதியற்ற அதை ஏற்றுக்கொள்ளலாகாது. அதை அவன் பிச்சைப் பாண்டத்தில் போட்டுவிட்டால், ஒரு புறமாக அதை எடுத்துச் சென்று, சோலையிலோ நிழலடியிலோ, பிராணிகளின் முட்டைகள் குறைவாக இருக்கும் இடத்தில் உட்கார்ந்து, மாமிசத்தையும் மீனையும் மட்டும் தின்றுவிட்டு, எலும்புகளையும் முட்களையும் எடுத்துக் கொண்டு ஒரு புறமாகச் செல்ல வேண்டும். எரித்த நிலத்திலோ, எலும்புகளின் குவியலிலோ, துருப்பிடித்த பழைய இரும்பு துணுக்குகளின் குவியலிலோ, உமி குவியிலிலோ உலர்ந்த சாணக் குவியலிலோ அல்லது இதுபோலவே உயர்ந்துள்ள மேட்டிலோ இடத்தைச் சுத்தம் செய்து அந்த எலும்புகளையும் முட்களையும் அங்கே அமைதியாக வைத்துவிட வேண்டும்."

தசவைசாலிக சூத்திரத்திலுள்ள காதைகள், இதனையே சுருக்கமாக உரைக்கின்றன- "மிகுந்த எலும்புள்ள புலால், மிகுதியான முட்களுள்ள மீன், அத்திப் பழம், மூங்கிலரிசி, கரும்பு, இலவு முதலிய பண்டங்களை- உண்ணும் பகுதி குறைவாகவும் எறியும் பகுதி மிகுதியாகவுமுள்ள

பண்டங்களைக் கொடுப்பவரிடம், 'இவை எனக்கு ஏற்றவையல்ல' என்று கூறித்தடுத்துவிட வேண்டும்."

## புலால் உணவைப்பற்றிப் பிரசித்த சாதுக்களின் கருத்து

குஜராத் வித்தியாபீடத்தின் கிளையாக, பழம் பொருளாராய்ச்சிக் கூடமொன்று நிலவியது. அதன் சார்பில் 'புராதத்துவம்' என்ற பத்திரிகை மூன்று மாதங்களுக்கொரு முறை வெளிவந்தது. அந்தப் பத்திரிகையில், 1925-ஆம் ஆண்டில் ஓர் இதழில் நான், புலால் உணவு பற்றி ஒரு கட்டுரை எழுதினேன். மேலே உள்ள இரண்டு மேற்கோள்களையும் அதில் குறிப்பிட்டேன். இவற்றை நானே தேடியெடுத்தேன் என்பதில்லை; புலால் உணவுபற்றிய ஆராய்ச்சி நடக்கையில், புகழ் வாய்ந்த ஜைனப் புலவர்களே இவற்றை எனக்குக் காண்பித்தார்கள். என் கட்டுரையில் இவற்றைப் பயன்படுத்திக்கொண்டேன்.

இந்தக் கட்டுரை வெளிவந்ததும் அகமதாபாத்திலுள்ள ஜைன மக்களிடையே பெருங்கலவரம் எழுந்தது. தங்கள் தருமத்தை நான் சிதைக்க முயலுவதாக முறையிட்டு, ஆராய்ச்சிக் கூடத்தின் தலைவர்களுக்குக் கடிதங்கள் எழுதினார்கள். தலைவர்கள் அந்த முறையீடுகளை நேரில் விடை கூறித் தீர்த்துக்கொண்டார்கள். ஆதலால் எனக்குத் தொந்தரவு நேரவில்லை.

அந்தக் காலத்தில், முதிய பிராயத்தினரான ஸ்தானகவாசி சாது குலாப்சந்தும், அவருடைய புகழ் பெற்ற மாணவரான சதாவதானி ரதன் சந்தும் அகமதாபாத்தில் வாழ்ந்துவந்தனர். நான் ஒரு ஜைனப் புலவருடன் அவர்களைக் காணச் சென்றேன். மாலை நேரம். ஜைன சாதுக்கள் விளக்கு வைத்துக் கொள்வதில்லையாதலால், அவ்விருவரின் முகத்தையும் தெளிவாகக் காண இயலவில்லை. என்னோடு வந்த ஜைனப் புலவர், என்னை ரதன்சந்த் சுவாமிக்கு அறிமுகப்படுத்தினார். அப்பொழுது அந்தச் சாமியார், "உங்கள் புகழை நான் கேள்வியுற்றிருக்கிறேன். ஆனால், எங்களுடைய பழைய சாதுக்கள் புலால் உண்பதுண்டு என்று எழுதி நீங்கள் எங்கள் சமயத்தைத் தாக்கியிருப்பது சரியன்று" என்றார்.

"பௌத்தம், ஜைனம் என்ற இரண்டு சிரமண சம்பிரதாயங்களே இன்று விளங்கியுள்ளன. அவற்றினிடம் நான் கொண்டுள்ள அன்பைப்பற்றி இந்தப் புலவரையே கேளுங்கள். ஆனால் ஆராய்ச்சி செய்யும் போது, சிரத்தையோ பக்தியோ அன்போ தடையாக இருக்கலாகாது. உண்மை கூறுவதனால் எந்தச் சம்பிரதாயத்துக்காவது தீங்கு விளையும் என்று எனக்குத் தோற்றவில்லை. உண்மைப் பொருளை வெளியிடுவதே ஆராய்ச்சியாளரின் கடமை என்று நான் கருதுகிறேன்" என்றேன்.

முதியவரான குலாப்சந்த் சாது சிறிது தொலைவில் அமர்ந்திருந்தார். அவர் அங்கிருந்தே தம் சீடரிடம், "இவர் அந்த இரண்டு மேற்கோள்களுக்குக் கூறிய பொருள் தான் பொருத்தமானது. இக்காலத்து உரையாசிரியர்கள் அவற்றுக்குச் சொல்லும் பொருள்கள் சரியல்ல. இந்த இரண்டு மேற்கோள்களைத் தவிர இன்னும் பல இடங்களில், ஜைனத் துறவிகள் புலால் உண்பதுண்டு என்பதற்குரிய சான்றுகள் கிடைக்கின்றன" என்றார்.

இப்படிச் சொன்னதும் அவர் ஜைன சூத்திரங்களிலிருந்து மேற்கோள்களை மடமடவென்று கூறலானார். ஆனால் அவருடைய சீடரான பெரும்புலவர், விஷயத்தை மாற்றி இந்தப் பேச்சை இதனோடு நிறுத்திக்கொண்டார். அவருடைய குரு சொன்ன சான்றுகள் யாவை என்று நான் கேட்கவில்லை. ஏனெனில் அப்படிச் செய்வது எனக்கு முறையாகத் தோன்றவில்லை.

## மகாவீரர் புலால் உண்டது பற்றிய வாதம்

மகாவீர சுவாமியே புலால் உண்டு வந்தார் என்பது பற்றி இப்போது வலிமையுள்ள சான்று கிடைத்துள்ளது. பிரஸ்தானம் என்ற பத்திரிக்கையின் கடந்த கார்த்திகை இதழில் (1938-ஆம் ஆண்டு, பகுதி 14, இதழ்1), திருவாளர் கோபாலதாஸ் ஜீவாபாய் படேல் என்பவர், குஜராத்தி மொழியில், ஸ்ரீ மகாவீர சுவாமியின் புலால் உணவு என்ற கட்டுரையை வெளியிட்டிருக்கிறார். அதில் நமக்குத் தேவையான செய்தியை இங்கே சுருக்கமாகக் கூறுகிறேன்.

மகாவீர சுவாமி சிராவஸ்தி நகரில் இருந்து வந்தார். அப்பொழுது மக்கலி கோஸாலனும் அங்கு வந்தான். அவர்கள் இருவரும் தமக்குள் யாரிடம் ஜினத்தன்மை இருக்கிறது என்பதுபற்றிக் கடுமையாகச் சொற்போர் நிகழ்த்தினர். இறுதியில் கோஸாலன், "என் தவவலிமையினால் நீ ஆறு மாதங்கள் கடந்ததும் பித்த ஜுரத்தில் இறப்பாய்" என்று மகாவீரரைச் சபித்தான். இதற்கு எதிராக மகாவீரர், "நீ இன்றையிலிருந்து ஏழாவது நாள் இரவு பித்தஜுரம் தாங்காமல் இறப்பாய்" என்று அவனைச்சபித்தார். அதன்படியே கோஸாலன் ஏழாவது நாள் இரவு இறந்தான். ஆனால் அவனுடைய வலிமையினால் மகாவீர சுவாமிக்கு மிகுந்த எரிச்சல் ஏற்பட்டு இரத்தபேதி தொடங்கியது.

அப்பொழுது அவர், சிம்மன் என்ற தம் சீடனை அழைத்து, "நீ மேண்டிகம் என்ற ஊரில் ரேவதி என்ற பெண்மணியினிடம் செல். அவள் எனக்காக இரண்டு புறாக்களைச் சமைத்து வைத்திருக்கிறாள். அவை எனக்கு வேண்டாம். நேற்றுப் பூனை கொன்ற கோழியின் மாமிசத்தை நீ சமைத்திருக்கிறாயே; அதை மட்டும் கொடு என்று அவளிடம் கூறு"

என்றார்.

திரு. கோபாலதாஸ், பகவதிசூத்திர மூலத்திலுள்ள வாக்கியங்களைத் தமது கட்டுரையில் எடுத்துக் காட்டவில்லை. அவற்றை இங்கே தருவது பொருந்தும். அவையாவன- "தம் கச்சஹ ணம் தும் ஸீஹா, மேண்டிய காமம் நகரம் ரேவதீஏ காஹாவதிணீஏ கிஹே தத்த ணம் ரேவதீஏ காஹாவதிணீஏ மமம் அட்டாஏ துவே கபோய ஸரீரா உவக்கடியா, தேஹிம் நோ அட்டோ. அத்தி ஸே அன்ன பாரியாஸீஏ மஜ்ஜாரகடஏ குக்குடம்ஸஏ தம் ஆஹராஹி ஏஏணம் அட்டோ."

அர்த்தமா கதி மொழியில் சொற்ப அறிவுள்ளவன் கூட இந்த வாக்கியங்களை நடு நிலைமையோடு படித்தால், திரு. கோபாலதாஸ் இவற்றுக்குக் கூறிய பொருள் சரியென்றே சொல்வான். ஆனால் இன்று (அதாவது 1938-ஆம் ஆண்டில்), திரு. கோபாலதாஸைக் கடுமையாகத் தாக்கிப் பல ஜைனப் புலவர்கள் விமரிசனம் செய்து வருகிறார்கள்.

## பௌத்த சிரமணருக்கும் ஜைன சிரமணருக்கும் புலால் உணவில் வேறுபாடு

புலால் உணவுபற்றி ஜைனர்களுக்கும் பௌத்தர்களுக்கும் நிகழ்ந்த பழமையான வாதங்களை ஆராய்ந்தாலும், திரு. கோபாலதாஸ் கூறுவதுதான் பொருத்தமானது என்று தெளிவாகிறது.

வைசாலியில் வாழ்ந்த சேனாபதி சிம்மன் நிக்கந்தர்களை வழிபட்டு வந்தவன் என்பதை எட்டாவது அத்தியாயத்திலேயே கூறியிருக்கிறேன். புத்தரின் அறிவுரையைக் கேட்டு அவன் அவருக்கு அடியவனாகி, அவரையும் அவருடைய பிட்சு சங்கத்தையும் தன் இல்லத்துக்கு அழைத்து ஆதரவோடு விருந்து அளித்தான். ஆனால் இந்தச் செய்கை நிக்கந்தர்களுக்குப் பிடிக்கவில்லை. சிம்மன் ஒரு பெரிய விலங்கைக் கொன்று கோதமனுக்கும் அவனுடைய பிட்சு சங்கத்துக்கும் விருந்தளித்தான் என்ற வதந்தியை அவர்கள் வைசாலியில் கிளப்பி விட்டார்கள். இந்த வதந்தியை ஒருவன் சிம்மனுக்கு மெதுவாக வெளியிட்டான். அப்பொழுது சிம்மன், "இது பயனற்ற பேச்சு. புத்தரைப் பழிப்பதில் நிக்கந்தர்கள் மகிழ்ச்சி கொள்கிறார்கள். ஆனால் நான் விருந்துக்காக வேண்டுமென்றே விலங்கைக் கொல்வேன் என்பது அடியோடு நிகழ இயலாத செயல்" என்றான்.[1]

இதுபோன்ற மற்றொரு நிகழ்ச்சி, மஜ்ஜிமநிகாயத்தில் (55) ஜீவக ஸுத்தத்தில் வருகிறது. அதாவது-

ஒரு சமயம் பெருமான் ராஜகிருகத்தில் ஜீவக கௌமார பிருத்தியனுடைய மாந்தோப்பில் தங்கினார். அப்பொழுது ஜீவக

1. புத்தலீலா ஸார ஸங்கிரகம், 279-281 காண்க.

கௌமாரபிருத்தியன், பெருமானிடம் வந்துவணங்கி ஒருபுறமாக அமர்ந்து, "பதந்தரே, தங்கள் பொருட்டாக உயிரைக் கொன்று சமைத்த உணவைத் தாங்கள் உண்பதாகத் தங்கள்மீது குற்றம் சாட்டுகிறார்களே; இது உண்மையா?" என்று கேட்டான்.

"இந்தக் குற்றச்சாட்டு அறவே பொய். நமக்காக உயிரைக் கொன்றதை நாம் பார்த்தாலோ, கேட்டாலோ, அப்படி நமக்குச் சந்தேகம் உண்டானாலோ, அந்த உணவு விலக்கத்தக்கது என்று நான் சொல்கிறேன்" என்றார் பெருமான்.

இதிலிருந்து ஜைனர்கள் புத்தரின்மீது எவ்வாறு குற்றங் கூறினார்கள் என்று தெரிகிறது. புத்தர்பெருமானை யாராவது அழைத்துப் புலால் உணவு தந்தால், அப்பொழுது ஜைனர்கள், சிரமண கோதமன் தனக்காக விலங்கைக் கொன்று சமைத்த (உத்திஸ்ஸகடம்) புலாலை உண்கிறான்!" என்று சொல்லி வந்தார்கள். ஜைனத் துறவிகள் தாமாக யாருடைய அழைப்பையும் ஏற்றுக்கொள்வதில்லை. வழியில் போகும்போது கிடைக்கும் பிட்சையை ஏற்று, அப்போது கிடைக்கும் புலாலை அவர்கள் உண்பார்கள்.

## சில தவசிகள் புலாலை விலக்கினர்

புத்தர் காலத்தில் வாழ்ந்த சில தவசிகள் புலால் உணவை, விலக்கப்பட்ட பொருளாகக் கருதினார்கள். இத்தகைய தவசி ஒருவனுக்கும் காசியப புத்தனுக்கும் நிகழ்ந்த உரையாடல், ஸுத்த நிபாதத்தில் (14-ஆவது) ஆமகந்த ஸுத்தத்தில் வந்துள்ளது. அந்த ஸுத்தத்தின்[1] மொழிபெயர்ப்பு வருமாறு-

1. (திஷ்ய தாபதன் கூறுகிறான்)-சாமை, தூதுவளை, பறங்கிப்பட்டை, மரங்களின் இலைகள், கிழங்குகள், வேர்கள், கனிகள் ஆகியவை தாமாகக் கிடைக்க, அவற்றை உண்டு வாழ்பவர்கள், கேளிக்கைப் பொருள்களுக்காகப் பொய் கூறமாட்டார்கள்.

2. காசியபனே, பிறர் தேர்ந்தெடுத்து நல்ல முறையில் சமைத்த, சுவையான, உயர்ந்த அரிசியுணவை ஏற்றுக்கொள்ளும் நீ ஆமகந்தத்தை (தூய்மையற்ற பொருளை)த் தின்பவன் ஆகியாய்.

3. பிரமபந்துவே (சாதியொழுக்கமற்ற பார்ப்பனனே), பறவையின் புலால் கலந்த அரிசியுணவை உண்கையில், எனக்கு ஆமகந்தம் ஏற்றதன்று என்று நீ கூறுகிறாயே! எனவே, காசியபனே, உன் ஆமகந்தம் எத்தகையது

1. இந்த ஆமகந்த ஸுத்தத்திலுள்ள உபதேசத்தை, "வாய்க்குள் செல்வது ஏதும் மனிதனைக் கெடுப்பதில்லை; ஆனால் வாயிலிருந்து வெளிப்படும் பொருள்தான் மனிதனைக் கெடுக்கிறது" (மத்தேயு, 15-11) என்ற கிறிஸ்து பெருமானின் வாக்கோடு ஒப்பிடுக.

என்று நான் கேட்கிறேன்.

4. (காசியப புத்தன் கூறுகிறான்-) உயிர்ச்சேதம், கொலை, வெட்டுவது, கட்டுவது, திருட்டு, பொய் பேசுதல், ஏமாற்றுதல், தீமையில் சிக்க வைத்தல், பிறர்க்குத் தீங்கை நாடி மந்திரம் பயிலுதல், பிறன்மனை விழைதல் ஆகியவையே ஆமகந்தமாகும்; புலால் உண்பது ஆமகந்தமன்று.

5. பெண்கள் திறத்தில் புலனடக்கமற்றவர்கள், நாக்கைத் தீட்டி வைத்துக்கொண்டிருப்பவர்கள், அசுத்தச் செய்கைகளோடு தொடர்புடையவர்கள், நாத்திகர்கள், இடக்கானவர்கள், வணங்காமுடியர் ஆகியவர்களின் செயலே ஆமகந்தமாகும்; புலால் உண்பது ஆமகந்தமன்று.

6. கல் நெஞ்சர், கொடியவர், புறங்கூறுபவர், நண்பருக்குத் துரோகம் செய்பவர், இரக்கமற்றவர், மிக்க அகந்தையுள்ளவர், உலோபிகள், பிறருக்கு ஏதும் உதவாதவர்கள் ஆகியவர்களின் செயலே ஆமகந்தமாகும்; புலால் உண்பது ஆமகந்தமன்று.

7. சினம், வெறி, கடுமை, பகை, மாயை, பொறாமை, பயனற்ற பேச்சு. வீண்பெருமை, தீயோர் பழக்கம் ஆகியவையே ஆமகந்தமாகும்; புலால் உண்பது ஆமகந்தமன்று.

8. பாவிகள், கடனைத் திருப்பிக் கொடாதவர்கள், புறங்கூறுவோர், லஞ்சம் வாங்கும் தீய அதிகாரிகள், இம்மையில் மாசை விளைவிக்கும் நராதமர்கள் ஆகியவர்களின் செயலே ஆமகந்தமாகும்; புலால் உண்பது ஆமகந்தமன்று.

9. உயிர்களிடத்தில் இரக்கமற்றவர்கள், பிறரைக் கொள்ளையடித்துத் துன்புறுத்துகிறவர்கள், தீய ஒழுக்கமுடையோர், பயங்கரமானவர்கள், வசைமொழி பொழிபவர்கள், யாரையும் அசட்டை செய்பவர்கள் ஆகியவர்களின் செயலே ஆமகந்தமாகும்; புலால் உண்பது ஆமகந்தமன்று.

10. இத்தகைய தீச் செயல்களில் முனைந்தவர்கள், எதிர்ப்பவர்கள், கொலை செய்பவர்கள், மறுமையில் இருளில் செல்லும்படியாகவும் நரகில் தலைகீழாக வீழும் படியாகவும் கொடுஞ் செய்கைகளை ஓயாது செய்பவர்கள் ஆகியவர்களின் செயலே ஆமகந்தமாகும்; புலால் உண்பது ஆமகந்தமன்று.

11. மீன், மாமிசம் ஆகியவற்றை விலக்குதல், நிர்வாணமாக இருந்தல், தலை மழித்தல், சடைமுடி தரித்தல், நீறு பூசிக்கொள்ளுதல், கரடுமுரடான மான்தோல் அணிதல், அக்கினியை வழிபடுதல் அல்லது இம்மையில் வேறு வகையான தவங்கள், மந்திரங்களால் ஆகுதி செய்தல், வேள்வி புரிதல், கடுங்குளிரிலும் கொடிய வெப்பத்திலும் தவமியற்றுதல் ஆகியவையாவும், தீய எண்ணங்களைக் கடக்காதவனைத் தூயவனாக்க

வல்லமையற்றவை.

12. புலன்களை அடக்கி அவற்றின் இயல்பை அறிந்து ஒழுகுபவனும், அறத்தில் நின்றவனும், நேர்மையிலும் மென்மையிலும் திருப்தி கொள்பவனும், பற்றற்றவனும், துன்பங்களனைத்தையும் அழித்தவனுமான தீரன், பார்க்கப்படுவனவும் கேட்கப்படுவனவுமான பொருள்களில் கட்டுண்பதில்லை.

13. இந்தக் கருத்தைப் பெருமான் மீண்டும் மீண்டும் வெளியிட்டார். அந்த மந்திரபாரகன் (அந்தணத் தாபதன்) இதை அறிந்தான். ஆமகந்த மற்றவரும் பற்றற்றவரும் பேராற்றல் வாய்ந்தவருமான முனிவர் இந்தக் கருத்தை அழகிய காதைகளால் வெளியிட்டார்.

14. ஆமகந்தமற்றதும் துன்பங்களனைத்தையும் அழிப்பதுமான புத்தருடைய நல்வாக்கைக் கேட்டு, அவன் (தாபதன்) வணக்கத்தோடு ததாகதரை அடிபணிந்து, அங்கேயே துறவு பூண்டான்.

## சிரமணர்கள் புலால் உணவை ஆதரித்தனர்

மேற்கூறிய ஸுத்தம் மிகப் பழமையானது. ஆனால், காசியப புத்தரே நேரில் அதை உபதேசித்தார் என்று கொள்ள, வலிய சான்று ஏதுமில்லை. புத்தர் காலத்தில் இருந்த பிட்சுக்கள் இவ்வாறு புலால் உணவை ஆதரித்துவந்தனர் என்று இதனால் அறியலாம்.

இந்த ஸுத்தத்தில், தவம் பயனற்றதாகக் கருதப்படுகிறது. இந்தக் கருத்து, ஜைன சிரமணர்கள் ஏற்றுக்கொள்ளக் கூடியதன்று. ஏனெனில் அவர்கள் அடிக்கடி தவம் செய்வர். ஆயினும் புலால் உணவை அவர்களும் இவ்வாரே ஆதரித்திருப்பார்கள் என்று தோன்றுகிறது. ஏனெனில், அவர்கள் பழங்காலத்துத் தவமுனிவர் போலக் காட்டிலுள்ள கனிகளையும் வேர்களையும் கொண்டு வாழாமல், மக்கள் கொடுக்கும் பிட்சையையே நோக்கி வாழ்ந்தார்கள்; அக்காலத்திலோ மீனும் மாமிசமும் இல்லாத உணவு கிடைப்பது சாத்தியமன்று. அந்தணர்கள் வேள்வியில் ஆயிரக்கணக்கான உயிர்களைக் கொன்று அவற்றின் மாமிசத்தை அக்கம் பக்கத்தில் இருந்த மக்களுக்கு வழங்கினார்கள். இதைத் தவிர, ஊன்வாணிகர் நாற்சந்தியில் பசுவைக் கொன்று அதன் புலாலை விற்றுவந்தனர். இந்த நிலையில் சமைத்த உணவுப் பிட்சையை விரும்பிய சிரமணர்களுக்கு, புலாலைத் தவிர வேறு பிச்சை எங்ஙனம் கிடைத்திருக்க முடியும்?

ஜைனர்களின் கொள்கைப்படி, பிருதிவி காயம், அப்புக் காயம், வாயு காயம், அக்கினிக் காயம், வனஸ்பதி காயம், த்ரஸ காயம் என்று உயிர்கள் ஆறு வகையானவை. (பக்.303.) பிருதிவி காயம் அதாவது மண் பரமாணுவும், இப்படியே நீர், காற்று, தீ இவற்றின் பரமாணுக்களும் உயிருடையவை. வனஸ்பதி காயம் என்றால் மரம் முதலிய தாவரங்கள்.

அவை உயிர் வாய்ந்தவை என்று சொல்வது மிகை. த்ரஸ காயம் என்றால், எறும்பு முதல் யானை ஈறாகவுள்ள சிறியவையும் பெரியவையுமான எல்லா உயிர்களுமாம். இந்த ஆறு ஜீவகாயங்களைச் சார்ந்த எவ்வுயிரையும் துன்புறுத்துவது பாவம் என்பதே ஜைன சிரமணர்களின் கருத்து. ஆதலால் அவர்கள் இரவில் விளக்கு ஏற்றமாட்டார்கள்; தண்ணீர் குடிக்க மாட்டார்கள்; மண் பரமாணு முதலியவை கொலையுண்ணக் கூடாது என்று மிகவும் ஜாக்கிரதையாக இருப்பார்கள்.

ஆனால் ஜைன உபாசகர்கள் வயலை உழுது, நெல் விதைத்து, அறுவடையான நெல்லைச் சமைத்து உணவாக்குவார்கள். இப்படிச் செய்யும்போது பிருதிவி, அப்பு, அக்கினி, வாயு, வனஸ்பதி, த்ரஸம் என்ற ஆறு வகை உயிர்களும் அழிவது இயல்பு. வயலை உழும்போது மண் பரமாணு மட்டுமன்றி, புழு எறும்பு முதலிய லட்சக்கணக்கான சிற்றுயிர்களும் அழியும். தீ மூட்டிச் சோறு பொங்கும்போது, வனஸ்பதி காயம், அப்புக் காயம், அக்கினிக் காயம், வாயு காயம் ஆகிய எல்லா உயிர்களும் சிதையும். இப்படி இருக்க, இந்த உணவை ஜைனத் துறவிகள் பிட்சையாக ஏற்றுக்கொள்வர். ஆகவே, ஜைன உபாசகன் ஒருவன் சமைத்த மாமிசத்தைப் பழங்காலத்து ஜைனச் சிரமணர்கள் பிட்சையாக ஏற்றுக்கொள்ள எவ்வகைத் தடையும் இல்லையல்லவா? ஆமகந்த ஸுத்தத்திலுள்ள முறையைக் கொண்டுதானே அவர்கள் அந்தப் புலால் உணவை ஏற்பதற்குரிய காரணங்களைக் கூறியிருப்பார்கள்?

## கோமாமிசத்தை எதிர்த்துக் கிளர்ச்சி

இனி, புலால் உணவை எதிர்த்து எவ்வாறு கிளர்ச்சி தொடங்கியது என்பதைச் சுருக்கமாக ஆராய்வோம். எல்லாவற்றுக்கும் முன்னால், கோமாமிசம் உண்பதை எதிர்த்துப் பௌத்தர்கள்தாம் ஓர் இயக்கத்தைத் தொடங்கியிருத்தல் வேண்டும். பசுக்களின் பெருமையைத் தெரிவிக்கும் பிராம்மணதம்மிக ஸுத்தத்துக் காதைகள் இரண்டை, ஒன்பதாவது அத்தியாயத்திலேயே குறிப்பிட்டிருக்கிறேன். அவற்றைத் தவிர, இன்னும் சில காதைகளின் கருத்தையும் பாருங்கள்: "ஆடுகள்போல அடங்கியிருந்து, குடங்கள் நிறையப் பால் கறக்கும் பசுக்கள்[1] தம் காலினாலோ கொம்பினாலோ வேறு உறுப்பினாலோ யாரையும் துன்புறுத்துவதில்லை. (அந்தணர்களின் பேச்சைக் கேட்டு) இட்சுவாக மன்னன் அவற்றைக் கொம்புகளைப் பிடித்துக் கொன்றான். அப்பொழுது பசுக்களின்மீது கத்தி வீழவே, தேவர்களும் பிதிரரும் இந்திரனும் அசுரரும்

1. மணிமேகலையில், 'மக்கட் கெல்லாம், பிறந்தநாள் தொட்டும் சிறந்ததன் தீம்பால், அறந்தரு நெஞ்சோ டருள்சுரந் தூட்டும், இதனொடு வந்த செற்றம் என்னை?' என்ற ஆபுத்திரன் கூற்றும் காண்க. (மொ-ர்.)

அரக்கரும், இது அதர்மம்! என்று கடுஞ்சினத்தோடு கூவினார்கள்."

## அந்தணர் நீண்டகாலம் கோமாமிசத்தைவிடவில்லை

பௌத்தர்களும் ஜைனர்களும் கோமாமிசம் உண்பதைத் தடுக்க முயன்றதனால் மக்களிடையே அந்தக் கருத்துப் பரவியது; ஆயினும் அந்தணர்கள் அதை விலக்குவதற்குப் பல நூற்றாண்டுகள் பிடித்தன. முதல் முதலில் வேள்விக்காகத் தீட்சை கொள்பவன் கோமாமிசம் புசிக்கலாகாது என்ற வரையறையைக் கடைப்பிடித்தார்கள்.

"பசுக்களையும் எருதுகளையும் தின்னலாகாது. பசுக்களும் எருதுகளுமே இவையனைத்தையும் தாங்குகின்றன. அந்தத் தேவர், பசுக்களும் எருதுகளும் இவையனைத்தையும் தாங்குகின்றன; ஆதலால் பிற விலங்குகளின் வீரியத்தை நாம் பசுக்களிடத்தும் எருதுகளிடத்தும் வைப்போம்... எனவே பசுக்களையும் எருதுகளையும் உண்ணலாகாது என்றனர். ஆனால் யாஞ்ஞவல்கியர், இதனால் உடல் ஊனுள்ளதாகிறது; ஆதலினால் நான் (இந்தப் புலாலை) உண்ணத்தான் உண்பேன் என்றார்" என்பது சதபதப் பிராம்மணம் (3-1-2-21).

வேள்விச்சாலையைப் பொறுத்த மட்டில்தான் இந்த வாதம். தீட்சிதன் வேள்விச்சாலையில் புகுந்ததும் கோமாமிசம் உண்ணலாகாது என்று சிலர் கூறினர். ஆனால் இந்தக் கருத்து யாஞ்ஞவல்கியருக்குப் பிடிக்கவில்லை. புலாலினால் உடல் கொழுக்கிறது; ஆதலால் அதை விலக்க அவர் இசையவில்லை. மற்றச் சந்தர்ப்பங்களில் கோமாமிசம் புசிப்பதுபற்றி அந்தணர்களிடையே எவ்வகையான வாதவிவாதமும் இல்லை. இது மட்டுமன்றி, மதிப்புக்குரிய விருந்தாளி வந்தால் பெரிய எருதைக் கொன்று அவனை உபசரிக்கும் முறையும் மிகப் பிரசித்தமாக இருந்தது. கௌதம சூத்திரகாரர் ஒருவர் மட்டுமே கோமாமிசத்தை விலக்கு என்று கூறினார். ஆனால் அவருக்கும் மதுபர்க்கவிதி பிடித்திருக்கிறது என்று தோன்றுகிறது. அந்தணர்களிடையே இந்த முறை பவபூதியின் காலம் வரைக்கும் ஓரளவு இருந்துவந்தது எனலாம். உத்தரராமசரிதம் என்னும் நாடகத்தில் நான்காவது அங்கத்தின் தொடக்கத்தில், ஸௌதாதகியும் தண்டாயனனும் உரையாடுகிறார்கள். அந்த உரையாடலின் சிறு பகுதி இது-

ஸௌதாதகி - என்ன! வசிட்டரா அவர்?

தண்டாயனன் - பின்னே என்ன?

ஸௌதாதகி - புலிபோன்ற பண்புள்ள எவனோ ஒருவன் என்றல்லவா நான் நினைத்தேன்?

தண்டாயனன் - என்னடா கதைக்கிறாய்!

ஸௌதாதகி - அவர் வந்ததுமே, பாவம், நம்முடைய அந்தக் கபிலைக் கடாரிக் கன்றைக் கபக்கென்று விழுங்கிவிட்டார்!

தண்டாயனன் - மதுபர்க்கவிதி மாமிசத்துடன் அமைய வேண்டும் என்ற தருமநூலின் கட்டளையை மதித்து, சுரோத்திரியன் (வேதம் வல்லவன்) விருந்தினனாக வரும்பொழுது, இல்லறத்தவர் கடாரிக் கன்றையோ பெரிய எருதையோ கொன்று அதன் மாமிசத்தைச் சமைப்பார்கள். ஏனெனில், தருமசூத்திரகாரர்கள் அப்படித்தான் உபதேசித்திருக்கிறார்கள்.

பவபூதியின் காலம் ஏழாவது நூற்றாண்டு என்பர். அந்தக் காலத்தில் இன்று போலவே கோமாமிசம் புசித்தல் கடுமையாக விலக்கப்பட்டு இருக்குமாயின், வசிட்டர் கடாரிக் கன்றை விழுங்கியதாக அவன் தன் நாடகத்தில் குறிப்பிட்டிருக்க மாட்டான். இன்று இத்தகைய உரையாடலை ஒரு நாடகத்தில் அமைத்தால் ஹிந்து சமூகத்தினர் அதை எந்த அளவுக்கு விரும்புவார்கள்?

## உயிர்க்கொலையை எதிர்த்து அசோகன் செய்த பிரசாரம்

உயிர்க்கொலையை எதிர்த்துப் பிரசாரம் செய்த சரித்திரபூர்வமான முதல் அரசன் அசோகனேயாம். அவனுடைய முதல் கல்வெட்டே இதுதான்-

"இந்தத் தருமலிபி, தேவர்களுக்குப் பிரியனான பிரியதரிசி ராஜன் எழுதுவித்தது. இந்த நாட்டில் எந்த உயிரையும் கொன்று ஓமமோ அவியோ இடலாகாது; விழா நடத்தலாகாது. ஏனெனில், தேவர்களுக்குப் பிரியனான பிரியதரிசி ராஜன் விழாவில் பல குற்றங்களைக் காண்கிறான். சில விழாக்கள், தேவர்களுக்குப் பிரியனான பிரியதரிசி ராஜனுக்கு உவப்பானவை. முன்பு பிரியதரிசி ராஜனின் அடுக்களையில் சமையலுக்காக ஆயிரக்கணக்கான உயிர்களைக் கொன்று வந்தனர். இந்தத் தருமசாசனம் எழுதியலிருந்து இரண்டு மயில்களும் ஒரு மானும் ஆக மூன்றே உயிர்கள் கொல்லப்படுகின்றன. அந்த மானையும் நாள்தோறும் கொல்வதில்லை. இனி இந்த மூன்று உயிர்களுங்கூடக் கொல்லப்படமாட்டா."

இந்தக் கல்வெட்டில் அசோகன் பசுக்களையும் எருதுகளையும் குறிப்பிடவில்லை. எனவே, அந்தணரைத் தவிர்த்து மற்ற உயர் வகுப்பாரிடையே கோமாமிசம் உண்ணும் பழக்கம் அக்காலத்தில் பெரும்பாலும் நின்று விட்டது எனக் கருதலாம். இது மட்டுமின்றி, உணவுக்காகக் கூட எவரும் உயிர்க்கொலை செய்யலாகாது என்று அசோகன் பிரசாரம் செய்தான். சமாஜம் என்ற மூலச் சொல்லை நான் விழா

என்று கூறியிருக்கின்றேன். அது நேரான பொருள் அன்று; ஆயினும் பொதுவாக அது பொருந்தும் என்று தோன்றுகிறது. இக்காலத்தில் மகாராஷ்ரத்தில் விழாக்களும், வட இந்தியாவில் 'மேளா'க்களும் நிகழ்வது போல, அசோகனுடைய காலத்தில் சமாஜங்கள் நிகழ்ந்தன எனலாம். அவற்றுள், தேவதைகளுக்கு உயிர்ப்பலி கொடுத்துப் பெருவிழாக் கொண்டாடிய சமாஜங்களை அசோகன் விரும்பவில்லை. உயிர்ப்பலி இல்லாத விழாக்களைக் கொண்டாடுவதை அவன் தடை செய்யவில்லை. வேள்வியிலும் சரி, விழாவிலும் சரி, உயிர்ப்பலி கொடுக்கலாகாது என்பதையே அவன் வற்புறுத்தினான்.

## நம் முன்னோர் புலாலை விடுத்தவர்கள் அல்லர்

இன்று வேள்விகள் பெரும்பாலும் நின்றுவிட்டன. ஆனால் விழாக்களில் உயிர்ப்பலி கொடுக்கும் முறை இன்னும் பல இடங்களில் இருக்கிறது. ஆயினும் மற்ற எந்த நாட்டையும்விட, இந்திய மக்கள் புலாலைப் பேரளவில் விடுத்தவர்களாக விளங்குகிறார்கள். ஜைனர்களும் பௌத்தர்களும் செய்த சமயப் பிரசாரமே இதற்குக் காரணம் என்பதில் ஐயமில்லை. எனவே, 'இன்று நாம் தாவர உணவு கொள்பவர்கள்; ஆதலால் நம் முன்னோர்களும் தாவர உணவு கொண்டவர்களாகவே இருந்தார்கள்' என்று கூறுவது உண்மை நிலைக்குப் பொருந்துவதன்று.

## சீனத்தில் பன்றிக்குப் பெருமை

இனிச் சிறப்பாகப் பன்றி மாமிசத்தைப் பற்றி இரண்டு வார்த்தை சொல்லவேண்டியிருக்கிறது. பழங்காலத்திலிருந்தே சீனர்கள் பன்றியைச் செல்வத்துக்குரிய அடையாளமாகக் கருதுகின்றனர். அவர்களுடைய எழுத்து, வடிவச் சின்னங்களால் ஆனது. உதாரணமாக, மனிதனுடைய வடிவத்தையும் கத்தியின் சின்னத்தையும் வரைந்தால், அதற்கு 'வீரன்' என்று பொருள். வீட்டை எழுதி அதன்கீழ் ஒரு குழந்தை வடிவை வரைந்தால், அதற்கு 'எழுத்து' என்று பொருள். இரண்டு பெண்களின் வடிவத்தை வரைந்தால், அதற்குச் 'கச்சரவு' என்று பொருள். பன்றியின் வடிவை வரைந்தால், அதற்குச் 'செல்வம்' என்று பொருள். அதாவது, வீட்டில் பன்றி இருப்பதைச் செல்வத்துக்குரிய அடையாளமாகப் பழங்காலத்துச் சீனர்கள் கருதினார்கள். இப்பொழுதும் சீன நாட்டில் பன்றிக்கு அதே பெருமை உண்டு.

## பழமையான ஹிந்துக்கள் பன்றியைச் செல்வத்தின் பகுதியாக மதித்தனர்

இந்தியாவில் பன்றிக்கு அவ்வளவு பெருமை கிடைக்கவில்லை யாயினும், செல்வத்தின் ஒரு பகுதியாக அதைக் கருதி வந்தார்கள். அரியபரியேஸன ஸுத்தத்தில் (மஜ்ஜிமநிகாயம், 26), இம்மைச் செல்வம் நிலையற்றது என்ற வருணனை வருகிறது. அதில் யானை, பசு, குதிரை முதலிய செல்வங்களோடு கோழிகளையும் பன்றிகளையும் செல்வங்களாகக் குறித்திருக்கிறார்கள். இப்படி இருந்தும் பன்றி மாமிசத்தில் இவ்வளவு வெறுப்பு எங்ஙனம் தோன்றியது? வேள்விகளில் கொல்லப் பெறும் பிராணிகளின் பட்டியலில் பன்றியின் பெயர் பாலி இலக்கியத்தில் எங்கும் இல்லை. எனவே புத்தர் காலத்தில், பன்றி அமேத்தியமாக (வேட்பதற்கு உரியதல்லாததாக) இருந்தது. ஆனால் அது அபட்சியமாக (உண்ணற்கு உரியதல்லாததாக) இருந்தது என்பதற்கு ஏதும் சான்று இல்லை. அப்படி இருந்திருக்குமானால் க்ஷத்திரியர்களின் வீட்டுச் செல்வத்தில் அது இடம் பெற்றிராது. பன்றிமாமிச விலக்கை முதலில் தரும சூத்திரங்களில்[1] காண்கிறோம். பிறகு இதையே மனுஸ்மிருதி[2] முதலிய ஸ்மிருதி நூல்கள் திருப்பிக் கூறின. ஆனால் காட்டுப் பன்றியை ஒருபோதும் விலக்க வில்லை. அதன் மாமிசத்தைப் பவித்திரமென்று கருதினார்கள்.[3]

## அளவுக்கு மீறி உண்டதாகப் புத்தர்மீது பொய்யான குற்றச்சாட்டு

புத்தர் பெருமான் பரிநிர்வாணம் எய்து முன்பு உண்ட பண்டம் பன்றி மாமிசம் என்றே நாம் ஒப்புக்கொள்வதாக வைத்துக்கொண்டாலும், அவர் அதை அஜீர்ணம் உண்டாகும் வரைக்கும் உண்டு அதனால் மரண மெய்தினார் என்று சில ஆராய்ச்சியாளர்கள் அருவருக்கத்தக்க வகையில் கூறுவது மட்டும் முழுப் பொய்யாகும். கோதம புத்தர் மிதமிஞ்சி உண்டதற்கு ஏதேனும் உதாரணமோ சான்றோ எங்கும் இல்லை. எனவே இந்தச் சந்தர்ப்பத்தில் மட்டும் அவர் இந்தப் பண்டத்தை அளவுக்கு மீறி உண்டார் என்று கூறுவது கயமையாகும்.

புத்தர் பெருமான் இந்த நிகழ்ச்சிக்கு முன்பு வைசாலியில் மூன்று மாதகாலம் கடுமையாக நோய்வாய்ப்பட்டிருந்தார்; ஆதலால் அவர் உடலில் வன்மையே இல்லை. சுந்தன் கொடுத்த உணவு அவருடைய பரிநிர்வாணத்துக்கு வெறும் நிமித்தமாயிற்று. ஆதலால், இதற்காக மக்கள்

1. பன்றிகளை உண்ணலாகாது என்று கௌதமஸூத்திரம். அத், 8-29-உம், ஆபஸ்தம்ப தர்மஸூத்திரம், பிரச்னம் 1, படலம் 5, கண்டிகை 17-29-உம் கூறுவது காண்க.

2. மனுஸ்மிருதி, அத். 5-19. 3. மனுஸ்மிருதி, அத். 3-270.

சுந்தன் என்ற கொல்லனை வீணுகப் பழிக்கலாகாது என்று கருதிய பெருமான், பரிநிர்வாணத்துக்கு முன்பு, "ஆனந்தா, சுந்தன் என்ற கொல்லனிடம் யாராவது, சுந்தா, ததாகதர் நீ கொடுத்த பிட்சையை ஏற்றுப் பரிநிர்வாணம் எய்தினார்; இது உனக்குப் பெருந்தீமை என்று கூறி மனத்துயரை உண்டாக்கினால், நீங்கள் அவனுடைய துயரத்தைப் போக்குங்கள். சுந்தா, உன் உணவை உண்டு ததாகதர் பரிநிர்வாணம் எய்தியதனால் உன் தானம் உண்மையில் பயனுடையது. மற்றப் பிட்சைகளைவிட, ததாகதருக்குக் கிடைத்த இரண்டு பிட்சைகள் மிகப் பயனும் பெருமையும் வாய்ந்தவை என்று அவரே சொல்ல நாங்கள் கேட்டிருக்கிறோம். அவை யாவை? எந்தப் பிட்சையை ஏற்றுத் ததாதகர் சம்போதி ஞானம் பெற்றாரோ அதுவும், எந்தப் பிட்சையை ஏற்று அவர் பரிநிர்வாணம் எய்தினாரேர் அதுவுமாம் என்று அவனிடம் கூறுங்கள். சுந்தன் ஆற்றிய செயல், ஆயுளும் அழகும், இன்பமும் புகழும், துறக்கமும் தலைமையும் தருவது என்று கருதுங்கள். ஆனந்தா, நீங்கள் இவ்வண்ணமாக அவனடைய மனத்துயரை நீக்குங்கள்" என்று ஆனந்தனிடம் உரைத்தருளினார்.

# 12. அன்றாட வாழ்க்கை

## மலர்ந்த முகவொளி

கோதமர் போதிசத்துவராக இருந்த பொழுது, அதாவது இல்லத்தில் வாழ்ந்த காலத்திலும் தவமியற்றிய காலத்திலும், எவ்வாறு வாழ்க்கையை நடத்தி வந்தார் என்பதை நான்காம் அத்தியாயத்திலும் ஐந்தாம் அத்தியாயத்திலும் முன்பே ஆராய்ந்திருக்கிறேன். இனி, இந்த அத்தியாயத்தில், புத்த நிலை பெற்றதிலிருந்து பரிநிர்வாணம் வரையில் அவருடைய அன்றாட வாழ்க்கை எங்ஙனம் இருந்தது என்பதை ஓரளவு விளக்குவேன்.

தத்துவபோதம் பெற்றபின்பு, புத்தர்பெருமான் போதிமரத்தின் அடியிலேயே தமது வருங்கால வாழ்வைப்பற்றித் தீர்மானித்துக் கொண்டார். அவர் முன்பே தவத்தை விடுத்திருந்தார்; மீண்டும் இன்பநுகர்ச்சிகளில் புகும் வேட்கையும் அவருக்கு அறவே இல்லை. எனவே உடலை மூடுவதற்குப் போதிய ஆடையும் பசியைத் தணிக்கப் போதிய உணவும் ஏற்று, தமது எஞ்சிய வாழ்வைப் பெரும்பாலான மக்களின் நன்மைக்கே பயன்படுத்த அவர் உறுதி கொண்டார். இந்த உறுதியினால் அவரது திருமுகத்தில் எத்தகைய ஒளி வீசியது என்பதை, மஜ்ஜிமநிகாயத்திலுள்ள அரியபரியேஸன ஸுத்தமும் விநயத்திலுள்ள மகாவக்கமும் வருணிக்கின்றன.

புத்தர் பெருமான் பஞ்சவர்க்கத்துப் பிட்சுக்களுக்கு அறிவுரையாற்றும் நோக்கத்துடன் கயையிலிருந்து வாராணசிக்கு எழுந்தருளிய காலையில், வழியில் உபகன் என்ற ஆசீவகச் சிரமணன் அவரைக் கண்டு, "பேராயுள் வாய்ந்த கோதமரே, உங்கள் முகம் மலர்ந்துள்ளது; திருமேனி ஒளி வீசுகிறது. நீங்கள் எந்த ஆசிரியரின் மாணவராக விளங்குகிறீர்கள்?" என்று கேட்டான்.

"என் சமயவழியை நானே தேடிக் கண்டுபிடித்திருக்கிறேன்" என்று பெருமான் பகர்ந்தார்.

"ஆனால் நீங்கள் அருகர் ஆகியிருக்கிறீர்களா? உங்களை ஜினர் என்று கூறலாமா?" என்று உபகன் வினாவினான்

அதற்குப் பெருமான், "உபகா, பாவங்களை விளைவிக்கும் இயல்புகளையெல்லாம் நான் வென்றிருக்கிறேன்; ஆதலால் நான் ஜினன்" என்று விடை கூறினார்.

உபகன் புத்தர்பிரானிடம் கண்ட அந்த முகமலர்ச்சியும் ஒளியும் இறுதிவரைக்கும் நிலைத்திருந்தன என்று கொள்ளத் தடை இல்லை.

## அன்றாடப் பொதுச் செயல்

புத்தர்பெருமான் விடிகாலையில் எழுந்திருப்பார். அப்பொழுது அவர் தியானத்தில் ஈடுபடுவார்; அல்லது தாம் வாழும் இடத்தைச் சுற்றி உலாவிவருவார். பகலில் அவர் ஊருக்குள் பிட்சாடனத்துக்குப் போவார். எல்லாச் சாதியினரும் அளித்த சோற்றைப் பிட்சைப் பாத்திரத்தில் ஏற்று, அவர் ஊருக்கு வெளியே சென்று உண்டபின் சிறிது இளைப்பாறுவார்; பின்பு தியானத்தில் அமருவார். மாலையில் மீண்டும் பயணம் செய்வார். இரவில் ஏதேனும் ஒரு கோயிலிலோ, சத்திரத்திலோ, மரத்து அடியிலோ தங்குவார்.

இரவில் மூன்று யாமங்களுள், முதல் யாமத்தில் பெருமான் தியானம் செய்வார் அல்லது உலாவுவார். இடை யாமத்தில், சங்காடி என்னும் செங்கூறையை நான்காக மடித்து விரித்து, தமது வலக்கையைத் தலையணையாகக் கொண்டு வலப்புறமாக ஒருக்கணித்து வலக்காலின் மேல் இடக்காலைக் கிடத்தி மிகவும் கவனத்தோடு தூங்குவார்.

## சிங்கப் படுக்கை

புத்தருடைய இந்தப் படுக்கைக்குச் 'சிங்க சய்யை' என்று பெயர். அங்குத்தர நிகாயத்தில் சதுக்க நிபாதத்தில் (ஸுத்தம் 244), நான்கு வகையான பாயல்களைப் பற்றிய வருணனை வருகிறது. அவையான- 1.பிரேத சய்யை அதாவது மல்லாந்து தூங்குகிறவர்களின் படுக்கை; 2. காமபோகத்தினரின் பாயல் அதாவது சிற்றின்பம் துய்ப்பவர்கள் பெரும்பாலும் இடப்புறமாக ஒருக்கணித்துத் தூங்குவர்; ஆதலால் இது காமபோகி சய்யை என்க; 3. சிங்க சய்யை அதாவது வலக்காலின் மேல் இடக்காலைச் சிறிது சாய்த்து வைத்து, இன்ன நேரத்தில் நான் விழிப்பேன் என்ற நினைவுடன், மிகவும் கவனமாக, வலப்புறமாக ஒருக்கணித்துத் தூங்கும் நிலை; 4. ததாகத சய்யை அதாவது நான்கு தியானங்களைப் பற்றிய சமாதியின் நிலை.

இவற்றில் பின்னிரண்டு சய்யைகள் புத்தர் பிரானுக்கு உவப்பானவை. ஆதலால் அவர் இரவுப் பொழுதில் தியானத்தில் ஆழ்ந்திருப்பார்; அல்லது இடையாமத்தில் சிம்ம சய்யை ஏற்றுக்கொள்வார். இரவின் கடையாமத்தில் அவர் மீண்டும் உலாவுவார் அல்லது தியானம் செய்வார்.

## மிதான உணவு

புத்தர்பெருமான் மிகவும் மிதமான உணவை உட்கொள்வார். அவர் எப்பொழுதும் உணவிலோ நீர் அருந்துவதிலோ அளவை மீறியதில்லை. மேலும் அவர் பிட்சுக்களுக்கு அடிக்கடி இதை உபதேசித்தார். பெருமான்

ஆரம்பத்தில் இரவில் உண்டுவந்ததாக மஜ்ஜிமநிகாயத்திலுள்ள (70) கீடாகிரி ஸுத்தத்திலிருந்து. தெரிகிறது. அதில் அவர் கூறுகிறார்- "பிட்சுக்களே, இரவில் உண்பதை நான் விடுத்திருக்கிறேன். அதனால் என் உடலில் நோய் குறைந்திருக்கிறது; சடத்தன்மை குறைந்திருக்கிறது; உடம்பில் வலிமை வந்திருக்கிறது; மனம் அமைதியுற்றிருக்கிறது. பிட்சுக்களே, நீங்களும் இப்படியே செய்யுங்கள். நீங்கள் இரவுச் சாப்பாட்டை விட்டீர்களானால் உங்கள் உடலில் நோய், குறையும், சடத்தன்மை குறையும்; உடம்பில் வலிமை வரும்; உங்கள் மனம் அமைதி பெறும்."

இவ்வாறு அவர் உபதேசித்த நாளிலிருந்து, பிட்சுக்கள் நண்பகலில் பன்னிரண்டு மணிக்கு முன்பு உண்ணும் பழக்கம் தொடங்கியது; பன்னிரண்டு மணிக்குப் பின்பு உண்பது விலக்கத்தக்கது என்று கருதலானார்கள்.

## சாரிகை

சாரிகை என்றால் பயணம் அல்லது நடை. விரைவான நடை, மென்னடை என அது இருவகையானது. இதைப்பற்றி அங்குத்தர நிகாயத்தில் பஞ்சக நிபாதத்தில் மூன்றாவது வக்கத்தின் தொடக்கத்திலுள்ள ஸுத்தம் கூறுவதாவது-

பெருமான் அருளுகின்றார்: "பிட்சுக்களே, விரைவான நடையில் ஐவகைக் குறைகள் இருக்கின்றன; அவை யாவை? முன்பு செவியில் விழாத அறிவுரையை இதனால் கேட்க முடியாது; கேட்ட அறிவுரையை ஆராய முடியாது; சிலவற்றை முழுமையாக அறிய முடியாது; இப்படி நடப்பவனுக்குச் சில சமயம் கடுமையான நோய்வரும்; அவனுக்கு நண்பர்கள் கிடைக்கிறார்கள். பிட்சுக்களே, விரைவான நடையில் இந்த ஐந்து குறைகள் உள்ளன.

"பிட்சுக்களே, மென்னடையில் ஐவகையான நற்பண்புகள் இருக்கின்றன. அவை யாவை? முன்பு செவியில் விழாத அறவுரையைக் கேட்க முடியும்; கேட்டதை ஆராய முடியும்; சிலவற்றை முழுமையாக அறிய முடியும்; இப்படி நடப்பவனுக்குக் கடுமையான நோய் உண்டாவதில்லை; அவனுக்கு நண்பர்கள் கிடைக்க மாட்டார்கள். பிட்சுக்களே, மென்னடையில் இந்த ஐந்து நற்பண்புகள் உள்ளன."

புத்தர்பெருமான் போதிசத்துவ நிலையில் இருந்த பொழுது தாம் கண்ட அநுபவத்தையே இவ்வாறு சொல்லியிருத்தல் வேண்டும். விரைவாகப் பயணம் செய்வதனால் பயன் இல்லை; மெதுவாகப் பயணம் செய்வதனால் பயன் உண்டாகிறது என்பது அவருடைய சொந்த அநுபவம். இவ்வண்ணம் மெதுவாக யாத்திரை செய்துதான் அவர் மற்றச்

சிரமணர்களிடமிருந்து அறிவு பெற்றார்; இறுதியில் தமது புதிய நடுவழியைக் கண்டுபிடித்தார்.

## பிட்சு சங்கத்துடன் சாரிகை

புத்த நிலை பெற்றதும் பெருமான் புத்கயையினின்று காசி வரைக்கும் பயணம் செய்து, அங்கே பஞ்சவர்க்கத்துப் பிட்சுக்களுக்கு அறிவுரை கூறி அவர்களின் சங்கத்தை நிறுவினார். அவர்களைக் காசியில் விட்டு, அவர் தனியாகவே மீண்டும் ராஜகிருகத்துக்குச் சென்றார் என்று மகாவக்கம் கூறுகிறது. ஆனால், இவ்வைந்து பிட்சுக்களும் அந்தச் சாதுர்மாசத்துக்குப் பின்பு பெருமானுடனே இருந்தனர் என்று கொள்வதற்கு வலிய சான்று இருக்கிறது. ராஜகிருகத்தில் ஸாரிபுத்தனும் மோக்கல்லானனும் ஆகிய புகழுற்ற இரண்டு துறவிகள் புத்தருக்குச் சீடரானதும் பௌத்த சங்கம் வளரத்தொடங்கியது. அப்போதிலிருந்து புத்தர் பெருமானோடு, சிறிய அளவிலோ பெரிய அளவிலோ பிட்சு சங்கம் பெரும்பாலும் இருந்து வந்தது. அவர் பிட்சு சங்கத்துடனே யாத்திரை செய்து வந்தார். பெருமான் பிட்சு சங்கத்தை விட்டுத் தனியாக இருந்த சந்தர்ப்பங்கள் மிகக் குறைவேயாம்.

## சுற்றும் குருகுலங்கள்

புத்தர் காலத்தில் நிலவிய எல்லாச் சிரமண சங்கங்களும் அவற்றின் தலைவர்களும் இவ்வாறே பயணம் செய்வது வழக்கம். புத்தர் காலத்துக்கு முன்பும் அவரது காலத்திலும் அந்தணர்களின் குருகுலங்கள் இருந்தன. அங்கே உயர்வகுப்பினரான இளைஞர்கள் கல்வி பயில்வர். ஆனால் அந்தக் குருகுலங்களினால் பெரும்பாலான பொது மக்களுக்குக் கிடைத்த பயன் மிகக் குறைவு. அந்தணர்கள் மறை பயின்று அநேகமாக அரசரின் புகலை நாடுவார்கள். க்ஷத்திரியர்கள் வில்வித்தை கற்று அரசனிடம் வேலைக்கு அமருவார்கள். ஜீவகன் கௌமாரபிருத்தியன் போன்ற இளைஞர்கள் ஆயுர்வேதம் பயின்று உயர்வகுப்பினருக்குப் பயன் படுவதோடு, இறுதியில் அரசனருளைப் பெற முயல்வார்கள். ஆனால் சிரமணர்களின் குருகுலங்கள் இப்படி இல்லவே இல்லை. அவற்றைச் சார்ந்தவர்கள் சுற்றுப்பயணம் செய்து கொண்டே கல்விப்பயிற்சி பெற்று, பொது மக்களோடு அளவளாவித் தருமோபதேசம் செய்வார்கள். ஆதலால் பொது மக்களிடம் அவர்களுக்கு மிகுந்த செல்வாக்கு ஏற்பட்டது.

## பிட்சு சங்கத்தில் கட்டுப்பாடு

புத்தர்பெருமானின் பிட்சு சங்கத்தில் உயர்ந்த கட்டுப்பாடு இருந்தது. பிட்சுக்கள் ஒழுங்கின்றி நடந்து கொண்டால் அதை அவர் அறவே விரும்பமாட்டார். இதுபற்றிச் சாதும ஸுத்தத்தில் (மஜ்ஜிம நிகாயம், 67) வந்துள்ள கதையை இங்கே சுருக்கமாகக் கூறுவது பொருத்தமாகும்.

பெருமான், சாதுமா என்ற சாக்கியர் ஊரில் நெல்லிவனத்தில் தங்கியிருந்தார். அப்பொழுது ஸாரிபுத்தனும் மோக்கல்லானனும் ஐந்நூறு பிட்சுக்களை உடன்கொண்டு சாதுமாவுக்கு வந்தார்கள். சாதுமாவில் முன்னரே இருந்த பிட்சுக்களுக்கும் புதிதாக வந்த பிட்சுக்களுக்கும் வரவேற்பு, சேமம் விசாரித்தல் முதலியவைபற்றி உரையாடல்கள் நிகழ்ந்தன. எவ்விடத்தில் உட்காருவது, எங்கே நிற்பது, பாண்டங்களையும் ஆடைகளையும் எங்கு வைப்பது என்பவை போன்ற கேள்விகள் நிகழ, ஒரே கோலாகலமாக இருந்தது. அப்பொழுது பெருமான், "செம்படவர்கள் மீன் பிடிக்கையில் உண்டாகும் சத்தமும் கூச்சலும்போல இங்கே என்ன நடக்கிறது?" என்று ஆனந்தனைக் கேட்டார்.

"பதந்தரே, ஸாரிபுத்தனோடும் மோக்கல்லானனோடும் வந்திருக்கும் பிட்சுக்கள் பேசிக்கொண்டிருக்கிறார்கள். தாங்கள் எங்கு இருப்பது பாண்டங்களையும் ஆடைகளையும் எங்கு வைப்பது என்பதுபற்றி அவர்களுக்குள் கலவரமாக இருக்கிறது" என்று ஆனந்தன் கூறினான்.

பெருமான் அவனை அனுப்பி ஸாரிபுத்தனையும் மோக்கல்லானனையும் அவர்களைச்சார்ந்த பிட்சுக்களையும் வருவித்தார். 'நீங்கள் என்னோடு தங்காமல் இங்கிருந்து போய்விட வேண்டும்' என்று அவர்களுக்குத் தண்டனை விதித்தார். அவர்கள் யாவரும் வெட்கமடைந்தனர்; பெருமானை வணங்கி வெளியே போகப் புறப்பட்டனர். அப்பொழுது, சாதுமாவில் இருந்த சாக்கியர்கள் ஏதோ வேலையாகத் தமது நகர மாளிகையில் கூடியிருந்தனர். அன்றுதான் வந்த பிட்சுக்கள் திரும்பிச் செல்வதைக் கண்டு அவர்களுக்கு வியப்பாக இருந்தது. "நீங்கள் ஏன் திரும்பிப் போகிறீர்கள்?" என்று அவர்கள் கேட்டார்கள். "புத்தர்பெருமான் எங்களுக்குத் தண்டனை விதித்திருக்கிறார், ஆதலால் இங்கிருந்து போகிறோம்" என்று பிட்சுக்கள் மறுமொழி தந்தனர். சாக்கியர்கள் அந்தப் பிட்சுக்களை அங்கேயே தங்கச் சொல்லி, புத்தர்பெருமானிடம் வேண்டிக்கொண்டு அவர்களை மன்னிக்கச் செய்தனர்.

## அறவுரை அல்லது ஆரிய மௌனம்

எப்பொழுதுமே மோனநிலையில் வாழ்ந்த முனிவர்கள் புத்தர்

காலத்தில் ஏராளமாக இருந்தார்கள். முனி என்னும் சொல்லினின்றுதான் மௌனம் என்ற சொல் வந்தது. இத்தகைய தவத்தைப் புத்தர் விரும்பவில்லை. "கல்வியறிவற்ற முட்டாள் மோனநிலையைக் கொள்வதனால் முனியாகிவிட மாட்டான்" என்பது அவர்மொழி (தம்மபதம், 268). ஆயினும் சில சமயங்களில் மௌனத்தோடு இருப்பது நலம் என்று அவர் கூறுகிறார். அரியபரியேஸன ஸுத்தத்தில் (மஜ்ஜிமநிகாயம், 26), "பிட்சுக்களே, நீங்கள் சமயத்தைப்பற்றிப் பேசுங்கள் (அறவுரை நிகழ்த்துங்கள்); இல்லையேல் ஆரியமௌனத்தைக் கடைப்பிடியுங்கள்" என்று அவர் மொழிந்துள்ளார்.

## அமைதிக்கு எடுத்துக்காட்டு

புத்தர்பெருமான் பிட்சு சங்கத்துக்கு அறங்கூறாத சமயத்திலும் பிட்சுக்கள் யாவரும் மிகவும் அமைதியாக இருப்பார்கள்; சிறிதும் சத்தம் இராது. இதற்கு ஓர் உயரிய எடுத்துக் காட்டாக, தீகநிகாயத்தில் ஸாமஞ்ஞபல ஸுத்தத்தில் வந்துள்ள நிகழ்ச்சியைக் கூறலாம். அந்த வரலாறு வருமாறு-

புத்தர்பிரான் ராஜகிருகத்தில் ஜீவக கௌமார பிருத்தியனுடைய மாந்தோப்பில் பெரும் பிட்சு சங்கத்தோடு தங்கியிருந்தார். அப்பொழுது, கார்த்திகைப் பௌர்ணமியன்று இரவில், மன்னன் அஜாதசத்துரு தன் அமைச்சர்களுடன் அரண்மனை மேன்மாடத்தில் அமர்ந்திருந்தான். "எவ்வளவு அழகான இரவு இது! தமது அறவுரையினால் நம் உள்ளத்தை மகிழ்விக்கக் கூடிய சிரமணரோ அந்தணரோ இங்கு எவரேனும் இருக்கிறரா?" என்று அவன் கேட்டான். அந்தச் சமயத்தில், பூரண கஸ்ஸபன், மக்கலி கோஸாலன், அஜித கேஸகம்பலன், பகுத கச்சாயனன், ஸஞ்சய பேலட்டபுத்தன் நிகண்ட நாதபுத்தன் என்னும் புகழ் வாய்ந்த சிரமணர்கள் தத்தம் சங்கங்களோடு ராஜகிருகத்தின் மருங்கில் இருந்துவந்தார்கள். அஜாதசத்துருவின் அமைச்சர்கள் அடைவே அவர்களைப் புகழ்ந்து, அவர்களைக் காணச் செல்லும்படி மன்னன் மனத்தைத் திருப்ப முயன்றார்கள். ஆனால் அரசன் ஏதும் விடை கூறாமல் சும்மா இருந்தான்.

அப்பொழுது அங்கு ஜீவக கௌமாரபிருத்தியன் இருந்தான். "நீ ஒன்றும் பேசவில்லையே?" என்றான் மன்னன்.

இதற்கு ஜீவகன், "அரசே, நமது மாந்தோப்பில் புத்தர்பிரான் பெரும் பிட்சு சங்கத்தோடு தங்கியிருக்கிறார். இன்று தாங்கள் அவரைக் காண வேண்டும்; கண்டால் தங்கள் உள்ளம் மகிழும்" என்று மறுமாற்றம் உரைத்தான்.

அஜாதசத்துரு அவனை ஊர்திகளுக்கு ஏற்பாடு செய்யக்

கட்டளையிட்டான். அதன்படி ஜீவகன் எல்லா ஏற்பாடுகளும் செய்தான். மன்னன் பட்டத்து யானையில் அம்பாரியில் அமர்ந்தான். அந்தப்புரத்து மங்கையர் பெண்யானைகளின் மீது இவர்ந்து சென்றனர். இவ்வாறு பெரும்படையும் ஏவலாளரும் புடைசூழ அஜாதசத்துரு புத்தர்பிரானைக் காணப் புறப்பட்டான்.

ஜீவகனுடைய மாந்தோப்பை அணுகியதும், மன்னனை அச்சம் பிடித்துக் கொண்டது; "அப்பா ஜீவகா, நீ என்னை ஏமாற்றுகிறாயா? என் எதிரிகளிடம் என்னை ஒப்படைக்க நீ சூழ்ச்சி செய்திருக்கிறாயோ? இங்கே பெரும் பிட்சுக் கூட்டம் இருப்பதாகச் சொல்கிறாய். ஆனால் யாரும் தும்மும் ஒலியோ இருமும் சத்தமோ வேறு ஓசையோ சிறிதும் கேட்கவில்லையே!" என்று அவன் கூறினான்.

"அரசே, அஞ்ச வேண்டாம், அஞ்ச வேண்டாம். நான் உங்களை ஏமாற்றவில்லை; எதிரிகளிடம் தங்களை ஒப்படைக்கும் நோக்கமும் எனக்கு இல்லை. முன்னால் வாருங்கள், முன்னால் வாருங்கள். எதிரே மண்டல மாலத்தில்[1] விளக்குகள் எரிகின்றன" என்றான் ஜீவகன். (அஜாதசத்துருவின் எதிரிகள் அங்கு இருந்தார்களாயின் விளக்கேற்றி அமர்ந்திருக்க மாட்டார்கள் என்பது கருத்து).

யானைமேல் இவர்ந்து செல்லக்கூடிய தொலைவு வரையில் சென்ற பின், அஜாதசத்துரு கீழே இறங்கி, ஜீவகனுடைய மாந்தோப்பில் இருந்த மண்டலமாலத்து வாயில்வரைக்கும் நடந்து சென்றான். அவன் அங்கே நின்று, "பெருமான் எங்கே இருக்கிறார்?" என்று ஜீவகனைக் கேட்டான்.

"அரசே, மண்டலமாலத்து நடுத்தூணின் அருகில், கிழக்கு முகமாகப் பெருமான் அமர்ந்திருக்கிறார்" என்றான் ஜீவகன்.

அரசன் பெருமானை அணுகி நின்றான். மோன நிலையில் அமைதியாக அமர்ந்திருந்த பிட்சு சங்கத்தைக் கண்டதும், "இந்தச் சங்கத்தில் நிலவுகிறதே, இது போன்ற அமைதியை (என்) உதயபத்திர குமாரன் பெறுவானாக! இத்தகைய அமைதி அவனுக்குக் கிடைப்பதாக!" என்று மன்னன் மொழிந்தான்.

"அரசே, தங்கள் அன்புக்கு ஏற்றபடியே பேசினீர்கள்" என்றார் பெருமான்.

இதற்குப் பின்பு அஜாதசத்துருவுக்கும் பெருமானுக்கும் மிகவும் நீண்ட உரையாடல் நிகழ்ந்தது. அதை இங்கே விரிக்கத் தேவையில்லை. சங்கத்தோடு பெருமான் வீற்றிருக்கும் காலையில் பிட்சுக் கூட்டத்தில் எவ்வகையான ஒலியும் எழாது என்பதைக் காண்பிக்கவே இந்த நிகழ்ச்சியை இங்கே குறிப்பிட்டேன்.

---

1. மண்டலமாலம் என்பது கூடார வடிவுள்ள மண்டபம். அக்கம் பக்கத்து நிலமட்டத்தைவிட அதன் தரையை உயர்த்தியிருப்பார்கள்.

## பிட்சு சங்கத்தின் கட்டுப்பாட்டு வன்மை

பகல் நேரத்தில் பெருமான் பிட்சைக்குச் செல்லுகையில் சில சமயம் வெவ்வேறு பரிவிராஜகர்களின் ஆசிரமங்களைக் காண்பதும் உண்டு. பெருமானைக் கண்டதுமே துறவிகளின் தலைவர்கள் தம் சீடர்களிடம், "இதோ சிரமண கோதமர் வருகிறார். அவருக்குச் சத்தம் போடுவது பிடிக்காது. ஆதலால் நீங்கள் உரக்கப் பேசாமல் சிறிது நேரம் அமைதியாக அமர்ந்திருங்கள்" என்று கூறுவார்கள். இத்தகைய நிகழ்ச்சி ஒன்றைப் பற்றிய வருணனை, மஜ்ஜிமநிகாயத்தில் மகாஸகுலுதாயி ஸுத்தத்தில் (77) வருகிறது. அதில் புத்தரின் அன்றாட வாழ்க்கையைப் பற்றிப் பின்னும் சில செய்திகள் இருப்பதனால், அதன் சாரத்தைச் சுருக்கமாகக் கூறுகிறேன்:

பெருமான் ராஜகிருகத்தில் வேணுவனத்தைச் சார்ந்த கலந்தக நிவாபத்தில் தங்கியிருந்தார். அப்பொழுது, புகழ்வாய்ந்த சில துறவிகள் மோர நிவாபத்தில் பரிவிராஜக ஆராமத்தில் இருந்து வந்தனர். ஒரு நாள் காலையில் பெருமான் ராஜகிருகத்தில் பிட்சையேற்கப் புறப்பட்டார். பிட்சாடனத்துக்கு உரிய நேரம் இன்னும் வராமையால், அவர் வழியில் இருந்த அந்தத் துறவிகளின் ஆசிரமத்துக்குச் சென்றார். அங்கே ஸகுலுதாயி[1] தன்னைச் சார்ந்த துறவிகளின் பேரவையில் அமர்ந்திருந்தான். அந்தத் துறவிகள் அரசரின் கதை, திருடர் கதை, அமைச்சர் கதை, அச்சமூட்டும் கதை, படைவீரர்கதை போர்க் கதை முதலிய (நன்னெறிக்கு உதவாத) வீண் கதைகளை உரக்கப் பேசிக் கொண்டிருந்தார்கள். ஆசிரமத்துக்குச் சிறிது தொலைவில் பெருமான் வருவதை ஸகுலுதாயி கண்டான். அவன் தன் சீடர்களிடம், "அன்பர்களே, உரக்கப் பேசாதீர்கள்; சத்தம் போடுவதை நிறுத்துங்கள். இதோ சிரமண கோதமர் வருகிறார். மெல்லப் பேசுவதை அவர் விரும்புகிறார்; மெல்லப் பேசுவதைப் புகழ்கிறார். நாம் சத்தம் போடாமல் இருந்தால்தான் இந்த அவைக்கு வருவதை அவர் பொருத்தமென்று நினைப்பார்" என்றான்.

அந்தத் துறவிகள் அமைதியாக இருந்தனர். பெருமான், ஸகுலுதாயி இருந்த இடத்துக்கு வந்தார். "பெருமானே, எழுந்தருளுக! பெருமானுக்கு நல்வரவாகுக! நீண்ட நாள் கழித்துப் பெருமான் எங்கள் அவைக்கு எழுந்தருளியிருக்கிறார். இதோ தங்கள் இருக்கை; இதில் தாங்கள் அமர வேண்டும்" என்று ஸகுலுதாயி அவரை வரவேற்றான்.

பெருமான் அந்த இருக்கையில் அமர்ந்து, "உதாயி, இங்கு நீங்கள் எதைப்பற்றிப் பேசிக்கொண்டிருந்தீர்கள்?" என்று கேட்டார்.

உதாயி கூறலானான்- "பெருமானே, எங்கள் பேச்சு இருக்கட்டும். அவை அரியவை அல்ல.ஆனால் எனக்கு ஒரு நிகழ்ச்சி நினைவுக்கு

1. ஸகுல உதாயி அதாவது உயர் குலத்தினனான உதாயி என்று பொருள்.

வருகிறது. சில காலத்துக்கு முன்பு, வெவ்வேறு சம்பிரதாயத்தினரான சிரமண அந்தணர்கள் ஒரு வாத சபையில் கூடியிருந்தனர். அப்பொழுது அவர்களுக்குள் ஒரு கேள்வி எழுந்தது: பூரண கஸ்ஸபன், மக்கலி கோஸாலன், அஜித கேஸ கம்பலன், பகுத கச்சாயனன், ஸஞ்சய பேலட்டபுத்தன், நிகண்ட நாதபுத்தன், சிரமண கோதமர் - இப்படிப் பெரிய பெரிய சங்கத் தலைவர்கள் இன்று ராஜகிருகத்தின் மருங்கில் மாரிக்கால வாசத்துக்காகத் தங்கியிருப்பது, அங்கமகத்து மக்களுக்குக் கிடைத்த பெரும் பேறாகும். ஆனால் இந்தத் தலைவர்களுக்குள் எவருக்குச் சிராவகர்கள் உரிய மதிப்புக் கொடுக்கிறார்கள்? அத்தகைய தலைவரிடம் சிராவகர்கள் எப்படி நடந்துகொள்கிறார்கள்? என்பதே அந்தக் கேள்வி.

"இதற்குச் சிலர், 'பூரண கஸ்ஸபன் புகழ்பெற்ற தலைவன். ஆனால் சிராவகர்கள் அவனுக்கு மதிப்புக் கொடுப்பதில்லை; அவனுடைய ஆதரவில் இருக்க விரும்புவதும் இல்லை. அவர்களுக்குள் சச்சரவுகள் தோன்றுகின்றன' என்று மறுமொழி கூறினர். இப்படியே மற்றும் சிலர் மக்கலி கோஸாலன் முதலிய தலைவர்களின் சிராவகர்களுக்குள் எவ்வாறு கச்சரவுகள் நிகழ்கின்றன என்பதை வருணித்தனர். இறுதியில் சிலர், சிரமண கோதமர் புகழ்பெற்ற தலைவர். அவரைப் பெரிதும் மதிக்கிறார்கள் அவருடைய புகலில் வாழ்கிறார்கள். ஒரு முறை கோதமர் பேரவையில் அறவுரை ஆற்றிக்கொண்டு இருந்தார். அங்கே அவருடைய சிராவகன் ஒருவன் இருமினான். மற்றொருவன் அவனது முழங்காலை அழுத்தி, சத்தம் செய்யாதே; நம் சாத்தர் (குரு) தருமோபதேசம் செய்கிறார் என்று மெதுவாகக் கூறினான். சிரமண கோதமர் நூற்றுக் கணக்கான மக்கள் நிரம்பிய அவையில் அறவுரை ஆற்றுகையில், அவருடைய சிராவகர்கள் தும்மும் ஒலியோ இருமும் ஒலியோகூடக் கேட்பதில்லை. மக்கள் மிகவும் ஆதரத்துடன் அவருடைய சமய நெறியைப் பற்றிக் கேட்டறிவதில் முனைந்திருக்கிறார்கள் என்று பேசினர்."

"உதாயி, என் சிராவகர்கள் என்னிடம் மதிப்போடு நடந்து கொள்வதற்கும் என் புகலில் வாழ்வதற்கும் உரிய காரணங்கள் எவையென்று உனக்குத் தோற்றுகின்றன?" என்று பெருமான் கேட்டார்.

"இவற்றுக்கு உரிய காரணங்கள் ஐந்து என்று நான் கருதுகிறேன். அவையாவன- 1. பெருமான் அற்ப உணவை உண்டு, அற்ப உணவின் குணங்களைக் கூறுகிறார். 2. அவர் எவ்வகையான ஆடையைக் கொண்டும் மகிழ்கிறார்; அந்த மகிழ்ச்சியின் குணங்களைக் கூறுகிறார். 3.கிடைக்கும் பிட்சையைக் கொண்டு அவர் மகிழ்கிறார்; அந்த மகிழ்ச்சியின் குணங்களைக் கூறுகிறார். 4. கிடைக்கும் இடத்தைக் கொண்டு அவர் மகிழ்கிறார்; அந்த மகிழ்ச்சியின் குணங்களைக் கூறுகிறார். 5. அவர் தனிமையில் வாழ்கிறார்; தனிமையின் குணங்களைக்

கூறுகிறார். இவ்வைந்து காரணங்களினால்தான் பெருமானின் சிராவகர்கள் அவரிடம் மதிப்பு வைத்திருக்கிறார்கள், அவர் புகலில் வாழ்கிறார்கள் என்று எனக்குத் தோற்றுகிறது" என்று உதாயி உரைத்தான்.

அப்பொழுது பெருமான் அருளிய மொழியாவது- "உதாயி, சிரமண கோதமன் அற்ப உணவு கொண்டு அதன் குணங்களைக் கூறுகிறான் என்பதற்காக மட்டுமே சிராவகர்கள் என்னிடம் மதிப்பு வைத்து என் புகலில் வாழ்கிறார்கள் என்றால், என் சிராவகர்களுக்குள் என்னைக் காட்டிலும் மிகக் குறைவாக உண்பவர்கள் என்னிடம் மதிப்பு வைத்திருக்க மாட்டார்கள்; என் புகலில் இருந்திருக்க மாட்டார்கள்.

"உதாயி, கிடைக்கும் ஆடையைக் கொண்டு சிரமண கோதமன் மகிழ்ந்து அந்த மகிழ்ச்சியின் குணங்களைக் கூறுகிறான் என்பதற்காக மட்டுமே என் சிராவகர்கள் என்னிடம் மதிப்பு வைத்து என் புகலில் வாழ்கிறார்கள் என்றால், என் சிராவகர்களுக்குள் மயானத்திலிருந்தும் குப்பை கூளத்திலிருந்தும் கடையிலிருந்தும் கந்தைகளைத் திரட்டி ஆடையாக்கி உடுப்பவர்கள் என்னிடம் மதிப்பு வைத்திருக்க மாட்டார்கள்; என் புகலில் இருந்திருக்க மாட்டார்கள். ஏனெனில், நான் சில சமயம் இல்லறத்தார் கொடுக்கும் ஆடைகளையும் செங்கூறையாக்கி அணிவது உண்டு.

"உதாயி, கிடைக்கும் பிட்சையைக் கொண்டு சிரமண கோதமன் மகிழ்ந்து அந்த மகிழ்ச்சியின் குணங்களைக் கூறுகிறான் என்பதற்காக மட்டுமே என் சிராவகர்கள் என்னிடம் மதிப்பு வைத்து என் புகலில் வாழ்கிறார்கள் என்றால், அவர்களுக்குள் வெறும் பிச்சையையே சார்ந்திருந்திருப்பவர்கள்- சிறிய வீடு, பெரிய வீடு என்று கருதாமல் பிட்சையேற்றுப் பிழைப்பவர்கள்- என்னிடம் மதிப்பு வைத்து என் புகலில் இருந்திருக்க மாட்டார்கள். ஏனெனில், நான் சில சமயம் இல்லறத்தவரின் அழைப்பை ஏற்று நல்ல உணவை உண்பதும் உண்டு.

உதாயி, கிடைக்கும் இடத்தைக் கொண்டு சிரமண கோதமன் மகிழ்ந்து அந்த மகிழ்ச்சியின் குணங்களைக் கூறுகிறான் என்பதற்காக மட்டுமே என் சிராவகர்கள் என்னிடம் மதிப்பு வைத்து என் புகலில் வாழ்கிறார்கள் என்றால், அவர்களுக்குள் மரத்து அடியிலோ திறந்த வெளியிலோ வாழ்பவர்களும், ஆண்டிற்கு எட்டு மாதகாலம் கூரை வேய்ந்துள்ள இடத்தில் புகாதவர்களும் என்னிடம் மதிப்பு வைத்து என் புகலில் இருந்திருக்க மாட்டார்கள். ஏனெனில், நான் சில சமயம் பெரிய விஹாரங்களிலும் தங்குவதுஉண்டு.

"உதாயி, சிரமண கோதமன் தனிமையில் வாழ்ந்து தனிமையின் குணங்களைக் கூறுகிறான் என்பதற்காக மட்டுமே என் சிராவகர்கள் என்னிடம் மதிப்பு வைத்து என் புகலில் வாழ்கிறார்கள் என்றால், அவர்களுக்குள் அரணியத்திலேயே வசிப்பவர்கள்-பதினைந்து

நாட்களுக்கு ஒரு முறை பிராதிமோட்சத்துக்காக மட்டுமே சங்கத்துக்கு வருகிறவர்கள் - என்னிடம் மதிப்பு வைத்து என் புகலில் இருந்திருக்க மாட்டார்கள். ஏனெனில், நான் சில சமயம் பிட்சுக்களையும் பிட்சுணி களையும், . உபாசகர்களையும் உபாசகைகளையும், அரசர்களையும் அமைச்சர்களையும், மற்றச் சங்கங்களின் தலைவர்களையும் அவர்களின் சிராவகர்களையும் சந்திப்பது உண்டு.

"ஆனால் உதாயி, என் சிராவகர்கள் என்னிடம் மதிப்பு வைத்து என் புகலில் வாழ்வதற்கு, வேறு ஐந்து குணங்கள் காரணமாக இருக்கின்றன. 1. சிரமண கோதமன் நல்லொழுக்கம் வாய்ந்தவன். 2. அவன் உள்ளபடியே தருமோபதேசம் செய்கிறான். 3. அவன் அறிவு நிறைந்தவன். ஆதலால் என் சிராவகர்கள் என்னிடம் மதிப்பு வைத்து என் புகலில் வாழ்கிறார்கள். 4. இவற்றைத் தவிர, நான் என் சிராவகர்களுக்கு நான்கு ஆரிய சத்தியங்களை உபதேசிக்கிறேன். 5. ஆன்மிக முன்னேற்றத்துக்கான வெவ்வேறு வகைகளைக் காண்பிக்கிறேன். இந்த ஐந்து குணங்களினால் என் சிராவகர்கள் என்னிடம் மதிப்பு வைத்து என் புகலில் வாழ்கிறார்கள்."

## பிட்சு சங்கத்துடன் இருக்கையில் பெருமானின் அன்றாடச் செயல்

புத்தர்பெருமான் தமது சங்கத்தில் எத்தகைய ஒழுங்கைக் கடைப்பிடித்து வந்தார் என்பது எல்லாத் துறவிகளுக்கும் தெரிந்திருந்தது. வேறு துறவிகளின் கூட்டத்துக்கு அவர் போகும்போதும் அவர்கள் மிகவும் அமைதியாக நடந்துகொள்வார்கள். இதை மேற்கண்ட ஸுத்தத்திலிருந்தே அறியலாம். பெருமான் சில சமயம் இல்லறத்தாரின் அழைப்பையும் அவர்கள் கொடுக்கும் ஆடைகளையும் ஏற்றுக்கொள்வது உண்டு; ஆயினும் அற்ப உணவு கொள்வது, எளிய ஆடைகளை அணிவது, தனிமையில் இருப்பதில் ஆவல் ஆகியவற்றிலும் அவர் புகழ் பெற்றிருந்தார். அவர் பிட்சு சங்கத்துடன் யாத்திரை செய்யும்பொழுது ஏதாவது ஓர் ஊருக்கு வெளியிலோ, உவவனத்திலோ இத்தகைய வசதியான வேறு இடத்திலோ தங்குவார். இரவில் தியான சமாதியை முடித்துக்கொண்டு, இடையாமத்தில் முற்கூறியவாறு சிம்மசய்யையில் கண் வளர்வார். அதிகாலையில் எழுந்து மீண்டும் உலாவுவதிலோ தியான சமாதியிலோ ஈடுபட்டிருப்பார்.

காலையில் பெருமான் அந்த ஊரிலோ நகரத்திலோ பெரும்பாலும் தனியாகவே பிட்சைக்குச் செல்வார். வழியிலாவது, பிட்சாடனம் செய்து கொண்டேயாவது சந்தர்ப்பத்துக்கு ஏற்றபடி இல்லறத்தாருக்கு உபதேசம் செய்வார். ஸிகாலோவாத ஸுத்தத்தைப் பெருமான் வழியில் உபதேசித்தார்; கஸிபாரத்துவாஜ ஸுத்தத்தையும் இதுபோன்ற மற்றும்

பல ஸுத்தங்களையும் பிட்சாடனம் செய்தபடியே உபதேசித்தார்.

வயிற்றுக்குப் போதுமளவு பிட்சை கிடைத்ததும் பெருமான் ஊருக்கு வெளியே சென்று, ஏதாவது மரநிழலிலோ இதுபோன்ற வேறு சிறந்த இடத்திலோ அமர்ந்து அந்த உணவைப் புசிப்பார். விஹாரத்துக்கு வந்து சிறிது நேரம் ஓய்வு கொண்டபின், தியான சமாதியில் சில நாழிகை ஆழ்ந்திருப்பார். மாலையில் இல்லறத்தினர் அவரைப் பார்க்க வந்து, சமயக் கொள்கைகளைப் பற்றி உரையாடுவார்கள். ஸோண தண்டன், கூடதந்தன் முதலிய அந்தணர்கள் இத்தகைய நேரத்தில்தான் பெரிய அந்தணர் குழுவோடு வந்து பெருமானைக் கண்டு தருமத்தைப் பற்றி உரையாடியதாக, தீகநிகாயம் குறிப்பிடுகிறது. இல்லறத்தவர்வராத நாளில், பெருமான் பெரும்பாலும் தம்மோடு இருக்கும் பிட்சுக்களுக்கு அறவுரையாற்றுவார்.

இரண்டொரு நாட்களுக்குப் பின் பெருமான் மீண்டும் புறப்படுவார். இவ்வண்ணமாக அவர் கிழக்கே பாகல்புர், மேற்கே குருக்களின் கல்மாஷதம்யம் என்ற நகரம், வடக்கே இமயம், தெற்கே விந்தியம் என்னும் நான்கு எல்லைகளுக்குள், பிட்சு சங்கத்துடன் எட்டு மாதகாலம் யாத்திரை செய்து கொண்டு இருப்பார்.

## மாரிக்கால வாசம்

புத்தர்பிரான் உபதேசத்தைத் தொடங்கிய காலத்தில், அவரைச் சார்ந்த பிட்சுக்கள் மாரிக்காலத்தில் ஓர் இடத்தில் தங்கும் வழக்கம் இல்லை. அவர்கள் நான்கு திசைகளிலும் திரிந்து தருமோபதேசம் செய்துவந்தனர். மற்றச் சம்பிரதாயத்துச் சிரமணர்கள் மழைக் காலத்தில் ஓர் இடத்தில் தங்கியிருப்பர். ஆதலால் பொது மக்களுக்குப் புத்த பிட்சுக்களின் இந்த செயல் பிடிக்கவில்லை அவர்கள் அந்த பிட்சுக்களைப்பற்றிக் குற்றம் சொல்லலானார்கள். எனவே பெருமான், அவர்களுடைய திருப்திக்காக, பிட்சுக்கள் மழைக்காலத்தில் குறைந்தது மூன்று மாதங்களாயினும் ஒரே இடத்தில் வசிக்க வேண்டும் என்று நியமித்தார்.[1]

மகாவக்கத்தில் வந்துள்ள மாரிவாசக் கதையின் சாரம் இது. ஆனால் அந்தக் கதை முழுவதும் உண்மையாக இருக்குமென்று தோன்றவில்லை.

---

1. மழைக் காலத்தில் இங்குமங்கும் சுற்றிய பிட்சுக்கள் பசும் புல்லைக் காலால் மிதித்துத் துவைத்தனர். அதனால் பல சிற்றுயிர்கள் அழிந்தன. எனவே மக்கள் அவர்களைப் பற்றிக் குற்றங் கூறலாயினர். ஆதலால் பெருமான், "ஆஷாட பௌர்ணிமை யன்று, முதல் மாரிவாசம் தொடங்க வேண்டும். அதிலிருந்து ஒரு மாதம் கழித்து இரண்டாவது மாரிவாசம் தொடங்க வேண்டும். மாரிவாசம் தொடங்கிய பிறகு மூன்று மாதம் வரையில் பிட்சு ஒரே இடத்தில் வசிக்க வேண்டும்" என்று நியமித்தார். -பௌத்த சங்க வரலாறு, பக்.24.

முதலாவது, எல்லாச் சிரமணர்களுமே மழைக் காலத்தில் ஒரே இடத்தில்தான் தங்கியிருந்தார்கள் என்று சொல்வதற்கில்லை. இரண்டாவது, பெருமான் விதித்த இந்த நியமத்துக்குப் பல விலக்குகளும் இருக்கின்றன. திருடர்களினால் துன்பமோ, வேறு தொந்தரவோ நேர்ந்தால், மழைக்காலத்திலுங்கூடப் பிட்சுக்கள் வேறு இடத்துக்குப் போக முடியும்.

புத்தர்பிரான் உபதேசிக்கத் தொடங்கிய காலத்தில் அவர் புகழ் மிகுதியாகப் பரவியிருக்கவில்லை; ஆதலால் அவரோ அவருடைய சிறு பிட்சுக் கூட்டமோ மாரிவாசத்துக்காக ஓர் இடத்தில் தங்குவது சாத்தியமாக இல்லை. அவருடைய புகழ் நாற்புறமும் பரவியகாலையில் முதல் முதலில் அநாதபிண்டிகன் என்ற வணிகன், சிராவஸ்தியின் அருகில் ஜேதவனத்தில் அவருக்காகப் பெரிய விஹாரத்தைக் கட்டினான்.[1] சிறிது காலத்துக்குப் பின், விசாகை என்ற உபாசகை, அந்த நகரத்தின் அருகிலேயே பூர்வாராமம் என்ற மாளிகையைக் கட்டிப் பௌத்த சங்கத்துக்கு உரியதாக்கினாள். புத்தர் பெருமான் தமது முதிர்ந்த பிராயத்தில் பெரும்பாலும் இந்த இரண்டு இடங்களில்தான் மாரிக்காலத்தில் தங்குவது வழக்கம். மற்ற இடங்களிலுள்ள உபாசகர்கள் அழைத்தால், பெருமான் அவர்களின் ஊருக்கும் மாரிக்காலத்தில் செல்வார். மக்கள் மழைக் காலத்துக்குக் குடிசைகளை அமைத்து, பிட்சுக்கள் தங்குவதற்கு ஏற்பாடு செய்து வந்தனர். பெருமானுக்குத் தனியே ஒரு குடில் இருக்கும்; அதை, கந்த குடி என்பர்.

மழைக்காலத்தில், அக்கம் பக்கத்திலுள்ள உபாசகர்கள் வந்து புத்தரைத் தரிசித்து, அவருடைய அறவுரைகளைக் கேட்பார்கள். ஆனால் அவர்கள் நாள்தோறும் விஹாரத்தில் பிட்சையைக் கொணர்ந்து கொடுக்கமாட்டார்கள். பிட்சுக்களும் பெருமானும் வழக்கம் போலவே பிட்சாடனம் செய்யத்தான் வேண்டும். எப்போதாவதுதான் இல்லறத்தாரின் வீட்டில் விருந்து நிகழும்.

## நோயாளியான பிட்சுக்களை விசாரித்தல்

பிட்சுக்களில் எவனாயினும் நோய்வாய்ப்பட்டிருந்தால், பெருமான்

1. அநாதபிண்டிகன் புத்தர்பெருமானுக்காக ஜேத ராஜகுமாரனுடைய சோலையை வாங்கியபொழுது அவனுடைய நிலப்பகுதியைப் பொற்காசுகளால் நிரப்பிவிட்டான். புத்தரிடம் அவனுக்கு அவ்வளவு பக்தி. பிறகு அவன் இந்த ஜேதவனத்தைப் பிட்சு சங்கத்துக்குக் கொடுத்தான்.

விசாகையின் மாமனார் நிக்கந்தர்களின் உபாசகராக இருந்தவர்; ஆனால் அவர் விசாகைக்குப் புத்தரை வழிபட உரிமை தந்திருந்தார். இறுதியில் அவரும் புத்தரின் உபதேசத்தைக் கேட்டு அவருக்கு அடியவரானார். -புத்தலீலா ஸார ஸங்கிரகம், பக். 167-179.

பிற்பகலில் தியான சமாதியை முடித்துக்கொண்டு, அவனை விசாரிக்கப் போவார். ஒரு தடவை மகாகாசியபன் ராஜகிருகத்தில் பிப்பிலிகுகையில் நோய்வாய்ப்பட்டுக் கிடந்தான். அப்பொழுது பெருமான் வேளுவனத்தில் இருந்தார். அவர் மாலையில் சென்று மகாகாசியபனை விசாரித்த வரலாறு, போஜ்ஜங்கஸம் யுத்தத்தில் பதினான்காவது ஸுத்தத்தில் வருகிறது. பதினைந்தாவது ஸுத்தத்தில், மற்றொரு சமயம் பெருமான் மகாமோக்கல்லானனை விசாரிக்கச் சென்ற வரலாறு உள்ளது. இவர்கள் இருவருக்கும், பெருமான் ஏழு போதியங்கங்களை நினைவூட்டினார்; அதனால் அவர்களின் நோய் தணிந்தது.

## சில நாள் தனிமை வாழ்வு

பெருமான் யாத்திரையில் இருந்தாலும் சரி, மழைக்காலத்தில் ஓர் இடத்தில் தங்கியிருந்தாலும் சரி; பிற்பகலில் இரண்டொரு நாழிகை நேரமும், இரவில் முதல் யாமத்திலும் கடையாமத்திலும் நீண்ட நேரமும் தியான சமாதியில் ஆழ்ந்திருப்பார் என்பதை முன்பே கூறியிருக்கிறேன். இதைத் தவிர, பெருமான் ஒரு முறை வைசாலி யருகில் மகாவனத்தில் கூடாகாரசாலையில் இருந்த பொழுது, பதினைந்து நாட்கள் வரையில் தனிமையில் வாழ்ந்ததாகவும், பிட்சை கொண்டுவரும் ஒருபிட்சுவை மட்டுமே தம்முடன் தங்க அநுமதித்ததாகவும் ஆநாபானஸ்மிருதி ஸம்யுத்தத்தின் ஒன்பதாவது ஸுத்தம் குறிப்பிடுகிறது. இதே ஸம்யுத்தத்தின் பதினோராவது ஸுத்தத்தில் காணும் வரலாறு இது-

ஒரு முறை பெருமான் இச்சாநங்கலம் என்ற ஊர் மருங்கில் இச்சாநங்கல வனத்தில் தங்கியிருந்தார். அப்பொழுது அவர், "பிட்சுக்களே, நான் மூன்று மாதங்கள் வரையில் தனிமையில் இருக்க விரும்புகிறேன். உணவு கொணரும் ஒரே ஒரு பிட்சுவைத் தவிர, என்னிடம் வேறு எவரும் வரலாகாது" என்றார். அந்த மூன்று மாதங்களுக்குப் பின்பு பெருமான் தனிமையிலிருந்து வெளிவந்தும், "பிட்சுக்களே, வேறு சம்பிரதாயத்துத் துறவிகள் உங்களிடம், பெருமான் இந்த மழைக் காலத்தில் எவ்வகையான தியான சமாதியில் ஆழ்ந்திருந்தார்? என்று கேட்டால், பெருமான் ஆநாபானஸ்மிருதி[1] சமாதியில் ஆழ்ந்திருந்தார் என்று கூறுங்கள் என மொழிந்தார்.

இதற்கு முன்பு குறிப்பிட்ட ஸுத்தமும், பெருமான் பதினைந்து நாட்கள் ஆநாபானஸ்மிருதி சமாதியில் ஈடுபட்டிருந்ததாகக் கூறுகிறது. மக்கள் இந்தச் சமாதி முறையின் பெருமையை அறிய வேண்டும் என்பதே

1. ஆநம் என்றால் மூச்சை உள்ளே இழுத்தல்; அபானம் என்றால் மூச்சை வெளிவிடுதல். இவற்றைக் கொண்டு பெறும் சமாதிக்கு ஆநாபானஸ்மிருதி சமாதி என்று பெயர். இதன் விரிவான முறையை, சமாதி மார்க்கம், பக். 38 -48-இல் காண்க.

இதன் நோக்கம். பதினைந்து நாட்களுக்கோ மூன்று மாதங்களுக்கோ அதைக் கடைப்பிடித்தாலும் அலுப்பு வராது; அதனால் உடல் ஆரோக்கியம் பெறுகிறது.

மற்றொரு சந்தர்ப்பத்தில் பெருமான் பிட்சுசங்கத்தை விட்டுத் தனியே பாரிலேய்யக வனத்தில் சென்று தங்கிய செய்தியை ஆறாம் அத்தியாயத்தில் சொல்லியிருக்கிறேன். இதிலிருந்து, சில சமயம் பெருமான் தம்மை யாரும் அறியாத இடத்தில் தனிமையில் சென்று தங்குவார் என்று தெரிகிறது. ஆனால் அவருடைய புகழ் எங்கும் பரவி எல்லாருமே அவரை அறிந்து கொண்ட காலத்தில், அவர் சங்கத்தில் இருந்த படியே சில நாளைக்கு அதனின்று ஒதுங்கியிருக்க முயன்றார் என்று தோன்றுகிறது. ஆனால் அவருடைய நாற்பத்தைந்து வருஷத்திய தலைமையாட்சியில் இத்தகைய சந்தர்ப்பங்கள் மிகக் குறைவாகவே இருந்தன.

இக்காலத்தில் (1940-ஆம் ஆண்டு வாக்கில்), காய கற்பத்தைப் பற்றிய பேச்சு மிகுதியாக அடிபடுகிறது. ஒரு மாதம் அல்லது ஒன்றரை மாதம் ஒருவனை ஓர் அறையில் அடைத்து வைத்து, பத்தியத்துடன் இருக்கச் செய்து மருந்து தந்து சிகிச்சை செய்கிறார்கள். இதனால் அவன் மீண்டும் இளமை பெறுவதாக மக்கள் கருதுகிறார்கள். இந்தக் காயகற்பத்துக்கும் பெருமானது தனிமை வாழ்வுக்கும் எவ்வகைச் சம்பந்தமும் இல்லை. ஏனெனில், பெருமான் அப்பொழுது மருந்து சிகிச்சை செய்து கொள்ளவில்லை. ஆநாபானஸ்மிருதி சமாதியை மட்டுமே பாவித்து வந்தார்.

நீண்ட நாள் தனிமையில் வாழும் பழக்கத்தைச் சிங்களத் தீவிலோ பர்மாவிலோ சயாமிலோ காண்பது அரிதாயினும், திபேத்தில் அது பெரு வழக்கமாக உள்ளது. இது மட்டுமன்றி, சில இடங்களில் அது அளவு கடந்திருப்பதாகவும் தெரிகிறது. திபேத்திய லாமாக்களிற் சிலர், பல ஆண்டுகள் ஏதாவது குகையிலோ இதுபோன்ற வேறு இடத்திலோ மறைந்து வாழ்ந்து, சித்திகள் அனைத்தையும் பெற முயலுகிறார்கள்.

## நோய்வாய்ப்படுதல்

பெருமான் நோய்வாய்ப்பட்ட சந்தர்ப்பங்கள் மிகக் குறைவாகவே காணப்படுகின்றன. ஒரு முறை ராஜகிருகத்தருகில் வேணுவனத்தில் அவர் நோய்வாய்ப்பட்டார். அப்பொழுது அவர் சொன்னதனால் மகாசுந்தன் ஏழு போதியங்கங்களைக் கூறியதாகவும் அதனால் அவர் நலம் பெற்றதாகவும் போஜ்ஜங்க ஸம்யுத்தத்தின் பதினாறாவது ஸுத்தம் குறிப்பிடுகிறது.

பெருமான் சிறிது நோயுற்றிருந்ததாகவும், ஜீவக கௌமாரபிருத்தியன்

அவருக்குப் பேதி மருந்து கொடுத்ததாகவும் விநயபிடகத்தில் மகாவக்கம் கூறுகிறது. சுல்ல வக்கத்தில் தேவதத்தனுடைய கதை வருகிறது. அவன் கிருத்திரகூட மலையிலிருந்து ஒரு பெரிய கல்லை எடுத்துப் பெருமான்மீது எறிந்தான். அது பல துணுக்குகளாகச் சிதறி, ஒரு துணுக்குப் பெருமானின் காலில் பட்டது. அதனால் அவர் நோய்வாய்ப்பட்டார். தேவதத்தன் அவரைக் கொலை செய்துவிடுவானோ என்று அஞ்சிய சில பிட்சுக்கள், அவர் இருந்த இடத்தைச் சுற்றிக் காவல் புரியலாயினர். அவர்கள் அவர்கள் இங்குமங்கும் போவதைக் கண்ட பெருமான், "ஆனந்தா, இந்தப் பிட்சுக்கள் இங்கே ஏன் சுற்றுகிறார்கள்?" என்று கேட்டார். "பதந்ரே, தேவதத்தன் தங்கள் திருமேனிக்கு ஊறுவிளைவிக்கக் கூடாது என்று கருதியே இந்தப் பிட்சுக்கள் இங்கே காவல் காக்கிறார்கள்" என்று ஆனந்தன் விடை பகர்ந்தான்.

பெருமான் அவனிடம் சொல்லி அந்தப் பிட்சுக்களைத் தமதருகில் வருவித்து, "என் உடலுக்காக இவ்வளவு கவலைப்பட வேண்டிய தில்லை. என் சீடர்களைக் கொண்டு என்னைக் காத்துக் கொள்ளும் விருப்பம் எனக்கு இல்லை. ஆதலால் நீங்கள் இங்கே காவல் இருப்பதை விட்டு, உங்கள் தொழிலைச் செய்யுங்கள்" என்றார்.

விநயபிடகத்திலுள்ள இந்த வரலாறுகளுக்கு ஸுத்தபிடகத்தில் ஏதும் சான்று இல்லை. விரேசன மருந்து கொடுப்பது சாதாரண விஷயம். தேவதத்தனை மிகவும் இழிந்தவனாக நிலைநாட்டுவதற்கே இந்தக் கதை கற்பிக்கப்பட்டிருக்கலாம். இதை உண்மையென்று கொண்டாலும், அந்தப் புண்ணினால் பெருமான் நீண்ட நாள் நோயுற்று இருந்திருப்பார் என்று கருதுவதற்கு இல்லை. இத்தகைய சிறு நோய்கள் புறக்கணிப்பதற்கு உரியன. ஆதலால், பெருமான் புத்தரான பிறகு மொத்தத்தில் நல்ல உடல்நலம் வாய்ந்தவராகவே விளங்கினார் என்று கூறத் தடை இல்லை.

## ஆரோக்கியத்துக்குக் காரணம்

புத்தர்பிரானும் அவருடைய சீடர்களும் எல்லாச் சாதியினரும் கொடுத்த பிட்சையை ஏற்று, தினமும் ஒரு முறையே உண்பார்கள். இப்படி இருந்தும் அவர்கள் நல்ல உடல் நலமும் முகமலர்ச்சியும் பெற்று விளங்கினார்கள். இதற்குக் காரணம் யாவை என்பதை, கீழ்க்கண்ட கற்பனை உரையாடல் தெரிவிக்கிறது.

---

1. அப்பொழுது பெருமானின் உடல் நோயுற்றிருந்தது. இதை அறிந்தும் ஜீவகன் அவருக்கு விரேசன மருந்து கொடுத்து, உடல் நலமுறச் செய்தான். பிரத்தியோதன் அனுப்பிய ஆடைகள் இரண்டையும் அவன் பெருமானிடம் அர்ப்பித்தான். -பௌத்த சங்க வரலாறு, பக்.34.

"காட்டில் வாழ்கிறார்கள், பிரம்மசரியத்தைப் பயில்கிறார்கள், ஒரே முறை உண்கிறார்கள், இப்படி இருந்தும் துறவிகள் மேனி ஒளி வீச மகிழ்ச்சியோடு இருப்பது எங்ஙனம்?"

"அவர்கள் கடந்ததைப் பற்றிக் கவலைப்படுவதில்லை; வராத விஷயங்களைப்பற்றிப் பிதற்றுவதில்லை; நிகழ்காலத்தில் மகிழ்ச்சியாக வாழ்கிறார்கள். ஆதலால் அவர்கள் ஒளியோடு தெளிந்து இருக்கிறார்கள்."[1]

## இறுதி நோய்

புத்தர் பெருமானின் இறுதி நோயைப்பற்றி மகாபரிநிப்பான ஸுத்தம் விரித்துக் கூறுகிறது. அந்த மாரிக்காலத்துக்கு முன்பு, பெருமான் ராஜகிருகத்தில் இருந்தார். அங்கிருந்து பெரும் பிட்சு சங்கத்துடன் யாத்திரை செய்து வைசாலிக்கு வந்தார். அருகில் பேலுவம் என்ற ஊரில் அவர் மாரிவாசத்துக்காகத் தங்கினார். பிட்சுக்கள் தங்கள் வசதிக்கேற்ப வைசாலியின் மருங்கில் இருக்கலாம் என்று அவர் அனுமதி தந்தார். அந்த மாரிக்காலத்தில் பெருமான் கடுமையான நோய்க்கு இலக்கானார். ஆனால் அவர் தமது கடைப்பிடியைத் தளரவிடவில்லை. பிட்சு சங்கத்தைக் காணாமல் பரிநிர்வாணம் பெறுவது அவருக்குப் பொருத்தமாகத் தோன்றவில்லை. எனவே அவர் நோயைப் பொறுத்துக் கொண்டு தமது வாழ்நாளை நீடிக்கச் செய்தார். இந்த நோயினின்று பெருமான் நலம் பெற்றதும் ஆனந்தன் அவரிடம், "பதந்தரே, தாங்கள் நோயினின்று எழுந்ததைக் கண்டு நான் ஆறுதலடைகிறேன். தங்களுடைய இந்த நோயினால் என் உயிர் சோர்வுற்றது. எனக்கு ஒன்றுமே தோன்றவில்லை. தரும உபதேசத்தைக்கூட மறக்கலானேன். ஆயினும், பெருமான் பிட்சு சங்கத்துக்கு இறுதிச் செய்தியை அருளாமல் நிர்வாணமெய்த மாட்டார் என்ற நம்பிக்கை மட்டும் இருந்தது" என்றான்.

"ஆனந்தா, பிட்சு சங்கம் என்னிடமிருந்து எவற்றை அறிய விரும்புகிறது? என் தருமத்தை நான் வெளிப்படையாகச் சொல்லியிருக்கிறேன். அதில் மூடு மந்திரம் ஏதும் இல்லை. தான் பிட்சு சங்கத்துக்குத் தலைவனாக இருக்க வேண்டும் என்றும், பிட்சு சங்கம் தன்னைச் சார்ந்திருக்க வேண்டும் என்றும் எவன் கருதுகிறானோ அவனே பிட்சு சங்கத்துக்கு இறுதியான செய்தியைக் கூற முடியும். ஆனால் ஆனந்தா, தான் பிட்சு சங்கத்துக்குத் தலைவன் ஆகவேண்டுமென்றோ, பிட்சு சங்கம் தன்னையே சார்ந்திருக்க வேண்டுமென்றோ ததாகதன் விரும்பவில்லை. எனவே ததாகதன் இறுதியில் பிட்சு சங்கத்துக்கு என்ன சொல்லப் போகிறான்? ஆனந்தா, இப்போது நான் தளர்ந்து முதியவனாகிவிட்டேன்.

---

1 தேவதாஸம்யுத்தம், வக்கம் 1, ஸுத்தம் 10.

2. புத்தலீலாஸார ஸங்கிரகம், பக். 292 -312 காண்க.

எனக்குப் பிராயம் எண்பது ஆகிவிட்டது. ஒடிந்து முறிந்த கட்டைவண்டி, மூங்கிற்கழிகளை வைத்துக் கட்டுவதனால் ஏதோ ஒரு வகையாக நகருவதுபோல, என் உடல் ஒருவாறு இயங்குகிறது. நான் நிரோத சமாதியைப் பாவனை செய்யும்போது தான் என் உடலுக்குச் சிறிது நலம் தோன்றுகிறது. எனவே, ஆனந்தா, இனி நீங்கள் உங்களையே சார்ந்து இருங்கள். ஆன்மாவையே தீவு ஆக்கிக்கொள்ளுங்கள்; தருமத்தையே தீவு ஆக்கிக் கொள்ளுங்கள். ஆன்மாவையே புகலடையுங்கள்; தருமத்தையே புகலடையுங்கள்" என்று பெருமான் அருளினார்.

இந்த நிலையில் இருந்தும், பெருமான் பேலுவத்திலிருந்து வைசாலிக்கு எழுந்தருளினார். அங்கே அவர், ஆனந்தனை அனுப்பி, பிட்சு சங்கத்தை மகாவனத்தில் கூடாகாரசாலையில் திரட்டி, பல உபதேசங்களைச் செய்தார். பிறகு அவர் பிட்சு சங்கத்துடன் பாண்ட கிராமம், ஹஸ்தி கிராமம், ஆமிர கிராமம், ஜம்பு கிராமம், போக நகரம் முதலிய ஊர்களில் யாத்திரை செய்து கொண்டே, பாவா நகரத்துக்கு வந்து, சுந்தன் என்ற கொல்லனுடைய மாந்தோப்பில் தங்கினார். சுதந்தனுடைய வீட்டில் பெருமானுக்கும் பிட்சு சங்கத்துக்கும் பெருவிலிருந்துக்கு ஏற்பாடு ஆகியிருந்தது. சுந்தன் சமைத்திருந்த பட்சியங்களில் ஸூகரமத்தவம் என்ற பண்டமும் ஒன்று. (அதைப்பற்றிக் கடந்த அத்தியாயத்தில் விவரித்திருக்கிறேன்.) பெருமான் அதை உண்டதும் அதிசார நோய்க்கு இலக்கானார். ஆயினும் அவர் அதன் வேதனைகளைப் பொறுத்துக்கொண்டே, ககுத்தை, இரணியவதி என்ற இரண்டு ஆறுகளைத் தாண்டி, குஸிநாரா வரைக்கும் யாத்திரை செய்தார். அங்கு மல்லர்களின் சாலவனத்தில், அன்று இரவு கடையாமத்தில் புத்தர் பெருமான் பரிநிர்வாணம் எய்தினார்.

இவ்வாறாக, மிகுந்த அறிவைப் புகட்டுவதும் நன்மையை நல்குவதுமான பெருமானின் வாழ்க்கை முற்றுப் பெற்றது. ஆயினும் அந்த வாழ்க்கையின் நற்பயன்கள் வெவ்வேறு வடிவங்களில் இன்று வரைக்கும் நிலவி வருகின்றன; இனியும் அவை மாந்தரின் சரித்திரத்தில் நிலவிய வண்ணமே திகழும்.

## முற்றம்

## அநுபந்தம் 1

# கோதம புத்தருடைய சரித்திரத்தில் புகுந்த மகாபதான ஸுத்தப் பகுதிகள்

அபதானம் (அவதானம் என்பது சம்ஸ்கிருதம்) என்றால் நற்சரித்திரம். எனவே, மகாபதானம் என்றால் பெரியோர்களின் நற்சரித்திரங்கள். மகாபதான ஸுத்தத்தில், கோதம புத்தருக்கு முந்திய ஆறு புத்தர்களின் சரித்திரமும் கோதம புத்தருடைய சரித்திரமும் ஆரம்பத்தில் சுருக்கமாகவருகின்றன. கோதம புத்தருக்கு முன்பு விபஸ்ஸி, ஸிகி, வேஸ்ஸபு, ககுஸங்கர், கோணாகமனர், கஸ்ஸபர் என்ற ஆறு புத்தர்கள் இருந்தார்கள். இவர்களுள் முதல் மூவர் க்ஷத்திரியர்; மற்றவர் அந்தணர். இவர்களுடைய கோத்திரங்களும், ஆயுளின் அளவும், இவர்கள் எந்த மரங்களின் கீழ் அமர்ந்து புத்தர் ஆனார்களோ அந்த மரங்களின் பெயர்களும், இவர்களுடைய இரண்டு முக்கியச் சீடர்களின் வரலாறும், இவர்களுடைய சங்கத்தைச் சார்ந்த பிட்சுக்களின் எண்ணிக்கையும், இவர்களுடைய உபஸ்தாபகர் (அடியரான பிட்சுக்கள்) யாவர் என்பதும், தாய் தந்தையர் வரலாறும், அந்தக் காலத்து அரசன், அவனது தலைநகர் ஆகியவை பற்றிய விவரங்களும் இந்த ஸுத்தத்தில் தொடக்கத்தில் குறிக்கப் பெறுகின்றன. பிறகு விபஸ்ஸி புத்தரின் சரித்திரம் விரிவாக வந்துள்ளது. புராணமான அந்தச் சரித்திரத்தின் சில பகுதிகளை, கோதம புத்தரின் சரிதத்தில் இணைத்துவிட்டார்கள்; அந்தப் பகுதிகளின் சாரத்தை இங்கு வெளியிடுகிறேன்.[1]

### 1

பெருமான் கூறலானார்-

பிட்சுக்களே, இதற்கு முந்திய தொண்ணூற்றோராவது கற்பத்தில், அருகத் ஸம்யக் ஸம்புத்தரான விபஸ்ஸி பகவான் இந்த உலகில் பிறந்தார். அவர் சாதியில் க்ஷத்ரியர்; கௌண்டின்ய கோத்திரத்தைச் சார்ந்தவர். எண்பதினாயிரம் ஆண்டுகள் அவர் வாழ்ந்தார். பாடலி மரத்தின் அடியில் அவர் அபிஸம்புத்தரானார். கண்டனும் திஸ்ஸனும் அவருடைய முதல் சிராவகர்கள். அவருடைய சீடர்கள் மூன்று கூட்டமாக இருந்தார்கள். முதற் கூட்டத்தில் அறுபத்தெட்டு லட்சம் பிட்சுக்களும், இரண்டாவதில்

1. இந்த ஸுத்தங்கள் அனைத்தையும் மராட்டி மொழியில் சிந்தாமண் பைஜநாத் ராஜவாடே என்பவர் மொழிபெயர்த்திருக்கிறார். தீகநிகாயம், இரண்டாவது பாகத்தில் இந்தப் பகுதிகள் வருகின்றன.

ஒரு லட்சம் பிட்சுக்களும், மூன்றாவதில் எண்பது லட்சம் பிட்சுக்களும் இருந்தனர். இவர்கள் யாவரும் க்ஷீணாசிரவர்கள். அசோகன் என்ற பிட்சு அவருடைய முதல் உபஸ்தாபகன். அவருடைய தந்தை, பந்துமா என்ற அரசன்; தாய், பந்துமதி என்ற அரசி. அரசன் பந்துமாவின தலைநகரத்துக்குப் பந்துமதி என்று பெயர்.

## 2

1. பிட்சுக்களே, விபஸ்ஸி போதிசத்துவர் துஷித தேவலோகத்தினின்று நழுவி, நினைவும் விழிப்பும் வாய்ந்தவராக, தாயின் வயிற்றில் புகுந்தார். இது இங்கே இயற்கை நியதி (சுபாவ நியமம்).

2. பிட்சுக்களே, போதிசத்துவர் துஷித தேவலோகத்தினின்று நழுவித் தாயின் வயிற்றில் புகும்போது, தேவர்களும் மாரனும் பிரமனும் சிரமணர்களும் அந்தணர்களும் மாந்தரும் நிரம்பிய இவ்வுலகில், தேவர்களின் ஒளியையும் மங்கச் செய்கிற அளவற்ற பரந்த பேரொளி தோன்றுகிறது. வெவ்வேறு உலகங்களுக்கு இடையில், எப்போதுமே இருள் சூழ்ந்து கரியனவாகவும், மிகுந்த ஒளியும் மேன்மையுமுள்ள சந்திர சூரியர்களின் வெளிச்சம் படாதவையாகவுமுள்ள நாடுகளில்கூட, தேவர்களின் ஒளியையும் மங்கச் செய்கிற அளவற்ற பரந்த பேரெளி அப்பொழுது தோன்றுகிறது. அந்த நாட்டுப் பிராணிகள் அந்த ஒளியில் ஒன்றையொன்று கண்டு, தம்மைத் தவிர வேறு உயிர்களும் அங்கு இருப்பதை உணர்கின்றன. பதினாயிரம் உலகங்கள்யாவற்றிலும், தேவர்களின் ஒளியையும் மங்கச் செய்கிற அளவற்ற பரந்த பேரொளி தோன்றுகிறது. இது இயற்கை நியதி.

3. பிட்சுக்களே, போதிசத்துவர் தாயின் வயிற்றில் புகும்போது, அவருக்கும் அவருடைய தாய்க்கும் மனிதர்களாலோ அல்லாதவராலோ எவ்வகைத் துன்பமும் நேரலாகாது என்பது இயற்கை நியதி; ஆதலால் நான்கு தேவபுத்திரர்கள் அவர்களைக் காக்க நான்கு திசைகளிலும் இருக்கிறார்கள். இது இயற்கை நியதி.

4. பிட்சுக்களே, போதிசத்துவர் தாயின் வயிற்றில் புகும்போது, அவருடைய தாய் இயல்பாகவே நல்லொழுக்கமுடையவளாகிறாள்; உயிர்க்கொலை, திருட்டு, கற்பழித்தல், பொய் பேசுதல், மதுபானம் ஆகியவற்றிலிருந்து அவள் விடுபடுகிறாள். இது இயற்கை நியதி.

5. பிட்சுக்களே, போதிசத்துவர் தாயின் வயிற்றில் புகும்போது அவருடைய தாயின் உள்ளத்தில் காமவேட்கை எழுவதில்லை. எந்த ஆணும் காமமுற்ற நெஞ்சுடன் போதி சத்துவரின் தாயை மீற முடியாது. இது இயற்கை நியதி.

6. பிட்சுக்களே, போதிசத்துவர் தாயின் வயிற்றில் புகும்போது

"நானும் இவ்வாறே முதுமைத்தன்மை அடைபவன் தானா?"

"ஆம் அரசே, நாம் அனைவருமே முதுமைத்தன்மை அடைபவர்கள்."

"அப்படியானால் வலவ, இனிச் சோலைக்குச் செல்ல வேண்டாம். மீண்டும் அரண்மனைக்குப் போவோம்" என்றான் விபஸ்ஸி குமாரன்.

"உத்திரவு அரசே" என்று உரைத்து, வலவன் தேரை அந்தப்புரத்துக்குத் திருப்பினான். அங்கே விபஸ்ஸி குமாரன் துயரமும் கவலையுமுற்றவனாய், முதுமையை விளைக்கும் இந்தப் பிறவி கெடுக! என்று சிந்திக்கலானான்.

பந்துமா ராஜன் வலவனை அழைத்து, "நண்பா சாரதி, சோலையைக் கண்டு குமாரன் மனங்களித்தானா? அங்கு அவன் மகிழ்ந்தானா?" என்று கேட்டான்.

"இல்லை, அரசே" என்றான் வலவன்.

"ஏன்? சோலைக்குச் செல்லுகையில் அவன் என்ன பார்த்தான்?"

சாரதி நடந்த நிகழ்ச்சியைக் கூறினான். அப்போது பந்துமா ராஜன், குமாரன் துறவியாகாதபடி ஐம்புல இன்பங்களைப் பின்னும் பெருக்கினான். விபஸ்ஸி அந்த இன்பங்களில் ஆழ்ந்திருந்தான்.

பிட்சுக்களே, நூற்றுக்கணக்கான ஆயிரக்கணக்கான ஆண்டுகளுக்குப் பின்பு விபஸ்ஸி குமாரன் மீண்டும் சோலைக்குப் புறப்பட்டான். வழியில் அவன், நோயாளியாகி, நலிவுற்று வலியால் மிக வருந்தி, தன் மலமூத்திரத்திலேயே உழன்று, பிறரால் தூக்கப்பெற்று, பிறரல் உடை அணிவிக்கப்பெற்ற ஒருவனைக் கண்டான்; சாரதியை நோக்கி, "இவனுக்கு என்ன வந்துவிட்டது? இவன் கண்களும் குரலும் மற்றவர்களைப் போல இல்லையே!" என்றான்.

"இவன் நோயாளி" என்றான் வலவன்.

"நோயாளி என்றால் என்ன?"

"நோயாளி என்றால், இந்த நிலையில் அவன் முன்போல நடக்க இயலாது என்று பொருள்."

"நண்பனான வலவ, நானும் இவ்வாறே நோய்த்தன்மை பெறுபவனா?"

"அரசே, நாம் அனைவருமே நோய் பெறக் கூடியவர்கள்."

"அப்படியானால் இனிச் சோலைக்குச் செல்ல வேண்டாம்; அந்தப்புரத்துக்குத் தேரைத் திருப்பு" என்றான் விபஸ்ஸி.

வலவன் தேரை அந்தப்புரத்துக்குச் செலுத்தினான். அங்கே குமாரன் துயரமும் கவலையுமுற்றவனாய், நோயை விளைவிக்கும் இந்தப் பிறவி கெடுக! என்று சிந்திக்கலானான்.

சாரதியின் வாயிலாகப் பந்துமா ராஜனுக்கு இந்தச் செய்தி தெரிந்தது. அப்பொழுது அவன், குமாரன் அரசைத் துறந்து துறவேற்காதபடி, அவனுடைய இன்பத்துக்குரியவற்றைப் பின்னும் பெருக்கினான்.

பிட்சுக்களே, நூற்றுக்கணக்கான ஆயிரக்கணக்கான ஆண்டுகளுக்குப் பின்பு, விபஸ்ஸி குமாரன் முன்போலவே ஏற்பாடு செய்து சோலைக்குப் புறப்பட்டான். வழியில் அவன், மக்களின் பெருங்கூட்டமொன்று பலநிறத் துணிகளால் பல்லக்கைப் புனைவதைக் கண்டான்; சாரதியை நோக்கி, "இவர்கள் வகைவகை வண்ணமுள்ள துணிகளால் பல்லக்கை ஏன் புனைகிறார்கள்?" என்று கேட்டான்.

"அரசே, இங்கு ஒருவன் இறந்திருக்கிறான்; அவனுக்காக இந்தப் பல்லக்கு" என்றான் வலவன்.

"அப்படியானால் அந்த இறந்தவனரகில் தேரைச் செலுத்து" என்றான் விபஸ்ஸி.

வலவன் அங்ஙனமே தேரைச் செலுத்தினான். இறந்தவனைக் கண்ட விபஸ்ஸி, "நண்பனான வலவ, இறந்தவன் என்றால் என்ன?" என்று கேட்டான்.

"இனி அவன் தன் தாய் தந்தையர், உறவினர் ஆகியவர்களின் கண்ணுக்குப் புலப்பட மாட்டான்; அவனும் அவர்களைக் காண இயலாது."

"நண்பனான வலவ, நானும் இறக்கும் தன்மையுடையவனா? அரசர், அரசியார், மற்ற உறவினர்கள் ஆகியவர்களின் கண்ணுக்கு நான் புலப்பட மாட்டேனா? நான் அவர்களைக் காண இயலாதா?"

"இயலாது, அரசே."

"அப்படியாயின் இனிச் சோலைக்குச் செல்ல வேண்டாம்; அந்தப்புரத்துக்குத் தேரைத் திருப்பு" என்றான் விபஸ்ஸி.

வலவன் அங்ஙனமே அந்தப்புரத்துக்குத் தேரைச் செலுத்தினான். அங்கு விபஸ்ஸி குமாரன் துயரமும் கவலையு முற்றவனாய், மூப்பும் நோயும் இறப்பும் விளைக்கும் இந்தப் பிறவி கெடுக! என்று சிந்திக்கலானான்.

சாரதியின் வாயிலாகப் பந்துமா ராஜனுக்கு இந்தச் செய்தி தெரிந்தது. அப்பொழுது அவன் குமாரனுடைய இன்ப வசதிகளைப் பின்னும் பெருக்கினான். விபஸ்ஸி குமாரன் அந்த இன்பங்களில் ஆழ்ந்திருந்தான்.

பிட்சுக்களே, நூற்றுக்கணக்கான ஆயிரக்கணக்கான ஆண்டுகளுக்குப் பின்பு, மீண்டும் எல்லா ஏற்பாடுகளம் செய்து விபஸ்ஸி குமாரன் வலவனோடு சோலைக்குப் புறப்பட்டான். வழியில் அவன் ஒரு துறவியைக் கண்டான். சாரதியை நோக்கி, "இவன் யாவன்? இவனுடைய தலையும் ஆடையும் பிறரைப் போல இல்லையே?" என்று கேட்டான்.

"அரசே, இவன் துறவி" என்றான் வலவன்.

"துறவி என்றால் என்ன?"

"துறவி என்றால், அறவொழுக்கம் நல்லது, அனைத்தையும் சமமாகக் கருதி நடப்பது நல்லது, குசல வினை நல்லது. புண்ணியம் புரிவது

நல்லது, அஹிம்சை நல்லது, உயிர்களிடம் இரக்கம் கொள்வது நல்லது என்று கருதுகிறவன்."

"அப்படியானால் அவனருகில் தேரைச் செலுத்து" என்றான் விபஸ்ஸி.

வலவன் அங்ஙனமே துறவியின் அருகில் தேரை நிறுத்தினான். விபஸ்ஸி குமாரன் துறவியை நோக்கி, "நீ யார்? உன் தலையும் ஆடைகளும் பிறரைப் போல இல்லையே!" என்றான்.

"அரசே, நான் துறவி. அறவொழுக்கமும் சம நடத்தையும் குசல வினையும் புண்ணியச் செயலும் அஹிம்சையும் உயிர்களிடம் இரக்கமும் நல்லவை என்று நான் கருதுகிறேன்" என்று துறவி மொழிந்தான்.

"நல்லது", என்று கூறிய விபஸ்ஸி குமாரன் வலவனை நோக்கி, "நண்பனான வலவ, நீ தேரை ஓட்டிக்கொண்டு அந்தப்புரத்துக்குத் திரும்பிப் போ. நான் தலைமயிரையும் தாடி மீசைகளையும் மழித்துக் காவியுடை அணிந்து, இல்லத்தைத் துறந்தவனாக (அநாகாரிகனாக)ப் பிரவிரஜ்யை ஏற்கிறேன்" என்றான்.

வலவன் தேரை ஓட்டிக்கொண்டு அந்தப் புரத்தை நோக்கிச் சென்றான். ஆனால் விபஸ்ஸி குமாரனோ அங்கேயே துறவறமேற்றான்.

## 6

பிட்சுக்களே, விபஸ்ஸி போதிசத்துவர் தனிமையில் சிந்தித்த பொழுது, மக்கள் மிகவும் இரங்கத்தக்க தாழ்ந்த நிலையில் இருப்பதை உணர்ந்தார். அவர்கள் பிறக்கிறார்கள், மூப்பெய்துகிறார்கள், இறக்கிறார்கள்; மீண்டும் பிறக்கிறார்கள். ஆயினும் இந்தத் துன்பத்தினின்று எப்படி விடுபடுவது என்பதை அவர்கள் அறியவில்லை. அவர்கள் இதை எப்போது அறிவார்கள்?

பிட்சுக்களே, மூப்பும் மரணமும் எதனால் தோன்றுகின்றன என்று விபஸ்ஸி போதிசத்துவர் சிந்திக்கலானார். அப்பொழுது அவர் அறிவுணர்ச்சி பெற்று, பிறப்பு வந்தால் மூப்பும் மரணமும் வருகின்றன என்று உணர்ந்தார். ஆயின் பிறப்பு எதனால் வருகிறது? பவத்தினால் வருகிறது. பவம் (கருமத் தொகுதி) எதனால் வருகிறது? பவம் பற்றினாலும், பற்று வேட்கையினாலும், வேட்கை நுகர்வினாலும், நுகர்வு ஊறு என்னும் ஸ்பரிசத்தினாலும், ஊறு ஆறு வாயில்களாலும், ஆறு வாயில்கள் நாமரூபங்களாலும், நாமரூபங்கள் உணர்வினாலும் உண்டாகின்றன. இந்தக் காரண வரிசையை விபஸ்ஸி போதிசத்துவர் முறையே அறிந்தார். இதுபோலவே, பிறப்பு இல்லையெனில் மூப்பும் இறப்பும் இல்லை; பவம் இல்லையெனில் பிறப்பு இல்லை;......... உணர்வு இல்லையெனில் நாமரூபங்கள் இல்லை என்பதையும் அவர் அறிந்தார். இதனால் அவர் மனத்தில் அறநோக்கமும் அறவறிவும் ஞான நிறைவும் கல்வியும் ஒளியும் தோன்றின.

## 7

பிட்சுக்களே, அருகரும் ஸம்யக் ஸ்ம்புத்தருமான விபஸ்ஸிப் பெருமான் அறவுரையாற்ற எண்ணினார். ஆனால், ஆழ்ந்ததும், காண்பதற்கு அரியதும், விளங்குவதற்குக் கடினமானதும், அமைதியுடையதும், இயற்றப்பெற்றதும், தருக்கத்தினால் அறிய இயலாததும், வல்லமை வாய்ந்ததும், புலவர்களே அறியக் கூடியதுமான இந்தத் தருமத்தை நான் பெற்றிருக்கிறேன். ஆயினும், கேளிக்கையில் ஆழ்ந்து சிற்றின்பத்தை நுகரும் இந்த மக்கள், காரணவரிசையான பிரதீத்யசமுத்பாதத்தை அறிவது அருமை. செய்கைகள் அனைத்தையும் அடக்கி, உபாதிகள் அனைத்தையும் விடுத்து, வேட்கையை அழித்து, விராகமும் நிரோதமும் நிர்வாணமும் எய்துவது இவர்களுக்குச் சாத்தியம் அன்று. நான் தருமோபதேசம் செய்து அது இவர்களுக்குச் சாத்தியம் அன்று. நான் தருமோபதேசம் செய்து அது இவர்களுக்கு விளங்காவிட்டால் எனக்குத்தான் இன்னல், தொல்லை என்று அவருக்குத் தோன்றிற்று.

பிட்சுக்களே, முன்பு ஒருபொழுதும் கேள்வியுறாத இந்தக் காதைகள் விபஸ்ஸிப் பெருமானின் உள்ளத்தில் திடீரெனத் தோன்றின-

"நான் முயன்று பெற்றதைப் பிறருக்கு உரைக்கலாகாது. விரும்பும் வெறுப்பும் நிறைந்தோருக்கு இவ்வறம் எளிதில் விளங்காது. வெள்ளத்தை எதிர்த்துச் செல்கிற, வன்மை வாய்ந்த, ஆழ்ந்த, காண்பதற்கு அரிய, அணுவடிவான இந்தத் தருமம் இருள் சூழ்ந்த காமியருக்குப் புலப்படாது."

பிட்சுக்களே, அருகரும் ஸம்யக் ஸம்புத்தருமான விபஸ்ஸிப் பெருமான் இவ்வாறு எண்ணி, அறவுரையாற்றுவதில் ஈடுபடாமல், தனிமையில் இருக்க முனைந்தார். அவருடைய இந்த எண்ணத்தை அறிந்த மகாப்பிரம்மா, தன் மனத்துள், அடடா, உலகம் அழிகிறதே; பேரழிவு எய்துகிறதே! ஏனெனில், அருகரான ஸம்யக் ஸம்புத்தரான விபஸ்ஸிப் பெருமானின் உள்ளம் அறவுரையாற்ற முனையாமல் தனிமையில் வாழ முனைகிறதே! என்று கூறிக்கொண்டான்.

எனவே பிட்சுக்களே, வலிமையாளன் ஒருவன் மடக்கிய தன் கையை நீட்டுவது போலவும் நீட்டிய கையை மடக்குவது போலவும் அவ்வளவு வேகத்தோடு மகாப்பிரம்மா பிரமலோகத்தினின்று மறைந்து விபஸ்ஸிப் பெருமானின் எதிரே தோன்றி, தன் மேலாடையை ஒரு தோளில் வைத்துக் கொண்டு, வல முழங்காலை மண்டியிட்டு கைகுவித்து "பெருமானே தருமத்தை உறையுங்கள். சுகதரே, தருமத்தை உரையுங்கள். கண்ணில் தூசு படியாத பல உயிர்கள் இருக்கின்றன. அவை தருமத்தை கேட்கப்பெறாமல் அழிகின்றன. இவ்வாறு தருமத்தை அறிபவர்கள் தங்களுக்குக் கிடைப்பார்கள்" என்று வேண்டினான்.

விபஸ்ஸிப் பெருமான் தம் உள்ளக்கருத்தை மூன்று முறை வெளியிட்டார்; பிரமனும் மூன்று முறை இவ்வாறே அவரை வேண்டினான். அப்போது பெருமான் பிராமனுடைய வேண்டுகோளுக்கு இணங்கி, உயிர்களிடம் இரக்கங் கொண்டு, அறிவு விழிகளால் உலகை நோக்கினார். அப்பொழுது அவருக்கு, கண்களில் தூசு குறைவாகப் படிந்தவையும் நிறையப் படிந்தவையும், கூர்மையான பொறிகள் வாய்ந்தவையும் மென்மையான பொறிகள் வாய்ந்தவையும், நல்வடிவமுள்ளவையும் தீய வடிவமுள்ளவையும், அறிவூட்டுவதற்கு எளியவையும் கடினமானவையுமான உயிர்களும், மறுமையிலும் தீமைகளிலும் அச்சம் கொள்பவையான சில உயிர்களும் புலப்பட்டன. தாமரைக் குளத்தில் சில தாமரைகள் நீருக்குள் அழுந்தியும், சில நீர் மட்டத்துக்கு வந்தும், சில நீருக்கு மேல் எழுந்து நீருடன் ஒட்டாமலும் இருப்பதுபோல, பல்வேறு வகையான பிராணிகளை விபஸ்ஸிப் பெருமான் கண்டார்.

பிட்சுக்களே, விபஸ்ஸிப் பெருமானின் கருத்தை அறிந்த பிரமன் பின்வரும் காதைகளைக் கூறினான்-

"பெரிய மலைமேல் மலையுச்சியில் நின்று அக்கம்பக்கத்திலுள்ள மக்களைப் பார்ப்பது போல, சுமேதரே, அறமென்னும் மாளிகைமீது ஏறி நாற்புறமும் நோக்கும் தாங்கள் துன்பமற்றவராய், பிறப்பிலும் மூப்பிலும் நலியும் மக்களைப் பாருங்கள்.

"வீரரே, எழுக. தாங்கள் போரில் வென்றீர்கள். கடன் தீர்ந்த பெருவணிகராக விளங்குகிறீர்கள். ஆதலால் உலகில் பயணம் செய்யுங்கள்.

"பெருமானே, தருமோபதேசம் செய்யுங்கள். அறிந்து கொள்வோர் கட்டாயம் இருப்பார்கள்."

பிட்சுக்களே, அருகரும் ஸம்யக் ஸம்புத்தருமான விபஸ்ஸிப் பெருமான் பிரமனுக்குத் தந்த மறுமொழியாவது-

"அவர்கள் பொருட்டு அமரத்தன்மைக்கு உரிய வாயில்கள் திறந்திருக்கின்றன. கேட்க விருப்பமுள்ளவர்கள் பாவனை கொள்க.

"பிரமனே, தொல்லை நேரும் என்பதனால் நான், உயர்ந்தோர் இயற்றிய தருமத்தை மக்களுக்கு உபதேசிக்காமல் இருந்தேன்."

பிட்சுக்களே, விபஸ்ஸிப் பெருமான் அறவுரையாற்ற உறுதி கூறியதை அறிந்த மகாப்பிரம்மா, அவரைப் பணிந்து வலம் வந்து அங்கேயே மறைந்தான்.

★ ★ ★

இந்த ஏழு பகுதிகளுள், மூன்றாவது பகுதி முதலில் தோன்றியிருத்தல் வேண்டும். ஏனெனில், திரிபிடகத்தில் மிகப் பழமையான ஸுத்த நிபாதம் என்ற நூலில் ஸேல ஸுத்தத்தில் இது இடம் பெற்றுள்ளது. இதே ஸுத்தம் மஜ்ஜிமநிகாயத்தில் (92) வருகிறது. அதற்கு முந்திய (91-ஆவது) பிரஹ்மயு ஸுத்தத்திலும், தீகநிகாயத்திலுள்ள அம்பட்ட ஸுத்தத்திலுங்கூட இது குறிக்கப் பெறுகிறது. புத்தர் காலத்து அந்தணர்கள் இந்த இலக்கணங்களுக்கு மிகப் பெருமை தந்தார்கள். எனவே புத்தரின் உடலிலும் இந்த இலக்கணங்கள் யாவும் இருந்தன என்று காண்பிக்கும் நோக்கத்துடன், இந்த ஸுத்தங்கள் புத்தர் காலத்துக்குப் பின் இரண்டொரு நூற்றாண்டுகள் கழித்துத் தோன்றியிருக்கும். பிறகு இவை மகாபதான ஸுத்தத்தில் புகுந்தன. கோதம போதிசத்துவர் புத்தரான பிறகு அந்தணப் புலவர்கள் அவருடைய இலக்கணங்களைக் காண்பார்கள். ஆனால் இந்த ஸுத்தத்தில், விபஸ்ஸி குமாரனுடைய இலக்கணங்களை அவன் பிறந்ததுமே விரைவில் பார்த்ததாகக் கூறியிருக்கிறார்கள். இதனால் பொருத்தமற்ற ஒரு பெரிய மாறுபாடு தோன்றியிருக்கிறது. அதாவது- அவனுக்கு நாற்பது பற்கள் இருக்கின்றன, அவை நேராக இருக்கின்றன, அவை துளைகளின்றி நிலைத்திருக்கின்றன, அவனுடைய தாடி வெளுத்திருக்கிறது என்ற நான்கு இலக்கணங்கள் அப்படியே இதில் அமைந்துவிட்டன. பிறந்தவுடனே குழந்தைக்குப் பல் இருப்பதில்லை என்ற நினைவுகூட இந்த ஸுத்தம் இயற்றியவருக்கு இல்லை!

பின்பு இரண்டாவது பகுதி தோன்றியிருத்தல் வேண்டும். இதில் கூறியுள்ள இயற்கை நியதிகள், மஜ்ஜிமநிகாயத்தில் அச்சரிய அப்புததம்ம ஸுத்தத்தில் (123) காண்கின்றன. போதிசத்துவருக்குத் தனிப்பெருமை உண்டாக்கவே இவை இயற்றப்பெற்றன. இவற்றுள், அவருடைய தாய் நின்றிருக்கையில் மகவை ஈன்றாள் என்பதும், அவர் பிறந்த ஏழாவது நாள் அவள் காலமானால் என்பதும் ஆகிய இரண்டு நிகழ்ச்சிகள் உண்மையாகவே நடந்திருக்கக் கூடும். மற்றவை யாவும் கவியின் கற்பனையில் தோன்றியவை.

இதற்குப் பிறகோ அல்லது இதற்குச் சற்று முன் பின்னான காலத்திலோ ஏழாவது பகுதி தோன்றியிருக்கலாம். மஜ்ஜிமநிகாயத்தில் அரியபரியேஸன ஸுத்தத்திலும், நிதானவக்க ஸம்யுத்தத்திலும் (6-1), மகாவக்கத்தின் தொடக்கத்திலும் இது வருகிறது. பிரமன் வேண்டிக் கொண்டதனால் புத்தர் தருமோபதேசம் செய்யலானார் என்பதைக் குறிக்க இந்த பகுதியை இயற்றினார்கள். மைத்திரி, கருணை, முதிதை, உபேட்சை என்னும் நான்கு உயர்ந்த பண்புகளை உருவகமாக்கிக் கூறும் வரலாறு இது என்பதை நான், புத்தரும் தருமமும் சங்கமும் என்ற நூலின் முதல் அத்தியாயத்தில் விளக்கியிருக்கிறேன்.

இதற்குப் பின்பு, மூன்று அரண்மனைகளைப் பற்றிக் குறிப்பிடும்

நான்காவது பகுதி தோன்றியிருத்தல் வேண்டும். அங்குத்தரநிகாயத்தில் திகநிபாதத்திலும் (ஸுத்தம் 38), மஜ்ஜிமநிகாயத்தில் மாகந்திய ஸுத்தத்திலும் (75) இது குறிக்கப்பெறுகிறது. முதல் மேற்கோளில், நான் தந்தையின் வீட்டில் இருந்தபோது நான் வாழ்வதற்கு மூன்று அரண்மனைகள் இருந்தன என்ற குறிப்பு வருகிறது. ஆனால் இரண்டாவது மேற்கோளில், 'இளமையில் நான் மூன்று அரண்மனைகளில் வாழ்ந்தேன்' என்ற செய்தி இருக்கிறதே தவிர, தந்தையைப் பற்றிய குறிப்பு இல்லை. சாக்கிய அரசர்கள் வஜ்ஜிகளைப் போல செல்வர்கள் அல்ல மேலும் வஜ்ஜிகளங்குமரர் கூட இத்தகைய கேளிக்கையால் வாழ்ந்ததாக எங்கும் சான்று இல்லை. இதற்கு நேர்மாறாக அவர்கள் மிக எளிய முறையில் வாழ்ந்து, கேளிக்கையை அறவே பொருட்படுத்தாமல் இருந்தனர் என்று ஓபம்ம ஸம்யுத்தம் (வக்கம் 1, ஸுத்தம் 5) வருணிக்கின்றது. பெருமான் கூறுவதாவது- "பிட்சுக்களே, இப்பொழுது லிச்சவிகள் மரத் துணுக்குகளைத் தலையணையாகக் கொள்கிறார்கள்; மிகுந்த கவனத்தோடும் உற்சாகத்தோடும் கவாயத்துப் பழகுகிறார்கள். ஆதலால் மகத மன்னனான அஜாதசத்துரு இவர்களோடு பொர முடியவில்லை. ஆனால் பிற்காலத்தில் லிச்சவிகள் மெல்லியராவர்; அவர்களின் கை கால்கள் மிருதுவாகிவிடும். அவர்கள் மெத்தென்ற பஞ்சணையில் பூப்போன்ற தலையணையில் தூங்குவார்கள். அப்பொழுது அஜாதசத்துரு அவர்களைத் தாக்கும் வல்லமை பெறுவான்."

செல்வம் நிரம்பிய குழு அரசர்களான வஜ்ஜிகளே இவ்வளவு விழிப்போடு வாழ்ந்தார்கள் என்றால், அவர்களை விட மிகவும் ஏழைகளான சாக்கிய அரசர்கள் பெரிய பெரிய மாளிகைகளில் கேளிக்கையோடு வாழ்வது அறவே நிகழக் கூடியதன்று. சுத்தோதனன் தானே பயிர்த் தொழில் செய்ய வேண்டி இருந்தது என்னும்போது, அவன் தன் மகனுக்கு மூன்று மாளிகைகளை எப்படிக் கட்டித்தர முடியும்? எனவே, இந்த மாளிகைகளைப் பற்றிய கற்பனை, புத்தர் சரித்திரத்தில் பிற்காலத்தில் நுழைந்தது என்பதில் ஐயமில்லை. இதை மகாபதான ஸுத்தத்திலிருந்து எடுத்துக் கொண்டார்களா, அல்லது எவனாயினும் ஒரு பக்தன்தானாக இதை இயற்றிப் புத்த சரிதத்தில் சேர்த்தானா என்பதைத் தீர்மானமாகக் கூற இயலாது.

மேற்குறித்த ஆறாவது பகுதியும், நிதானவக்க ஸம்யுத்தத்தில் 4முதல் 6வரையுள்ள ஸுத்தங்களும் ஒரே மாதிரி இருக்கின்றன. எனவே, இந்த மகாபதான ஸுத்தத்தினின்று தான் அந்த ஸுத்தங்களை எடுத்துக் கொண்டிருக்கிறார்கள் என்று தெரிகிறது. கோதம புத்தரும் முந்திய ஆறு புத்தர்களும் சிந்தனையின்போது இந்தப் பிரதீத்ய சமுத்பாதமாகிய காரண வரிசை தோன்றியது போலவே, கோதமருக்கும் போதிசத்துவ

நிலையிலேயே இது புலப்பட்டது என்று நிதானஸம்யுத்தத்தின் பத்தாவது ஸுத்தம் வருணிக்கிறது. ஆனால் மகாவக்கத்தின் தொடக்கத்திலேயே, கோதமர் புத்தரான பிறகு இந்தக் காரண வரிசையைக் கருத்தில் கொண்டார் என்ற குறிப்பைக் காணலாம். இந்தப் பிரதீத்ய சமுத்பாதத்தை, கோதம புத்தருடைய பரிநிர்வாணத்துக்குப் பிறகு இரண்டொரு நூற்றாண்டுகள் கழித்து, அவருக்குப் பெருமை தருவதற்காக எழுதிப் புத்த சரிகத்தில் நுழைத்திருப்பார்கள் என்று தோன்றுகிறது. நாளடைவில் புத்த சரிதத்தில் இதற்குத் தனிப் பெருமை வந்து விட்டது. இதன் பயனாக, நான்கு ஆரிய சத்தியங்களைப் பற்றிய எளிய தத்துவஞானம் பின்னடைந்து, இந்தக் கடுமையான தத்துவத்துக்குத் தேவையற்ற பெருமை கிடைத்தது.

சோலைக்குச் செல்லும் வரலாற்றைக் கூறும் ஐந்தாவது பகுதி, திரிபிடக இலக்கியத்தில் கோதம புத்தருடைய சரித்திரத்தில் இடம் பெறவில்லை. இது லலிதவிஸ்தரம், புத்த சரித்திரம், ஜாதகத்து நிதானகதை ஆகியவற்றிலிருந்து அப்படியேயோ சிறிது மிகையுடனோ எடுத்துக் கொள்ளப் பெற்றது. இவற்றுள் கடைசிப் புத்தகம், போதிசத்துவர் மகாபதானத்தில் குறிப்பிட்டுள்ள படி சாரதியை வினவியதாகக் கூறுகிறது. எனவே இந்த நூலாசிரியர்கள் யாவரும் இந்த வரலாற்றை மகாபதானத்திலிருந்து எடுத்துக் கொண்டனர் என்பது தேற்றம்.

முதற்பகுதியில் கூறியவாறு கோதம புத்தருடைய முதன்மையான சிராவகர்கள் முதலியவர்களின் பெயர்கள் இந்த மகாபதான ஸுத்தத்தின் தொடக்கத்திலேயே வருகின்றன. கோதம புத்தர் க்ஷத்திரியர் ஆதலால் அவருடைய தந்தையின் தலைநகரம் கபிலவஸ்து என்று இந்த ஸுத்தம் கூறுகிறது. தவிர, அவர் கோதம கோத்திரத்தைச் சார்ந்தவர் என்றும் குறிக்கிறது. இதைப்பற்றி நான் நான்காவது அத்தியாயத்தில் ஆராய்ந்து, சுத்தோதன சாக்கியன் கபிலவஸ்துவில் எப்பொழுதுமே இருந்ததில்லை என்று நிறுவியிருக்கிறேன். சாக்கியர் ஆதித்திய கோத்திரத்தை சார்ந்தவர்கள் சாக்கியர் என்ற பெயராலேயே அவர்களைச் சிறப்பாக அழைத்து வந்தனர். அப்படி இல்லையென்றால், புத்த பிட்சுக்களுக்குச் சாக்கிய புத்திரர்களான சிரமணர்கள் என்ற குழுஉப் பெயர் கிடைத்திராது. புத்தர் கோதம கோத்திரத்தைச் சார்ந்தவராக இருந்திருப்பின், அவரைக் கோதமர் என்றோ கோதமக் சிரமணர் என்றோ அழைத்திருப்பார்கள்.

அநுபந்தம்-2

# வஜ்ஜிகளின் முன்னேற்றத்துக்குரிய ஏழு நியமங்கள்

புத்தர்பெருமான் ராஜகிருகத்தில் கிருத்திரகூட மலையில் இருந்தார். அப்பொழுது மன்னன் அஜாதசத்துரு வஜ்ஜிகளின்மேல் படையெடுக்கத் திட்டமிட்டான். இது பற்றிப் புத்தரின் கருத்து யாது என்பதை அறிய, அவன் தன் அந்தண அமைச்சனான வஸ்ஸகாரனைப் பெருமானிடம் அனுப்பினான். அந்த அமைச்சன், மன்னனுடைய திட்டத்தைப் பெருமானுக்கு தெரிவித்தான். அப்பொழுது ஆனந்தன் பெருமானுக்கு விசிறி வீசிக்கொண்டிருந்தான். பெருமான் அவன் பக்கமாகத் திரும்பி, "ஆனந்தா, வஜ்ஜிகள் அடிக்கடி சபை கூட்டி ஒன்று சேருகிறார்கள் என்பதைக் கேள்வியுற்றிருக்கிறாயா?" என்று கேட்டார்.

"ஆம், பதந்தரே, வஜ்ஜிகள் அடிக்கடி சபை கூட்டி ஒன்று சேருவதை நான் கேள்வியுற்றிருக்கிறேன்" என்றான் ஆனந்தன்.

"வஜ்ஜிகள் அனைவரும் ஒன்றுசேர்ந்து, அனைவரும் ஒருங்கே எழுந்து, அனைவரும் ஒன்றாக வேலை செய்கிறார்களா?"

"ஆம், பதந்தரே. இவ்வாறே நான் கேள்வியுற்றிருக்கிறேன்."

"வஜ்ஜிகள் தாங்கள் விதிக்காத சட்டத்தை விதித்திருப்பதாகச் சொல்ல வில்லையே? அல்லது, விதித்துள்ள சட்டத்தை மீறுவதில்லையே? வஜ்ஜிகளின் சட்டத்துக்கு இணங்கி அவர்கள் நடந்து கொள்கிறார்களா?"

"ஆம், பதந்தரே. வஜ்ஜிகள் சட்டப்படி நடந்து கொள்வதாக நான் கேள்வியுற்றிருக்கிறேன்."

"முதியோர்களான அரசியலறிஞர்களுக்கு வஜ்ஜிகள் மதிப்புக் கொடுக்கிறார்களா? அவர்களின் ஆலோசனையை ஏற்றுக் கொள்கிறார்களா?"

"ஆம், பதந்தரே. வஜ்ஜிகள் முதியோர்களான அரசியலறிஞர்களுக்கு மதிப்பு வைத்து, அவர்களின் பேச்சைக் கேட்கிறார்கள்."

"அவர்கள் தங்கள் இராச்சியத்திலுள்ள மணமான பெண்களையோ மணமாகாத பெண்களையோ வலியுறுத்துவதில்லையே?"

"பதந்தரே, வஜ்ஜிகளின் இராச்சியத்தில் பெண்களை வலியுறுத்துவார் இல்லை என்று நான் கேள்வியுற்றிருக்கிறேன்."

"வஜ்ஜிகள் தங்கள் நகரத்திலும் அதற்குப் புறம்புமுள்ள கோயில் களைத் தக்கபடி காக்கிறார்களா?"

"அவர்கள் தங்கள் கோயில்களைப் பற்றித் தக்க அக்கறை எடுத்துக் கொள்வதாக நான் கேள்வியுற்றிருக்கிறேன்."

"தங்கள் இராச்சியத்தில் வந்துள்ள அருகர் சுகமாக வாழவும், வராத அருகர் அங்கு வருவதற்கு விரும்பவும் எவ்வகை இடையூறும் நேராதவாறு வஜ்ஜிகள் ஏற்பாடு செய்துள்ளனர் அல்லவா?"

"ஆம், பதந்தரே. அருகருக்கு இடையூறு நேரலாகாது என்பதில் வஜ்ஜிகள் அக்கறை கொண்டுள்ளதாக நான் கேள்வியுற்றிருக்கிறேன்" என்றான் ஆனந்தன்.

அப்பொழுது பெருமான், அமைச்சனான வஸ்ஸகாரனை நோக்கி, "அந்தணரே, ஒரு காலத்தில் நான் வைசாலியில் இருந்தபொழுது, முன்னேற்றத்துக்கான இந்த ஏழு நியமங்களை வஜ்ஜிகளுக்கு உபதேசித்தேன். வஜ்ஜிகள் இந்த நியமங்களைப் பின்பற்றும் வரையில் அவர்களுக்கு முன்னேற்றமே உண்டாகும்; தாழ்வு நேராது" என்றார்.

வஸ்ஸகாரன், "கோதமரே, இவற்றுள் ஒரு நியமத்தைப் பின்பற்றினாலும் வஜ்ஜிகளுக்கு முன்னேற்றம் உண்டாகும்; தாழ்வு நேராது. எனவே, இந்த ஏழு நியமங்களையும் பின்பற்றினால் அவர்கள் முன்னேறுவர் என்பதைச் சொல்லவே தேவையில்லை" என்றான்.

## ஏழு நியமங்களைப் பற்றிய உரை

இந்த ஏழு நியமங்களைப் பற்றிப் புத்தகோஷாசாரியர் இயற்றிய அட்டகதையின் சாரமாவது-

*1. அடிக்கடி ஒன்று கூடுகிறார்கள்: நேற்றுச் சந்தித்தோம், முந்தநாளும் சந்தித்தோம், எனவே இன்று கூட்டம் எதற்கு? என்று சொல்லாமல் அவர்கள் ஒன்று கூடுகிறார்கள். இப்படிக் கூடாவிட்டால், நாற்புறத்திலிருந்தும் வந்துள்ள செய்திகளை அவர்கள் அறிய இயலாது; இன்ன ஊர் அல்லது நகரத்தின் எல்லையைப்பற்றி விவாதம் எழுந்துள்ளது, அல்லது திருடர்கள் கலகம் செய்கிறார்கள் என்பவை போன்ற செய்திகள் அவர்களின் கவனத்துக்கு வர மாட்டா. அரசாட்சியினர் அஜாக்கிரதையாக இருப்பதை அறிந்து திருடர்களும் கொள்ளையடிப்பார்கள். இவ்வாறு ஆட்சியினருக்குத் தீங்கு நேருகிறது. அடிக்கடி ஒன்று கூடுவதனால் எல்லாச் செய்திகளும் உடனே தெரிகின்றன. படையை அனுப்பிப் பாதுகாப்புச் செய்து கொள்ள முடியும். ஆட்சியினர் விழிப்போடு இருப்பதை அறிந்து திருடர்களும் கூட்டமாக இருக்க மாட்டார்கள்; தங்கள் கூட்டத்தைக் கலைத்து ஓடிவிடுவார்கள். இவ்வாறு ஆட்சியினருக்கு நன்மை உண்டாகிறது.*

*2. அனைவரும் ஒன்று சேருகிறார்கள் முதலியன: இன்று ஏதோ வேலை இருக்கிறது அல்லது நற்காரியம் இருக்கிறது என்று சாக்குப்போக்குச் சொல்லாமல், கூட்டத்துக்காக அழைக்கும் முரசொலி காதில் விழுந்ததுமே அனைவரும் ஒன்று சேருகிறார்கள். ஒன்று*

சேர்ந்தபின், சிந்தித்து எல்லாச் செயல்களையும் நிறைவேற்றாமல் அவர்கள் சென்றார்களாயின், அனைவரும் ஒருங்கே எழுகிறார்கள் என்று சொல்ல இயலாது. அப்படியன்றி இவர்கள் எல்லாச் செயல்களையும் முடித்துக் கொண்டு ஒருங்கே எழுகிறார்கள். அனைவரும் ஒன்றாக வேலை செய்கிறார்கள் என்றால், ஓர் அரசனுக்கு ஏதாயினும் இடுக்கண் நேர்ந்தால் மற்ற அரசர்கள் அனைவரும் அவனுக்கு உதவச் செல்கிறார்கள்; அல்லது வேற்றுநாட்டு விருந்தினர் யாராவது வந்தால் அவரை வரவேற்று உபசரிக்க அனைவருமே வருகிறார்கள் என்று பொருள்.

**3. விதிக்காத சட்டத்தை முதலியன:** அதாவது, ஏற்கனவே தீர்மானிக்காத சுங்கம், வரி முதலியவற்றைப் பெற்றுக்கொள்வதில்லை; முன்பு முடிவு கட்டியபடியே வரி தண்டுகிறார்கள். விதித்த சட்டத்தை மீறுவதில்லை; சட்டத்தைப் பின்பற்றி நடந்து கொள்கிறார்கள். அதாவது, திருடன் என்று எவனையாவது பிடித்துக் கொணர்ந்தால், அவனை விசாரணை செய்யாமல் தண்டிப்பதில்லை; ஆட்சியினர் இப்படி நடந்து கொள்ளாவிட்டால் மக்கள் துன்புறுவர்; அவர்கள் எல்லைப்புறத்தில் சென்று தாமே புரட்சியாளர் ஆவார்கள்; அல்லது புரட்சிக்காரர்களின் கூட்டத்தில் சேர்ந்து, நாட்டைத் தாக்குவார்கள். இதனால் ஆட்சியினருக்குத் தீங்கு நேருகிறது. சட்டப்படி நடந்து கொண்டால், குறித்த காலத்தில் வரி இறுக்கப் பெறுகிறது. பொக்கிஷம் வளருகிறது; அதனால் இராணுவச் செலவும் அரசாங்கத்து மற்றச் செலவுகளும் ஒழுங்காக நடைபெறுகின்றன.

வஜ்ஜிகளின் சட்டம் யாதெனில், திருடன் என்று ஒருவனைப் பிடித்துவந்தால், வஜ்ஜி அரசர்கள் அவனை ஒரேயடியாகத் தண்டிக்காமல், விசாரணைப் பேரமைச்சர்களிடம் (விநிச்சய மகாமாத்தியரிடம்) அவனை ஒப்படைப்பார்கள். அந்த அதிகாரிகள், அவன் திருடனா அல்லனா என்பதை நன்கு விசாரணை செய்து, அவன் திருடனல்ல என்றால் விட்டுவிடுவர்; திருடனாக இருந்தால், தாம் எவ்வகைத் தீர்மானமும் சொல்லாமல் வழக்கறிஞரிடம் (வியாவகாரிகர்) ஒப்படைப்பர். அவர்களும் இவ்விதமே விசாரித்து, திருடன் அல்லாவிடில் அவனை விட்டுவிடுவர்; திருடனாக இருந்தால் அந்தக் காரிகர் என்ற அதிகாரியிடம் ஒப்படைப்பர் அவர்களும் இங்ஙனமே விசாரித்து திருடன் அல்லாதவனை விடுவிப்பர். திருடனாக இருந்தால் அஷ்டகுலிகரிடம் ஒப்படைப்பர். அவர்களும் முன்போலவே விசாரித்துத் திருடன் என்று தீர்மானித்தால் படைத் தலைவனிடம் ஒப்படைப்பர். படைத் தலைவன் துணையரசனிடமும், துணையரசன் அரசனிடமும் திருடனை ஒப்படைப்பர். திருடன் இல்லையேல் அரசன் அவனை விடுவிப்பான்; திருடன் என்று முடிவானால், பிரவேணி புத்தகம் என்ற சட்ட நூலைப் படிக்கச் சொல்லுவான். அந்த நூலில் இன்ன குற்றத்துக்கு

இன்ன தண்டனை என்று எழுதியிருக்கும். அதன்படி அரசன் அந்தத் திருடனைத் தண்டிப்பான். பழமையான வஜ்ஜிகளின் சட்டம் இது.

4. ஆட்சியினர் தமது நாட்டிலுள்ள முதியோர்களான அரசியலறிஞர்களை மதித்து அடிக்கடி கலந்துகொள்ளாவிட்டால் அவர்களின் ஆலோசனை கிடைக்காது; அதனால் ஆட்சியினருக்குத் தீங்கு நேரும். ஆனால் பெரியோர்களின் ஆலோசனையைக் கேட்பவர்களுக்கு இன்ன சமயத்தில் இன்னவாறு நடந்துகொள்ள வேண்டும் என்பது நன்கு தெரியும்; அதனால் அவர்களுக்கு நன்மை உண்டாகிறது.

5. மணமான பெண்களையோ மணமாகாத பெண்களையோ வலியுறுத்தினால் நாட்டு மக்கள் கொதித்தெழுவர். நாம் வளர்த்துப் பெரியவர்களாக்கிய பெண்களை இந்த ஆட்சியினர் வலியத் தங்கள் வீட்டில் கொண்டு வைத்துக் கொள்கிறார்களே என்று கூறி, அவர்கள் எல்லைப்புறத்தில் சென்று தாமே புரட்சி செய்வர்; அல்லது, வேறு புரட்சியாளர்களோடு சேர்ந்து நாட்டைத் தாக்குவர். பெண்களை வற்புறுத்தாமல், ஆட்சியினர் அவர்களுக்குப் பாதுகாப்புத் தந்தால், மக்கள் கவலையற்றுத் தங்கள் வேலைகளைச் செய்வர். அதனால் நாட்டின் செல்வம் வளரும்.

6. கோயில்களைத் தக்கபடி கவனிப்பதனால், தேவர்கள் நாட்டைக் காப்பர்.

7. அருகருக்கு எவ்வகை இடையூறும் நேராதபடி செய்வர் என்றால், அவர்கள் வாழும் இடத்தின் அருகிலுள்ள மரங்களை எவரும் வெட்டாதவாறும், வலை வீசி விலங்குகளைப் பிடிக்காதவாறும், குளங்களிலுள்ள மீன்களைக் கொல்லாதவாறும் அக்கறை எடுத்துக் கொள்வர் என்று பொருள்.

அட்டகதையில் வஜ்ஜிகளின் சட்டங்களைப் பற்றிச் சிறிது விரிவான உரை இருக்கிறது. திருடனைப் பிடித்தால் அவனை விசாரிக்க, முறையே விசாரணைப் பேரமைச்சர், வழக்கறிஞர், அந்தக்காரிகர், அஷ்டகுலிகர், படைத்தலைவன், துணையரசன், அரசன் என்னும் ஏழுவகை அதிகாரிகள் உண்டு. இவர்களுள் அஷ்டகுலிகர் என்பவர், இக்காலத்துப் பஞ்சாயத்தினர் (ஜூரிகள்) போன்றவர்களா அல்லது வேறு வகையினரா என்பதைத் திட்டமாகச் சொல்ல முடியவில்லை. மற்ற அதிகாரிகளின் அதிகார எல்லைகள் யாவை என்பதும் தெரியவில்லை. அரசன் என்றால், குழு அரசர்களின் தலைவன். அவன் எத்தனை ஆண்டுகளுக்குத் தலைவனாக இருப்பான் என்ற செய்தி எங்குமே கிடைக்கவில்லை. வஜ்ஜிகள் தங்கள் சட்ட நூலை எழுதி வைத்திருந்தார்கள்; ஆனால் அது முற்றும் அழிந்துவிட்டது மிக வருத்தத்துக்குரிய விஷயம். கிரேக்கர்களைப் போல நம் முன்னோர்களுக்கு அரசியல் ஏற்பாட்டில் அன்பு இருந்திருக்குமானால், இந்தக் குழு அரசர்களின் சரித்திரம் இப்படி

மறைந்திராது.

பெண்களைப் பலாத்காரம் செய்யாமல் தவிர்ப்பதில் வஜ்ஜிகள் கண்ணும் கருத்துமாக இருந்தார்கள் என்பது முக்கியமான விஷயம். குழு அரசர்கள் ஒழுங்கின்றி நடந்து கொண்டபொழுது ஏழைப் பெண்களைப் பலாத்காரம் செய்வது நிகழலாயிற்று என்று நாம் ஊகிக்கத் தடையில்லை. அதனால் மக்களுக்கு, ஏகாதிபத்திய ஆட்சி முறை நலமென்று தோன்றிற்று. மகாராஜா மிஞ்சிப்போனால் தன் நகரிலுள்ள சில பெண்களை அந்தப்புரத்தில் கொண்டு வைத்துக்கொள்வான்; ஆனால் இந்தக் குழு அரசர்களோ நாடு முழுவதும் பரவி யிருந்ததனால் எந்த ஊரிலுள்ள பெண்ணும் இவர்களின் அட்டூழியத்தினின்று விடுபட்டிருப்பது சாத்தியமாக இல்லை. ஆதலால் மக்கள் தமது விருப்பத்தோடு ஏகாதிபத்திய ஆட்சிமுறையை ஒப்புக்கொண்டிருத்தல் கூடும்.

இந்த அரசர்கள் ஒரு முறை ஒழுங்கீனமாக நடந்து கொண்டால் போதும்; உடனே அவர்களுக்குள் பிளவு ஏற்படுவது எளிது. வஜ்ஜிகளின் குழு அரசில் வஸ்ஸகாரன் என்ற அந்தணன் பிளவை உண்டாக்கினான்; அதனால் அஜாதசத்துரு வஜ்ஜிகளைத் தோல்வியுறச் செய்வது மிகவும் எளிதாயிற்று. வஜ்ஜிகளின் குழு அரசு மறைந்தவுடனே மல்லர்களின் குழு அரசும் முடிவெய்தியிருத்தல் கூடும். பழமையான குழு அரசுகள் இங்ஙனம் அழிந்தன. அவற்றின் கட்டுப்பாடு, சட்ட திட்டங்கள் ஆகியவைபற்றி மிகச் சொற்பமான செய்திதான் பௌத்த இலக்கியத்தில் எஞ்சிநின்றது.

பௌத்த சங்கம் ஒன்றுகூடிச் சங்கச் செயல்களை ஆற்றும் முறையை விநய பிடகம் கூறுகிறது. வஜ்ஜி முதலிய குழு அரசர்கள் எவ்வாறு ஒன்றுகூடித் தங்கள் அவையின் அலுவல்களை நடத்தியிருப்பர் என்பதை அதைக் கொண்டு ஊகித்தறிய முடிகிறது.

## அநுபந்தம்-3

# அசோகனுடைய பாப்ரூ கல்வெட்டும் அதில் குறிப்பிட்டுள்ள சூத்திரங்களும்

பாப்ரூ என்னும் இடம், ஜயபுர் சமஸ்தானத்தில் மலைப்பிரதேசம் ஒன்றில் இருக்கிறது. அங்கு வாழ்ந்த பிட்சு சங்கம் அசோக மன்னனிடம் அறச் செய்தி வேண்டிய பொழுது, அவன் இந்தச் செய்தியை அனுப்பி, அதைக் கல்லில் பொறித்திருப்பான் என்று தோன்றுகிறது. இத்தகைய செய்திகளை அசோகன் அடிக்கடி அனுப்புவதுண்டு. ஆனால் அவற்றுள் முக்கியமானவை என்று அவன் கருதும் செய்திகளைக் கற்களிலோ கற்கம்பங்களிலோ பொறிக்கச் செய்வது வழக்கம். 'இந்தக் கல்வெட்டில் குறிப்பிட்டுள்ள சூத்திரங்களை மகதநாட்டுப் பௌத்தர்களும் படிக்க வேண்டும்' என்ற செய்தியை அவன் வாய்மொழியாகவோ கடித வாயிலாகவோ அனுப்பியே இருப்பான்; ஆனால் இவற்றை அவன் பொறிக்கச் செய்யவில்லை. ஏனெனில், அக்கம் பக்கத்திலுள்ள சங்கங்கள் என்ன செய்கின்றன, என்ன படிக்கின்றன என்னும் விவரங்கள் அவனுக்கு அடிக்கடி தெரிந்து வந்தன. அதற்காக அவன் தனி அதிகாரிகளை நியமித்திருந்தான். ஆனால் இராசபுதனம் போன்ற தொலைவான இடங்களிலிருந்து செய்திகள் வரத் தாமதமாயிற்று. எனவே இத்தகைய கல்வெட்டு ஒன்று அங்கே இருப்பது நலம் என்று அவன் கருதியிருக்கலாம். இந்தக் கல்வெட்டின் மொழிபெயர்ப்பை நான் அறிந்தபடி இங்கே தருகிறேன்-

## பாப்ரூ கல்வெட்டின் மொழிபெயர்ப்பு

பிரியதரிசி மகதமன்னன் சங்கத்தை வணங்கி, அதன் நலத்தையும் நல்வாழ்வையும் கோருகிறான். பதந்தரே, புத்தரிடத்தும் தருமத்தினிடத்தும் சங்கத்தினிடத்தும் எனக்கு எவ்வளவு பரிவும் பக்தியும் உண்டு என்பதைத் தாங்கள் அறிந்தே இருக்கிறீர்கள். புத்தர்பெருமானின் வசனம் அனைத்துமே நல்வாக்கு. ஆயினும், பதந்தரே, நல்லறம் நீண்டு நிலைத்திருக்க வேண்டும் என்பதற்காகவே இங்குக் குறிப்பிடுகிறேன்; அதற்காகவே பேசுவது நலமென்று தோன்றுகிறது. பதந்தரே, இவை நல்லறமே வடிவான சூத்திரங்கள்- விநயஸமுகஸே, அலியவஸானி, அநாகதபயானி, முனிகாதை, மோனேய்யஸுத்தம், உபதிஸபஸினே, மற்றும் ராகுலனுக்குச் செய்த உபதேசத்தில், பொய்பேசுவதைத் தவிர்ப்பது பற்றிய பெருமானின் வாக்கு. இந்தச் சூத்திரங்கள் பற்றி, பதந்தரே, என் விருப்பம் யாதெனில், ஏராளமான பிட்சுக்களும்

பிட்சுணிகளும் அடிக்கடி இவற்றைக் கேட்டுப் பாடம் செய்ய வேண்டும். உபாசகர்களும் உபாசகைகளும் இது போலவே செய்ய வேண்டும். பதந்தரே, யாவரும் நான் விடுத்த செய்தியை அறிய வேண்டுமென்று கருதி, இதை நான் கல்லில் பொறிக்கச் செய்திருக்கிறேன்."

இந்த ஏழு ஸுத்தங்களுள் முதலாவது விநயஸமுத்கர்ஷம் அல்லது தருமசக்கரப் பிரவர்த்தனம். ஐந்தாவது அத்தியாயத்தில் இதை விளக்கியிருக்கிறேன். மீதியுள்ள ஸுத்தங்களின் மொழிபெயர்ப்பை இங்கு வரிசையாகத் தருகிறேன்.

## அலியவஸானி அல்லது அரியவம்ஸ ஸுத்தம்

இந்த ஸுத்தம் அங்குத் தரநிகாயத்தில் சதுக்கநிபாதத்தில் உள்ளது. அதன் மொழிபெயர்ப்பு வருமாறு-

பிட்சுக்களே, இந்த நான்கு ஆரிய வம்சங்கள் முதன்மையும் நீண்ட நாட்களாக உள்ளவையுமான வம்சங்கள். அவை பழமையானவை, கலப்பில்லாதவை. அவை எப்போதும் கலப்பானதில்லை, கலப்பாகிற தில்லை, கலப்பாக மாட்டா. எந்தச் சிரமணரும் அந்தணரும் அவற்றிற்குக் குற்றம் கூறியதில்லை. அந்த நான்கு வம்சங்கள் யாவை?

இங்கே பிட்சு கிடைத்த ஆடையைக் கொண்டு மகிழ்கிறான்; அத்தகையை மகிழ்வைப் போற்றுகிறான்; ஆடைக்காகத் தகாதபடி நடந்துகொள்வதில்லை; ஆடை கிடைக்காவிட்டால் வருந்துவதில்லை; கிடைத்தால் ஆவலின்றி, பெருமிதமின்றி, பற்றின்றி, ஆடையில் குற்றம் இருப்பதை உணர்ந்து முத்திக்காக மட்டுமே அதைப் பயன்படுத்துகிறான். தான் இப்படித் திருப்தி கொள்வதற்காக அவன் தன்னைப் போற்றுவதில்லை; பிறரை இகழ்வதில்லை. பிட்சுக்களே, இத்தகைய திருப்தியில் வல்லவனும் விழிப்புள்ளவனும் கெட்டிக்காரனும் நினைவுடையவனுமான பிட்சுவையே பழமையும் முதன்மையுமான ஆரிய வம்சத்துக்கு ஏற்றபடி நடந்துகொள்ளும் பிட்சு என்பர்.

மேலும், பிட்சுக்களே, இந்தப் பிட்சு கிடைத்த பிட்சையைக் கொண்டு மகிழ்கிறான்; அத்தகைய மகிழ்வைப் போற்றுகிறான்; பிட்சைக்காகத் தகாதபடி நடந்துகொள்வதில்லை; பிட்சை கிடைக்காவிட்டால் வருந்துவதில்லை; கிடைத்தால் ஆவலின்றி, பெருமிதமின்றி, பற்றின்றி, உணவில் குற்றம் இருப்பதை உணர்ந்து முத்திக்காக மட்டுமே உணவைக் கொள்கிறான். தான் இப்படித் திருப்தி கொள்வதற்காக அவன் தன்னைப் போற்றுவதோ பிறரை இகழ்வதோ இல்லை. இத்தகைய திருப்தியில் வல்லவனும் விழிப்புள்ளவனும் கெட்டிக்காரனும் நினைவுடையவனு மான பிட்சுவையே பழமையும் முதன்மையுமான ஆரிய வம்சத்துக்கு ஏற்றபடி நடந்துகொள்ளும் பிட்சு என்பர்.

மேலும், பிட்சுக்களே, இந்தப் பிட்சு கிடைத்த பிட்சையைக் கொண்டு மகிழ்கிறான்; அத்தகைய மகிழ்வைப் போற்றுகிறான்; பிட்சைக்காகத் தகாதபடி நடந்துகொள்வதில்லை; பிட்சை கிடைக்காவிட்டால் வருந்துவதில்லை; கிடைத்தால் ஆவலின்றி, பெருமிதமின்றி, பற்றின்றி, உணவில் குற்றம் இருப்பதை உணர்ந்து முத்திக்காக திருப்தி கொள்வதற்காக அவன் தன்னைப் போற்றுவதில்லை; பிறரை இகழ்வதில்லை. பிட்சுக்களே, இத்தகைய திருப்தியில் வல்லவனும் விழிப்புள்ள்வனும் கெட்டிக்காரனும் நினைவுடையவனுமான பிட்சுவையே பழமையும் முதன்மையுமான ஆரிய வம்சத்துக்கு ஏற்றபடி நடந்து கொள்ளும் பிட்சு என்பர்.

மேலும் , பிட்சுக்களே, இந்தப் பிட்சு எவ்வகை இருப்பிடத்தைக் கொண்டும் மகிழ்கிறான்; அத்தகைய மகிழ்வைப் போற்றுகிறான்; இருப்பிடத்துக்காகத் தகாதபடி நடந்து கொள்வதில்லை; இருப்பிடம் கிடைக்காவிட்டால் வருந்துவதில்லை; கிடைத்தால் ஆவலின்றி, பெருமிதமின்றி, பற்றின்றி, இருப்பிடத்தில் குற்றம் இருப்பதை உணர்ந்து முத்திக்காக மட்டுமே அதைப் பயன்படுத்துகின்றான். தான் இப்படித் திருப்தி கொள்வதற்காக அவன் தன்னைப் போற்றுவதோ பிறரை இகழ்வதோ இல்லை. இத்தகைய திருப்தியில் வல்லவனும் விழிப்புள்ளவனும் கெட்டிக்காரனும் நினைவுடையவனுமான பிட்சுவையே பழமையும் முதன்மையுமான ஆரிய வம்சத்துக்கு ஏற்றபடி நடந்து கொள்ளும் பிட்சு என்பர்.

பிட்சுக்களே, இப்படி இந்த நான்கு ஆரிய வம்சங்கள் முதன்மையும் நீண்ட நாட்களாக உள்ளவையுமான வம்சங்கள். அவை பழமையானவை; கலப்பில்லாதவை. அவை எப்போதும் கலப்பானதில்லை; கலப்பாகிற தில்லை; கலப்பாக மாட்டா. எந்தச் சிரமணரும் அந்தணரும் இவற்றிற்குக் குற்றம் கூறியதில்லை.[1]

பிட்சுக்களே, இந்த நான்கு ஆரிய வம்சகளோடு பொலியும் பிட்சு கிழக்குத் திசையில் சென்றால் அவன்தான் வேண்டாமையை (அரதியை) வெல்கிறான்; வேண்டாமை அவனை வெல்வதில்லை. அவன் மேற்கில், வடக்கில், தெற்கில் சென்றால் அவன்தான் வேண்டாமையை வெல்கிறான்; வேண்டாமை அவனை வெல்வதில்லை. இது ஏன்? ஏனெனில் மனவுறுதியுள்ளவன் (தீரன்) வேண்டாமையையும் விருப்பத்தையும் வெல்கிறான்.

1. அந்தணர்கள் பழமையான வம்ச பரம்பரையை மிகவும் சிறப்பாகக் கருதுவர். ஆனால் அந்தப் பரம்பரை சிறப்பானதன்று. இந்த ஸுத்தத்தில் வருணித்துள்ள ஆரிய வம்ச பரம்பரையே சிறப்பு வாய்ந்தது; சிரமண அந்தணர்கள் இதற்குக் குற்றம் கூற முடியாது என்பது இங்கே குறிப்பான பொருள்.

தீரனை வெல்வது வேண்டாமையன்று; வேண்டாமை அவன்மீது வெற்றி காண முடியாது. வேண்டாமையை வெல்லும் தீரன் அதன்மீது வெற்றி காண்கிறான்.

செயல்கள் அனைத்தையும் விடுத்து, விருப்பு வெறுப்பு முதலியவற்றை அழித்தவனான அந்தத் தீரனுக்குக் குறுக்கே யார் வர முடியும்? சொக்கத் தங்க நாணயம் போன்ற அவனிடம் யார் குற்றம் காண முடியும்? தேவர்களும் அவனைப் புகழ்கின்றனர்; பிரமனும் அவனைப் புகழ்கிறான்.

## அநாகத பயாணி

இந்த ஸுத்தம் அங்குத்தர நிகாயத்தில் பஞ்சகநிபாதத்தில் வருகிறது. இதன் மொழிபெயர்ப்பு வருமாறு:

பிட்சுக்களே, இந்த ஐந்து அநாகத பயங்கள் (வராதவை பற்றிய அச்சம்), காட்சியுள்ள பிட்சுவுக்கு இதுவரை பெறாத பேற்றைப் பெறவும், அறியாததை அறியவும், நேரில் காணாததைக் காணவும், சோர்வின்றி உழைப்புடன் மனமூன்றி ஒழுகவும் போதுமானவை. அவை ஐந்து யாவை?

இங்கே பிட்சுக்களே, நான் இப்பொழுது இளைஞன், அழகு வாய்ந்தவன். ஆனால் இந்த உடல் முதுமை எய்தக் கூடிய காலமொன்று வரும். வயதானவனுக்கு, முதுமையினால் தளர்ந்தவனுக்கு, புத்தருடைய தருமத்தை மனனம் செய்வது எளிதன்று; காட்டில் தனிமையில் வாழ்வது எளிதன்று. வெறுப்பான, விருப்பமில்லாத அந்த நிலை வருமுன்பே, நான் பெறாத பேற்றைப் பெறவும், அறியாததை அறியவும், நேரில் காணாததைக் காணவும் முயலுவது நலம். அதனால் முதுமையிலும் நான் சுகமாக இருக்க முடியும் என்று பிட்சு சிந்திக்கிறான். இந்த முதல் அநாகத பயம், காட்சியுள்ள பிட்சுவுக்குப் பெறாத பேற்றைப் பெறவும், அறியாததை அறியவும், நேரில் காணாததைக் காணவும், சோர்வின்றி உழைப்புடன் மனமூன்றி ஒழுகவும் போதுமானது.

மேலும், பிட்சுக்களே, நான் இப்பொழுது நோயற்று இருக்கிறேன். என் சாடராக்கினி நன்றாகவும் முயற்சிக்கு உதவுவதாகவும் இருக்கிறது. ஆனால் இந்த உடல் நோய் வாய்ப்படக்கூடிய காலமொன்று வரும். நோயுற்றவனுக்கு, புத்தருடைய தருமத்தை மனனம் செய்வது எளிதன்று; காட்டில் தனிமையில் வாழ்வது எளிதன்று. வெறுப்பான, விருப்பமில்லாத அந்த நிலை வருமுன்பே, நான் பெறாத பேற்றைப் பெறவும், அறியாததை அறியவும், நேரில் காணாததை காணவும் முயல்வதுவும் அதனால் நோயுற்ற நிலையிலும் நான் சுகமாக இருக்க முடியும் என்று பிட்சு சிந்திக்கிறான். இந்த இரண்டாவது அநாகத பயம்,

காட்சியுள்ள பிட்சுவுக்குப் பெறாத பேற்றைப் பெறவும், அறியாததை அறியவும், நேரில் காணாததைக் காணவும், சோர்வின்றி உழைப்புடன் மனமூன்றி ஒழுகவும் போதுமானது.

மேலும், பிட்சுக்களே, இப்பொழுது சுபிட்சமாக இருக்கிறது; பிட்சை எளிதில் கிடைக்கிறது; பிட்சையைக் கொண்டு வாழ்வது சுலபமாக இருக்கிறது. ஆனால் துர்ப்பிட்சமான, தாணியம் விழையாத பிச்சை கிடைப்பது சிரமமான பிட்சையைக் கொண்டு வாழ்வது எளிதல்லாத காலமொன்று வரும். இந்தப் பஞ்சத்தில் மக்கள், வளமுள்ள இடத்தை நோக்கிச் செல்கிறார்கள். அங்கே கூட்டம் குழுமுகிறது. இத்தகைய இடத்தில் புத்தருடைய தருமத்தை மனனம் செய்வது எளிதன்று; காட்டில் தனிமையில் வாழ்வது எளிதன்று. வெறுப்பான, விருப்பமில்லாத அந்த நிலை வருமுன்பே, நான் பெறாத பேற்றைப் பெறவும், அறியாதவை அறியவும், நேரில் காணாததைக் காணவும் முயலுவது நலம். அதனால், துர்ப்பிட்சத்திலும் நான் சுகமாக இருக்க முடியும் என்று பிட்சு சிந்திக்கிறான். இந்த மூன்றாவது அநாகத பயம், காட்சியுள்ள பிட்சுவுக்குப் பெறாத பேற்றைப் பெறவும், அறியாததை அறியவும், நேரில் காணாததைக் காணவும், சோர்வின்றி உழைப்புடன் மனமூன்றி ஒழுகவும் போதுமானது.

மேலும், பிட்சுக்களே, இன்று மக்கள் களிப்புற்ற நெஞ்சத்தோடு, சண்டையின்றி, பாலும் நீரும்போல நட்புடன், தமக்குள் அன்பு நோக்கம் கொண்டு நடந்துகொள்கிறார்கள். ஆனால் பயங்கரப் புரட்சி தோன்றும் காலமொன்று வரும். அப்பொழுது மக்கள் தம் பண்டம்பாடிகளைத் தூக்கிக்கொண்டு ஊர்திகளில் அமர்ந்தோ நடந்தோ இங்குமங்கும் ஓடுவார்கள். இந்தத் தொல்லையில் மக்கள் பாதுகாப்பான இடத்தை நாடித் திரளுவார்கள். அங்கே கூட்டம் மிகுதியாகிறது. இத்தகைய இடத்தில், புத்தருடைய தருமத்தை மனனம் செய்வது எளிதன்று; காட்டில் தனிமையில் வாழ்வது எளிதன்று. வெறுப்பான, விருப்பமில்லாத அந்த நிலைவருமுன்பே, நான் பெறாத பேற்றைப் பெறவும், அறியாததை அறியவும், நேரில் காணாததைக் காணவும் முயலுவது நலம். அதனால், அத்தகைய தொல்லையிலும் நான் சுகமாக இருக்க முடியும் என்று பிட்சு சிந்திக்கிறான். இந்த நான்காவது அநாகத பயம், காட்சியுள்ள பிட்சுவுக்குப் பெறாதபேற்றைப் பெறவும், அறியாததை அறியவும், நேரில் காணாததைக் காணவும், சோர்வின்றி உழைப்புடன் மனமூன்றி ஒழுகவும் போதுமானது.

மேலும், பிட்சுக்களே, இன்று சங்கம் முழுமையாக, மிகுந்த மகிழ்வுடன், சண்டையின்றி ஒரே நோக்கத்துடன் நடைபெறுகிறது. ஆனால் சங்கத்தில் பிளவு தோன்றும் காலம் ஒன்று வரும். சங்கத்தில்

பிளவு ஏற்பட்டால், புத்தருடைய தருமத்தை மனனம் செய்வது எளிதன்று; காட்டில் தனிமையில் வாழ்வது எளிதன்று. வெறுப்பான, விருப்பமில்லாத அந்த நிலை வருமுன்பே, நான் பெறாத பேற்றைப் பெறவும், அறியாததை அறியவும், நேரில் காணாததைக் காணவும் முயலுவது நலம். அதனால், அந்த மாறான நிலைமையிலும் நான் சுகமாக இருக்க முடியும் என்று பிட்சு சிந்திக்கிறான். இந்த ஐந்தாவது அநாகத பயம், காட்சியுள்ள பிட்சுவுக்குப் பெறாத பேற்றைப் பெறவும், அறியாததை அறியவும், நேரில் காணாததைக் காணவும், சோர்வின்றி உழைப்புடன் மனமூன்றி ஒழுகவும் போதுமானது.

பிட்சுக்களே, இந்த ஐந்து அநாகத பயங்கள், காட்சியுள்ள பிட்சுவுக்குப் பெறாத பேற்றைப் பெறவும், அறியாததை அறியவும், நேரில் காணாததைக் காணவும், சோர்வின்றி உழைப்புடன் மனமூன்றி ஒழுகவும் போதுமானவை.

## முனி காதை

முனி ஸுத்தம் என்ற பெயரில் இது ஸுத்த நிபாதத்தில் காண்கிறது. இதன் மொழிபெயர்ப்பு வருமாறு-

1. நேசத்தினால் அச்சம் உண்டாகிறது; இருக்கையால் அழுக்கு உண்டாகிறது. ஆதலால் இருக்கையின்மையும் நேசமின்மையுமே முனிவனுடைய தத்துவஞானமாம் என்று அறிக.

2. தன்னிடம் தோன்றிய மனக்குற்றத்தை அழித்து, மீண்டும் அதை வளரவிடாமல், அதைப்பற்றிய நேசமும் கொள்ளாமல், தனிமையில் வாழ்பவனை முனிவன் என்பர். அத்தகைய மகரிஷி அமைதிநிலையைக் கண்டவன்.

3. பொருள்களையும் அவற்றின் விதைகளையும் அறிந்து[1] அவற்றுக்கு நேயம் (ஈரம்) கொடாதவனே, உண்மையில் பிறப்பின் முடிவையும், அழிவின் முடிவையும் கண்ட முனிவனாம்.

4. ஆர்வங்கள் அனைத்தையும் அறிந்து, அவற்றுள் ஒன்றிலும் விருப்புக் கொள்ளாமல், வேட்கையொழிந்து, பற்றற்றவனாக விளங்கும் முனிவன் அலைவதில்லை; ஏனெனில், அவன் கரைகடந்தவனாகிறான்.

5. அனைத்தையும் வென்றவன், எல்லாம் அறிந்தவன். நற்புத்தியுள்ளவன், எந்தப் பொருளிலும் பற்றின்றி இருப்பவன், அனைத்தையும் விடுத்தவன், வேட்கை அழிந்ததனால் முத்தனானவன்- இத்தகையவனை அறிஞர், முனிவன் என்பர்.

---

1. இந்த இடத்தில் பமாய என்ற பாலிச் சொல் உள்ளது. இமிசித்து வதைத்து என்று உரைகாரர் இதற்குப் பொருள் கூறுகிறார். ஆனால், பிர என்ற உபசர்க்கம் சேர்ந்த மா என்னும் தாதுவுக்கு, அளத்தல் அல்லது உள்ளபடி அறிதல் என்பதே பொருளாகும்.

6. ஞானநிறைவை வலிமையாகக் கொண்டவன். ஒழுக்கமும் நோன்பும் வாய்ந்தவன் நன்கு அடங்கியவன். தியானத்தில் ஆழ்ந்தவன், நினைவு நிறைந்தவன், எதனோடும் சேராது விடுபட்டவன், கடுமையற்றவன், ஆசிரவம்[1] இல்லாதவன்- இத்தகையவனை அறிஞர், முனிவன் என்பர்.

7. தனியே வாழ்பவன், பிழையற்றவன், மனனத்தில் ஆழ்ந்தவன், வசையினாலோ புகழ்ச்சியினாலோ கலங்காதவன், சிங்கத்தைப்போல ஒலிகளுக்கு அஞ்சாதவன், காற்றைப்போல வலையில் சிக்காதவன், நீரில் தாமரை போல எதிலும் பற்றற்றவன், பிறருக்குத் தலைவனாயினும் தனக்குத் தலைவனற்றவன்- இத்தகையவனை அறிஞர், முனிவன் என்பர்.

8. தன்னைப்பற்றி மக்கள் தோன்றியவாறெல்லாம் பேசினாலும் ஆற்றுத்துறையிலுள்ள கம்பத்தைப் போல நிலைத்திருப்பவன், விருப்பற்றவன், பொறிகளை நன்கு அடக்கியவன்- இத்தகையவனை அறிஞர், முனிவன் என்பர்.

9. தன்னிலே நிலைநின்றவனாய் நூற்குழலைப்[2] போல நேரே செல்பவன், பாவச் செயல்களைப் புறக்கணிப்பவன், வேறுபாட்டையும் சமத்தன்மையையும் பகுத்து அறிபவன்- இத்தகையவனை அறிஞர், முனிவன் என்பர்.

10. சிறுவனாயினும் நடுத்தரப் பிராயமுடையவனாயினும், தன்னை அடக்கிய முனிவன் பாவம் செய்வதில்லை; அடக்கமுள்ளவன் சினப்பதில்லை. பிறரையும் சினந்து கொள்ளச் செய்வதில்லை- இத்தகையவனை அறிஞர், முனிவன் என்பர்.

11. பிறர் கொடுத்த உணவைக் கொண்டு வாழ்பவன், பொங்கிய சோற்றிலிருந்து ஆரம்பத்திலோ நடுவிலோ கடைசியிலோ பிட்சை கிடைத்தால் புகழாமலோ திட்டாமலோ இருப்பவன்- இத்தகையவனை அறிஞர், முனிவன் என்பர்.

12. இணைவிழைச்சிலிருந்து நீங்கியவன், இளமை வாய்ந்தவனாயினும் எங்கும் கட்டுப்படாதவன், வெறி மயக்கம் ஆகியவற்றிலிருந்து விடுபட்டவன், முத்தன்- இத்தகையவனை அறிஞர், முனிவன் என்பர்.

13. இம்மையை அறிந்து பரம்பொருளைக் கண்டவன், வெள்ளத்தையும் கடலையும் நீந்தித் தன்மயமானவன், கட்டுகளை (முடிச்சுக்களை)த் தறித்தவன், புகலற்றவன், ஆசிரவம் அற்றவன்-

1. ஆசிரவம் - உயிர் வெவ்வேறு உடல்களில் இயங்கும்போது நுகரும் இன்ப துன்ப உணர்வு; உயிர் கன்மத்தினடியாக இதைப் பெறுகிறது. ஆசிரவம் என்பது, ஒன்பது பதார்த்தங்களுள் ஒன்று. சீவகசிந்தாமணி 2814, உரை காண்க. (மொ-ர்.)

2. நூற்குழல் ஊடிலும் பாவிலும் நேராகச் செல்கிறது; ஆனால் நூலில் கட்டுப்படுவதில்லை. அதுபோலவே அவன் நேராகச் செல்கிறான் என்க.

இத்தகையவனை அறிஞர், முனிவன் என்பர்.

14. மனைவியைக் காக்கும் இல்லறத்தவன், பற்றற்ற முனிவன் ஆகிய இருவரின் வாழ்வும் இயல்பும் அறவே வேறுபட்டவை. ஏனெனில், உயிர்க்கொலை நிகழலகாது என்ற திறத்தில் இல்லறத்தவன் நா அடக்கத்தைக் கடைப்பிடிப்பதில்லை; ஆனால், முனிவன் எப்பொழுதுமே உயிர்களைக் காக்கிறான்.

15. வானத்தில் பறக்கும் நீலக்கழுத்துள்ள மயில், அன்னத்தின் வேகத்தோடு செல்ல முடியாது; அது போலவே இல்லறத்தவன், தனிமையில் வனத்தில் தியானம் செய்யும் பிட்சுவான முனிவனுடைய செயலைப் பின்பற்ற முடியாது.

## மோனேய்ய ஸுத்தம்

நாலக ஸுத்தம் என்ற பெயரில் இது ஸுத்தநிபாதத்தில் உள்ளது. இதில் தொடக்கத்தில் விஷயத்தை அறிமுகப்படுத்தும் காதைகள் இருபது உள்ளன. அவற்றை இங்கே மொழிபெயர்க்கவில்லை. ஆவலுள்ளவர்கள், விவித ஞான விஸ்தாரம் என்ற மராட்டிப் பத்திரிகையின் ஜுன், 1937 இதழைக் காண்க. அங்கு இந்த ஸுத்தத்தின் அறிமுகக் காதைகள் மொழிபெயர்ப்புடன் வெளியாகியுள்ளன. நாலகன் என்பவன், அஸித ரிஷியின் மருமகன். அவன் சிறுபிராயத்தவனாக இருக்கையில் கோதம போதிசத்துவர் பிறந்தார். போதிசத்துவர் இறந்த முனிவர் ஆவார் என்று சோதிடம் கூறியவர் அஸித ரிஷி. கோதம புத்தருடைய தருமத்தைப் பின்பற்றுமாறு அவர் நாலகனுக்கு உபதேசித்தார். நாலகன் மாமன் பேச்சில் நம்பிக்கை கொண்டு, கோதம போதிசத்துவர் புத்தராகும் வரையில் தவத்தினனாக இருந்து வந்தான். கோதமர் புத்த நிலை எய்தியதும் அவன் அவரிடம் சென்று மௌனேயத்தைப் பற்றிக் கேள்விகள் கேட்டான். அந்தக் கேள்விகளிலிருந்து இந்த ஸுத்தம் தொடங்குகிறது.

1. (நீ உயர்ந்த முனிவனாவாய் என்ற) அஸிதர் பேச்சு உண்மையானது என்று அறிந்தேன். ஆதலால் பொருள்கள் அனைத்தையும் கடந்து சென்ற கோதமரை நான் வினவுகிறேன்.

2. முனிவரே, இல்லத்தைத் துறந்து பிட்சையைக் கொண்டு வாழ்பவனுக்கு உயர்ந்த நிலையாகிய மௌனேயம் எது என்று நான் வினவுகிறேன். அதை எனக்குக் கூறுவீராக.

3. பெருமான் கூறுவார்- மௌனேயம் இன்னது என்பதை உனக்குச் சொல்கிறேன். அது செயற்கரியது; நிகழ இயலாதது. ஆயினும் உனக்கு அதைக் கூறுகிறேன். இடுக்கண்களைத் தாங்கி நடந்துகொள். திடமாக இரு.

4. ஊரில் ஒருவன் பழித்தாலும் சரி, புகழ்ந்தாலும் சரி, யாவரிடத்தும் நடுநிலையோடு நடந்துகொள்ள வேண்டும். மனத்துக்குள்ளேயே சினத்தை அடக்கி, அமைதியாகவும் செருக்கற்றும் இருத்தல் வேண்டும்.

5. தீப்பிடித்த காட்டில் நெருப்புக் கொழுந்துகள் அலைவதுபோல ஊரில் பெண்கள் திரிகிறார்கள். அவர்கள் முனிவரை மயக்குகிறார்கள். அவர்கள் உன்னை மயலில் வீழ்த்தாதபடி விழிப்புடன் இரு.

6. சிறியவையும் பெரியவையுமான காமநுகர்ச்சிகளை விடுத்து, இணைவிழைச்சிலிருந்து நீங்க இரு. நிற்பனவும் இயங்கவனவுமான உயிர்களிடம் பகையையும் பற்றையும் விடு.

7. உன்னையே எடுத்துக் காட்டாகக் கொண்டு, என்னைப்பேல இவர்கள், அவர்களைப்போல நான் என்று அறிந்து, யாரையும் கொல்லாதே அல்லது கொல்விக்காதே.

8. சாமானிய மனிதன் எந்த விருப்பத்திலும் ஆசையிலும் கட்டுண்கிறோனோ அந்த விருப்பத்தையும் ஆசையையும் விடுத்து கண்ணுடையவன் இந்த நரகத்தைக் கடந்து அக்கரை செல்ல வேண்டும்.

9. வயிறு புடைக்க உண்ணாமல் அளவாக உணவு கொண்டு, குறைவான விருப்பத்தோடு ஆசையற்றவனாக இரு. விருப்பத்தை விடுத்துத் திருப்தி கொண்டவனாகி விருப்பமற்றவனே அமைதி எய்துவான்.

10. முனிவன் பிட்சாடனம் செய்து காட்டுக்கு வந்து, அங்கே மரத்தடியில் ஆசனத்தில் அமர வேண்டும்.

11. தியானத்தில் ஆழ்ந்த அந்தத் தீர புருஷன் காட்டில் ஆனந்தமாக வாழ வேண்டும். அவன் மரத்தடியில் அமர்ந்து, மனத்தை மகிழ்வித்தபடியே தியானம் செய்ய வேண்டும்.

12. அதற்குப் பிறகு இரவு கடந்ததும் ஊருக்குள் வரவேண்டும். அங்கே கிடைத்த அழைப்பினாலோ சந்திப்பினாலோ மகிழலாகாது.

13. ஊரிலுள்ள குடும்பங்களோடு முனிவன் நெருங்கிப் பழகலாகாது; பிட்சைபற்றி ஏதும் பேசலாகாது; குறிப்பான சொற்களைக் கூறலாகாது.

14. பிட்சை கிடைத்தாலும் நல்லது, கிடைக்காவிட்டாலும் நல்லது. இரண்டையும் சமமாகக் கருதியவனாய் அவன் (தான் தங்கும்) மரத்தருகில் வருகிறான்.

15. கையில் பிச்சைக் கலமேந்தித் திரிபவன், தான் ஊமையல்லனாயினம் ஊமைபோலவே நடந்து கொள்ள வேண்டும். கிடைத்த சிறிதளவு பிச்சையைப் புறக்கணிக்கலாகாது. கொடுத்தவனை அவமதிக்கலாகாது.

16. இழிவான வழி யாது, உயர்ந்த வழி யாது என்பதைச் சிரமணன் (புத்தன்) விளக்கியிருக்கிறான். சம்சாரத்தைக் கடந்து அக்கரைக்கு இரண்டு தடவை யாரும் செல்வதில்லை; ஆயினும் அறிவு ஒரே

வகையானதுதான் என்பதில்லை.

17. பற்று இல்லாதவனும், சம்சார ஊற்றை அடைத்தவனும், செயத்தக்கவை செயத்தகாதவை என்பவற்றிலிருந்து விடுபட்டவனுமான பிட்சுவுக்குப் பேரெரிச்சல் (பரிதாகம்) இருப்பதில்லை.

18. உனக்கு நான் மௌனேயத்தைக் கூறுகிறேன்- பெருமான் மொழியலானார்- கத்தி முனையிலுள்ள தேனைச் சுவைப்பவனைப் போல விழிப்போடு இருக்க வேண்டும். நாவை அண்ணத்தில் வைத்துக் கொண்டாலும் உணவில் கட்டுப்பாட்டோடு இருக்க வேண்டும்.

19. விழிப்புள்ள சித்தம் வேண்டும்; ஆனால் மிகுதியான சிந்தனையும் கூடாது. இழிவான எண்ணங்களினின்று விலகி, புகலற்றவனாக, பிரமசரியத்தில் ஈடுபட வேண்டும்.

20. தனிமை வாழ்வையும் சிரமண உபாசனை (தியான சிந்தனை)யையும் விரும்ப வேண்டும். தனிமையை மௌனம் என்பர். தனியே இருப்பதில் உனக்கு மகிழ்ச்சி தோன்றினால்,

21. தியானத்தில் ஆழ்ந்தவர்களும் காமத்தை விடுத்தவர்களுமான தீரர்களின் பேச்சைக் கேட்டு நீ பத்துத் திசைகளையும் ஒளிர வைப்பாய். ஆயினும் (அந்த நிலையை எய்திய) என் சிராவகனே (பாவத்தைக் கண்டு வெட்கும்) இந்தப் பான்மையையும் நம்பிக்கையையும் வளர்க்க வேண்டும்.

22. நதியாகிய உவமையினால் இதனை அறிக. ஓடைகள் நீர்வீழ்ச்சிகளினின்றும் குன்றுகளினின்றும் பேரொலியுடன் ஓடுகின்றன; ஆனால் பேராறுகள் அமைதியாகப் பெருகுகின்றன.

23. ஆழமற்றது ஒலிக்கும்; ஆனால் ஆழ்ந்திருப்பது அமைதியாகவே துலங்கும். அறிவிலி குறை குடம்போலத்துளும்புகிறான்; ஆனால் நல்லறிவாளி ஆழ்ந்த மடுப்போல அமைதியாக இருக்கிறான்.

24. சிரமணன் (புத்தன்) நிறையப் பேசுகையில் அது தக்கது, பயனுடையது என்று அறிந்து பேசுகிறான். அறிந்து அவன் தருமோபதேசம் செய்கிறான்; அறிந்து நிறையப் பேசுகிறான்.

25. ஆனால் தன்னை அடக்கிய ஒருவன், அறிந்திருந்தும் நிறையப் பேசவில்லையென்றால் அந்த முனிவன் மௌனத்துக்கு உரியவன். அந்த முனிவன் மௌனத்தை அறிந்தவன்.

## உபதிஸபஸினே

இது ஸாரிபுத்த ஸுத்தம் என்ற பெயரால் ஸுத்த நிபாதத்தில் வருகின்றது. அட்டகதையில் இதைத் தேர பஞ்ஹம் என்றும் கூறியுள்ளளனர். இதிலிருந்து, ஸாரிபுத்த பஞ்ஹம் என்றும் உபதிஸ்ஸபஞ்ஹம் என்றும் இதைக் கூறுவர் என்று தெரிகிறது. இதன் மொழிபெயர்ப்பு வருமாறு-

1. நீண்ட ஆயுள் பெற்ற ஸாரிபுத்தன் கூறியதாவது- இவ்வளவு இனிமையாகப் பேசுபவரும், மிகுந்த மகிழ்ச்சியுள்ளவரும்,[1] சங்கத்தின் தலைவருமான சாத்தரை நான் இதற்கு முன்பு கண்டதில்லை; கேட்டதுமில்லை.

2. இருள் அனைத்தையும் அழித்துச் சிரமண தருமத்தில் ஆழ்ந்துள்ள தெய்வமான இவர், உலகத்துக்கே கண்ணுடையவராக (சக்ஷுஷ்மானாக) விளங்குகிறார்.

3. புத்த நிலையை எய்தியவரும், பகட்டு இல்லாதவருமான சங்கத் தலைவரிடம், நான் பல அறிவாளிகளின் நன்மைக்காகக் கேள்விகள் கேட்க வந்துள்ளேன்.

4. இல்லறத்தை வெறுத்து, மரத்தடியிலோ மயானத்திலோ மலைக்குகையிலோ தனிமையில் வாழும் பிட்சுவுக்கு,

5. நல்லவையோ கெட்டவையோ ஆன அந்த இடங்களில் எத்தகைய அச்சங்கள் தோன்றுகின்றன? ஒலியற்ற அந்த இடத்தில் எத்தகைய அச்சங்களுக்கு அந்தப் பிட்சு அஞ்சலாகாது?

6. அமுதத் திசைக்குச் செல்வதற்காக மிகத் தொலைவான இடங்களில் வாழும் பிட்சு எத்தகைய தடைகளைப் பொறுத்துக்கொள்ள வேண்டும்?

7. கலங்கா உறுதி கொண்ட அந்தப் பிட்சுவின் வாக்கு எப்படி இருக்க வேண்டும்? அவனுடைய ஒழுகலாறு எப்படி இருக்க வேண்டும்? அவனுடைய ஒழுக்கமும் நோன்பும் எப்படி இருக்க வேண்டும்?

8. பொற்கொல்லன் வெள்ளியை நெருப்பிலிட்டு அதனுள் இருக்கும் அழுக்கை நீக்குவதுபோல, அமைதியும் விழிப்பும் நினைவும் வாய்ந்த பிட்சு எத்தகைய பயிற்சி முறையைக் கைக்கொண்டு தன் மாசை எரிக்க வேண்டும்?

9. பெருமான் கூறியதாவது- ஸாரிபுத்தனே, இல்லறத்தை வெறுத்துத் தனிமையில் வாழும் பேரறிவு சான்ற பிட்சுவின் கடமைகளை நான் கருதியவாறு உனக்குக் கூறுகிறேன்.

10. தனிமையில் வாழ்கிறவனும் நினைவுள்ளவனும் தீரனுமான பிட்சு, ஐந்து அச்சங்களுக்கு அஞ்சலாகாது. கொசுக் கடிக்கும், பாம்புகளுக்கும், மாந்தரின் தொந்தரவுக்கும், நாற்கால் விலங்குகளுக்கும்,

11. பிற சமயிகளுக்கும் அஞ்சலாகாது. பிற சமயிகளின் பயங்கரமான பல செயல்களைக் கண்டுங்கூட அவற்றுக்கு அஞ்சடலாகாது. நன்மையை நாடும் அந்தப் பிட்சு, வேறு தடைகளையும் பொறுத்துக்கொள்ள வேண்டும்.

12. நோயினாலும் பசியினாலும் உண்டாகும் தொந்தரவையும்,

1. சந்துஷ்டர் என்ற பொருளில் மூலத்தில் துஸிதோ என்ற சொல் உள்ளது. ஆனால் அட்டகதையில் துஸிதா என்ற பாடம் கொண்டு, துஷித தேவலோகத்திலிருந்து இவ்வுலகுக்கு வந்தவர் என்று பொருள் கூறுவர்.

குளிரையும் வெயிலையும் அவன் பொறுத்துக் கொள்ள வேண்டும். இந்தத் தடைகளினால் பலவகை இடுக்கண்கள் நேர்ந்தாலும், அவன் இருக்கையற்றவனாக இருந்து, தன் உற்சாகத்தையும் வீரத்தையும் உறுதிப்படுத்த வேண்டும்.

13. அவன் திருடலாகாது; பொய் பேசலாகாது; இயங்குவனவும் நிற்பனவுமான உயிர்களிடம் நட்புக் கொள்ள வேண்டும்; மனத்திலுள்ள மாசு மாரனைச் சார்ந்தது என்று அறிந்து அதை நீக்க வேண்டும்.

14. சினத்துக்கும் செருக்குக்கும் அவன் உட்படலாகாது. அவற்றை வேருடன் பறித்து எறிந்து, உறுதியாக வளர்ச்சி வழியில் சென்று, விருப்பமானவற்றையும் விருப்பமல்லாதனவற்றையும் பொறுத்துக் கொள்ள வேண்டும்.

15. நன்மையில் விருப்பமுள்ளவன் நல்லறிவுக்குப் பெருமை தந்து, அந்தத் தடைகளைப் பொறுத்துக் கொள்ள வேண்டும். தனிமை வாழ்வில் அதிருப்தி தோன்றினால், அதையும் பொறுக்க வேண்டும். துயரம் தரும் நான்கு விஷயங்களைப் பொறுக்க வேண்டும்.

16. (அவையாவன-) நான் இன்று எதை உண்பேன், எங்கே உண்பேன்? கடந்த இரவு தூக்கம் வராமையால் தொந்தரவு உண்டாயிற்றே; இன்று எங்கே தூங்குவது? இருக்கையற்றவனான மாணவன் (பயிற்சி பெறும் பிட்சு) இந்த (நான்கு) எண்ணங்களை விட வேண்டும்.

17. அவ்வப்பொழுது உணவும் ஆடையும் கிடைத்தால் அதில் அளவு வைத்துக்கொள்ள வேண்டும்; அற்ப சந்தோஷியாக இருக்க வேண்டும். அந்தப் பொருள்களைக் கொண்டு மனத்தைக் காத்து, ஊரில் புலனடக்கத்தோடு வாழும் பிட்சு, சினமூட்டக்கூடிய செயல்களைப் பிறர் செய்த போதிலும், வன்சொற்களைக் கூறலாகாது.

18. அவன் தன் பார்வையைக் கால்களின் புறமாகவே வைத்துக் கொள்ள வேண்டும்; விரைந்து நடக்கலாகாது; தியானத்தில் ஆழ்ந்தும், விழிப்புடனும் இருக்க வேண்டும். உபேட்சையைக் கடைப்பிடித்துச் சித்தத்தை ஒருமுகப்படுத்த வேண்டும். தருக்கத்தையும் நிலையினமையையும் அழிக்க வேண்டும்.

19. நினைவுள்ள அவன், தன் குற்றங்களைக் காண்பிப்பவர்களைப் போற்ற வேண்டும்; தன்னுடன் பயிலும் மாணவர்களிடம் கடுமையாக இருத்தலாகாது; சந்தர்ப்பத்துக்கு ஏற்றபடி நல்ல சொற்களையே பேசுக; மக்களின் விவாதங்களிலும் சச்சரவுகளிலும் ஈடுபட விரும்பலாகாது.

20. இதற்குப் பிறகு, நினைவுள்ளோன் உலகிலுள்ள ஐந்து புழுதிகளை (ரஜஸ்ஸுகளை)த் துறக்கப் பயில வேண்டும். (அதாவது) சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் என்னும் இவற்றிடம் பற்றுக் கொள்ளலாகாது.

21. இந்தப் பொருள்களில் விருப்பைத் துறந்து, நினைவுள்ளவனாகவும், நன்கு விடுபட்ட மனமுடையவனாகவும், அவ்வப்பொழுது

நல்லறத்தைச் சிந்திப்பவனாகவும், ஒரு முகப்பட்ட சித்தமுடையவனாகவும் விளங்கும் அந்தப் பிட்சு, இருளை அழிக்கும் திறமை வாய்ந்தவனாவான் (என்று பெருமான் கூறினார்)

## ராகுலோவாத ஸுத்தம்

இதை, சூளராஹுலோவாதம் எனவும், அம்பலட்டிக ராஹுலோவாதம் எனவும் கூறுவர். இது மஜ்ஜிமநிகாயத்தில் உள்ளது. இதன் சாரமாவது-

ஒரு சமயம் புத்தர்பிரான் ராஜகிருகத்தினருகில் வேணுவனத்தில் தங்கியிருந்தார். ராகுலன் அம்பலட்டிகா[1] என்ற இடத்தில் இருந்தான். ஒரு நாள் மாலையில் பெருமான் தியானசமாதியை முடித்துக் கொண்டு, ராகுலன் இருந்த இடத்துக்குச் சென்றார். ராகுலன் அவரைத் தொலைவிலிருந்தே கண்டு, ஆசனம் விரித்து, கால் அலம்பத் தண்ணீர் கொண்டு வைத்தான். பெருமான் வந்து அந்த ஆசனத்தில் அமர்ந்து, காலை அலம்பிக்கொண்டார். ராகுலன் பெருமானை வணங்கி, ஒரு புறமாக அமர்ந்தான்.

பெருமான் கால் கழுவிய பாண்டத்தில் சிறிது நீரைமிகுத்து வைத்திருந்தார். இந்தச் சிறிதளவு நீரை நீ காண்கிறாயா, ராகுலா? என்று அவர் கேட்டார்.

"ஆம், பதந்தரே" என்று ராகுலன் விடை பகர்ந்தான்.

"ராகுலா, பொய் பேச வெட்கப்படாதவர்களின் சிரமணத்தன்மை இந்த நீரைப்போல அற்பமானது" என்றார் பெருமான்.

பிறகு அந்த நீரை அவர் கொட்டிவிட்டு, "இந்தக் கொட்டிய நீரை நீ காணவில்லையா, ராகுலா?" என்றார்.

"ஆம், பதந்தரே" என்று ராகுலன் கூறினான்.

"ராகுலா, பொய் பேச வெட்கப்படாதவர்களின் சிரமணத்தன்மை இந்த நீரைப் போல விலக்குதற்குரியது" என்றார் பெருமான்.

பின்பு அவர் அந்தப் பாண்ட த்தைக் கவிழ்த்து, "ராகுலா, பொய் புகல வெட்கப்படாதவர்களின் சிரமணத் தன்மை இந்தப் பாண்டத்தைப் போலத் தலைகுப்புற இருக்கும் என்றறிக" என்றார்.

அப்புறம் அவர் அதை நிமிர்த்து, "ராகுலா, நீ இந்த வெறுங்கலத்தைக் காண்கிறாய் அல்லவா?" என்று வினவினார்.

"ஆம், பதந்தரே" என்றான் ராகுலன்.

"ராகுலா, பொய் புகல வெட்கப்படாதவர்களின் சிரமணத்தன்மை இந்தக் கலத்தைப் போல வெறுமையானது.

---

1. இது ஓர் அரண்மனை என்று அட்டகதை கூறுகிறது. ஆனால் அது பொருத்தமன்று. ராஜகிருகத்தின் அருகில் இருந்த ஓர் ஊரின் பெயர் இது.

"ராகுலா, போருக்கு ஆயத்தம் செய்த அரசனுடைய பெருங்களிறு கால்களால் போரிடுகிறது. தலையால் போரிடுகிறது, காதுகளால் போரிடுகிறது. தந்தங்களால் போரிடுகிறது, வாலினால் போரிடுகிறது[1]; ஆனால் துதிக்கையை மட்டும் தனியே வைத்துக் கொள்கிறது. அப்போது பாகன், அரசனுடைய இந்தப் பெருங்களிறு எல்லா உறுப்புக்களாலும் போரிடுகிறது; ஆனால் துதிக்கையைத் தனியே வைத்துக் கொள்கிறது. போரில் வெற்றிபெற, இது தான் வாழ்வை அர்ப்பிக்க வில்லை என்று கருதுகிறான். அந்த யானை மற்ற உறுப்புக்களோடு துதிக்கையையும் பயன்படுத்துமாயின், போரில் வெல்வதற்காக யானை தன் வாழ்வை அர்ப்பித்திருக்கிறது; இனி இதனிடத்துக் குறை ஏதுமில்லை என்று பாகன் கருதுகிறான். அதுபோலவே, பொய் புகல்வதில் வெட்கமில்லாதவர்கள் எந்தப் பாவத்தையும் விட்டவர்களல்லர் என்று நான் கூறுகிறேன்.[2] ஆதலால், ராகுலா, விளையாட்டுக்காகவும் பொய் கூறாமல் நீ பழகுவாயாக என்றார் பெருமான்.

அடுத்தபடி, ராகுலா, கண்ணாடியின் பயன் யாது? என்று அவர் கேட்டார்.

நன்கு பார்த்துக்கொள்ள அது பயன்படுகிறது, பதந்தரே என்று ராகுலன் விடைகூறினான்.

அதுபோலவே, ராகுலா, மீண்டும் மீண்டும் நன்கு பார்த்துக் கொண்டு (சிந்தித்து ஆராய்ந்து) உடலினாலும் வாக்கினாலும் மனத்தினாலும் செயல்களைச் செய்க.

ராகுலா, மன மொழி மெய்களால் ஏதேனும் செயலை நீ செய்ய விரும்பினால் முதலில் அதை ஆராய்ந்து பார். அது உன் நன்மைக்கும் பிறர் நன்மைக்கும் தடையாக இருந்து, இறுதியில் துன்பம் பயப்பதாகத் தோன்றினால் அதை அறவே செய்யாதே. ஆனால் அது உன் நன்மைக்கும் பிறர் நன்மைக்கும் தடையாக இல்லாமல், இறுதியில் இன்பம் பயப்பதாகத் தோன்றினால் அதைச் செயலில் கொண்டுவா.

மன மொழி மெய்களால் செயலைத் தொடங்கும் போதும் முதலில் அதை ஆராய்ந்து பார். அது உன் நன்மைக்கும் பிறர் நன்மைக்கும் தடையாக இருந்து, இறுதியில் துன்பம் பயப்பதாகத் தோன்றினால், அவ்வளவிலே இதை விட்டுவிடு. ஆனால் அது உன் நன்மைக்கும் பிறர் நன்மைக்கும் தடையாக இல்லாமல், இறுதியில் இன்பம் பயப்பதாகத்

---

1. யானை காதுகளினால் அம்பைத் தடுக்கிறது; வாலில் கட்டிய கல்லினாலோ இரும்புத் தடியினாலோ எதிரிகளைத் துவம்சம் செய்கிறது என்று அட்டகதை விளக்குகிறது.

2. பொய்யை வைத்துக்கொண்டு மற்றப் பாவங்களை விலக்கிய சிரமணன் உண்மையான போர்வீரனல்லன்; அவன் சிரமணத் தன்மைக்காகத் தன் வாழ்வை அர்ப்பித்தவனல்லன்.

தோன்றினால் அதை அடிக்கடி செய்து கொண்டே இரு.

மன மொழி மெய்களால் செயல் புரிந்தபிறகும் நீ அதை ஆராய்ந்து பார். மெய் அல்லது வாக்கினால் செய்த அந்தச் செயல் உன் நன்மைக்கும் பிறர் நன்மைக்கும் தடையாகவும், இறுதியில் துன்பம் பயப்பதாகவும் இருந்தது என்று தெரிந்ததுமே, சாத்தனிடமோ, உன்னுடன் பயிலும் அறிவாளியான மாணவனிடமோ அந்தப் பாவத்தை வெளியிடு (அதை ஒப்புக்கொள்); மீண்டும் அத்தகைய செயலை நீ செய்யாதபடி அக்கறை கொள். அது மனத்தினால் புரிந்த செயலாயின், அதற்காகக் கழிவிரக்கம் கொள்; வெட்கப்படு; மீண்டும் அந்த எண்ணத்தை மனத்தில்வர விடாதே. ஆனால் மன மொழி மெய்களால் செய்த செயல் உன் நன்மைக்கும் பிறர் நன்மைக்கும் தடையாக இல்லாமல், இறுதியில் இன்பம் பயப்பதாகத் தெரிந்தால், மகிழ்ச்சியுற்ற மனத்தோடு அந்தச் செயலை மீண்டும் மீண்டும் செய்யக் கற்றுக்கொள்.

ராகுலா, கடந்த காலத்தில் மன மொழி மெய்களால் தாங்கள் புரிந்த செயல்களைத் தூய்மைப்படுத்திய சிரமண அந்தணர்கள், மீண்டும் மீண்டும் அவற்றை ஆராய்ந்து பார்த்த பின்னரே தூய்மைப்படுத்தினார்கள். வருங்காலத்தில் இந்தச் செயல்களைத் தூய்மைப்படுத்துகிறவர்களான சிரமண அந்தணர்கள், மீண்டும் மீண்டும் ஆராய்ந்து பார்த்தே இவற்றைத் தூய்மைப்படுத்துவர். இப்பொழுது இந்தச் செயல்களைத் தூயவையாக்கும் சிரமண அந்தணர்கள் மீண்டும் மீண்டும் ஆராய்ந்தே இந்தச் செயல்களைத் தூயனவாக்குகிறார்கள். ஆதலால், ராகுலா, மீண்டும் மீண்டும் ஆராய்ந்து கண்டு, மன மொழி மெய்களால் ஆற்றும் செயல்களைத் தூயனவாக்கக் கற்றுக் கொள்.

இவ்வாறு பெருமான் பேசினார். ஆயுள் வாய்ந்த ராகுலன் மகிழ்வுற்ற மனத்துடன் பெருமானின் பேச்சைப் போற்றினான்.

இந்த ஏழு ஸுத்தங்களுள், ஸுத்தநிபாதத்தில் வந்துள்ள முனிகாதை, நாலக ஸுத்தம் ஸாரிபுத்த ஸுத்தம் ஆகிய மூன்றும் செய்யுளிலும், மற்றவை நான்கும் உரைநடையிலும் இருக்கின்றன. உரைநடை ஸுத்தங்களில் கூறியது கூறல் நிரம்பக் காண்கிறது. அக்காலத்து இலக்கியமுறை இது என்று அறிய வேண்டும். ஏனெனில், ஜைனர்களின் சூத்திரங்களிலும், உபநிடதங்களில் சில இடங்களிலும் இவ்வாறு கூறியது கூறல் உள்ளது. ஆனால் திரிபிடகத்தில், முன்போலவே எல்லாவற்றையும் திருப்பிக் கூறியிருக்கிறது என்று வாசகன் நினைக்கும் அளவுக்கு இந்தக் கூறியது கூறல் உள்ளது. இவ்வாறு திருப்பிச் சொல்லும் பொழுது, முக்கியமான விஷயங்கள் அதில் இருக்கும்; ஆனால் வாசகன் அதைக் கவனிப்பதில்லை. உதாரணமாக, இந்த ராகுலோவாத ஸுத்தத்தில் மன மொழி மெய்களால் செய்யும் செயல்களை ஆராய்ந்து காண்பதைப் பற்றிக் கூறுகையில், அதே விஷயம் திரும்பத் திரும்ப

வருகிறது. ஆனால், மெய்யினாலும் வாக்கினாலும் தீச்செயல்கள் புரிந்தால், சாத்தனிடமோ, உடன் படிக்கும் அறிவாளியிடமோ அவற்றை வெளிப்படுத்தி, மீண்டும் அத்தகைய செயல் செய்யலாகாது என்று கூறப்பட்டுள்ளது. மனத்தினால் செய்யும் தீச்செயலுக்கு இந்த விதியைப் பொருத்தவில்லை. ஏனெனில், விநயபிட்கத்தில் மெய்வாய்களினால் செய்யும் குற்றங்களுக்குத்தான் பாவத்தை வெளியிடுதல் முதலிய கழுவாய்கள் கூறப்பெறுகின்றன; மனக்குற்றத்துக்குக் கழுவாய் விதிக்கவில்லை. அதற்குக் கழுவாய் யாதெனில், அதற்காக வருந்தி வெட்கமுற்று அத்தகைய தீய எண்ணத்தை மீண்டும் மனத்தில் எழவிடாமல் இருப்பதாகும். மெய் வாய்களினால் செய்யும் தீச்செயல்களுக்கும் மனத்தினால் செய்யும் தீச்செயல்களுக்கும் இந்த வேற்றுமை இருப்பதை, ராகுலோவாத ஸுத்தத்தை மேலெழுந்த வாரியாகப் படிப்பவன் கவனித்து அறிய இயலாது.

அசோகன் காலத்தில் இந்த ஸுத்தங்கள் யாவும் இப்படியே இருந்தனவா அல்லது சுருக்கமாக இருந்தனவா என்பதைச் சொல்வது எளிதன்று. அவை சுருக்கமாக இருந்திருப்பினும், சாரமான விஷயம் இதேதான் இருந்தது என்பதில் ஐயமில்லை. ஸுத்தபிடகத்திலுள்ள மிகப் பழமையான ஸுத்தங்களைத் தெரிந்துகொள்வதற்கு, இந்த ஏழு ஸுத்தங்கள் பெரிதும் பயன்படுகின்றன.

★ ★ ★

# ஆதார நூல்கள்

இந்தப் புத்தகம், பாலி மொழியிலுள்ள ஸுத்தபிடகத்தையும், அதைச் சார்ந்த அட்டகதைகளையும் முக்கிய ஆதாரமாகக் கொண்டது. விநயபிடகத்துக் கதைகளை இதில் பயன்படுத்தியிருந்தாலும், ஸுத்தபிடகத்தின் சான்று இல்லாதவிடத்து அவற்றைச் சரித்திர உண்மைகளாகக் கருதவில்லை. அபிதம்ம பிடகத்தை (ஒரு மேற்கோளைத் தவிர)ப் பயன்படுத்தவில்லை.

ஜைன இலக்கியத்தில் ஆசாராங்க ஸூத்திரம், பகவதீ ஸூத்திரம், தசவைசாலிக ஸூத்திரம், பிரவசனஸாரோத்தாரம் என்ற நூல்களிலிருந்து மேற்கோள்கள் வருகின்றன.

முதல் அத்தியாயத்தில் ரிக் வேதம் மிகுதியாக எடுத்துக்கொள்ளப் பெறுகிறது. உபநிடதங்களிலிருந்து நிறையச் செய்திகள் வந்துள்ளன.

சந்தர்ப்பத்துக்கு உதவும்படியாக, தர்மஸூத்திரங்களும் மனுஸ்மிருதியும் இடம் பெறுகின்றன.

பாணபட்டரைப்பற்றி விஷ்ணு சாஸ்திரி சிப்ளூண்கர் எழுதிய கட்டுரையிலிருந்து ஒரு மேற்கோள் வருகிறது; ஆனால் அது ஆதாரமன்று.

ஆங்கில நூல்கள்-


Arctic Home in the Vedas: by B.G. Tilak.
Myths and Legends of Babylonia and Assyria: by Lewis Spence.
A History of Babylon: by L.W. King.
Buddhist India, (1903): by Prof. Rhys Davids.

